உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

ஸ்ரீஜ்ஞான ஸம்பந்த குருப்யோநம:



ப்ரணவ வித்யா பரிமளம்

என்னும்

# ஓங்கார விளக்கம்.

(நானூறு வேதப் பிரமாணங்களுடன்)

இஃது

சித்தாந்த சைவசரபம்

சோளங்கிபுரம்

ஸ்ரீலஸ்ரீ சிவ அருணகிரி முதலியார்

அவர்களால் இயற்றப்பெற்று

நடராஜபுரம்

ஸ்ரீமாந். ஆ. த. ஆ. சொக்கலிங்க செட்டியார்

அவர்கள் நல்லுதவியால்

சென்னை புரசை

ஸரஸ்வதி அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பெற்றது.

இரௌத்திரி ஹூ தைமீ

1920

 விலை ரூபாய் 2—4—0

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# முகவுரை.

——(o)——

**சுத்தாத்வைத சித்தாந்தவைதிக சைவசிகாமணிகாள்!**

உலகத்திலுள்ள எண்ணிறந்த ஆத்மாக்கள் நல்லறிவுபெற்று உண்மையுணர்ந்து உய்யும்வண்ணம் அகண்டாகார நித்திய வியாபக சச்சிதாநந்தப் பிழம்பாயும், சுத்தஷாட்குண்ய பரமபுருஷராயும் விளங்காநின்ற பரங்கருணைத்தடங்கடலாகிய பரமசிவத்தால் அருளிச்செய்யப்பட்ட முதனூல்கள் வேதமும் சிவாகமமுமேயாம்; இவைகளே சர்வஸம்சயங்களும் போக்கவெழுந்த சுருதிகள். இவற்றில்சொல்லப்படாத பொருளியல்புகள்ஒன்றுமேகிடையா. ஆப்ததாரதம்மியத்தால் மஹாரிஷியாகிய சிவபிரான் பரமாப்தராய் முடிதலின் அவரருளிச்செய்த வேதசிவாகமங்களைக் காட்டிலும் பிரபல பிரமாணங்கள் காலத்திரயத்திலுமில்லை. சுருதி, ஸ்மிருதி, புராணேதிஹாஸ மெனக்கூறும் வழக்கு பண்டைக் காலந்தொட்டு வழங்கிவரினும் சுருதியைநோக்க மற்றமூன்றுந் தணிவுடையனவே. ஏனெனில் ஸ்மிருதிகள் பற்பல ரிஷிகளாற் சொல்லப்பட்டன. இதிஹாஸங்களும் அவ்வாறே ரிஷிகளாற் கூறப்பட்டன. புராணங்களும் ரிஷிவசனமே. அவர்கள்யாவரும் முக்குண வசப்பட்ட ஜீவர்களாதலானும், சிவபெருமான் ஒருவரே பசுபதியாதலானும், சிவபெருமானை விசுவகாரணரென்றும், விசுவ சொரூபியென்றும், விசுவாதீதரென்றும், விசுவாந்தர்யாமியென்றும், விசுவசேவியரென்றும், பரமசாந்தரென்றும், பரமசாந்தியைக் கொடுப்பவரென்றும் பற்பல வேதவாக்கியங்கள் ஓயாது துதித்தலானும், சாமான்ய ரிஷிகளும் ஜீவர்களுமான அன்னோரது வாக்கியங்களைக் காட்டிலும் பிரபஞ்சாதீதராகிய சிவபெருமானுடைய திவ்யவாக்காகிய சுருதிகளே முக்கியப்பிரமாணங்களென் றறியக்கிடக்கின்றன.

இந்தச் சுருதிகள் என்ஞான்றும் எல்லா ஐயங்களையும் போக்கி சர்வ வைதிகாநுக்கிரகஞ்செய்யுஞ் சாசுவத சாஸ்திரங்களாய்த்திகழ்தலின் இவற்றின் முடியில் விளங்கும் ஞானபாக

த்தை விசாரித்தற்குச்சாதனசதுஷ்டயங்களே முக்கியகருவிகளாகும் இச்சாதனங்களைக் கிரமமாய் அநுஷ்டித்து,முமுட்சுத்துவம் எய்தப்பெற்று, வீடடைவதற்கு நேர்வாயிலாகவுள்ள தெய்வ வழிபாடென்னும் ஞானச்சரியையாதிகளை மனத்தூய்மையோடும், அயராவன்போடும் இயற்றி, நிஷ்டைபுரிந்துவரும் பூர்வபுண்ணிய சுகிருதமுடைய புருஷனே சற்சீடனாவன். அத்தகைய சீலமிகுந்த நன்மாணுக்கனுக்கும், கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிஷ்டை என நான்கு திறனாகவிளங்கும் ஞானத்தை முற்றுங் கைவரப்பெற்ற சுவாநுபூதிமானான சதாசாரியருக்கும் அந்நியோந்நிய சம்வாத வியாஜத்தால் சர்வவித்தைகளும் லோகோபகாரமாய் வெளிவருவது சற்சாம்பிரதாய மாதலால் அதனையே யநுசரித்து சர்வ மந்திரசாரபூத அருள்மய பிரணவசிவோபாஸ்தியை விளக்கவேண்டி, முதன்முதல் மாணுக்கனது இலக்கணங்களை நிரூபித்துக்கொண்டு, சகல சப்தமய அர்த்தமயப் பிரபஞ்சங்களுக்கும் மூலகாரணமாயுள்ள ஒப்பற்ற ஒருமொழி, அருள் நாதமாகிய ஓங்காரமேயாதலின், அவ்வோங்கார விளக்கமாகிய இவ்வரியபெரிய நூலை வினாவிடையாக வெளிப்படுத்தலாயினேன்.

இக்கிரந்தத்தில் இயைந்துள்ள மந்திரார்த்தம், யந்திரார்த்தம், பிரபஞ்சார்த்தம், தேவதார்த்தம், ஞானார்த்தம் ஆகிய இவைகள் தெளிவாய் விளக்கிக்காட்டி யிருப்பதுமன்றி அர்த்தமாத்திரையின் தேவதையாகிய புருஷசப்தவாச்சியர் மும்மூர்த்திகளுக்கும் அப்பாற்பட்ட துரீயசிவனெனவும், அவரே புருஷ ஸூக்தத்திற்கும், காயத்ரீமஹாமந்திரத்திற்கும் உட்பொருளாயுள்ளவரெனவும் நன்கு நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. அன்றியும் தாரக சப்தம் ஏகாக்ஷர மந்திரமாகிய பிரணவத்தையே குறிக்குமன்றி ராமநாமத்தைக் குறிக்காதென்றும், ஆத்மமந்திரமாகிய ஹம்ஸ மந்திரமே ஸோஹம் என்னும் மஹாமந்திரமாய்த் திகழுமென்றும், அம்மந்திரத்தில் வேதமூலமாகிய பிரணவம் இடர்ப்பட்டிருத்தலையும் ஸ்பஷ்டமாய் எடுத்துக்காட்டியிருக்கின்றது. மந்திரங்களை உபதேசமுறையாலன்றி வெளியிடுவது கூடாமையால் அம்மந்திரங்களின் அமைப்பைமாத்திரம் வேதவழக்கையநுசரித்துச் சிறுபகுதிகளாகப் பிரித்துக்காட்டியிருக்கின்றது. மேற்கோளாக எடுத்துக்காட்டியுள்ள வேதப் பிரமாணங்கள் நானூற்றுக்கு அதிகமாயிருக்கின்றன. அவையனைத்திற்கும் தமிழ்

எழுத்துக்களின் உச்சரிப்போடு பொழிப்புரையும் இயன்றமட்டுஞ் சேர்த்து வரையப்பட்டுள்ளது.

அயன், அரி, அரன் என்னுங்கடவுளருக்கு அப்பாற்பட்ட சதுர்த்ததெய்வம் ஜகஜ்ஜந்மாதி காரணராகிய பரப்பிரமசிவபிரான் என்று பலசுருதி வாக்கியங்களைக்கொண்டு நிச்சயித்திருத்தலால் இந்நூலில் சிவவிஷ்ணுக்கள் தூஷணையாவது, அவர்களிடம் உபேக்ஷையாவது ஒருவருக்கும் உண்டாவதற்கு ஹேதுவில்லை. அப்படியிருந்தும அழுக்காறு காரணமாகவும், அகாரண சிவத்துவேஷத்தாலும் குறைகூறவுடன்படுவார்களாயின் அது வேத வாக்கியங்களையே பிரமாணமாகக்கொண்டு விளங்கும் இந்நூலை ஒருபோதும் பாதிக்கமாட்டாது. ஓங்காரப்பொருளை விளக்கிக் கொண்டு வரும்போது இடையிடையே வேறு சில விஷயங்களையும் கூறவேண்டியதவசியமாயிற்று. அவ்வாறு கூறியது ஒப்பின்முடித்தல் என்னும் உத்தியிலடங்குமாதலின் அவை மற்றொன்று விரித்தல் என்னுங் குற்றத்திற்கிடனுகா.

கிரந்தமுந் தமிழுஞ் சேர்த்து அச்சிடுவதில் உண்டாகும் சிரமம் அதிகமென்பது யாவருமறிந்தவிஷயம். எழுத்துப்பிழைகள் எத்தனைமுறை பார்க்கினும் கிரந்தகர்த்தாவுக்குக் கண்ணுக்குப்புலப்படாமல் நழுவிப்போகின்றன. அவற்றைத் திருத்தி வாசிக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறேன். வடமொழியின் கண்ணுள்ள சிலமெய்யெழுத்துக்கள் தமிழ்வழக்கிற்கியைய உயிர்மெய்யெழுத்துக்களாகவும் வரையப்பட்டுள்ளன.

இக்கிரந்தத்தைச்சொற்சுவை பொருட்சுவையோடு எழுதி முடிப்பதற்குப்போதுமான ஆற்றலும், அறிவும், காதலும் அடியேன்பாலில்லையாயினும் சைவபரிபாலனஞ்செய்து போதரு முறையில் சிவபாரம்பங்கள் நிறைந்து விளங்கும் இந்நூலைத் திருவருளைமுன்னிட்டு இயன்றமட்டும் இயற்றி சைவவுலகப்பிரயோசனார்த்தம் அச்சிற்பதிப்பித்து வெளியிடலானேன். இதனை அம்புலிசூடிய வெம்பிரானன்பர்கள் மிக்க கருணையோடு ஏற்றுக்கொள்ளுமாறு எல்லாம்வல்ல ஸ்ரீ பசுபதியின் திருவருளைச் சிந்திக்கின்றேன்.

இங்ஙனம்

சோளங்கிபுரம். } சோ. சிவ அருணகிரி முதலியார்.
இரௌத்திரிஸு }

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# உ ரி மை யு ரை.

பாண்டி வளநாட்டிலே நாட்டரசன் கோட்டைக்கு அருகே நடராஜபுரம் என்றொருபதியுளது. அதில் நாட்டுக்கோட்டை நகரவைசிய குலத்திலே நல்லறிவும், நல்லொழுக்கமும், நன்னடையும் வாய்க்கப்பெற்ற வைதிக சைவரொருவருளர். அவர் இளமையிலேயே சிவபக்தி அடியார்பக்திகளில் தங்கருத்தைச் செலுத்தினவராயிருந்தும்,ஊழ்வலியால்,"பன்னாளுன்னைப்பணிந் தேத்தும் பழையவடியரொடுங் கூடா, தென்னாயகமே பிற்பட் டிங்கிருந்தேன்" என்று மணிவாசகப்பிரான் திருவாய்மலர்ந்தருளியபடி போலிவேதாந்த மென்னும் மாயாவாத மாருதத்தால் மோதப்பட்டுத் தங்காலத்தை அதிற் செலுத்தி வாணாளை வீணாக்கிக்கொண்டனர். பிறகு "நல்வினைக் கண்வாழ் நாளாய்"என்றபடி நல்லூழ் துரப்பத் தங்குலத்தொழிலை மேற்கொண்டு இரங்கூன் வந்துசேர்ந்தனர். அவ்விடத்தில் ஆளுடைய பிள்ளையார் புராணத்தையும், ஆளுடைய நம்பிகள் புராணத்தையும் அடியேனிடம் சிரவணஞ் செய்தனர். பிரசங்கக்காலங்களில் அவருடைய உள்ளம், "காராண்ட மழைபோலக் கண்ணீர்சோரக் கன்மனமே நன்மனமாக் கரையப்பேற்றேம்" என்று ஆளுடைய அரசுகள் அருளியபடி அனலிடைப்பட்ட மெழுகுபோல் உருகாநிற்கும். அடிக்கடி "நடராஜா, நடராஜா". "ஞானசம்பந்தா", "ஞானசம்பந்தா" என்று நவில்வர். அதுகாலை அவரது வதனம் சிவதேஜஸோடு விளங்காநிற்கும். அப்படி நிகழ்ந்துவருஞ்சமயத்தில் சைவசிற்சிவத்தின் நல்லருள் கூட்டிவைக்க, உடனே மாயாவாதப் படுகுழியினின்றுங் கரையேறி சைவாபிமானம் மிக்குடையராய்த் திகழ்ந்தனர். அவரதுநாமம் ஆ. த. ஆ. சொக்கலிங்கச் செட்டியார். அவரது சைவபரிபாலனம் ஆச்சரியப்படத்தக்கது.

இவர் அடியேன்பால் சித்தாந்த சாஸ்திரங்களுள் ஒன்றாகிய ''சிவப்பிரகாசம்'' என்னும் அரியநூலை மிக்க பயபக்தி சிரத்தையுடன் பாடங்கேட்டவர். இவர் தினந்தோறும் திராவிட வேதபாராயணஞ்செய்யும் நியமமும்பூண்டவர். இவருக்குப்பதி புண்ணியஞ் செய்வதிலேயே கருத்ததிகம். அதைத்தம்மாலியன்ற மட்டுஞ் செய்துவருவர். இவர் சுத்தசிவம், பதிப்பொருள், மும்மூர்த்திகள் ஆகிய இவர்களது இலக்கணங்களை எளியநடையில் எழுதித்தரவேண்டுமென்று அடியேனைப் பலகாலுங் கேட்டுக் கொள்வர். இவருடைய அவாவைப் பூர்த்திசெய்வான் கருதி, ''ஓங்காரவிளக்கம்'' என்னும் இவ்வரியநூலை வேதப்பிரமாணங்களோடு வரையலாயினேன். இச்சங்கதியை இவருக்குத் தெரிவிக்கவே உடனே இந்நூலை அச்சிற் பதிப்பிக்கவேண்டுமென்றும், அதற்கு வேண்டும் பொருளைத் தாமே சேகரித்துத் தருவதாகவும் உறுதி வாக்களித்தனர். அவ்வாறே வேண்டும் பொருளை அவ்வப்போது அனுப்பி உதவிபுரிந்தனர். இவர்வயதில் சிறியவராயிருப்பினும் அறிவில் விருத்தராகவே விளங்குகின்றனர். இவருடைய சர்வாபீஷ்டங்களையும் எல்லாம்வல்ல ஆனந்த நடராஜமூர்த்தி பூர்த்திசெய்து, அன்புசிறந்து அகங்களிதூங்கும் அடியவரோடு எந்நாளுங்கூடிக் களித்திருக்கும்படி திருவருள் பாலிப்பாராக.

இந்நூலை அச்சிட்டுவருங்காலத்தில் சிற்சில சமயங்களில் திரவியம் முட்டுப்பட்டுச் சோர்வுற்றகாலத்தில் வேண்டும் பொருளை அவ்வப்போது உதவிபுரிந்து அவ்விடையூற்றினை நீக்கியருளிய என்னருமைத் துணைவர் புரசைவாக்கம் ஸ்ரீமாந்- D. V. பொன்னுசாமிபிள்ளை அவர்களுக்கு மனப்பூர்த்தியான வந்தனம் அளிக்கிறேன். அவருக்கு நோயற்றவாழ்வும், குறைவற்ற செல்வமும், தீர்க்காயுளும் சிவபெருமான் கடாட்சிக்கும்படித் திருவருளைச் சிந்திக்கின்றேன்-சுபம்.

சோ. சிவ அருணகிரி முதலியார்.



# ஓங்கார விளக்கத்தில் எடுத்துக்காட்டியுள்ள ஸ்ருதி, ஸ்ம்ருதி, புராணேதிஹாஸ முதலியவற்றின் பிரமாணங்கள்.

### வேதங்கள்.

1 ருக்வேதம்
2 யஜுர்வேதம்
3 ஸாமவேதம்
4 அதர்வணவேதம்
5 தைத்திரீயாருணசாகை (நா - ம்)
6 புருஷஸூக்தம்
7 ஸ்ரீருத்ரநமகம்

### 108. உபநிஷத் கோவையில் ருக்வேதத்தைச்சேர்ந்த உபநிஷத்துக்கள் 10-அவற்றுள்,

1 ஐதரேயோபநிஷத்
2 நிர்வாணோபநிஷத்
3 பஹ்வ்ருசோபநிஷத்

### சுக்லயஜுர்வேதத்தைச்சேர்ந்த உபநிஷத்துக்கள் 19-அவற்றுள்.

1 அத்வயதாரகோபநிஷத்
2 ஈசாவாஸ்யோபநிஷத்
3 ஜாபாலோபநிஷத்
4 தாரஸாரோபநிஷத்
5 நிராலம்போபநிஷத்
6 பைங்கலோபநிஷத்
7 ப்ருஹதாரண்யகோபநிஷத்
8 மண்டலப்ராஹ்மணோபநிஷத்
9 மந்த்ரிகோபநிஷத்
10 முக்திகோபநிஷத்
11 ஸுபாலோபநிஷத்

### க்ருஷ்ணயஜுர்வேதத்தைச் சேர்ந்த உபநிஷத்துக்கள் 32 அவற்றுள்,

1 அம்ருதநாதோபநிஷத்
2 அம்ருதபிந்தூபநிஷத்
3 கடோபநிஷத்
4 கர்போபநிஷத்
5 கலிஸந்தாரணோபநிஷத்
6 காலாக்நிருத்ரோபநிஷத்
7 கைவல்யோபநிஷத்
8 சுவேதாசுவதரோபநிஷத்
9 தக்ஷிணாமூர்த்தியுபநிஷத்
10 தைத்திரீயோபநிஷத்
11 நாராயணோபநிஷத்
12 பஞ்சப்ராஹ்மோபநிஷத்
13 ப்ரஹ்மோபநிஷத்
14 ருத்ரஹ்ருதயோபநிஷத்
15 வராஹோபநிஷத்
16 ஸ்கந்தோபநிஷத்

### ஸாமவேதத்தைச்சேர்ந்த உபநிஷத்துக்கள் 16-அவற்றுள்,

1 கேநோபநிஷத்
2 சாந்தோக்யோபநிஷத்
3 ஜாபால்யுபநிஷத்
4 தர்சனோபநிஷத்
5 மஹோபநிஷத்
6 மைத்ராயண்யுபநிஷத்
7 மைத்ரேயோபநிஷத்

### அதர்வணவேதத்தைச் சேர்ந்த உபநிஷத்துககள் 31-அவற்றுள்,

1 அதர்வசிகோபநிஷத்
2 அதர்வசிரோபநிஷத்
3 அந்நபூர்ணோபநிஷத்
4 சரபோபநிஷத்
5 த்ரிபுராதாபந்யுபநிஷத்
6 நாரதபரிவ்ராஜகோபநிஷத்
7 ந்ருஸிம்ஹதாபந்யுபநிஷத்
8 பஸ்மஜாபாலோபநிஷத்
9 பாசுபதப்ரஹ்மோபநிஷத்
10 ப்ரச்னோபநிஷத்
11 ப்ருஹஜ்ஜாபாலோபநிஷத்
12 மஹாநாராயணோபநிஷத்
13 மாண்டூக்யோபநிஷத்
14 முண்டகோபநிஷத்
15 ராமரஹஸ்யோபநிஷத்
16 ராமோத்தரதாபந்யுபநிஷத்
17 ஸூர்யோபநிஷத்

### ஆகமங்கள்.

1 காமிகாகமம்
2 ஜ்ஞானஸித்தியாகமம்
3 வாதுளாகமம்
4 சிவதருமோத்தரம் (தமிழ்)

### ஸ்ம்ருதி, கீதை முதலியன

1 பராசரஸ்ம்ருதி
2 மநுஸ்ம்ருதி
3 வசிஷ்டஸ்ம்ருதி
4 சிவகீதை
5 பகவத்கீதை
6 பிரமகீதை (தமிழ்)
7 ப்ரஹ்மஸூத்ரம்

### புராணேதிஹாஸங்கள்

1 கூர்மபுராணம்
2 சைவமஹாபுராணம்
3 பராசரபுராணம்
4 லிங்கபுராணம்
5 வாமனபுராணம்
6 மஹாபாரதம்
7 வாயுஸம்ஹிதை
8 வால்மீகிராமாயணம்
9 காயத்ரீராமாயணம்
10 கந்தபுராணம் (தமிழ்)
11 கம்பராமாயணம்
12 காஞ்சிபுராணம்
13 காசிகாண்டம்
14 சூதசங்கிதை
15 திருவிளையாடற்புராணம்
16 பெரியபுராணம
17 வில்லிபுத்தூரார் பாரதம்

### தமிழ்வேதங்கள் (முதல் எட்டு திருமுறை)

1 திருஞானசம்பந்த மூர்த்திகள்
2 திருநாவுக்கரசு மூர்த்திகள்
3 ஸ்ரீசுந்தர மூர்த்திகள்
4 ஸ்ரீமாணிக்கவாசகர்
5 திருமந்திரம்(பத்தாந்திருமுறை)
6 நற்கீரதேவர் பெருந்தேவபாணி
7 திருவெண்காட்டடிகள் பாடல்
(6, 7 பதினோராந் திருமுறை)

### சித்தாந்த சாஸ்திரங்கள்.

1 இருபாவிருபஃது
2 உண்மைவிளக்கம்
3 சிவஞானசித்தியார்
4 சிவஞானபோதம்
5 சிவப்பிரகாசம்
6 திருவருட்பயன்
7 நெஞ்சுவிடுதூது

### அருணகிரிநாதர் முதலாயினோர் திருவாக்குகள்.

1 ஆத்திச்சூடி
2 ஒழிவிலொடுக்கம்
3 கந்தரநுபூதி
4 குருஞானவாசிஷ்டம்
5 சிவதத்துவவிவேகம்
6 சிவானந்த லஹிரி
7 தாயுமானவர்பாடல்
8 திருக்குறள்
9 திருவருணைக்கலம்பகம்
10 நல்வழி
11 பிங்கலநிகண்டு
12 வாக்குண்டாம்
13 அமரம் (வடமொழி)

### நாலாயிரப்பிரபந்த முதலியன

1 ஆண்டாள்
2 திருமங்கையாழ்வார்
3 தொண்டரடிப்பொடியாழ்வார்
4 பெரியாழ்வார்
5 பொய்கையாழ்வார்
6 நம்மாழ்வார்
7 தத்வசேகரம்
8 விஷ்ணுதத்வவிளக்கம்
9 யதீந்த்ரப்ரணவப்ரபாவம்
10 வடகலைகுருபரம்பரை (மூ-படி)

ஆகப்பிரமாணங்கள் 126.

ஓங்காரவிளக்கத்தில் எடுத்துக்காட்டியுள்ள பிரமாணங்கள் முற்றுப்பெற்றன.



# ஓங்காரவிளக்க விஷயாநுக்கிரமணிகை.


| விஷயம். | பக்கம். |
|---|---|
| பிரணவாபின்ன ஸ்ரீ நடராஜ மூர்த்திதுதி | 1 |
| நல்லாரிலக்கணம் | 1 |
| மாணுக்கனது பரிபாகம் | 2 |
| ஆசிரியவிலக்கணம் | 2 |
| "ஓம்" என்னும்நாதமே ஆதியில் தோன்றியது | 5 |
| முப்பத்தாறு தத்துவங்களின் தோற்றமுறை | 6 |
| சப்தமய அர்த்தமயப் பிரபஞ்சம் | 8 |
| துரீயசிவம் அக்ஷரப் பிரமம் | 9 |
| பரவித்தை அபரவித்தை | 12 |
| பிரபஞ்சம் நாதகாரியம் | 15 |
| பிரணவம் பிரமசொரூபம் | 17 |
| ஆரியவேதத்துக்கும் தமிழ் வேதத்துக்கு முள்ள ஒற்றுமை | 20 |
| ஓங்காரசொரூபம் (வரிவடிவு) | 23 |
| பிரமனை ஆதியில் தோற்றுவித்தவர் சிவபிரான் | 27 |
| ஓங்காரத்தில் இயைந்துள்ள நான்கு மாத்திரைகள் | 29 |
| அர்த்தமாத்திரையின்விளக்கம் | 30 |
| சோமலோக விளக்கம் | 30 |
| விசிஷ்டாத்வைதமுக்தி | 33 |
| ஓங்காரத்திற்குச்சாரதி விஷ்ணுமூர்த்தி | 35 |
| கிருஷ்ணரது அந்தர்யாமி | 38 |
| கிருஷ்ணரது விசுவரூபம் | 41 |
| சிவசாக்ஷாத்காரமே மௌனானந்த நிஷ்டை | 44 |
| பிரணவமாத்திரைகளின்நிறங்களும் தேவதைகளும் | 46 |
| அர்த்தமாத்திரையிலுள்ளபுருஷர் சிவபிரான் | 47 |
| பன்னிரண்டு காயத்திரி என்னுங் கியான மந்திரங்கள் | 52 |
| ஆதித்திய வந்தர்யாமி சிவபிரான் | 63 |
| அர்த்த மாத்திரையின் தெய்வம் துரீயசிவம் | 66 |
| மாண்டூக்யோபநிஷத்தின் ஹ்ருதயம் | 69 |
| தசோபநிஷத்தில் அலங்கரிக்கப்பட்ட சிவநாமங்கள் | 72 |
| சிவபிரான் சர்வகர்ம ஆராத்யர் | 74 |
| விஷ்ணு மூவரிலொருவர் | 76 |
| சிருஷ்டிக்கு முன்னும் சம்ஹாரத்துக்குப் பின்னுமுள்ளவர் சிவபிரானொருவரே | 79 |
| திரிமூர்த்திகளின் தோற்றமும் ஒடுக்கமும் | 83 |
| வைதிக சைவக்கடவுள் | 85 |
| திரிமூர்த்திகள் ஜீவர்களே | 92 |
| புருஷஸூக்தம் சிவபெருமானையே பிரதிபாதிக்கின்றதென்பது | 94 |
| ஓங்காரப் பொருள் சிவபெருமான் | 101 |
| சிவலிங்க விளக்கம் | 103 |
| பிரணவத்தின் பரியாயநாமங்கள் | 105 |
| ஓங்காரசப்தவிளக்கம் | 107 |
| வைஷ்ணவர்களுக்கு யோகஞானுநுபவமில்லை | 108 |
| விதேகமுக்தனது மூவித தேகசித்தி | 110 |
| பிரணவ சப்த விளக்கம் | 111 |
| சர்வ தோத்திரங்களுக்குமுரியவர் துரீய ருத்திரரே | 113 |
| தார சப்த விளக்கம் | 115 |
| சிவபெருமான் ஜனனமரணமற்றவர் | 117 |
| சிவசப்த விளக்கம் | 121 |
| கர்ப்பத்திலுள்ள சிசுவுக்கும் சிவோபாசனுவுணர்ச்சி | 123 |
| சிவபெருமானொருவரே தியேயர் | 124 |
| சுத்தாத்வைத விளக்கம் | 129 |
| வைதிக சைவமாட்சி | 131 |
| சிவபெருமான் பிராமண குலதேவதை | 134 |
| காயத்திரி மந்திரம் | 135 |
| காயத்திரி ராமாயணம் | 143 |
| சிவவிஷ்ணுக்களின் அபேதம் | 145 |

| விஷயம். | பக்கம். |
|---|---|
| சிவவிஷ்ணுக்களுள் சிவனாது ஆதிக்கியம் | 148 |
| தாரகம் பிரணவமே | 150 |
| ராமதாரக விளக்கம் | 153 |
| ராமநாம விளக்கம் | 159 |
| பஞ்சாக்ஷரதாரக விளக்கம் | 163 |
| அஷ்டாக்ஷர மந்திரத்துக்கு வேதோக்தமான வியாக்கியானம் | 165 |
| பகவந்நசப்தவிளக்கம் | 166 |
| சிவனாது மங்களவிக்கிரகம் | 170 |
| சிவத்தின் ஞானாநந்தசொரூபம் | 172 |
| ஞான வழிபாடு | 172 |
| நான் பிரமமென்பது நவைவழி | 174 |
| பிரமம் ஆத்மாஎன்னும் இருபொருள்களின் இயல்புகள் | 176 |
| ஜகத் சூன்யமன்றென்பது | 175 |
| அருவம், அருவுருவம் உருவம் ஆகியமுத்திறவழிபாடுகள் | 180 |
| விக்கிரஹவணக்கம் | 182 |
| மஹாதேவசப்தவிளக்கம் | 185 |
| சிவபெருமான்ஆனந்தவடிவினர் | 187 |
| அதர்வசிகையின் உபசம்ஹாரக் கருத்து | 189 |
| துரீயமஹாருத்ரரதுஏகத்துவம் | 190 |
| ஹம்ஸமந்திரவிளக்கம் | 198 |
| "ஸோஹம்"பதார்த்தநிரூபணம் | 199 |
| ஸோஹம் சிவோஹம் என்னும் வாக்கியங்களின் பேதம் | 200 |
| பாசுபதபிரமவித்தை | 202 |
| பாசுபதபஹிர்முக விரதம் | 203 |
| அவைதிக பாசுபதவிளக்கம் | 205 |
| வைதிகபாசுபதவிரதபலன் | 201 |
| திரிபதார்த்த நிர்ணயம் | 200 |
| முக்திநிலை | 207 |
| முக்தி பிரணவ மந்திராநுபூதி வாயிலாக அடையப்பெறுவது | 210 |
| ஆசிரியதுவேதஸ்தவம் | 211 |
| மாணாக்கர் சுவாநுபூதியடைதல் | 212 |
| புருஷஸூக்தம் | 213 |
| திருத்தொண்டத்தொகை | 217 |
| மந்திரசுலோகங்களின் முதற்குறிப்பு அட்டவணை | 220 |

| | |
|---|---|
| முகவுரை | 3 |
| உரிமையுரை | 6 |
| எடுத்துக்காட்டியுள்ள பிரமாணங்கள் | 8 |
| விஷயாநுக்கிரமணிகை | 10 |
| வைதிக சைவர்களுக்குரிய பதினாறுபேறுகள் | 12 |
| நால்வர் தோத்திரங்கள் | 13 |
| நால்வர் சரித்திரச்சுருக்கம் | 14 |
| குறிப்புரை | 16 |


ஓங்காரவிளக்க விஷயாநுக்கிரமணிகை

முற்றுப்பெற்றது.



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# வைதிகசைவர்களுக்குரிய பதினாறு பேறுகள்.

சர்வலோக சரண்யராய் விளங்கும் ஸ்ரீகண்ட பரமசிவத்தினிடத்துச் சைவசமய குருநாதராகிய ஸ்ரீநந்தியெம்பெருமான் இரந்து பெற்றுக்கொண்ட பதினாறுபேறுகளே வைதிகசைவர்களனைவராலும் இன்றியமையாது அநுஷ்டிக்கப்பட வேண்டிய முக்கியதர்மங்கள். அவை வருமாறு:—

மறைகணிந்தனை சைவநிந்தனை பொறுமனமும்
தறுகணைம்புலன் களுக்கேவல்செய் யுருச்சதுரும்
பிறவிதீதெனுப் பேதையர்தம்மொடு பிணக்கும்
உறுதிநல்லறஞ் செய்பவர்தங்களோ டுறவும்,
யாதுநல்லன்பர் கேட்கினும் உதவுறுமியல்பும்
மாதவத்தோர் ஒறுப்பினும் வணங்கிடுமகிழ்வும்
ஓதுநல் லுபதேசமெய் யுறுதியுமன்பும்
தீதுசெய்யினுஞ் சிவச்செயலெனக் கொளுந்தெளிவும்,
மனமும்வாக்கு நின்னன்பரா லொருப்படுசெயலும்
கனவிலும் உனதன்பருக் கடிமையாங்கருத்தும்
நினைவில்வே றொருகடவுளை வழிபடாநிலையும்
புனிதநின்புகழ் நாடொறு முரைத்திடும்பொலிவும்,
தீமையாம் புறச்சமயங்க ளொழித்திடுந்திறனும்
வாய்மையாகவே பிறர்பொருள் விழைவுறுவளனும்
ஏமுறும்பர தாரநச் சிடாதநன்னேன்பும்
தூய்மைநெஞ்சில் யானெனதெனுஞ் செருக்குறுத்துறவும்,
துறக்க மீதுறையினும் நரகிற்றேய்கினும்
இறக்கினும் பிறக்கினும் இன்பந்துய்க்கினும்
நிறைக்கொழுந் தணிசடைப் பெரும! இவ்வரம்
மறுத்திடாதெனக்குநீ வழங்கல் வேண்டுமால்.

திருச்சிற்றம்பலம்.



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பரமாசாரிய சுவாமிகள் நால்வர் தோத்திரங்கள்.

## திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் துதி.

கடியவிழ் கடுக்கைவேணித் தாதைபோற் கனற்கண்மீனக்
கொடியனை வேவநோக்கிக் குறையிரந் தனையாள்கற்பிற்
பிடியன நடையாள்வேண்டப் பின்னுயி ரளித்துக்காத்த
முடியணி மாடக்காழி முனிவனை வணக்கஞ்செய்வாம்.

பரசமய கோளரியைப் பாலறா வாயனைப்பூம் பழனஞ்சூழ்ந்த
சிரபுரத்துத் திருஞான சம்பந்தப் பெருமானைத் தேயமெல்லாங்
குரவையிடத் தமிழ்வேதம் விரித்தருளுங் கவுணியர்தங் குலதீபத்தை
விரவியெமை யாளுடைய வென்றிமழ விளங்களிற்றை விரும்பிவாழ்வாம்.

## திருநாவுக்கரசு மூர்த்தி சுவாமிகள் துதி.

அறப்பெருஞ் செல்விபாகத் தண்ணலஞ் செழுத்தாலஞ்சா
மறப்பெருஞ் செய்கை மாறா வஞ்சக ரிட்டநீல
நிறப்பெருங் கடலும் யார்க்கு நீந்துதற் கரியவேழு
பிறப்பெனுங் கடலுநீத்த பிரானடி வணக்கஞ் செய்வாம்.

இடையறாப் பேரன்பு மழைவாரு மிணைவிழியு முழவாரத்திண்
படையறாத் திருக்கரமுஞ் சிவபெருமான் றிருவடிக்கே பதித்தநெஞ்சும்
நடையறாப் பெருந்துறவும் வாகீசப் பெருந்தகைதன் ஞானப்பாடல்
தொடையறாச் செவ்வாயுஞ் சிவவேடப் பொலிவழகுந் துதித்துவாழ்வாம்.

## ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் துதி.

அரவக லல்குலார்பா லாசைநீத் தவர்க்கேவீடு
தருவமென் றளவில்வேதஞ் சாற்றிய தலைவன்றன்னை
பரவைதன் புலவிதீர்ப்பான் கழுதுகண் படுக்கும்பானாள்
இரவினிற் றூதுகொண்டோ னிணையடி முடிமேல்வைப்பாம்.

ஒருமணத்தைச் சிதைவுசெய்து வல்வழக்கிட் டாட்கொண்ட வுவனைக் கொண்டே, இருமணத்தைக் கொண்டருளிப் பணிகொண்ட வல்லாளனெல்லாமுய்யப், பெருமணச்சீர்த் திருத்தொண்டத் தொகைவிரித்த பேரருளின் பெருமானென்றுந், திருமணக்கோ லப்பெருமாள் மறைப்பெருமாளெமதுகுல தெய்வமாமால்.

## ஸ்ரீமாணிக்கவாசக சுவாமிகள் துதி.

எழுதரு மறைகள் தேறா விறைவனை யெல்லிற் கங்குல்
பொழுதறு காலத் தென்றும் பூசனை விடாது செய்து
தொழுதகை தலைமே லேறத் துளும்புகண் ணீருள் மூழ்கி
அழுதடி யடைந்த வன்பன் அடியவர்க் கடிமை செய்வாம்.

பெருந்துறையிற் சிவபெருமா னருளுதலும் பெருங்கருணைப் பெற்றி நோக்கிக், கரைந்துகரைந் திருகண்ணீர் மழைவாரத் துரியநிலை கடந்து போந்து, திருந்துபெருஞ் சிவபோகக் கொழுந்தேறல் வாய்மடுத்துத் தேக்கிச்செம்மாந், திருந்தருளும் பெருங்கீர்த்தி வாதவூ ரடிகளடி இணைகள் போற்றி.

## நால்வர் துதி.

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கன்மிதப்பி லணைந்தபிரா னடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி
ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி.

## நால்வர் சிறப்பு.

சொற்கோவுந் தோணிபுரத் தோன்றலு மென்சுந்தரனுஞ்
சிற்கோல வாதவூர்த் தேசிகனு—முற்கோலி
வந்திலரேல் நீறெங்கே மாமறைநூல் தானெங்கே
எந்தைபிரா னஞ்செழுத் தெங்கே.

## திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் சரித்திரச்சுருக்கம்.

காழிநகர்ச் சிவபாத விதயர் தந்த
கவுணியர்கோ னமுதுமையாள் கருதியூட்டும்
எழிசையி னமுதுண்டு தாளம் வாங்கி
இலங்கியசித் திலச்சிவிகை யிசையவேறி
வாழுமுய லகனகற்றிப் பந்தரேய்ந்து
வளர்கிழிபெற் றரவின்விட மருகல்தீர்த்து
வீழிநகர்க் காசெய்தி மறைக்கதவம் பிணித்து
மீனவன்மே னியின்வெப்பு விடுவித்தாரே.

ஆரெரியிட் டெடுத்தவே டவைமுன் னேற்றி
யாற்றிலிடு மேடெதிர்போ யணையவேற்றி
யோரமண ரொழியாமே கழுவி லேற்றி
யோது திருப்பதிகத்தா லோடமேற்றிக்
காருதவு மிடிபுத்தன் றலையி லேற்றிக்
காயாத பனையின்முது கனிகளேற்றி
ஈரிலா வங்கமுயி ரெய்த வேற்றி
இலங்குபெரு மணத்தரனை யெய்தினாரே.

## திருநாவுக்கரசு மூர்த்தி சுவாமிகள் சரித்திரச்சுருக்கம்.

போற்றுதிரு வாமூரில் வேளாண் டொன்மைப்
பொருவில் கொறுக் கையரதிபர் புகழனார்பால்
மாற்றரு மன்பினிற் றிலத வதியாமாது
வந்துதித்த பின்புமரு ணீக்கியாருந்
தோற்றியமண் சமயமுற துயரநீங்கத்
துணைவரருள் தரவந்த சூலைநோயால்
பாற்றருநீ ளிடரெய்திப் பாடலிபுத் திரத்திற்
பாழியொழித் தானதிகைப் பதியில்வந்தார்.

வந்துதமக் கையரரு ளானீறு சாத்தி
வண்டமிழா னேய்தீர்ந்து வாக்கின் மன்னாய்
வெந்தபொடி விடம்வேழம் வேலைநீந்தி
வியன்சூலங் கொடியிடபம் விளங்கச்சாத்தி
அந்தமிலப் பூதிமக னரவுமாற்றி
யருட்காசு பெற்றுமறை யடைப்புநீக்கிப்
புந்திமகிழ்ந் தையாற்றிற் கயிலைகண்டு
பூம்புகலூ ரரன்பாதம் பொருந்தினாரே.

## ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் சரித்திரச்சுருக்கம்.

தண்கயிலை யதுநீங்கி நாவ லூர்வாழ்
சைவனார் சடையனார் தனையனாராய்
மண்புகழ வருட்டுறையா னோலைகாட்டி
மணம்விலக்க வன்றொண்டா யதிகைசேர்ந்து
நண்பினுட னருள்புரிய வாரூர்மேவி
நலங்கிளரும் பரவைதோள் நயந்துகைகித்
திண்குலவும் விறன்மிண்டர் திறல்கண்டேத்துந்
திருத்தொண்டத் தொகையருளாற் செப்பினாரே.

செப்பலருங் குண்டையூர் நெல்லழைத்துத்
திருப்புகலூர்ச் செங்கல்செழும் பொன்னாச்செய்து
தப்பின்முது குன்றர்தரும் பொருளாற்றிட்டுத்
தடத்தெடுத்துச் சங்கிலிதோள் சார்ந்துநாதன்
ஒப்பிறனித் தூதுவந்தா றாடேறி
யுறுமுதலை சிறுமதலை யுமிழநல்கி
மெய்ப்பெரிய களிறேறி யருளாற்சேர
வேந்தருடன் வடகயிலை மேவினாரே.

## ஸ்ரீமாணிக்கவாசக சுவாமிகள் சரித்திரச்சுருக்கம்.

செய்யதிரு வாதவூர் வந்தருளி யமைச்சரெனச் சிறந்துநீடு
வையமிசை வழுதிநிதி கொண்டரனைக் குருந்தடியில் வணங்கினாலம்
உய்யவருட் பணியாற்றி நரிபரியாச் செய்துநதி யுடைப்பிலெங்கள்
ஐயன்முடி மிசையுவந்து மண்சுமக்க வன்பினுரு வாயினாரே.
எங்குமாகிய வழகன் மேனிபிரம் படிதாங்க வோங்கிப்புத்தர்
மங்கவா ரருள்செய்து மூகைபே சிடவழங்கி மணிமன்றுடும்
எங்கணாயகன் கரத்தாலேடு மெழுத்தாணி யுங்கொண் டெழுதப்பாடி
அங்கண் மேவிய சோதிதன்னி லிரண்டறக்கூடி யமர்ந்திட்டாரே.

திருச்சிற்றம்பலம்.

முற்றுப்பெற்றது.



# குறிப்புரை.

திருச்சிற்றம்பலம்.

விண்ணோர் தமக்குந் தெரிவருநின் மேன்மையெங்கே யானெங்கே
தண்ணார் துதியென் றிதுவுமொரு குற்றந்தானாய்ச் சமைந்ததால்
அண்ணா அன்புக் கெளியாயான் அவாவாற் செய்தே னாதலினால்
எண்ணா தெல்லாம் பொறுத்தருள்வாய் என்னு மிதுவென் றுணிபாமே.

என்று சிவதத்துவ விவேக நூலுடையார் கூறியபடி அரிபிரமாதி அமரர்களுங்கூட பன்னாள் ஓலமிட்டலற்றியும் அறிதற்கரிய சாக்ஷாத் பரமசிவத்தின் அபாரப்பெருமையினை ஜீவசுபாவம் முழுதும் நிறைந்த சிறியேன் எடுத்தியம்புவதென்றால் கேவலம் பிதற்றேயாகும். ஆயினும் இச்சிறு நூலை அளவிலாசை தூரப்ப அவாவாலறைந்து, அம்புலிசூடிய எம்பிரான் பொன்னார் திருவடிக் கமலங்களில் ஒரு சிறுவில்வத்தளிராகச் சமர்ப்பித்து, அவ்விணையற்ற திருவடிகளைச் சிக்கெனப்பிடித்து நின்றேனாதலின் அப்பரமசிவத்தின் அபாரமஹிமை அடியேன் செய்த இச்சிறு குற்றத்தையும் க்ஷமித்தருளுமென்று ஆப்த சிகாமணிகளான நம்வைதிக சைவர்களுக்கு மிகவும் விநயமாய் விண்ணப்பஞ்செய்து கொள்ளுகிறேன். வேதந்தழைக்க, வேதாந்தமோங்க, வேதியர்களிக்க, வித்தைபெருக, விஞ்ஞானமலிக, விருபாட்சன்றிருவடிவாழ்க. சிவம்! சிவம்!! சிவம்!!!

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

ஸ்ரீ ஜ்ஞான சம்பந்த குருப்யோ நம:

# ப்ரணவ வித்யா பரிமளம்

என்னும்

# ஓங்கார விளக்கம்.

பிரணவாபிள்ளை

## ஸ்ரீ நடராஜமூர்த்தி வணக்கம்.

உலகெலா முணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

*தானந் தவந்தருமஞ் சந்ததமுஞ் செய்வர்சிவ*
*ஞானந்தனையணைய நல்லோர் பராபரமே......................எனவும்*

*கல்லெறியப்பாசி கலைந்து நன்னீர் காணுநல்லோர்*
*சொல்லுணரின் ஞானம்வந்து தோன்றும் பராபரமே........எனவும்*

*கற்கண்டாலோடுகின்ற காக்கைபோற் பொய்ம்மாயச்*
*சொற்கண்டா லோடுமென்பர் தோய்வறிவ தெந்நாளோ........எனவும்*

*கொல்லா விரதமொன்று கொண்டவரே நல்லோர்மற்*
*றல்லாதார் யாரோ வறியேன் பராபரமே......................எனவும்*

ஸ்ரீமத் தாயுமானசுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய திவ்விய திருவாக்குகளிற்கண்ட சுகுணங்களமைந்த ஒரு சத்புருஷன், முன்போந்த ஜன்மங்களிலே அளவிறந்த சத்கருமங்களை

யநுஷ்டித்து அவற்றாலாய புண்ணிய சுகிருதவசத்தால் இகலோகத்திலே சதாசாரம் நிறைந்த ஒருயர்ந்த நல்ல குடியிலே தோன்றியிருந்தனன். அவன்,

𑌦𑍁𑌰𑍍𑌲𑌭𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌮𑌾𑌨𑍁𑌷𑍍𑌯𑌂 𑌤𑌤𑍍𑌰𑌾𑌪𑌿 𑌨𑌰𑌵𑌿𑌗𑍍𑌰𑌹𑌮𑍍 |

துர்லபம் ப்ராப்ய மாநுஷ்யம் தத்ராபி நரவிக்ரஹம்।

(இதன்பொருள்) "மானுடதேகம் அருமையானது. அதனினும்புருஷதேகம் அருமையானது." என்று கிருஷ்ணயஜுர்வேத வராஹோபநிஷத் வாக்கியத்தையோர்ந்து, தான் தாங்கியிருக்கும் பஞ்சபூதபரிணாமசரீரம் ஒரு நொடிப்பொழுதில் மாயுந்தன்மையுடையதென நன்றாக ஆலோசித்துப்பார்த்துத் தெளிந்து, புத்திர மித்திர களத்திராதிகளின் சேர்க்கைப்பிரிவுகளால் உண்டாகும் பெருஞ் சுகதுக்கங்களைக் கண்டு வெருவி, அளவிறந்த மாதரு கர்ப்பவாச சம்பந்தமுடைய பிறவிப்பெரும்பிணிக்கு மிகவும் அஞ்சி, அதையொழிக்க வெண்ணினவனாய்,

மூர்த்திதலந் தீர்த்த முறையாற் றொடங்கினர்க்கோர்
வார்த்தைசொல்லச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே.........எனவும்

ரிஷிசுவாமிகள் பூஷித்த அரியபெரிய உண்மையைக் கடைப்பிடித்துப் பூரணவைராக்கிய சம்பந்நனாய் விளங்கினன். பிறகு தீர்த்தங்கள்தோறுஞ்சென்று அவற்றள்படிந்து, ஸ்தலங்கள்தோறுஞ்சென்று மூர்த்திகளைவழிபட்டுச் சிவபுண்ணிய மேறப்பெற்ற முதிர்ச்சியினாலே இருவினையொப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் என்னும் இவற்றின் விளைவாகிய பரிபாகமெய்தித் தீவிரபக்குவமடைந்திருந்தான். அப்பொழுது அவன் அந்தகாரத்தை ஒருங்கேயொழிக்கும் ஆதித்தனைப்போலச் சம்பூரண பிரமவித்தையும், சிறந்த தபோபலமும், திருவருட்பிரகாசமும் பெற்றுத் திருவருளே திருமேனியாக வெழுந்தருளியிருக்கும் ஓர் சற்குருநாதன் சந்நிதானமடைந்து கேட்கும் முறையிற் சிறிதும் பிறழாமல் அவனடிப்போதுகளைக் கனிந்தமனத்தோடும் சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்து எழுந்துநின்று கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிஷ்டையென நான்கு திறனாக விளங்கும் முத்திஞானத்திற்கு ஏதுவானதும், சகலவேதாந்தங்களின் பரமரகசியமானதும், அநுபவத்தால்மட்டும் அறியக்கூடியதும், அநேககோடி ஜன்மங்களிலே செய்த புண்ணிய பரிபாக முதிர்ச்சியால்

சற்குருநாதன் கடாட்சம்பெற்ற அந்தட்சணமே அறியக்கூடிய துமாயுள்ள ஒப்பற்ற ஒருமொழியை ஞானவைராக்கிய பரிபூரண மூர்த்தியாகிய பகவானே! வேதோக்தமான சிவசின்ன தாரண அழகுவாய்ந்த குருநாதா! அடியேனுக்கு உபதேசித்தருளல் வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தான். அன்றியும் தன்னுடைய உடல்பொருளாவி மூன்றையும் அவரது திருவடிக் கமலங்களுக்கு அர்ப்பணஞ்செய்து சுதந்தரவினனாய் விளங்கினன். இதனாலே,

[illegible]
[illegible]

ஆசிநோதிஹிசாஸ்த்ரார்த்தம் ஆசாரேஸ்தாபயத்யபி।
ஸ்வயமாசரதேயச்ச தமாசார்யம் விதுர்புதா:॥

(இ-ள்) "எவன் சாஸ்திரங்களைக் கற்பான், எவன் அவற்றையுபதேசிப்பான், எவன் அவற்றை யநுஷ்டிப்பான், அவனே ஆசிரியனாய்" என்று ஆன்றோர்கூறிய ஆசிரியவிலக்கண முழுதுந் தழுவப்பட்டமை காண்க. அவ்விண்ணப்பத்தைச் செவிமடுத்தருளிய சற்குருநாதன்,

கிருஷ்ணயஜுர்வேத சுவேதாசுவதரோபநிஷத்.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

வேதாந்தே பரமம் குஹ்யம் புராகல்ப ப்ரசோதிதம்।
நாப்ரசாந்தாயதா தவ்யம் நாபுத்ராய நாசிஷ்யாயவைபுந:॥
யஸ்யதேவே பராபக்தி: யதாதேவே ததாகுரௌ।
தஸ்யைதே கதிதாஹ்யர்த்தா: ப்ரகாசந்தே மஹாத்மந:॥

(இ-ள்) "வேதாந்தத்தில் பரமரகசியமாயும் பழைய கற்பங்களிலே வெளியிடப்பட்டதாயுமுள்ள (இந்த ஞானத்தை) புத்திரனல்லாதவனுக்கும் சீடனல்லாதவனுக்கும், சாந்தியடையாதவனுக்கும் கொடுக்கக்கூடாது. எவனுக்குத் தேவனிடத்தில் சிறந்த பக்தியுண்டோ தேவனிடத்திலுள்ளதுபோல் குருவினிடத்தில் யாருக்குண்டோ அந்த மகாத்துமாவுக்கே மேற்

சொன்னபொருள் விளங்கும்'' என்று கூறியபடி மாணாக்கனது தீவிரத்தை நோக்கி கழிபேருவகை கொண்டவராய்ப் புன்னகையோடும் மந்தகாசத்தோடும் அவனுக்கு உபதேசிப்பாராயினர். அப்போது அவ்விருவருக்கும் நடந்த அர்த்தவாதம் என்னும் சம்வாதமுறையே இங்கு உலகத்தாரெளிதிலுணருமாறு இலகுவான நடையில் வேதவேதாந்த வாக்கியப் பிரமாணங்களோடு ப்ரணவ வித்யா பரிமளம் என்னும் ஓங்காரவிளக்கம் ஆகிய இவ்வரிய பெரியநூல் திருவருளை முன்னிட்டு வினாவிடையாக வரையப்பட்டுள்ளது.

கிருஷ்ணயஜுர்வேத தைத்திரீயோபநிஷத்—சிக்ஷாவல்லி.

[illegible] ||

ஆசார்யதேவோபவ ||

(இ-ள்) "ஆசாரியனைத் தெய்வமாகப் பாவித்திரு" என்றும்

கிருஷ்ணயஜுர்வேத வராஹோபநிஷத்.

[illegible] |

[illegible] ||

ஆசார்ய சாஸ்த்ரமார்க்கேண ப்ரவிச்யாசுஸ்திரோபவ |

சிவோகுருச்சிவோதேவச் சிவோவேதச்சிவ: ப்ரபு: ||

(இ-ள்) "ஆசாரியன் சாஸ்திரம் ஆகிய இம்மார்க்கத்தே பிரவேசித்து அதில் உறுதியாயிரு. சிவனேகுரு. சிவனேதேவன். சிவனேவேதம். சிவனேபிரபு." என்றும்

[illegible] |

தத்த்ருஷ்டிகோசராஸ்ஸர்வே முச்யந்தே ஸர்வ பாதகை: |

(இ-ள்) "தத்துவப் பிரவர்த்தகராயுள்ள அவனுடைய பார்வையிற்பட்டவர்களனைவரும் சர்வ பாதகங்களினின்றும் விடுதலையுறுகின்றனர்" என்றும்

சுக்லயஜுர்வேத அத்வயதாரகோபநிஷத்.

[illegible] |

குருரேவ பரம்ப்ரஹ்ம |

(இ-ள்) "குருவே பரப்பிரமம்." என்றும்

அன்றியும் மெய்கண்ட சாஸ்திரங்களிலொன்றாகிய திருவருட்பயனும்,

ஞானமிவ ளெஹ்ழிய நண்ணியிடும் நற்கலனற்
பானுவொழியப்படின்.

(இ-ள்) "நல்ல சூரியக்காந்தக் கல்லினிடத்து ஆதித்தனில்லாமல் அக்கினி தோன்றுமாயின் ஆசாரியனையின்றி ஒருவருக்கு ஞானமுண்டாதல்கூடும்" என்றும் ஆணை தந்திருத்தலால் சற்குருநாதன் கருணையும் அவனது கடாட்சமுமின்றி முத்திக்கேதுவாகிய திருவருள்ஞானம் ஒருபோதுங் கைகூடாதென்பது இவற்றால் விளக்கிக்காட்டப்பட்டது. சகலாகம பண்டிதராகிய அருணந்தி சிவாசாரியருடைய "இருபாவிருபஃதும்", உமாபதி சிவாசாரியருடைய "நெஞ்சுவிடுதூதும்" ஆசாரியரையே பரம தெய்வமாகக்கொண்டு இயற்றப்பட்டுள்ள ஒப்பற்ற ஞானசாஸ்திரங்களாம் என்பதையுணர்க.

மாணாக்கன்:—ஆதிகாலத்திலே ஸ்ரீமத் தக்ஷிணாமூர்த்தி முதலிய பரமாசாரியர்களால் உபதேசிக்கப்பட்ட உயர்வொப்பில்லாத சர்வமந்திரசாரபூத மூலமொழி யாது?

ஆசிரியன்— "ஓம்" என்னும் பிரணவ ஏகாக்ஷர மந்திரமே ஆதியில் உபதேசிக்கப்பட்டது.

மா—இதற்கு ஏதாவது சுருதிப்பிரமாணமுண்டோ?

ஆ—உண்டு. வேதமகாபுருஷன் உச்சியிலமர்ந்து சிவோத்கர்ஷங்களையும், சிவபரத்துவத்தையும் நாட்டவெழுந்த பஞ்சருத்திரங்களிலொன்றாகிய

### அதர்வணவேத அதர்வசிகோபநிஷத்.

𑌓𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌤𑌦𑌕𑍍𑌷𑌰𑌮𑌾𑌦𑍌 𑌪𑍍𑌰𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌧𑍍𑌯𑌾𑌨𑌂 𑌧𑍍𑌯𑌾𑌯𑌿𑌤𑌵𑍍𑌯𑌮𑍍।

ஓமித்யே ததக்ஷர மாதௌ ப்ரயுக்தம் த்யாநம் த்யாயிதவ்யம்।

(இ-ள்) "ஓமென்னும் பிரணவாக்ஷரமே ஆதியிலுபதேசிக்கப்பட்டது. அதுவே தியானம் அதுவே தியானிக்கற்பாலது." என்று கூறியது.

மா—இம்மகாமந்திரம் எப்பொழுது எவ்வாறுண்டாயிற்று?

ஆ—சிருஷ்டிகாலத்தில் பரமசிவம் ஆத்மாக்களின்மேல் வைத்த பரங்கருணையால் அவர்களை இரட்சிக்க இச்சைகூர்ந்து சுத்தமாயையென்னும் குடிலையின் ஏகதேசத்தைத் தனது

ஒளியால் கலக்க அதினின்று முதல் முதல் தோன்றிய நாதமே "ஓம்" என்று சொல்லப்படும். அது பின்னர் விந்து தத்துவமாய்விரிந்து பரவியது. அது எவ்வாறெனில் இரண்டு எதிர்மறையான மின்சாரசக்திகள்—அதாவது பாயுஞ்சக்தியொன்று, தாங்குஞ்சக்தி மற்றொன்று, ஆகியவிவ்விரண்டும் ஒன்றோடொன்றுசேரும்போது அவற்றினின்றும்பிரகாசமும்தொனியுந் தோன்றுவதுபோல (இதற்கு மின்னலும் இடியுமே உதாரணம்) பரமசிவத்தின் அருளொளி குடிலையில் வந்து பொருந்தினவுடன் தோன்றிய தொனியே நாதமாகும். இந்த நாதமே வைதிக சைவத்துட்கூறப்பட்டதத்துவங்களெல்லாவற்றிற்கும் முதன்மையானது. இதுவே சர்வாத்மாக்களுக்கும் அறிவை யெழுப்பிவித்து ஞானமாய் விளங்கிநிற்பது. இதை அளக்கவும் உரைக்கவும் முடியாது. அநாமயமாயும், சர்வ வியாபகமாயும், நித்தியமாயும், நிலையாகவும் பொலிவதுமிதுவே. இதற்கு ஒப்புயர்வு கிடையாது. எல்லாவற்றிற்கும் மேலாய் நாயகத்தன்மை பூண்டிருத்தலானும், சிவம் அதிஷ்டித்து நிற்றலானும் இதற்குச் சிவதத்துவமெனப் பெயருண்டாயிற்று. எவ்வப்பெயர்கள் எவ்வதத்தத்துவாதிபதிகளுக்குளவோ அவ்வப்பெயர்கள் அவர்களாலதிஷ்டிக்கப்படுந் தத்துவங்களுக்கு முளவென்பது பரமாப்த வாக்கியம். இந்தச் சிவம் என்னும் நாததத்துவமே தோற்ற முறையில் முதல் தத்துவமெனவும், ஒடுக்கமுறையில் முப்பத்தாறுவது தத்துவமெனவும் கூறப்படும். இலயதத்துவம் எனப்பெயருடையதும் இதுவேயாம். மேற்சொன்ன குடிலையினின்றுந்தோன்றிய தொனியானது பரமாகாயப் பெருவெளியில் பரவும்போது உண்டாகிய வட்டவடிவே விந்துவாகும். அதற்குச் சத்திதத்துவமென்று பெயர். அதுவே முப்பத்தைந்தாவது தத்துவமாகும். விந்து-புள்ளி, வட்டம்.

இவ்வாறு தோன்றிய தத்துவங்கள் முப்பத்தாறையும் விரிக்கின், 1 பிருதிவி. 2 அப்பு. 3 தேயு. 4 வாயு. 5 ஆகாசம். இவைபஞ்சபூதங்களாம். 6 வாக்கு. 7 பாதம். 8 பாணி. 9 பாயுரு. 10 உபஸ்தம். இவை கர்மேந்திரியங்களாம். 11 சுரோத்திரம். 12 துவக்கு. 13 சட்சு. 14 ஜிங்குவை. 15 ஆக்கிராணம். இவை ஞானேந்திரியங்களாம். 16 சப்தம் 17 ஸ்பரிசம். 18 ரூபம். 19 ரஸம். 20 கந்தம். இவைதன்மாத்திரைகளாம். 21 மனம்.

22 அகங்காரம். 23 புத்தி. 24 குணம். இவை அந்தக் கரணங்களாம். இந்தத் தத்துவங்கள் இருபத்துநான்கும் ஆத்மதத்துவமெனவும், அசுத்ததத்துவமெனவுஞ் சொல்லப்படும். இவை அதர்வணவேத பிரசிந்நோபநிஷத்தில் பிரசித்தம். 25 பிரகிருதி. 26 புருஷன். 27 அராகம். 28 வித்தை. 29 கலை. 30 நியதி. 31 காலம். இந்தத் தத்துவங்களேழும் வித்தியாதத்துவமெனவும், சுத்தாசுத்த தத்துவமெனவுஞ் சொல்லப்படும். இவை கிருஷ்ண யஜுர்வேத சுவேதாசுவதரோப நிஷத்திலும், அதர்வணவேத நாரதபரிவிராஜ கோபநிஷத்திலும் பிரசித்தம். 32 சுத்தவித்தை 33 ஈசுவரம். 34 சாதாக்கியம். 35 சத்தி அல்லது விந்து. 36 சிவம் அல்லது நாதம். இந்தத் தத்துவங்களைந்தும் சிவதத்துவமெனவும் சுத்ததத்துவமெனவுஞ் சொல்லப்படும். இவை அதர்வணவேத பிருகஜ்ஜாபாலோப நிஷத்தில் பிரசித்தம். இவ்வாறுவேதபடிதமாயுள்ள முப்பத்தாறு தத்துவங்களுள்ளுந் தலையாய்ச் சிறந்து நிற்கும் நாததத்துவமே அவையனைத்துக்கும் உறையிடமாய் இருத்தல்பற்றி அதன் தோற்றமே பிரதம மகாசிருஷ்டியென்று ஞானநூற்களோதும். மற்றைய நாராயணன் முதலியோர் சிருஷ்டி அதற்குப்பின் அவ்வப்போது தாழ்ந்த நிலைக்கண்ணுள்ள தத்துவங்களினின்றுந் தோன்றியபடியால் அந்தச்சிருஷ்டிபேதங்கள் அவாந்தர சிருஷ்டியென்றே கொள்ளற்பாற்று. வேதவுண்மை இவ்வாறிருக்க இதனையுணராதார் தம் தம் மதங்களிற் கூறப்பட்ட கடவுளரது சிருஷ்டியே ஆதிசிருஷ்டியென்று மோகத்தால் சாதியாநிற்பர். அவை மறைமுடிவல்லோரால் அங்கீகரிக்கப்படுவனவன்று.

அன்றியும், மேற்சொன்ன தத்துவங்களும் அவற்றின் காரியரூபமான தாத்விகங்களும் சுத்தமெனவும், சுத்தா சுத்தமெனவும், அசுத்தமெனவும் முத்திறப்படுதலால் அவற்றின் முதற்காரணங்களும் மூன்றுவிதமாகவேயிருக்கின்றன. அவை சுத்தமாயை (பரப்பிரகிருதி), அசுத்தமாயை (அபரப்பிரகிருதி), பிருகிருதிமாயை (மூலப்பிரகிருதி) என்பனவாம். அவற்றுள் மலகர்மங்களோடு விரவாது முதற் காரணமாயிருப்பது சுத்தமாயையாகும். அது ஏனையிரண்டினையும் வியாபித்து மேலாய் நிற்ப, அதன் கீழாயடங்கி மலகர்மங்களோடு விரவி முதற்காரணமாயிருப்பது அசுத்தமாயையாம். அவ்வசுத்தமாயையின் ஸ்தூல

பரிணாமமே பிரகிருதிமாயையாம். அது முளைப்பதற்குப் பக்கு வப்பட்டிருக்கும் உப்பின விதையைப் போன்றது. சுத்தமாயா தத்துவங்களினது தோற்றம் ஆடையிலிருந்து கூடாரந்தோன்றி னாற்போல விருத்திகாரியமாம். அசுத்தமாயா தத்துவங்களி னது தோற்றம் நெய்யிலிருந்து புழுவுண்டானாற்போல ஏகதேச பரிணாமமாம். மாயை-ஆத்மாக்களுக்கு அறிவை மயக்கிவிளக் கஞ் செய்வது. அல்லாமலும் மா-ஒடுங்குதல், யா-தோன்றுதல் எல்லாக் காரியங்களும் தன்னிடம் வந்து ஒடுங்குதற்கும், தன் கண் நின்று தோன்றுதற்குங் காரணமாய் நிற்பதெதுவோ அது மாயையென்று சொல்லப்படும். தத்துவம்-என்பதற்கு நித்தியம் என்று பொருள். அதாவது, தாத்விகமாகிய சரீராதிகள் போல உடனே அழிவதின்றிப்பிரளய காலம் வரையும் நிலையுறுதலால் தத்துவமெனப்பட்டது. பூதலயகாலத்தில் மரணமுறுந் தேவர் களுக்கு அமரர்கள் என்னும் பெயர் ஏற்பட்டதுபோலக் காரியக் கேடுடைய கருவிகளுக்கும் தத்துவமெனப் பெயர் ஏற்பட்ட தென்றுணர்க.

மா—பிரதம மகாசிருஷ்டியில் முதல் முதல் தோன்றியது நாதம் என்றதற்குப் பிரமாணம் யாது?

ஆ—சிதாகாசரகசியத்தை வெளிப்படுத்துந் தெய்வத்தான மென்னும் திருச்சிற்றம்பலத்தில் பஞ்சகிருத்தியத்தாண்டவஞ் செய்தருளும் ஸ்ரீ நடராஜப் பெருமானது வலது கரத்தில் தரிக் கப்பட்டுள்ள பழையவாத்திய மெனப்படும் உடுக்கையே இவ் வுண்மையை வலியுறுத்தாநிற்கும். "டமாகமேந்திய ஸ்ரீ அஸ்தத் திலே சிருஷ்டி" என்னும் பொருள்பட "தோற்றந்துடிய தனில்" என்று உண்மை விளக்கங்கூறுவதையுணர்க.

மா—இந்த நாதந்தான் சர்வபிரபஞ்சத் தோற்றத்துக்கும் ஆதிகாரணமோ?

ஆ—ஆம். சொல்லும் பொருளுமாய இருகூற்றுப்பிரபஞ்ச மென்னுஞ் சப்தமயப் பிரபஞ்சத்துக்கும் அர்த்தமயப் பிரபஞ் சத்துக்கும் அதுவே காரணமாகும்.

மா—சப்தமயம் அர்த்தமயம் ஆகிய இருவகைப் பிரபஞ்சங் களையும் விளக்கிச் சப்தமயத்தை விரிவாயெடுத்தியம்பவேண்டும்.

ஆ—நமது கண்ணுக்குப் புலப்படும் இப்பிரபஞ்சமானது பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்னும் பஞ்சபூதங்களின் காரியமாயும், சுட்டியறியப்படும் பல அவயவப்பகுப்புடையதாயும், தோன்றி நின்றழியுந்தன்மைத்தாயு மிருத்தலின் காரிய ரூபமாகும். இதுபோல வேதமும் பல சாகைகளாயும், காண்டங்களாயும், அத்தியாயங்களாயும், மந்திரங்களாயும், பதங்களாயும், அட்சரங்களாயும் விரிந்து அவற்றின் கோவைப்பாட்டோடுகூடிய தொகுதியா யிருத்தலின் காரியப்பாடுடையதேயாம். அதனால் உலகம் அர்த்தமயப் பிரபஞ்சமாயும், வேதம் சப்தமயப்பிரபஞ்சமாயும் இருக்கின்றன வென்பது வெளிப்படை. பிர-உபசர்க்கம், பஞ்சம்-விரிவு. அதாவது மிகவும் விரிந்த வியல்புடையது என்பது அதன் பொருளாம். வேதம் பரவித்தை என்னும் அநுபூதிஞானத்துக்கு நேர்சாதனமாயிருத்தலின் அவ்வேதத்தால் வரும்ஞானம் அபரவித்தை எனப்பட்டது. (அபரவித்தை-அபரஞானம்).

அதர்வணவேத முண்டகோபநிஷத்.

𑌤𑌤𑍍𑌰𑌾𑌪𑌰𑌾 𑌋𑌗𑍍𑌵𑍇𑌦𑍋 𑌯𑌜𑍁𑌰𑍍𑌵𑍇𑌦𑌃 𑌸𑌾𑌮𑌵𑍇𑌦𑍋
𑌽𑌥𑌰𑍍𑌵𑌵𑍇𑌦𑌃 𑌶𑌿𑌕𑍍𑌷𑌾 𑌕𑌲𑍍𑌪𑍋 𑌵𑍍𑌯𑌾𑌕𑌰𑌣𑌂
𑌨𑌿𑌰𑍁𑌕𑍍𑌤𑌂 𑌛𑌨𑍍𑌦𑍋 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌷𑌮𑌿𑌤𑌿 ।
𑌅𑌥 𑌪𑌰𑌾 𑌯𑌯𑌾 𑌤𑌦𑌕𑍍𑌷𑌰𑌮𑌧𑌿𑌗𑌮𑍍𑌯𑌤𑍇 ॥

தத்ராபரா ருக்வேதோ யஜுர்வேதஸ் ஸாமவேதோ
அதர்வண வேதச் சிக்ஷாகல்போ வ்யாகரணம்
நிருக்தம் சந்தோ ஜ்யோதிஷமிதி ।
அதபரா யயாததக்ஷர மதிகம்யதே ॥

(இ-ள்.) "இருக்கு, யஜுர், சாமம், அதர்வணமென்னும் வேதங்களும், சிக்ஷை, கற்பம், வியாகரணம், நிருக்தம், சந்தம், சோதிடம் என்னும் அங்கங்களும் அபரவித்தையாம். எதனாலே அக்ஷரமாகிய சிவம் அறியப்படுகின்றதோ அதுபரவித்தையாம்" என்று நிரூபித்துள்ளது. அக்ஷரம்-மூர்த்தித்திரயாதீத சிவம். அதற்குப்பிரமாணம்.

அதர்வணவேத திரிபுராதாபிந்யுபநிஷத்.

𑌸𑌦𑌾𑌶𑌿𑌵𑍋𑌕𑍍𑌷𑌰𑌂 𑌵𑌿𑌮𑌲𑌂

ஸதாசிவோக்ஷரம் விமலம்

(இ-ள்.) "சதாசிவன் அக்ஷரம் மலமற்றவன்."

### அதர்வணவேத பஸ்மஜாபாலோபநிஷத்.

[illegible]

சிவமக்ஷரமவ்யயம்

(இ-ள்.) "சிவம் அழிவற்றது. முக்காலங்களாலும் அளவிடப்படாதது."

### கிருஷ்ணயஜுர்வேத ப்ரஹ்மோபநிஷத்.

[illegible]

[illegible]

[illegible] ||

தத்ர சதுஷ்பாதம் ப்ரஹ்மவிபாதி
ஜாகரிதே ப்ரஹ்மா ஸ்வப்நே விஷ்ணு:
ஸுஷுப்தௌ ருத்ரஸ் துரீயமக்ஷரம் ||

(இ-ள்.) "அங்கு நான்கு பாதங்களுள்ள பிரமம் விளங்குகின்றது. ஜாக்கிரத்தில் பிரமா. சொற்பனத்தில் விஷ்ணு. சுழுத்தியில் உருத்திரன். துரீயம் அக்ஷரம்" என்பனவாம்.

இந்தக் கடைசி வாக்கியத்தில் துரீயம் அக்ஷரப்பிரமமென்று நிரூபிக்கப்பட்டபடியால் பிரமா, விஷ்ணு, உருத்திரன் என்னும் மூவருக்கும் மேலான நான்காவது வஸ்துவே அப்பரம் பொருளென்று ஏற்பட்டது. படவே, முக்காலத்தும் அழிவில்லாமல் நிலைபெறுயுள்ள பொருளதுவோ அதுவே அக்ஷரம் (சிவம்) என்றும் வெளியாயிற்று. அதுவே சிருஷ்டிக்கு முன்னும் சங்காரத்துக்குப்பின்னும் உளதாகிய பரப்பிரமம். அதனிடத்து எல்லாக் காரணவாக்கியங்களும் ஸமந்வயமாதலின் அப்பொருளே சர்வகாரண மாகின்றது.

### கிருஷ்ணயஜுர்வேத சுவேதாசுவதரோபநிஷத்

[illegible] |

[illegible]

[illegible] |

யதாதமஸ்தந்ந திவா ந ராத்ரி: ந ஸந்நசாஸச்சிவ ஏவ கேவல: |
தத்க்ஷரம் தத்ஸவிதுர் வரேண்யம்
ப்ரஜ்ஞா ச தஸ்மாத் ப்ரஸ்ருதா புராணீ ||

(இ-ள்.) "என்று இருள் உளதாயிற்றோ அன்று பகலுமில்லை இரவுமில்லை. சத்துமில்லை அசத்துமில்லை. கேவலம்

சிவபரம்பொருள் ஒன்றே யிருந்தது. அது அக்ஷரப் பிரமம். அதுவே ஸவிதாவுக்கு மேலானது. ஆதிசங்கற்பமும் அத னிடத்தே தோன்றியது" என்று நிரூபிக்கது. இந்த மந்திரத் தினாலே ஸர்வ ஜகத்காரணரூப பராசக்திசகித பரமேசுவரன் ஒருவனே சத்து அசத்து, பகல் இரவு என்ற பாகுபாடில்லாத ஆதி காலத்தும் இருந்தனனெனவும், அவனே சூரிய மண்டல அந்தர்யாமியாய், சர்வபிராணுமனை பரமோபாஸ்ய மூர்த்தியாய், உயர்காயத்திரியின் தேவதையாயுள்ளானெனவும், அவனிடத்தே "ஆதிசிருஷ்டியில் இவ்வுலகத்தை யான் சிருஷ்டிப்பேன்" என்ற ஆதிசங்கற்பம் தோன்றிற்றெனவும், அவையே பிரம்ம லக்ஷண மாதலால் அத்தகைய லக்ஷணம் பொருந்திய உயர்வொப்பற்ற பரமசிவனே பிரமமெனவுந் தீர்மானஞ்செய்யப்பட்டது. படவே, திரிமூர்த்திகளும் சிவபரஞ்சுடரால் படைக்கப்பட்டவர்களென் றும் அவர்களுக்குந் தோற்றநாச முண்டென்றும் அடியில் காட்டுஞ் சுருதிவாக்கியங்கள் ஸ்பஷ்டமாய்த் தெரிவிக்கின்றன.

ஸாமவேத மஹோபநிஷத்.

[illegible] |
[illegible] ||

ப்ரஹ்மா விஷ்ணுச்ச ருத்ரச்ச ஸர்வேவா பூதஜாதய: |
நாசமேவாநுதாவந்தி ஸலிலா நீவ பாடபம் ||

(இ-ள்.) "பிரமனும், விஷ்ணுவும், உருத்திரனும் எல்லாப் பூதங்களோடும் சிவத்தாற் படைக்கப்படுகின்றனர். வடவைத் தீயால் ஜலம் லயமடைதல் போல அப்பூதங்களோடு அவர்களும் லயமடைகின்றார்கள்".

அதர்வணவேத அதர்வசிகோபநிஷத்

[illegible]
[illegible]
[illegible] |

ஸர்வமிதம் ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரேந்த்ராஸ்தே
ஸம்ப்ரஸூயந்தே ஸர்வாணி சேந்த்ரியாணி
ஸஹபூதைர் நகாரணம் |

(இ-ள்.) "பிரமன், விஷ்ணு, உருத்திரன், இந்திரன் ஆகிய இவரெல்லாம் படைக்கப்படுகின்றனர். இந்திரியங்க

ளெல்லாம் பூதங்களோடு பிறப்பிக்கப் படுகின்றன. ஆகலின் அவர்களும், அவைகளும் காரணங்களாகா."

கிருஷ்ணயஜுர்வேத பஞ்சப்ரம்மோபநிஷத்

[illegible] |

[illegible] ||

அவஸ்தாத்ரிதயாதீதம் துரீயம் ஸத்யசித்ஸுகம்।
ப்ரஹ்ம விஷ்ண்வாதிபிஸ் ஸேவ்யக் ஸர்வேஷாம்ஜநகம்பரம்॥

(இ-ள்.) "ஜாக்கிராதி மூன்றவஸ்தைகளுக்கு அதீதரும், துரீயரும், சச்சிதாநந்தமாயுள்ளவரும், பிரம விஷ்ணு முதலியோரால் ஸேவிக்கப்படுபவரும், யாவருக்கும் பிறப்பிடமானவரும்" இவ்விருதிவாக்கியத்தால் துரீயசிவம் ஒன்றே ஸேவ்யப் பொருளெனவும், பிரமவிஷ்ணு முதலியோர் அப்பொருளைச் சேவிக்கும் சேவகர்களெனவும் வியக்தமாயிற்று. இவ்வாக்கியங்களாலும் இன்னும்வரும் அநேக பிரபல பிரமாணங்களாலும் அறியக்கிடக்கின்ற உண்மையாவது - பரசிவம் என்னும் அக்ஷரப்பிரமம் ஒன்றே பரவித்தையாலுணரக்கிடக்கும் பரம்பொருளாம். சுருதி ஏனையதேவதைகளைச்சுட்டிச் சிற்சில விடங்களில் அக்ஷரமென்று கூறினும் அவ்வாக்கியங்களனைத்தும் உபசாரமும் சிவதர்மாரோபணமுமே யன்றி வேறன்று. காரணத்தினின்றுங் காரியத்தின் மேலேற்றப்பட்டதென்றே கொள்ளவேண்டும். சிவத்தைத் தவிர வேறு எக்கடவுளருக்கும் எக்காலமும் பிரமத்துவம்வேதோக்தமாய்நிலைக்காதென்பது ஒருதலை. பகவற்கீதையிலும் "பிரமம்யாது" என்னும் பொருள்பட [illegible]-கிம்தத்ப்ரஹ்ம" என்று அர்ஜுநன் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியை வினவியதற்கு "அழியாத பொருள் யாது அதுபிரமம்" என்னும் பொருள் தோன்ற "[illegible]-அக்ஷரம் ப்ரஹ்மபரமம்" என்று விடையிறுத்ததையும் ஈண்டு கருதற்பாற்று. ஆதலினன்றோ "பரஞானத்தாற்பரத்தைத் தரிசித்தார் பரமே பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார்" என்றுசிவஞானசித்தி செய்யுளும் பரவித்தையின் பெருமையினை யெடுத்து வலியுறுத்தியது. இத்தகைய பரஞானத்தையுடையாமல் தங்கால முழுதும் சாஸ்திரஞானமென்னுங் கலைஞானமாகிய அபரவித்தையிலேயே கழிப்போரது கதி உண்ணுவதற்கு யோக்கியப்படாத மணற்சோற்றைச் சமைத்து வைத்திருப்பதையே

மானும். ஸ்ரீ தாயுமானசுவாமிகளும் “சின்னஞ் சிறியார்கள் செய்த மணற்சோற்றை யொக்கும், மன்னுங் கலைஞானமார்க் கம் பராபரமே” எனவும் “வாசக ஞானத்தால் வருமோ சுகம் பாழ்த்த, பூசலென்று போமோபுகலாய் பராபரமே” எனவுஞ் சாஸ்திரபடன ஞானத்தைக்கண்டித்துள்ளார்கள்.

சுக்லயஜுர்வேத முக்திகோபநிஷத்தும்.

𑌬𑌹𑍁𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌕𑌥𑌾𑌕𑌨𑍍𑌥𑌾𑌰𑍋𑌮𑌨𑍍𑌥𑍇𑌨 𑌵𑍃𑌥𑍈𑌵 𑌕𑌿𑌮𑍍 ।
𑌅𑌨𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌵𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑌯𑌤𑍍𑌨𑍇𑌨 𑌮𑌾𑌰𑍁𑌤𑍇 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌰𑌾𑌨𑍍𑌤𑌰𑌮𑍍 ॥

பஹுசாஸ்த்ர கதாகந்தா ரோமந்தேநவ்ருதைவகிம்।
அந்வேஷ்டவ்யம் ப்ரயத்நேந மாருதே ஜ்யோதிராந்தரம்॥

(இ-ள்.) “மாருதீ! மிகுந்த சாஸ்திரகதையாகிய கந்தையை அடிக்கடி மெல்லுவதினால் (மீட்டும் மீட்டும் படிப்பதினால்) யாது பயன். உள்ளேயுள்ளே சோதியை முயற்சியினால் தேடிக் கொள்ளவேண்டும்.” என்று விதித்துள்ளது. திருவள்ளுவ தேவரும் “கற்றதனாலாய பயனென்கொல் வாலறிவன் நற்றாடொழாஅரெனின்” எனவும், அருணந்தி சிவாசாரியரும் “வாச்சிய வாசக ஞானம் வயிந்தவத்தின் கலக்கம்” எனவும் அறிவுறுத்தியுள்ளார்கள்.

அநுபூதிஞானஞ் சிறிது மில்லாதவர்கள் சிவஞானிகளுடைய ஞானச்சொற்களைக் கொள்ளைகொள்ளையாகக் களவாடிக்கொண்டு அநுபவமுடையார்போல் உண்மைஞானம் பேசுவதும் மகிழ்வதுமாயுள்ளார்கள். அவர்களுடையநிலைமை எத்தன்மைத் தெனின்

ஸாமவேத மைத்திரேயோபநிஷத்

𑌅𑌨𑍁𑌭𑍂𑌤𑌿𑌂 𑌵𑌿𑌨𑌾 𑌮𑍂𑌢𑍋 𑌵𑍃𑌥𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌿 𑌮𑍋𑌦𑌤𑍇 ।
𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑌿𑌮𑍍𑌬𑌿𑌤𑌶𑌾𑌖𑌾𑌗𑍍𑌰𑌫𑌲𑌾𑌸𑍍𑌵𑌾𑌦𑌨𑌮𑍋𑌦𑌵𑌤𑍍 ॥

அநுபூதிம் விநாமூடோ வ்ருதா ப்ரஹ்மணி மோததே।
ப்ரதிபிம்பிதசாகாக்ர பலாஸ்வாதந மோதவத்॥

(இ-ள்.) “மரத்தின் கிளைகளிலிருக்கும் பழங்களின் பிரதிபிம்பங்களைத் தண்ணீரிற்கண்டு அவற்றைத்தின்று மகிழ்வானைப் போல அநுபூதி ஞானமில்லாதமூடன் பிரமத்தின்கண் வாளா மகிழ்கின்றனன்” எனபதை யொத்ததென்றுணர்க.

ஔவையாரும் "கானமயிலாடக் கண்டிருந்த வான்கோழி, தானு மதுவாகப் பாவித்துத் - தானுந்தன், பொல்லாச் சிறகை விரித்தாடினாற் போலுமே, கல்லாதான் கற்ற கவி" என்றனர்.

அபரவித்தையைப்பரோக்ஷஞான மெனவும் பரவித்தையை அபரோக்ஷஞான மெனவும் வராஹோபநிஷத் முதலியன கூறுகின்றன. அவ்விருதிற ஞானத்துள் அபரவித்தையின் தெளிவு ஞானத்திற் சரியை அதாவது கேட்டல்; ஞானத்திற்கிரியை அதாவது சிந்தித்தல் எனவும், பரவித்தையாவது ஞானத்தில் யோகம் அதாவது தெளிதல்; ஞானத்தில் ஞானம் அதாவது நிஷ்டை எனவும் இயம்பப்படுகின்றன. அபரவித்தையானது பரவித்தைக்கு நேர்வழியாக இருத்தலாலும், அபரவித்தையாகிய துவிதஞானம் நிச்சயமும், பரவித்தையாகிய அத்வைத ஞானம் அநுபவமுமாய் விளங்கலாலும் "ஓதரிய துவிதமே அத்துவித ஞானத்தை யுண்டுபணு ஞானமாகும்" என்றார் ஸ்ரீதாயுமானசுவாமிகள். இவ்விரண்டும் ஒரு சமயிக்கே பயன் படத்தக்கதென்றுணர்க.

கிருஷ்ணயஜுர்வேத அமிர்த பிந்தூபநிஷத்

शब्दब्रह्मणि निष्णातः परंब्रह्माधिगच्छति ।

சப்தப்ரஹ்மணி நிஷ்ணாதஃ பரம்ப்ரஹ்மாதிகச்சதி।

(இ-ள்.) "சப்தப்பிரமமெனும் ஞானவிசாரத்தில் தேர்ச்சியடைந்தவன் பரப்பிரமத்தை யடைகின்றனன்" எனநிறுவியது. திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் "கற்றல் கேட்டலுடையார் பெரியார்." எனவும், திருவெண்காட்டடிகள் "ஆயாய்ப் பலகலையாய்ந்திடுந்தூய வருந்தவர்பாற், போயாயினு முண்மை தெரிந்தாயிலை" எனவும், திருநாவுக்கரசு மூர்த்திகள் " கற்றிலேன் கலைகள்ஞானங் கற்றவர் தங்களோடும்,உற்றிலேனதனாலே உணர்விற்குஞ் சேயனானேன் " எனவும் விளக்கியுள்ளார்கள்.

இஃதிவ்வாறிருக்க நிஷ்காமிய கர்மத்தால் சித்தந்தூய்மை பெற்று மலபரிபாக மெய்திய ஒவ்வொருவருக்குந் தெய்வத்திருவருள் கைவந்து கிடைப்பினல்லது வேறெதனாலும் பரஞானங் கிட்டுவதரிது. அத்திருவருள் சிவோபாசனத்தினாலேயே அடையப்பெறும். அச்சிவோபாசனமும் உருவவழிபாடு, அருவுருவ

வழிபாடு, அருவவழிபாடு, அதீதவழிபாடு எனநான்குகிறதை விளங்கும். அத்ததைய வழிபாட்டைக் குருமுகமாகத் தெரிந்து கொண்டு நாடோறும் விதிப்படி விடாது அப்பியசித்து வருவதினாலேதான் பரஞானம் மேலிட்டுப் பிரம்மசொரூபம் வெளிப்படும். இதுவே சுருதி நிச்சயம்.

## கிருஷ்ணயஜுர்வேதகடோபநிஷத்

𑌨𑌾𑌯𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌪𑍍𑌰𑌵𑌚𑌨𑍇𑌨 𑌲𑌭𑍍𑌯𑍋 𑌨 𑌮𑍇𑌧𑌯𑌾 𑌨 𑌬𑌹𑍁𑌨𑌾 𑌶𑍍𑌰𑍁𑌤𑍇𑌨 । 𑌯𑌮𑍇𑌵𑍈𑌷 𑌵𑍃𑌣𑍁𑌤𑍇 𑌤𑍇𑌨 𑌲𑌭𑍍𑌯𑌸𑍍𑌤𑌸𑍍𑌯𑍈𑌷 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌵𑍃𑌣𑍁𑌤𑍇 𑌤𑌨𑍂𑌂 𑌸𑍍𑌵𑌾𑌂 ॥

நாயமாத்மா ப்ரவசநே நலப்யோநமேதயா பஹுநாச்ருதேநயமேவைஷவ்ருணுதே தேநலப்யஸ்தஸ்யைஷஆத்மா வ்ருணுதே தநூம்ஸ்வாம்॥

(இ-ள்.) "இந்தப்பரமாத்மாவானவர் வேதாத்தியயனத்தினாலேனும், புத்தியினாலேனும், அநேக சிரவணத்தினாலேனும் அடையப் பெறுவரல்லர். எவனை இவர் விரும்புகின்றாரோ அவனாலேயே அவர் அடையப்படுகின்றனர். அவனுக்குப் பரமாத்மாவானவர் தனது சொரூபத்தைக் காட்டி மகிழ்விக்கின்றனர்" என்றோதியது. இதேமந்திரம் அதர்வணவேத முண்டகோபநிஷத்திலுமுள்ளது. இவ்வுண்மையை ஸ்ரீமாணிக்கவாசகசுவாமிகள் "அவனருளாலேயவன்றாள் வணங்கி" எனவும், திருவெண்காட்டடிகள் "உளக்கணுக்கல்லா தூன்கணுக்கொளித்து. எனவும், சிவதத்துவவிவேகநூலார் "உன்றிருவடிக் கீழுறுதியாமன்பு முன்றிருவருளினாற் கிடைப்ப, தன்றிநால் பலவுமாய்ந்தாலுரை செயவளப்பருந்திறமையான் மதியான், மன்றவே கிடைப்பதன்று" எனவும், மற்றும்பல சிவஞானச் செல்வர்களும் நிறுவியுள்ளார்கள். எமது தாயுமான சுவாமிகளும் "கருதருமகண்டானந்தக் கடவுளைின் காட்சி காண, வருக வென்றழைத்தாலன்றி வாழ்வுண்டோ வஞ்சனேற்கே." எனவும் இரங்கிக்கூறிபருளினர். இதுவே மார்ச்சால நியாயமென்று சொல்லப்படும்.

மா—இந்தப் பிரபஞ்சம் யாவும் நாதகாரியமென்பதற்குப் பிரமாணம் என்ன?

ஆ—பரமேசுவரருடைய ஆஞ்ஞா சொரூபங்களான வேதாதிகளே பிரமாணங்களாம்.

### அதர்வணவேத மாண்டூக்யோபநிஷத்

[illegible]
[illegible]

ஓமித்யே ததக்ஷரமிதம் ஸர்வம் தஸ்யோப வ்யாக்யானம்।
பூதம் பவத் பவிஷ்யமிதி ஸர்வமோங்கார ஏவ॥

(இ-ள்.) "இந்தப்பிரபஞ்சம்யாவும் ஓமென்னும் அக்ஷரமாகச் சொல்லப்படுகின்றது. அந்த அக்ஷரத்துக்கு விரிவான பொருளாயுமிருக்கின்றது. சென்றது, நிகழ்வது, வருவதுயாவும் ஓங்காரமே"

### அதர்வணவேத அதர்வசிரோபநிஷத்

[illegible]
[illegible]

ஸர்வம் ஜகத்திதம் வா ஏததக்ஷரம்
ப்ரஜாபத்யம் ஸௌக்ஷ்மம் ஸௌம்யம்।

(இ-ள்.) "இந்த அக்ஷரமே காணப்படும் பிரபஞ்சமெல்லாம். ஜகத்துக்கு ஹிதமாயுள்ளது. பிரஜாபதியைச்சார்ந்தது. ஸர்வவேத ஸாரபூதமானது. சோமனென்ற உமாநாதனைத் தேவதையாகவுடையது."

### அதர்வணவேத அதர்வசிரோபநிஷத்

[illegible]
[illegible]

ஸர்வதேவ வேத யோநிঃ
ஸர்வ வாச்யவஸ்து ப்ரணவாத்மகம்।

(இ-ள்.) "சர்வதேவர்களுக்கும் சர்வவேதங்களுக்கும் மூலம் சர்வவாச்யவஸ்துக்களும் பிரணவாத்மகம்." என்பனவாம்.

அன்றியும் "ஓமென்னும் பதமதனில் வேதமாதி யுற்பவிக்குமாலம்வித்தி னுதிக்குமாபோல்" என்னுஞ் சிவதருமோத்தரச் செய்யுளானுமறிக. ஒரு சிறிய ஆலம்வித்தினின்றுஞ் சாகோப சாகைகளோடு பெரிய விருக்ஷந் தோன்றுவதுபோல "ஓம்" என்னும் பதத்தினின்றே வேதமுதலிய சொல்லும் பொருளுமாய வெல்லாப் பிரபஞ்சங்களுந் தோன்றின. "ஓங்கார

மைந்தெழுத்தாற் புவனத்தை யுண்டுபண்ணிப், பாங்கா்நடத்தும் பொருளேயகண்டபரசிவமே'' என்னும் ஸ்ரீதாயுமான சுவாமிகள் திருவாக்கையுங்கண்டுதெளிக.

மா—இவ்வளவு பெருமை இவ்வக்ஷரத்துக்கு வந்ததற்குக் காரணம் யாது?

ஆ—இந்த அக்ஷரம் பரப்பிரம சொரூபமாயும், எல்லாவற்றிற்கும் அதிஷ்டானமாயும், இஃதில்லாவிடத்துக்காரியம் நிறைவேறப்பெறுதாயு மிருத்தலின் இதன் பெருமை அளவுக் கடங்காமலிருக்கின்றது. இவ்வக்ஷரம் பரப்பிரமசொரூபமென்பதற்குப் பிரமாணம் வருமாறு.

கிருஷ்ண யஜுர்வேத கடோபநிஷத்

𑌏𑌤𑌦𑍍𑌧𑍍𑌯𑍇𑌵𑌾𑌕𑍍𑌷𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌏𑌤𑌦𑍍𑌧𑍍𑌯𑍇𑌵𑌾𑌕𑍍𑌷𑌰𑌂 𑌪𑌰𑌂 |

ஏதத்யேவாக்ஷரம் ப்ரஹ்ம ஏதத்தேவாக்ஷரம்பரம் ।

(இ-ள்) "(ஓம் என்னும்) இந்த அக்ஷரமே பிரமம். இந்த அக்ஷரமே சிரேஷ்டம்."

அதர்வணவேத அதர்வசிகோபநிஷத்

𑌏𑌤𑌦𑌕𑍍𑌷𑌰𑌂 𑌪𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 |

ஏததக்ஷரம் பரம் ப்ரஹ்ம ।

(இ-ள்) "இந்த அக்ஷரம் பரப்பிரம சொரூபம்."

கிருஷ்ணயஜுர்வேத அமிர்தநாதோபநிஷத்

𑌓𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌕𑌾𑌕𑍍𑌷𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌓𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌤𑌨𑍍𑌨𑌰𑍇𑌶𑌯𑍇𑌤𑍍 |

ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம ஓமித்யேதந் நரேசயேத்|

(இ-ள்) "பிரணவமென்பது ஏகாட்சரப்பிரமம். பிரணவத்தை என்றுந் தள்ளக்கூடாது."

ஸாமவேத மைத்ராயண் யுபநிஷத்

𑌓𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌤𑌦𑌾𑌤𑍍𑌮 𑌓𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌤𑌦𑌕𑍍𑌷𑌰𑌂 |

ஓமித்யேததாத்ம ஓமித்யே ததக்ஷரம் ।

(இ-ள்) "ஓமென்பது அந்தப்பரமாத்மா. இந்தப்பிரணவம் அக்ஷரப்பிரமம்."

சுக்லயஜுர்வேத தாரஸாரோபநிஷத்

𑌓𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌤𑌦𑌕𑍍𑌷𑌰𑌂 𑌪𑌰𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑌦𑍇𑌵𑍋𑌪𑌾𑌸𑌿𑌤𑌵𑍍𑌯𑌂 |

ஓமித்யேதத்க்ஷரம் பரம்ப்ரஹ்ம தத்தேவோ பாஸிதவ்யம்।

(இ-ள்) "ஓமென்ற அந்த அக்ஷரமே பரப்பிரமம். அதுவே உபாசிக்கற்பாலது."

கிருஷ்ணயஜுர்வேத தைத்திரீயோபநிஷத்

ஓமிதிப்ரஹ்ம | ஸதாஶிவோம் |

ஓமிதிப்ரஹ்ம ஸதாசிவோம்।

(இ-ள்) "ஓம் என்பது பிரமம், சதாசிவன்பிரணவம்"

கூர்மபுராணம்.

பகவாந் ஸர்வ விஜ்ஞாநா தவநாதோமிதி ஸம்ருத: |

பகவாந் ஸர்வ விஜ்ஞாநா தவநாதோமிதி ஸம்ருத:।

(இ-ள்) "சர்வஞ்ஞராதலின் பகவான் எனவும்" காப்பவராதலின் ஓம் எனவும் சிவபிரான் எண்ணப்படுகின்றனர். இவ்வாக்கியங்களாலும் இன்னும் அனேகபிரமாண பாஹுள்யங்களாலும் பிரணவமே பிரமசொரூபமென ஸ்தாபிக்கப்பட்டது. அன்றியும் இந்நூலின் முதற்கண் பிரகாசித்துக்கொண்டிருக்கும் ஸ்ரீநடராஜமூர்த்தியின்வணக்கச்செய்யுளில் முதலடிஉகாரத்தையும், மூன்றாவதடி அகாரத்தையும், நான்காவதடி மகாரத்தையும், முதலிற்கொண்டு விளங்கலானும், செய்யுளின் ஈற்றில் ஆம் அல்லது ஓம் என்னும் சமஷ்டிப்பிரணவம் வைக்கப்பட்டிருத்தலானும், அச்செய்யுளிற் போந்த ஸ்ரீ நடராஜமூர்த்தி பிரணவாபின்ன தெய்வமாயுள்ளாரென்பதே தேற்றம். அந்நடராஜமூர்த்தி யொருவரே பிரணவத்தை இருப்பிடமாகக் கொண்டவரும் ஏனையோர் பிரணவத்தைப் பிறப்பிடமாகக் கொண்டவருமாதலின் "ஈசன் மேவரும் பீடமா யேனையோர் தோற்றம் வாசமாய்" என்றது கந்தபுராணம். ஸ்ரீநடராஜ மூர்த்தம் பிரபையோடு சேர்த்து அமைக்கப்பட்டிருத்தலே இதற்குப் போதுமான சான்றாம். ஸ்ரீ தாயுமானசுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய திருப்பாடற்றிரட்டின் "அங்கிங்கெனாதபடி" என்னும் முதற்செய்யுளினும் முதலெழுத்து அகாரமாயும், நடுவெழுத்து உகாரமாயும், இறுதியெழுத்து மகாரமாயுந் திகழ்தலால் அவ்வணக்கச் செய்யுளினாற் றுதிக்கப்பெற்ற ஓங்காரத் தெய்வம் பிரணவாபின்ன பரசிவமென்றே சித்தாந்தமாயிற்று. மேலும் பிரணவத்தின் அகார உகார மகாரம் என்னும் மும்மாத்திரைகளும், ருக் யஜுர், சாமம் என்னும் முத்திற ரூபமாயுள்

ளனவென அதர்வணவேதத்தில் பிரசித்தமாயிருக்கின்றது. ஆதி ருக்வேதத்தில் "அக்நிமீளே-அக்னிமீளே" என்னும் ஆதிமந்திரத்திலுள்ள ஆதியக்ஷரமாகிய அகாரமும், மத்திய யஜுர் வேதத்தில் "யோநிஸ்ஸமுத்ரோபந்து:-யோநிஸ்ஸமுத்ரோபந்து:" என்னும் மத்தியமந்திரத்திலுள்ள மத்தியாக்ஷரமாகிய உகாரமும், இறுதிசாமவேதத்தில் "ஸமாநம்வரம்-ஸமாநம்வரம்" என்னும் இறுதி மந்திரத்திலுள்ள இறுதியக்ஷரமாகிய மகாரமும் ஒருங்கிணைந்து எழுந்தபடியால் வேதங்கள்யாவும் "ஓம்" என்னும் பதத்தின் பொருளையே விரிக்க எழுந்தனவாம். ஆதலால் சமஸ்தவேதங்களும் ஓமென்னும்பதத்திலே அமைவுற அவ்வோமென்னும் மந்திரம் பிரணவாபின்ன பரப்பிரம்ம சிவபெருமானிடத்திலே நிலையுறுதல் அங்கை நெல்லிக்கனியாம். அதனால் அப்பரம்பொருளைச் சர்வசப்த வாச்சியரென்று வேதவிற்பன்னர்கள் கூறுகின்றனர். சகல வேதசார ரகசியக்களஞ்சியமாயுள்ள இவ்வோமென்னும் ஒருமொழியே பாவமனைத்தையுந் தகிக்கும் பரசிவ நாமமாயிருத்தலின் பிரணவம் சிவவாசகமென அர்த்த நிர்ணயஞ்செய்தனர் பெரியோர்.

சைவத்திருமுறைகள் பன்னிரண்டனுள் முதற்றிருமுறையின் முதற்பதிகத்து முதற்பாசுரத்தின் முதன்மொழியாகிய "தோடு" என்னுஞ்சொல் "ஓம்" என்னும் பிரணவத்தின் முதலெழுத்தாகிய ஒகாரத்தை முதலிற்கொண்டு விளங்கலானும், ஈற்றுத்திருமுறையின் ஈற்றுச்செய்யுளின் ஈற்றடியின் ஈற்றுச்சொல்லாகிய "உலகெலாம்" என்னும் மாற்றம் பிரணவத்தின் ஈற்றெழுத்தாகிய மகாரத்தை ஈற்றிற்கொண்டு நிலவுதலானும் பன்னிருதிருமுறைகளும் வேதம்போல "ஓம்" என்னும் பதத்திலேயே நிலையுறுவனவாயின. ஆதலின் அவற்றின்பொருள் ஓங்கார வாச்சியராகிய சிவபெருமான் என்றே துணியப்பட்டது. தோடு என்னும் பதத்தின் முதலிலுள்ள ஒகாரம் தகர மெய்யோடு புணர்த்திக் கூறப்பட்டமையானும், காயத்திரி மகாமந்திரத்தின் முதலெழுத்து தகரமாயிருக்கின்றமையானும், அம்மந்திரப்பொருளாவர் பர்க்கராகிய சிவபெருமானே எனவும், தகாவித்தையின்கண் வழிபடுந்தெய்வம் அவரே எனவும் சூசிப்பிக்கப்பட்டது. இக்காயத்திரி மந்திரத்தின் விளக்கம் பின்னர் கூறுவாம்.

ஆயின் ஆரிய வேதத்துக்கும், தமிழ்வேதத்துக்கும் ஒற்றுமையுண்டோ வெனின் உண்டு. அவற்றையுஞ் சிறிதுவிரிப்பாம். பூர்வத்திலே திருமறைக்காடு என்னும் வேதாரண்ணியத்திலே நாதவடிவாகிய ஆரியவேதங்கள் நான்கும் சர்வபலதாதாவாகிய மறைக்காட்டீசுவரரை விதிப்படிப்பூசித்து வேண்டும் வரங்களைப் பெற்றுச் செல்லும்போது, திருவாயிலின் கண்ணே திருக்காப்புச்செய்துவைத்த வலியகதவை, நெடுங்காலத்திற்குப் பின்னர் அக்கதவந் திறக்கவும் மூடவுமாகிய வழக்கம் எந்நாளும் நிகழும்படி அந்நாதரூபமாகும் தமிழ் வேதமே செய்தபடியால் அவ்வாரிய வேதத்துக்குந் தமிழ் வேதத்துக்கும் பேதஞ் சிறிதுமில்லை யென்பது ஒருதலை. அவ்விரு வேதங்களும், நாதத்தின் அந்தமாகும் பரமாத்மாவாகிய சிவபரம்பொருளையே பெரிதும் பேசுகின்றன வென்பது அவற்றின் திருவுள்ளக்கிடையாம். ஒளவையாரும் இவ்வுண்மையைத் "தேவர் குறளுந் திருநான்மறைமுடிவும், மூவர் தமிழும் முனிமொழியுங்—கோவை, திருவாசகமுந் திருமூலர் சொல்லும், ஒருவாசகமென்றுணர்" என்னுந் திருவாக்கில் ஸ்திரப்படுத்தியுள்ளார். பரமாசாரியசுவாமிகளும் தமிழ்வேதத்தில் "தமிழ்ச்சொலும் வடசொலுந் தாணிழற்சேர, வம்மலர்க் கொன்றையணிந்த வெம்மடிகள்" எனவும் "ஆரியந்தமிழிசையோடானவன் கூரிய குணத்தார் குறி நின்றவன்" எனவும், "செந்தமிழோடாரியனைச் சீரியானை" எனவும், "முத்தமிழும் நான்மறையுமானான்கண்டாய்" எனவும் அருளிச்செய்தமை காண்க. இன்னும் அனேக கூற்றுக்கள் இவ்வாறே யுள்ளன. அவற்றைக்கூறின் விரியுமாதலின் விடுத்தாம்.

இனி ஆரிய வேதத்துக்கும் தமிழ் வேதத்துக்குமுள்ள ஒற்றுமை பலவற்றுள் சில ஈண்டு மொழிவாம்.

ஆரியவேதம்—ருக், யஜுர், சாமம், அதர்வணம் என நான்கு.

தமிழ்வேதம்—திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருமுறை, திருநாவுக்கரசு சுவாமிகள் திருமுறை, சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருமுறை, மாணிக்கவாசக சுவாமிகள் திருமுறை என நான்கு.

ஆ. வே—சதாசிவமூர்த்தியின் நான்கு திருமுகங்களினின்றுந் தோற்றுவிக்கப்பட்டது.

த. வே—பரமாசாரிய சுவாமிகள் நால்வர் திருமுகங்களினின்றுந் தோற்றுவிக்கப்பட்டது.

ஆ. வே—பலசாகைகளையுடையது.

த. வே—பலதிருப்பதிகங்களையுடையது.

ஆ. வே—வியாசமுனிவரால் வகுக்கப்பட்டது.

த. வே—நம்பியாண்டார்நம்பி என்னுஞ் சைவமுனிவரால் வகுக்கப்பட்டது.

ஆ. வே—அனேக சாகைகள் இறந்துபோயின.

த. வே—அனேக திருப்பதிகங்கள் இறந்துபோயின.

ஆ. வே—காயத்திரி, அநுஷ்டுப் முதலிய சந்தசுக்களுடன் ஓதப்படும்.

த. வே—நட்டபாடை, பழம்பஞ்சுரம் முதலிய பண்களுடன் ஓதப்படும்.

ஆ. வே—பஸ்மமகிமையை விரிவாக வெடுத்துப்பேசும். சிறப்பாகப் பஸ்மஜாபாலம் என்னும் உபநிஷத்தைத் தனக்கு அங்கமாகக்கொண்டு விளங்கும்.

த. வே—அவ்வாறே பஸ்மமகிமையை விரிவாக வெடுத்துப் புகழும். திருநீற்றுப்பதிகத்தைத் தனக்கு அங்கமாகக்கொண்டு பிரகாசிக்கும்.

ஆ. வே—இறுதியில் அத்தியயனப் பலனைக் கூறும்.

த. வே—திருப்பதிகமுடிவில் அப்பலனைக் கூறும்.

ஆ. வே—உபநிடதச் சாகைத்தொகை எடுத்துக் கூறும்,

த. வே—திருப்பதிகத் தொகை எடுத்துரைக்கும்.

ஆ வே—உருத்திர நமகத்தைக் கொண்டு விளங்கும்.

த. வே—போற்றித் திருத்தாண்டகம், போற்றித் திருவிருத்தம், போற்றித் திருவகவல் இவற்றைக் கொண்டு விளங்கும்.

ஆ. வே—ஓம் என்று ஆரம்பித்து ஓம் என்று முடிக்கும்.

த. வே—திருச்சிற்றம்பலம் என்று ஆரம்பித்துத் திருச்சிற்றம்பலம் என்று முடிக்கும்.

ஆ. வே—மைத்திரேயி, கார்கி முதலிய பெண்மணிகளை யெடுத்துப் பேசும்.

த. வே — காரைக்காலம்மையார் மங்கையர்க்கரிசியார் முதலிய மங்கையர் இரத்தினங்களை யெடுத்துப் புகழும்.

ஆ. வே—காமதகனம், தக்ஷயாகபங்கம் திரிபுரதகனம் விஷபானம், நரசிம்மவதம், அடிமுடிதேடல் முதலிய அற்புத வீரச் செயல்களை யெடுத்துப் புகழும்.

த. வே—அவைகளை அவ்வாறே ஆங்காங்கு எடுத்துப் பரவும்.

ஆ. வே—"த்ரயீ" என்று அமரகோச முதலியவற்றால் புகழப்படும்.

த. வே—"மூவர்தமிழ்" என்று சிவஞானமணிகளால் துதிக்கப்படும்.

ஆ. வே—"த்ரயீ" என்னும் ருக், யஜுர், ஸாமம் ஆகிய மூன்று வேதங்களின் நடுவிலுள்ளது யஜுர்வேதம். அவ்வேதம் 101 சாகைகளையுடையது. அவற்றின் நடுவிலுள்ளது 51-ம் சாகை. அதுவே ஸ்ரீபோதாயன சாகையென்று சொல்லப்படும். அது ஏழுகாண்டங்களையுடையது. அவற்றின் நடுவிலுள்ளது நாலாவது காண்டம். அக்காண்டம் ஏழு ஸம்ஹிதைகளையுடையது. அவற்றின் நடுவிலுள்ளது நாலாவது ஸம்ஹிதை. அந்த ஸம்ஹிதையின் நடுவிலுள்ளது ஐந்தாவது பிரஶ்நம். அதன் நடுவிலுள்ளது "நமஃஸோமாயச-நமஃஸோமாயச"என்றற்றொடக்கத்தனவான அநுவாகம். அவ்வநுவாகத்தின் மத்தியிலுள்ளது சகல வேத சாரமான ஸ்ரீ பஞ்சாக்ஷரம். அப்பஞ்சாக்ஷரத்திலுள்ள "ஶிவ" என்னும் இரண்டெழுத்தே வேதஹிருதயம். அது ஆதி பராசத்தியோடியைந்த பகவானுக்கு முக்கியநாமம். அந்நாமத்தின் மணமே தன்னுடல் முழுதும் வீசும்படி தன்னை யலங்கரித்துக்கொண்டிருக்கின்றது.

த, வே—"மூவர்தமிழ்" என்னும் திராவிடவேதங்கள் மூன்றின் நடுவிலுள்ளது திருநாவுக்கரசு மூர்த்திகளுடைய தமிழ் வேதம் அவ்வேதம் மூன்று திருமுறைகளையுடையது. அவற்றின் நடுவிலுள்ளது ஐந்தாந்திருமுறை. அத்திருமுறை 100 திருப்பதிகங்களையுடையது. அவற்றின் நடுவிலுள்ளது திருப்பாலைத்துறைத் திருப்பதிகம். அப்பதிகம் பதினொரு பாசுரங்களையுடையது. அப்பாசுரங்களின் நடுவிலுள்ளது "விண்ணினூர் பணிந்தேத்த" என்றற்றொடக்கத்தனவான திருத்தாக்கு. அத்தூக்கின் மத்தியிலுள்ளது மந்திரராஜமாகிய பஞ்சாக்ஷரம். அப்பஞ்சாக்ஷரத்திலுள்ள "சிவ" என்னும் இரண்டெழுத்தே வேதஹிருதயம். அது ஓங்கார ஸ்வரூபிணியாகிய உமையோடியைந்த பகவானுக்கு முக்கிய நாமம். அந்நாமத்தின் கந்தமே நாற்றிசையும் மணக்கும்படி அப்பரம்பொருளைச் சதா பாடிக்கொண்டிருக்கின்றது. "பரவுவாரிமையோர்கள் பாடுவன நால்வேதம்" என்றூர் மணிவாசகப்பிரபு.

ஆ. வே—அதர்வமுனி முதலியோராற் கண்டெடுக்கப்பட்டதாகிய வேதபாகம் " அதர்வணவேதம் " என நான்காவது வேதமாக வைத்து எண்ணப்படுகின்றது.

த. வே—தில்லைவாழ்ந்தண முனிவர்களாற் கண்டெடுக்கப்பட்ட திருவாசகம், திருக்கோவையார் என்பன நான்காம் வேதமாகவைத்து எண்ணப்படுகின்றது.

இவ்வாறு இன்னும் அநேக பொருள்கள் ஒத்திருக்கின்றன. ஆதலின் ஆரியவேதமே தமிழ்வேதம்: தமிழ்வேதமே ஆரியவேதம். இரண்டையும் அபேதமாகவே கொள்கின்றனர் பெரியோர். இத்தகைய அரிய பெரிய இரகசிய உண்மைகளை ஆய்ந்தறியும் புண்ணியப்பேறில்லாத மந்தமதிகள் தேவாரம் திருவாசகந்தானே என்று அலட்சியமாகக்கூறிப்பலவாறு தூஷிக்கின்றனர். அந்தோ இம்மதவைரிகளது தீவினை கொடிது! அறக்கொடிது!!

மா—இந்த ஓங்காரத்தின் சொரூபம் அதாவது வரி வடிவு எத்தன்மையது ?

ஆ—கிரந்தாக்ஷரத்தில் காணப்படும் ஓகாரமென்னும் அக்ஷரத்தின் வடிவே இதன் சொரூபமாம். இதுவில்லைப்போலவும்,

வளைந்த சர்ப்பத்தைப்போலவும், வலம்புரிச் சங்கைப்போலவும் இருக்கின்றது. இது ஐந்து லக்ஷணங்களைப்பொருந்தியிருத்தலால் நக்ஷத்திரவடிவம், தண்டவடிவம், குண்டலவடிவம், அர்த்தசந்திரவடிவம், பிந்துவடிவம் ஆகிய இவ்வைந்தும் இதிலமைந்துள்ளன.

### அதர்வணவேதமுண்டகோபநிஷத்.

𑌪𑍍𑌰𑌣𑌵𑍋 𑌧𑌨𑍁𑌃 |

ப்ரணவோ தநு: ।

(இ-ள்.) "பிரணவம் வில்லு." எனவும்.

### ஞானசித்தியாகமம்.

𑌨𑌾𑌡𑌿𑌮𑍂𑌲𑌾 𑌵𑍃𑌤𑌾𑌙𑍍𑌗𑌾𑌹𑌿 𑌕𑍁𑌣𑍍𑌡𑌲𑍀 𑌹𑌂𑌸𑌨𑌿𑌃 𑌸𑍍𑌵𑌨𑌾𑌃 |

நாடிமூலா வ்ருதாங்காஹி குண்டலீ ஹம்ஸநி: ஸ்வநா: ।

(இ-ள்.) "மூலநாடியாயும், வளைந்த சர்ப்பவடிவமாகிய குண்டலியாயும், ஹம்சத் தொனியுடையதாயுமுள்ளது (பிரணவம்)." எனவும்,

### காமிகாகமம்.

𑌪𑍍𑌰𑌥𑌮𑌂 𑌤𑌾𑌰𑌕𑌾𑌕𑌾𑌰𑌂 𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌂 𑌦𑌣𑍍𑌡𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 |
𑌤𑍃𑌤𑍀𑌯𑌂 𑌕𑍁𑌣𑍍𑌡𑌲𑌾𑌕𑌾𑌰𑌂 𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑌂 𑌹𑍍𑌯𑌰𑍍𑌧𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌕𑌮𑍍 |
𑌪𑌞𑍍𑌚𑌮𑌂 𑌬𑌿𑌨𑍍𑌦𑍁𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌪𑍍𑌰𑌣𑌵𑌂 𑌪𑌞𑍍𑌚𑌲𑌕𑍍𑌷𑌣𑌮𑍍 ||

ப்ரதமம் தாரகாகாரம் த்விதீயம் தண்டமுச்யதே ।
த்ருதீயம் குண்டலாகாரம் சதுர்த்தம் ஹ்யர்த்த சந்த்ரகம் ।
பஞ்சமம் பிந்து ஸம்யுக்தம் ப்ரணவம் பஞ்சலக்ஷணம் ॥

(இ-ள்.) "முதலாம் உறப்பு நட்சத்திராகாரமாயும், இரண்டாம் உறப்பு தண்டாகாரமாயும், மூன்றும் உறப்பு குண்டலாகாரமாயும், நான்காம் உறப்பு அர்த்தசந்திராகாரமாயும், ஐந்தாம் உறப்பு விந்துவோடியைந்த ஆகாரமாயும் இருப்பதால் பிரணவம் ஐந்து லக்ஷணங்களையுடையது." எனவும்,

### கந்தபுராணம், உமை கைலை நீங்குபடலம்.

மூலமெய்யெழுத்தன்னதோர் முதுவலம்புரியின்
கோலமாகி நோற்றிருத்தியா லுலகருள் ருறிப்பால்
வேதமூலநேர் வால்வளையுருக் கொடுவிளங்கி
யேதமில்லதோர் பதுமபீடத்தின் மேலிருந்தாள்........எனவும்,

உண்மைவிளக்கம், (சித்தாந்த சாஸ்திரம்.)

ஓங்காரமே நற்றிருவாசி.............எனவும் பகர்ந்தன.

இவ்வாறு இவ்வோங்காரம் சோதிமய குடிலாகாரமாய் வளைந்து நிற்றலாலன்றோ குடிலையெனவும், குண்டலியெனவும் பெயர்பெற்று விளங்காநின்றது. பிரணவப்பொருளாய் விளங்கும் விநாயகமூர்த்தியினது பிரசன்னவதனமாகிய சுமுகமும் இவ்வுண்மையை வலியுறுத்தா நிற்கும். "ப்ரஸந்நவதநம் த்யாயேத் ஸர்வவிக்நோபசாந்தயே - ப்ரசந்நவதனம் த்யாயேத் ஸர்வவிக்னோப சாந்தயே" என்னுஞ் "சுக்லாம்பரதர" சுலோகத்தையும் ஈண்டு கவனித்திடுக. பிரசந்நவதனம்-பிரத்தியக்ஷமுகம் அதாவது யானைமுகம். "ப்ரஸந்நோமத்தவாரண:-ப்ரசந்நோமத்த வாரண:" என்றது நிகண்டு. ப்ரஸநாநநம்-ப்ரசந்நாநநம்" எனக் கிருஷ்ணயஜுர்வேத தக்ஷிணமூர்த்யுபநிஷத்தும் மொழிந்தது.

மா. ஓங்காரத்துக்கு வரிவடிவங்கூறப்பட்டபடியால் அதற்குப் பாதமுஞ் சிரசும் எவை?

ஆ. ஓங்காரத்துக்குச் சிரசாவது வடபுறம். பாதமாவது தென்புறம். வடபுறம் நிவிருத்தி மார்க்கமெனவும், தென்புறம் பிரவிருத்தி மார்க்கமெனவுங் கூறப்படும். ஓங்காரத்தின் சரம மாத்திரையாகிய மகாரம் உருத்திரமூர்த்தியின் சொரூபமாகும். அவர் பரம ஞானாசிரியராதலால் அவரைப் பிரதிபாதிக்கும் அந்தப்பாகம் சிரசு எனப்பட்டது. ஓங்காரத்தின் முதல் மாத்திரைகளாகிய அகார உகாரங்கள் பிரம விஷ்ணுக்களது சொரூபங்களாகும். அவர்களைப் பிரதிபாதிக்கும் அந்தப்பாகம் பாதமெனப்பட்டது. ஆகையினாலே நிவிருத்தி பிரவிருத்தி மார்க்கங்களில் நிற்க விருப்பமுடையோர் அம்மார்க்கங்களைப் பிரதிபாதிக்கும் நாமங்களாகிய சிவ ஹரி என்னும் பதங்களினது அட்சரங்கள் நிற்கும் நிலையினைக்கூர்ந்துயோசித்துப் பார்த்து சிவ விஷ்ணுக்களை முறையே வழிபடவேண்டியது அத்தியாவசியகம். மேலோட்டாருடைய அபிப்பிராயமும் இதுவே.

அதர்வண வேத அதர்வசிகோபநிஷத்.

தஸ்யோத்தர தச்ஶிரோ தக்ஷிணத: பாத:।

தஸ்யோத்தர தச்சிரோ தக்ஷிணத: பாத:।

(இ-ள்.) "அந்த ஓங்காரத்துக்கு வடபுறம் சிரசு. தென்புறம் பாதம்." எனவும்,

4

### பத்மபுராண சிவகீதை.

𑌶𑌿𑌰𑌶𑍍𑌚𑍋𑌤𑍍𑌤𑌰𑌤𑍋 𑌯𑌸𑍍𑌯 𑌪𑌾𑌦𑍌 𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌤𑌸𑍍𑌤𑌥𑌾 ।
𑌯𑌶𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵𑍋𑌤𑍍𑌤𑌰𑌸𑍍𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌦𑍋𑌂𑌕𑌾𑌰𑍋𑌽𑌹𑌂 𑌤𑍍𑌰𑌿𑌮𑌾𑌤𑍍𑌰𑌕𑌃 ॥

*சிரஸ்சோத்தரதோ யஸ்யபாதௌ தக்ஷிணத ஸ்ததா ।*
*யச்ச ஸர்வோத்தர ஸ்ஸாக்ஷா தோங்காரோஹந்த்ரிமாத்ரக꞉ ॥*

(இ-ள்.) "(எழுத ஆரம்பிக்குங்கால்) எதற்குச் சிரசு வடபுறத்திலும், (முடிக்குங்கால்) பாதம் தென்புறத்திலும் இருக்கின்றனவோ, எது எல்லாவற்றிற்கும் மேலாயுள்ளதோ அந்தமூம் மாத்திரைகளையுடைய சாக்ஷாத் பிரணவம் நான்." எனவுங் கூறியுள்ளன.

மா. "ஓம்" என்னும் பிரணவத்தின் மாத்திரைகளெத்தனை? அவற்றை விளக்கியருளவேண்டும்.

ஆ. விளக்குவோம். கேட்பாயாக.

### அதர்வணவேத அதர்வசிகோபநிஷத்.

𑌅𑌸𑍍𑌯 𑌪𑌾𑌦𑌾𑌶𑍍𑌚𑌤𑍍𑌵𑌾𑌰𑍋 𑌵𑍇𑌦𑌾𑌃 ।
𑌚𑌤𑍁𑌷𑍍𑌪𑌾𑌦𑌿𑌦𑌮𑌕𑍍𑌷𑌰𑌂 𑌪𑌰𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 ।

*அஸ்யபாதாச்சத்வாரோவேதா꞉ ।*
*சதுஷ்பாதிதமக்ஷரம் பரம்ப்ரஹ்ம ।*

(இ-ள்.) "இதன் நான்கு பாதங்களும் நான்கு வேதங்கள் நான்கு பாதங்களுடன்கூடிய இவ்வக்ஷரம் பரப்பிரமசொரூபம்" என நிரூபித்தது.

பாதமென்றாலும் மாத்திரையென்றாலும் ஒன்றே. சொல்லாகிய ஓங்காரத்துக்கும் பொருளாகிய பிரமத்துக்கும் இயல்பாகவே ஒற்றுமை அமைந்திருத்தலால் ஓங்காரமே பிரமமெனக் கோடற்பாற்று. அதர்வசிரோபநிஷத்திலும் இவ்வாறே நிரூபிக்கப்பட்டுள்ளது. ருக், யஜுர், ஸாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்களும் இவ்வோங்காரத்துக்கு நான்கு பாதங்களென்றதனால் இவ்வட்சரத்தின் பொருளே நான்கு வேதங்களினும் பேறப்பட்டதென்பது வெளிப்படை. படவே, சர்வ வேதங்களும் எப்பொருளை யுணர்த்துமோ அப்பொருளை இவ்வக்ஷரமொன்றே யுணர்த்துவதால் மோட்சத்தையடைய இச்சிக்கும் ஒவ்வொருவரும் வேதமூலமாகிய இவ்வோங்காரத்தைப் பரம

தாரகமாகப் பற்றவேண்டியது இன்றியமையாத கடனும். எப்படிப் பிரபஞ்ச சொரூபத்தையறிந்தவன் பிரபஞ்ச பேதங்களையெல்லாம் அறிகின்றானோ அதுபோல பிரணவசொரூபத்தை யறிந்தவன் சர்வ வேதங்களையும் அறிந்தவனாகின்றான். அல்லாமலும் எல்லா வேதங்களாலும் பிரதி பாதிக்கப்பட்ட சிவபெருமானாகிய பிரமத்தையும் உணர்ந்தவனாகின்றான்.

கிருஷ்ண யஜுர்வேத கைவல்லியோபநிஷத்.

𑌵𑍇𑌦𑍈𑌰𑌨𑍇𑌕𑍈𑌰𑌹𑌮𑍇𑌵 𑌵𑍇𑌦𑍍𑌯𑍋
𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌕𑍃𑌦𑍍𑌵𑍇𑌦𑌵𑌿𑌦𑍇𑌵 𑌚𑌾𑌹𑌮𑍍 ।

வேதைரநேகை ரஹமேவ வேத்யோ
வேதாந்தக்ருத்வேத விதேயசாஹம் ।

(இ-ள்.) "எல்லா வேதங்களாலும் நானே அறியப்படுகின்றேன். வேதங்களை ஆதியில் வெளியிட்டவனும் நானே. வேதங்களை யறிந்தவனும் நானே." என்றது (இது சிவவாசகம்). இதனால் வேதகர்த்திருத்துவம், வேதவேத்தியத்துவம், வேதக்ஞத்துவம் முதலிய பெருமைகளெல்லாம் சிவபிராணிடத்தே சேர்க்கப்பட்டன. அவனே ஸர்வ வித்யாசாரியன் என்பதுஞ் சுருதி சித்தமாயிற்று. பகவத்கீதையிலும இதேமந்திரம் ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியால் கூறப்பட்டுள்ளது. இம்மந்திரத்திலுள்ள "வேதைரநேகை" என்னும் பிரயோகம் அங்கு "வேதைச்சஸர்வை" என்று மாற்றப்பட்டுள்ளது அதனல் பொருட்பேதஞ் சிறிதுமில்லை. கண்ணபிரான் இவ்வாக்கியத்தைத் தன் வசனமாகக் கூறியது பிரமபாவனையாலென் றுணரற்பாற்று. இவ்விஷயம் பின்னால் தெளிவாக விளக்கிக் காட்டப்படும். அன்றியும்,

கிருஷ்ணயஜுர்வேத சுவேதாசுவதரோபநிபஷத்தும்,

𑌯𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌣𑌂 𑌵𑌿𑌦𑌧𑌾𑌤𑌿 𑌪𑍂𑌰𑍍𑌵𑌂
𑌯𑍋 𑌵𑍈 𑌵𑍇𑌦𑌾𑌂𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑌹𑌿𑌣𑍋𑌤𑌿 𑌤𑌸𑍍𑌮𑍈 ।
𑌤𑌂 𑌹 𑌦𑍇𑌵𑌮𑌾𑌤𑍍𑌮𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌂
𑌮𑍁𑌮𑍁𑌕𑍍𑌷𑍁𑌰𑍍𑌵𑍈 𑌶𑌰𑌣𑌮𑌹𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇 ॥

யொப்ரஹ்மாணம் விததாதிபூர்வம்
யொவைவேதாம்ச்ச ப்ரஹிணோதிதஸ்மை ।
தம்ஹதேவ மாத்மபுத்தி ப்ரகாசம்
முமுக்ஷுர்வை சரணமஹம் ப்ரபத்யே ॥

(இ-ள்.) "எவன் பிரமதேவனை முதலில் சிருஷ்டித்தான். எவன் அவனுக்கு வேதங்களை யுபதேசித்தான். அந்த ஆத்ம புத்திப் பிரகாசனான தேவனை மோட்சத்தைவிரும்பி யான் சரண மடைகின்றேன்." எனவும்,

𑌯𑍋 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌭𑌵𑌶𑍍𑌚𑍋𑌦𑍍𑌭𑌵𑌶𑍍𑌚
𑌵𑌿𑌶𑍍𑌵𑌾𑌧𑌿𑌕𑍋 𑌰𑍁𑌦𑍍𑌰𑍋 𑌮𑌹𑌰𑍍𑌷𑌿𑌃 ।
𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌗𑌰𑍍𑌭𑌂 𑌜𑌨𑌯𑌾𑌮𑌾𑌸 𑌪𑍂𑌰𑍍𑌵𑌂
𑌸 𑌨𑍋 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾 𑌶𑍁𑌭𑌯𑌾 𑌸𑌂𑌯𑍁𑌨𑌕𑍍𑌤𑍁 ॥

யோதேவாநாம் ப்ரபவச்சோத்பவச்ச
விச்வாதிகோருத்ரோமஹர்ஷி:।
ஹிரண்யகர்ப்பம் ஜநயா மாஸபூர்வம்
ஸநோபுத்யா சுபயா ஸம்யுநக்து ॥

(இ-ள்.) "எந்த உருத்திரன் என்ற மஹரிஷி தேவர்களனை வருக்கும் உற்பத்திலயஸ்தானமாயுள்ளான். உலகநாயகனுயிருக் கின்றான். ஆதியில் ஹிரண்யகர்ப்பனை சிருஷ்டித்தான். அந் தத்தேவன் எமக்கு நல்லறிவை யூட்டுவானாக" எனவும்,

𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌗𑌰𑍍𑌭𑌂 𑌪𑌶𑍍𑌯𑌤 𑌜𑌾𑌯𑌮𑌾𑌨𑌮𑍍

ஹிரண்யகர்ப்பம் பச்யதஜாயமாநம்

(இ-ள்.) "ஹிரண்ய கர்ப்பனைப் பிறக்கக்கண்டான்." ... எனவும்,

கிருஷ்ண யஜுர்வேத தைத்திரீயாருணசாகை நாராயணம்.

𑌯𑍋 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑌥𑌮𑌂 𑌪𑍁𑌰𑌸𑍍𑌤𑌾𑌤𑍍
𑌵𑌿𑌶𑍍𑌵𑌾𑌧𑌿𑌕𑍋 𑌰𑍁𑌦𑍍𑌰𑍋 𑌮𑌹𑌰𑍍𑌷𑌿𑌃 ।
𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌗𑌰𑍍𑌭𑌂 𑌪𑌶𑍍𑌯𑌤 𑌜𑌾𑌯𑌮𑌾𑌨𑌂.

யொதேவாநாம் ப்ரதமம் புரஸ்தாத்
விச்வாதி கோருத்ரோ மகர்ஷி:।
ஹிரண்யகர்ப்பம் பச்யதஜாயமாநம்.

(இ-ள்.) "எவன் தேவர்களுக்கெல்லாம் ஆதியான ஹிரண் ணியகர்ப்பனைப் பிறக்கும்பொழுதே கண்டான். அந்த மகரிஷி யான உருத்திரன்" எனவும் கூறிப்போந்தன.

இவ்வாக்கியங்களினாலே சர்வதேவப் பிரதமனான பிரமதே வனை முதற்கண்ணே சிருஷ்டித்தவன் பரமசிவனென்றே ஏற்பட் டது. "நான்முகனை நாராயணன் படைத்தான் நான்முகனுங்,

தான்முகமாய்ச் சங்கரனைத் தான் படைத்தான்." என்று ஆழ்வார் அருளிச்செய்துள்ளாரே அவ்வருளிச்செயல் பதர்மொழியோவெனின், அற்றன்று ஒவ்வொரு தேவர்க்கும் ஒவ்வொருவர் காரணராவது சகஜம். காமதேவனுக்கு நாராயணனும், இந்திராதியோருக்குக் காசிபனும், சந்திரனுக்கு அத்திரியும் காரணரானதுபோல் சதுர்முகப்பிரமாவுக்கும் ஸ்ரீயஃபதியாதிகளும் ஒவ்வோர் கற்பங்களில் அவாந்தரகாரணராயினர். அதனாலே அவர்களைப் பரமகாரணரென்று கூறுதல் குற்றமாம். எல்லாத் தேவர்களுக்கும், ஹிரண்யகர்ப்பன் முதலிய திரிமூர்த்திகளுக்கும் ஆதிகர்த்தா சிவபரஞ்சுடரேயாம். அதனாற்றான் ஏனையதேவர்களை ஒவ்வோர் கர்மங்களில் ஒவ்வோர் பயனைக்கருதி உபாசிக்கவேண்டுமென்று சுருதிகூறிப் பின்னர் சம்சார சாகரத்தில் உழன்று கிடக்கும் சர்வாத்மாக்களுக்கும் உயர்காயத்திரியின் உட்பொருளாயும், ஸவிதா எனப்படுஞ் சூரியனுக்கந்தர்யாமியாய் அப்பெயர்பெற்றவனாயும், அனேக ஆரணங்கள் அறைந்தபடி ஆத்மாக்களின் கர்மங்களுக்கு ஏற்றவாறு அவரவர் புந்தியை உந்தி நடாத்தும் உயர்பொருளாயும், உயிர்க்குயிராயுமுள்ள பரமாத்மஜோதியாகிய பரசிவ சரணாகதியே பரமதாரகமாம் என்று சர்வவேதாந்த ஸாரஸங்கிரஹமாய் ஆத்மாக்கள் உண்மையறிந்துய்யும் நல்வழியைத் தெளிவாகப் போதிக்கும் பஞ்சருத்ராங்களிலொன்றாய்விளங்கும்இம்மந்திரோபநிஷத்தும்,தைத்திரீயமும் வற்புறுத்திக்கூறின. மஹரிஷி என்றது சிவபெருமானுக்கு ஞானகிருதமான ஒப்பற்றபெருமை. அதாவது ஒவ்வொரு மகாப்பிரளயத்தும் தம்முள் அடங்கிய சமஸ்த வேதங்களையும் மறுசிருஷ்டியின் ஆரம்பத்தில் ஹிரண்யகர்ப்பனைச் சிருஷ்டித்து அவனுக்கு உபதேசிப்பவன் எம்மிறைவனேயாதலின் அவனே மஹாரிஷி என்னும் நாமம் வகித்த ஸர்வ வித்தியாசாரியன். விசுவாதிகன்-பிரபஞ்சாதீதன். அது பலகிருதமான பெருமை. ஹிரண்யகர்ப்ப சிருஷ்டி-அது கிரியாசத்தியின் பெருமை.

மா. ஓங்காரத்தில் இயைந்துள்ள நான்கு மாத்திரைகளையும், பகவானே ! நன்றாக விளக்கியருளவேண்டும்.

ஆ. அகாரம், உகாரம், மகாரம், அர்த்தமாத்திரை என்னும் நான்கு மாத்திரைகளே ஓங்காரத்தில் இயைந்துள்ளன.

அவைகளுக்கு முறையே பூமி, அந்தரிட்சம், சுவர்க்கம், சோம லோகம் என்னும் நான்கும், உலகங்களாம். ருக், யஜுர், சாமம், அதர்வணம் என்னும் நான்கும், வேதங்களாம். பிரமன், விஷ்ணு, உருத்திரன், ஸம்வர்த்தகாக்நி (மகாகிராஸன் என்று சுருதிகளால் விதந்தோதப்பட்ட துரீயசிவன்) என்னும் நான்கும், மூர்த்திகளாம். வசுக்கள், உருத்திரர்கள், ஆதித்தியர்கள், மருத்துக்கள் (பிதுர்க்களுக்கும் பிதுர்ஸ்தானமாயுள்ள கண தேவதைகள்) என்னும் நான்கும், பிதுர்க்களாம். காயத்ரீ, திருஷ்டுப், ஜகதீ, விராட் என்னும் நான்கும், சந்தசுக்களாம். கார்ஹபத்தியம், தட்சிணாக்கினி, ஆஹவநீயம், ஏகர்ஷி என்னும் நான்கும், அக்கினிகளாம். இவ்வாறு பிரணவத்தின் நான்கு மாத்திரைகளிலுமுள்ள பொருள்களை மறைமுடியின் சிகையிலமர்ந்த அதர்வணவேத அதர்வசிகோப நிஷத்தும், ந்ருசிம்மதாபநியோபநிஷத்தும் விரிவாக வெடுத்துக்காட்டி யிருக்கின்றன. அவற்றை ஆங்குகாண்க.

மா—நான்காவதான அர்த்தமாத்திரையின் சொரூபம் யாது?

ஆ—பிரணவத்தின் இறுதியில் அதிசூக்ஷமமாய் அகார உகார மகாரங்களுக்கு அப்பாலாய் எந்த மாத்திரையுளதோ அதுவே அர்த்தமாத்திரை என்று சொல்லப்படும். அது மிகவும் அதிசூக்ஷமமான நாதரூபம். அது எல்லா வர்ணங்களுக்கும் மூலபூதமான பச்யந்திநாத சொரூபமாயிருத்தலின் சர்வ சப்த மய அர்த்தமயப் பிரபஞ்சங்களுக்கும் ஆதிகாரணமாயுள்ளது. அதற்குப் பரமேசுவரராகிய சிவபெருமானே தெய்வம். திருநாவுக்கரசு மூர்த்திகளும் "அரைமாத்திரையிலடங்கும்அடி" என்று வலியுறுத்தினர். அத்தகையநாத சொரூபம் ஆசாரியனடிபணிந்து முறைப்படி கேட்டுத் தெளிந்து வாலாயமாகப் பழகின பிரணவ நிஷ்டாபரர்களுக்கே தோன்றும்.

மா—நான்காவது மாத்திரையிலுள்ள சோமலோகம் என்பது யாது?

ஆ—சோமலோகமானது பூமி, அந்தரிட்சம், சுவர்க்கம் என்னும் மூன்று லோகங்களுக்கும் அப்பாற்பட்டுச் சுத்தமாயிருப்பது. அது மூர்த்தித்திரயாதீத துரீயசிவன் எழுந்தருளியிருக்

கும் சிவபுரமாகும். பிரம விஷ்ணு உருத்திரர்களுடைய பதவிக ளான சத்தியலோகம், வைகுண்டம், கைலாசம் என்னும் மூப்ப தங்களுக்கும் அதீதமாயுள்ள மகாசிவலோகம் அதுவே. அச் சோமலோகத்தைச் சந்திரலோகமென்று சிலர் விரோதபுத்தியால் வியாக்கியானஞ் செய்தார்கள். அது பொருத்தமின்று. சந்திர லோகம் மூன்றும் மாத்திரையிலுள்ள சுவர்க்கலோகத்திலடங்கு மாதலால் அது கூறியதுகூறல் என்னுங் குற்றத்துக்கிடனாகும். அந்தப் பரமஸ்தானமாகிய பரமபதமென்னும் மேலைய சிவபுரம் மேருமலையின் கண்ணுள்ள கைலாசமன்று, இமாசலத்துக்கும் ஏமகூடகிரிக்கும் இடையிலுள்ள வெள்ளியங்கிரியென்னுங் கை லாசமுமன்று, மேருமலைக்கு வடக்கே அண்டகடாகச்சுவருக்குச் சமீபத்திலுள்ள மகாகைலாச பர்வதமுமன்று, இம்மூவிதகை லாசங்களுக்குமப்பாலாய் அப்பிராகிருத பரமாகாச சிவலோகமா யுள்ளது. திராவிடவேதமென்னும் தேவாரப்பதிகங்களின் இறு திப்பாசுரங்களாகிய சிலவற்றுள் பாராயணஞ் செய்வோர் அடை யும் புண்ணியப்பேறாகக்கூறப்பட்ட சிவபுரம் அதுவேயாம். இத னால் திராவிட வேதமானது சிவபுரவெல்லையின்கண்ணேயே முற் றிநின்றது எனக்கருதப்படாது. போக்குவரவின்றி இங்கிருந்த வாறே அடையும் விதேக கைவல்லியம் என்னும் பரமுத்தியே சகல வேதாந்த சாரபூத சற்சித்தாந்தமாகிய வைதிகசைவர்கொ ள்ளுஞ் சிவசாயுஜ்ஜியம். அதைத்தான் "முத்தி முடிவு" என்றும் "சுருதியின் முடிந்த தாற்பரியம்" என்றுஞ் சித்தாந்த நூல்கள் ஒருங்கெழுந்து முழக்கும்.

சுக்லயஜுர்வேத பைங்கலோபநிஷத்.

[Grantha text] |
[Grantha text] ||

ஜீவன்முக்தபதம் த்யக்த்வா ஸ்வதேஹே காலஸாத்க்ருதே ।
விசத்ய தேஹமுக்தத்வம் பவநோஸ்பந்த தாமிவ ॥

(இ—ள்.) "காற்று அசைவற்ற தன்மையையடைதல்போல த் தனதுதேகங் காலவயப்பட்டவுடன் ஜீவன்முக்தித்தசையை நீங்கி விதேக கைவல்லியத்தை யடைகின்றனன்" என்று நிர்ண யித்தது. அக்காலை முக்தாத்மா சர்வஞ்ஞத்துவம், சர்வவியாப கத்துவம், ஸ்வயம் பிரகாசத்துவம் முதலிய குணங்களெல்லாந்

தன்மாட்டு நிரந்தரமாக விளங்கப்பெற்று அத்வைத சிவாநந்தாநுபவமொன்றிற்கே உரித்தானவனாய் விடுகின்றனன். ஆனால் பரமசிவத்தின் சிருஷ்டியாதி பஞ்சகிருத்தியங்களிலொன்றுவும் அவனுக்கு உரித்தாமாறு இல்லை. சிவஞானசித்தியாரும் "உம்பர்பிரானுற்பத்தியாதிகளுக்குரியன் உயிர்தானுஞ் சிவாநுபவமொன்றினுக்குமுரித்தே" என்று அறிவுறுத்தியது. சிவஞானபோதமும் "அவனது சீபாதத்தையணையும்" என்று முடிவு கட்டியது. சீபாதமாவது-அவனது திருவருளாகிய திருவடி. அதையடைந்தால் அகண்ட ஞான சொரூபத்தையுடைய பரம்பொருளை யடைந்ததாகும். அருளைச் சிவபரம்பொருளின் பாதம் அல்லது அடியாகக்கூறுதல் சைவபரிபாஷை. "தாளுந்தலையுமறியார் கலதிகள், காலந்தச்சத்தியருளென்பர்" என்னுந் திருமூலதேவர் திருமந்திரத்தாலுமுணர்க. இவ்வுண்மையை யுணராதார் வைதிகசைவர் கொள்வதுந் துவிதமுத்தியேயென்று பிதற்றித்திரிவர். பரமுத்தியிலும் ஆத்மா சிவத்துக்கடிமையென்று சித்தாந்தநூல்கள் கூறியது-ஆத்மா மலமுழுதும் நீங்கித் தன்னறிவு வியாபகமாய் விளங்கிய வழியுந் தன்னாற் சாரப்பட்ட சிவத்தைமாத்திரம் அறிதலின்றி மற்றொன்றினையுமறிதல் செல்லாமையின் அவ்வாறு கூறப்பட்டது. அதனாலே பேதங் கற்பிப்பது கூடாமை. முன்னிலைச் சுட்டிருந்தாலன்றோ பேதங்கூறுவது பொருந்தும். சிவானந்தப் பெருங்கடலிற் படிந்து மதுவுண்ட வண்டைப்போல அம்மயக்கத்தில் ஆழ்ந்துகிடத்தலே எம்மவர் கொள்ளும் சுத்தாத்வைத பரிபூரண நிலையாம். வாமதேவர், சனகர், சுகர் முதலியோரது அநுபவமும் அதுவே. அந்நிலையில் "மண்ணோடைந்தும் வழங்குயிர்யாவுமே, அண்ணலே யுன்னருள் வடிவாகுமே" என்று ஸ்ரீதாயுமானசுவாமிகள் விளக்கியருளியபடி, உலகுயிர் யாவும் அருள்வடிவாய் விளங்கும். அதைத்தான் தன்னிடத்தே யடையும் முத்தியென்று வேதசிரசுக்கள் முழக்கின. அந்தமுத்தியோடு ஏகாத்மவாத முத்தியைக் குழப்புதல் கூடாது. ஏகாத்மவாதமுத்தி ஆத்ம கைவல்யமாகும். சுத்தாத்வைத முத்தியோ பிரம கைவல்யம் என்று சொல்லப்படும். சிலர் விசிஷ்டாத்வைத மதப்படி வைஷ்ணவர் கொள்ளும் பதமுத்தியைப் போன்றதே சித்தாந்த சைவர்கள் கொளளும்பதமுத்தி என்று கூறுகின்றார்கள். அதுவும் பொருத்தமின்று. விசிஷ்டாத்வைத

முத்தியானது விஷ்ணுதத்துவ விளக்கத்தில் சொல்லியபடி "விரஜையைக்கிட்டி அதில் தீர்த்தமாடி..........சதுர்ப்புஜ சங்கசக்ரங்களும், நித்யமான இருபத்தைந்து வயதும், ஆயிரத்தெட்டு மாற்றுத் தங்கம்போன்ற கோடி ஸூர்யப்பிரகாசமுடைய அப்ராக்ருத விக்ரஹத்தையும் பெற்று" வருமுக்தனை ஸ்ரீமந்நாராயணன் தூக்கி "லக்ஷ்மியின் திருக்கரங்களில் சாய்க்கையில் ஸ்ரீபெரியபிராட்டியார் அந்தப்புத்ரனுக்கு ஸ்தந்யபானந்தந்து முத்தமிட்ட" பின்னே "ஸ்ரீபரமபதத்தில் நித்யஸூரிகளுடன்கூடி நித்யாநந்தத்தை அநுபவிப்பான்"என்று வரைந்திருப்பது ஈண்டு எடுத்துக்காட்டப்பட்டது. அல்லாமலும், யதீந்த்ரப்ரணவப்ரபாவத்தில் "இரண்டு முலைக்காம்பினும் மாறாதே பெருகுகிறபாலை ஆராவமுதமாகப்பருகுவார் நாமன்றோ" என்று வைணவர் பேசிக்கொண்டனர்என்பதாகவும் வரையப்பட்டுள்ளது. வடகலைக்குருபரம்பரை (மூவாயிரப்படி) யில் "ஸ்ரீ வைகுண்டத்தில் திருமாமணிமண்டபத்திலே நித்யஸூரிகளோடு கலந்து குணாநுபவ கைங்கரியஞ்செய்வதே மோக்ஷம்" என்று புகன்றுள்ளது. இத்திறமுத்திகளெல்லாம் மேற்சொன்ன பரமுத்திக்கு நேர்விரோதமாயிருத்தலின் இவற்றைப்பற்றி விரிவாய் விளக்க அஞ்சுகின்றனம். ஏனெனின், அவ்வச்சமையத்தாருக்கு அவ்வம்முத்திகள் அரும்பெரும் பொருளாயுள்ளதென்பது லௌகிகவைதிக அநுபவம். ஆதலின் விவேகிகளே அவற்றைப் பகுத்தறிந்து கொள்ளக்கடவர். சந்தானசாரியருள் ஒருவராகிய ஸ்ரீ உமாபதி சிவாசாரியர் அவ்வச்சமயத்தார் கூறும் முத்தித்திறங்களை அடியில் காட்டும் பாசுரத்தில் ஸங்கிரஹமாகவும் தெளிவாகவும் விளக்கியுள்ளார்.

அரிவையரின் புறமுத்தி கந்தமைந்தும்
அறமுத்தி திரிகுணமும் அடங்குமுத்தி
விரிவுவினை கெடுமுத்தி மலம்போமுத்தி
விக்கிரக நித்தமுத்தி விவேகமுத்தி
பரவுமுயிர் கெடுமுத்தி சித்திமுத்தி
பாடாண முத்தியிவை பழிசேர்முத்தி
திரிமலமும் அகலவுயிர் அருள்சேர்முத்தி
திகழ்முத்தி யிதுமுத்தித் திறத்ததாமே.

இஃதிவ்வாறிருக்க, மேறகூறிய மூவகைக் கைலாசங்களுள் வெள்ளியங்கிரியென்னுங் கைலாசமானது விஷ்ணுமுதலிய சர்வ

பிராணிகளின் பிரளயகாலத்தில் அழிவுறாது சிவாஞ்ஞையால் விரைவில் பிரமாண்டத்தைப் பேதித்து மேற்சென்றிருக்குந் தன்மையுடையது. மேருமலைக்கு வடக்கேயுள்ள மகா கைலாச பர்வதமும் அவாந்தரப் பிரளயகாலத்தில் அண்டத்துக்கப்பால் அவ்வாறே வளருந்தன்மையுடையது. இவ்விருவித கைலாசங் களுஞ் சிவபெருமானுடைய ஆஞ்ஞையால் தாங்கப்பட்டிருத்த லின் இவற்றிற்குப் பூமியின் ஆதாரஞ் சிறிதுமில்லை. இவ்வுண் மையை யுணராது பூமியின்கண்ணுள்ளதுதானே கைலையங்கிரி என்று வீண் பூசலிடுவர் மதாவேசம் பூண்ட வைரிகள். "கொடி றும் பேதையுங்கொண்டதுவிடா" என்றது ஒத்து.

பூமியிலுள்ள எண்ணிறந்த ஸ்தலங்கள்தோறும் சிற்றறிவும் சிறுதொழிலும், சின்னுளும், பலபிணியோடுங் கூடியிருக்கின்ற எண்ணிறந்த ஆத்மாக்களுக்கு அவ்வப்போது அநுக்கிரகஞ் செய்யும்பொருட்டு அருட்குறிதோன்ற சிலாவிக்கிரகங்களில் எழுந்தருளியபடியே இம்மூவித கைலாசங்களிலும் பக்குவாத் மாக்களுடைய அநுக்கிரகார்த்தம் ஸ்ரீகண்டராதியோர்களை அதிஷ்டித்து எழுந்தருளியிருப்பவர் சிவபெருமானே. ஆகையி ஞலேஅவரைக் "கிரிசந்த" என்று வேதங்களழைக்கின்றன. கிரி-மலை, சம்-சுகம், த-செய்பவர். கைலாசமுதலிய மலைகளிலிருந்து உலகத்துக்குச் சுகமளிப்பவர் என்பது கருத்து. இவற்றிற்கும் அப்பாற்பட்டு உத்தமோத்தமமாயும், விசுத்தமாயும், சிவசம்பந்த மாயுமுள்ள சிவபுரம் எதுவோ அதுவே **சோமலோகம்** என்று சொல்லப்படும். அதனை **வாயுசம்ஹிதை உத்தரபாகம்** அடியில் வருமாறு வர்ணிக்கின்றது.

𑌤𑌦𑍂𑌰𑍍𑌧𑍍𑌵𑌮𑍁𑌨𑍍𑌮𑌨𑌾𑌲𑍋𑌕𑌾𑌤𑍍 𑌸𑍋𑌮𑌲𑍋𑌕𑌮𑌲𑍌𑌕𑌿𑌕𑌮𑍍 ।
𑌸𑍋𑌮𑌸𑍍𑌸𑌹𑍋𑌮𑌯𑌾𑌯𑌤𑍍𑌰 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂𑌶𑌿𑌵 𑌸𑌦𑍀𑌶𑍍𑌵𑌰𑌃 ।
𑌤𑌦𑍂𑌰𑍍𑌧𑍍𑌵𑌮𑍁𑌨𑍍𑌮𑌨𑌾𑌲𑍋𑌕𑌾𑌤𑍍 𑌯𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍋 𑌨𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 ॥

*ததூர்த்வ முந்மநாலோகாத் ஸோமலோக மலௌகிகம்।*
*ஸோமஸ் ஸஹோமயாயத்ர நித்யம்சிவ ஸதீச்வரஃ।*
*ததூர்த்வ முந்மநாலோகாத் யம்ப்ராப்தோ நநிவர்த்ததே॥*

(இ-ள்) "உன்மனுலோகத்துக்கு மேலுள்ளது அப்பிராகிருத மாகிய சிவலோகம். உமையோடுகூடிய சோமன் எனப்படும். பரமேசுவரர் அந்தச் சோமலோகத்தில் எக்காலமும் வசிக்கின்றனர்.

உன்மனுலோகத்திற்கு மேலுள்ள அந்தச் சோமலோகத்தை யடைந்தவன் மீளப்பிறப்பதில்லை" எனவாம்.

கிருஷ்ண யஜுர்வேத தைத்திரீயாருணசாகையும

தெஸொாஃ வ்ராவுஃவதி ।

தேஸோமம் ப்ராப்நுவந்தி ।

(இ-ள்) "அவர்கள் சோமனை அடைவார்கள்." என்று கூறியது. அதனால் அந்தச் சோமலோகத்தைப் பெறுவதற்குப் பிரணவயோகமே பரமசாதனமாகும். அஃதன்றி வேறு வழி கிடையாது.

அதர்வணவேத பிரசினோபநிஷத்

தமொாஂகாரெண வைவா யதநெநாநெதி

விஷாநு தவாகு ஊஜர ஊஜுத ஊஹயம வரஂவெதி ॥

தமோங்காரேணைவா யதனேநாந்வேதி

வித்வாந் யத்தச்சாந்த மஜாரமம்ருதமபயம் பரஞ்சேதி ॥

(இ-ள்) "அவன் ஓங்கார வாயிலாக இதனை (பிரமலோகத்தை) யடைகின்றான். வித்வான் சாந்தரும், ஜரையில்லாதவரும், அழியாதவரும், பயமில்லாதவரும், பரமுமாகிய அவரை (சிவபெருமானை) அடைகின்றான்." எனவும்,

அதர்வணவேத முண்டகோபநிஷத்

வ்ரணவொய நுஃமரொாஹாது ஸ்ரஹ தலக்ஷஃமுஃவதெ ।

ப்ரணவோ தநுச்சரோஹ்யாத்மா ப்ரஹ்ம தல்லக்ஷ்யமுச்யதே ।

(இ-ள்) "பிரணவம் வில், ஆத்மா அம்பு, லட்சியப் பொருள் அந்தப்பிரமம் என்று சொல்லப்படும்." (இதே மந்திரம் தியானபிந்தூப நிஷத்திலும் உள்ளது.) எனவும்,

கிருஷ்ண யஜுர்வேத அமிர்தநாதோப நிஷத்

ஒஂகார ரமாரூஹ்ய விஷ்ணுஂ கூகூவாதஃ ஸாரமிஃ ।

ஸ்ரஹ்லொக வதாமநுஷீ ரூஜாராயந தத்பரஃ ॥

ஓங்கார ரதமாருஹ்ய விஷ்ணும் க்ருத்வாது ஸாரதிம் ।

ப்ரஹ்மலோக பதாந்வேஷீ ருத்ரா ராதந தத்பரஃ ।

(இ-ள்) "ஓங்காரம் என்ற ரதத்திலேறி விஷ்ணுவைச் சாரதியாகக்கொண்டு பிரமலோகபதமாகிய சோமலோகத்தைத்தேடிச் செல்வான் உருத்திராராதனையில் பேரன்புடையவன்" எனவுங் கூறிப்போந்தன. இங்கு விஷ்ணு மூர்த்தியைச் சாரதியாகக்

கூறியது அவர் சிவஞானிகளுட் சிறந்தவராயும் பிரணவ வித்தைக்கு ஆசிரியராகவும் இருத்தல் பற்றியே. அதனாலேதான் மகா சாம்பவன் என்று பிரசித்திபெற்ற அர்ஜுனனுக்குச் சோகம் பாவனையிற்றேர்ந்த கண்ணபிரான் பரமாசாரியராயினர். அன்றியும் அவனுக்குப் பரமேசுவரருடைய விசுவரூபத்தைத் தாமே காட்டித் தரிசிப்பித்தனர். தன்னைச் சிவசொரூபமாகப் பாவித்துப் பூசிக்கும்படிச்செய்து தன்மேலிட்டபோதுகளை த்தையும் தேகத்துக்குச்செய்யும் உபசாரம்யாவுந் தேகி ஏற்றுக்கொள்வதுபோலத் தனக்கு அந்தர்யாமியாயுள்ள சிவபெருமானுடைய திருமேனியில் காட்டி அவனை மகிழ்விப்பித்தனர். இன்னும் இவற்றிலுள்ள நுண்ணிய பொருள்யாவும் அடியில் காட்டும் பிரமாணங்களைக்கொண்டு தெளிந்திடுக.

பகவத்கீதை பதினோராம் அத்தியாயம்

𑌏𑌵𑌮𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌤𑌤𑍋 𑌰𑌾𑌜𑌨𑍍 𑌮𑌹𑌾𑌯𑍋𑌗𑍇𑌶𑍍𑌵𑌰𑍋 𑌹𑌰𑌿𑌃 |
𑌦𑌰𑍍𑌶𑌯𑌾𑌮𑌾𑌸 𑌪𑌾𑌰𑍍𑌥𑌾𑌯 𑌪𑌰𑌮𑌂 𑌰𑍂𑌪𑌮𑍈𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 ||

எவமுக்த்வா ததோ ராஜந் மஹாயோகேச்வ ரோஹரி:।
தர்சயா மாஸ பார்த்தாய பரமம் ரூபமைச்வரம்॥

(இ-ள்) "இவ்விதங் கூறியபின் மகா யோகேசுவரராகிய நாராயணர் பரமேசுவரரூபத்தை அர்ஜுனனுக்குத் தரிசிப்பித்தனர்." இதனால் சோகம்பாவனையிற் றேர்ந்து சிவஞானச் செல்வராய் விளங்கிய ஸ்ரீகிருஷ்ண பகவான் பரப்பிரம சிவபெருமானை யோகசமாதியிற் றியானித்துக் காட்டினர் என்பதே கீதையின் ஹிருதயம். அது எவ்வாறு பொருந்துமெனின், இவ்விஷயத்தை யுற்றுச் சிவபெருமான் அசுவத்தாமர்க்குக் கூறியவிடத்து,

மகாபாரதம் சவுத்திகபருவம்

𑌅𑌹𑌂 𑌯𑌥𑌾𑌵𑌦𑌾𑌰𑌾𑌧𑍍𑌯𑌃 𑌕𑍃𑌷𑍍𑌣𑍇𑌨𑌾 𑌕𑍍𑌲𑌿𑌷𑍍𑌟 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 |
𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌿𑌷𑍍𑌟𑌤𑌮𑌃 𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌦𑌨𑍍𑌯𑍋 𑌮𑌮 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 ||

அஹம் யதாவதாராத்ய: க்ருஷ்ணேநா க்லிஷ்ட கர்மணா।
தஸ்மாதிஷ்டதம: க்ருஷ்ணா தந்யோமம நவித்யதே॥

(இ-ள்) "நான் இளைப்புறுத்தொழில் பூண்ட கிருஷ்ணரால் விதிப்படி ஆராதனை செய்யப்படுகின்றேன். ஆதலின் கிருஷ்ணரினும் எனக்கு அதிக பிரீதியுடையவர் பிறரிலர்" என்று செப்பினர். அன்றியும்,

அதர்வணவேத ப்ருஹஜ்ஜாபாலோபநிஷத்திலும்

[illegible]
[illegible]
[illegible]

நமஸ்தேஸ்து நமஸ்தேஸ்து த்வாமஹம் சரணம் கத: ।
த்வத்பாத யுகளே சம்போ பக்திரஸ்து ஸதாமம ॥
பஸ்மதாரண ஸம்பந்நோ மமபக்தோ பவிஷ்யதி ।

(இ-ள்) "உமக்கு நமஸ்காரம், உமக்கு நமஸ்காரம், உம்மை நான் சரணமடைந்தேன். ஓ சம்புவே! உமது பாதகமலங்களிரண்டினும் எனக்கு எப்போதும் பக்தியிருக்கட்டும். எனது பக்தன் பஸ்மதாரணத்துடன் கூடினவனாயாகக்கடவன்" என்று கிருஷ்ணமூர்த்தியின் மூலபுருஷரான விஷ்ணுவும் சிவபெருமானளித்த பஸ்மாவை அணிந்துகொண்டும், உட்கொண்டும் பிரார்த்தித்ததாகக் கூறப்பட்டிருக்கின்றது. நம்மாழ்வாரும் "நீறு செவ்வே யிடக்காணில் நெடுமாலடியா ரென்றோடும்" என்று திருநீற்றினெழிலைச் சிறப்பித்து மொழிந்ததும், இச்சுருதியைப் பின்பற்றியேபோலும். இவ்வியாக்கியானங்களால் நாராயணருக்கு அன்னியமாக உபாசியப்பொருளாம் பரப்பிரமசிவனார் வேறொருவர் உளரென்றும், அவரது உபாசனாதிகாரம் யாவருக்குஞ் சிறப்பாகவுளதேனும், நாராயணர் சிவோபாசகர்களுக்குள்ளே சிரேஷ்டராதலின் அவருக்கே அது சர்வசுதந்தரமென்றும் வெளியாயிற்று. ஆகையினாலே சிவாலயங்களில் விஷ்ணுமூர்த்தியைப் பரிவார தெய்வங்களில் ஒன்றாக வைத்துப் பூசித்து வருகின்றார்கள். விஷ்ணுமூர்த்தியில்லாத சிவாலயங் கிடையாது. "திருமாலுக் கடிமைசெய்" என்று ஔவையார் மொழிந்ததும் இக்கருத்தை நோக்கியே. அல்லாமலும்,

" அளவி லுன்பெருமை யறியவு முன்றாட் கழிவிலா வன்புவைத் திடவும்
தளமல ரெடுத்துன் னருச்சனை யாற்றிச் சாலநின் றிருவருள் பெறவும்
வளமலி புலியூ ரம்பலத் தமுதே மலர்தலை யுலகினுள் சுரும்பர்
உளர்தொழாய்ப் படலை மார்புடை யண்ண லொருவனே வல்லனுமன்றே"

என்னுஞ் சிவதத்துவ விவேகச் செய்யுளையுமீண்டு கவனிக்க. ஸ்ரீ தாயுமான சுவாமிகளும்,

"வண்டுளப மணிமார்பன் புதல்வனொடும் மனைவியோடுங்
குடியிருந்து வணங்கிப்போற்றும்

புண்டரிக புரத்தினி ஞதாந்தமோன போதாந்த
நடம்புரியும் புனிதவாழ்வே"

என்றோதியருளினர். இதனையுணராமல் பெருமாள் இல்லாத சிவாலயம் பிரயோசனமற்றதென வைணவர் கூறும் வசைமொழி வெறும் பிதற்றேயாயிற்று.

இனி கிருஷ்ண பகவானுக்கு அந்தர்யாமியாயுள்ளவர் பரம சிவம் என்பதையும் சிறிது விளக்கிக்காட்டுவாம். கிருஷ்ணர் அர்ஜுனருக்குக் கீதோபதேசஞ்செய்தது பீஷ்ம பருவத்தில். இருவரும் கைலாச யாத்திரா கமனஞ்செய்தது துரோணபர்வத்தில். பீஷ்ம பர்வம் முற்பட்டது. துரோண பர்வம் பிற்பட்டது. கீதோபதேசப்பலனாக அர்ஜுனன் கிருஷ்ணரையே பரப்பிரமமாக அறிந்து நிச்சயித்திருக்கும்பட்சத்தில் அவரை நேரில் பூசிக்காமல் அபூஜ்யராகத்தள்ளி "ஏது பாவித்திடினு மதுவாகி வந்தருள்செ யெந்தைநீ குறையுமுண்டோ" என்னும் ஆன்றோர் வசனத்துக்கிணங்க அவரிடத்தில் பரப்பிரமசிவனுரைப் பாவித்துப் பூசிக்கவேண்டிய நிமித்தமேயில்லை. உபதேசாநந்தரம் சாங்காறுஞ் சிவபூஜையைக்கைவிடாமல் செய்யவேண்டியகாரணமுமில்லை. மேலும் தான் சிவபாவனையால் கிருஷ்ணன்மேலிட்ட போதுகளைக் கிருஷ்ணனேடு கைலாசத்துக்குச்சென்று அவரைச் சிவபிரானிடங் கண்டு தெளிந்தமையானும், சிவபிரானே பலதாதாவாய்த் தனக்கு அநுக்கிரகஞ் செய்தமையானும், கிருஷ்ணமூர்த்தியினது தெய்வமும், சர்வாந்தர்யாமியுமாயுள்ளவர் சிவபெருமானே என்று கீதோபதேச ஞானத்தாலும், அநுபவ வாயிலாகவும் அர்ஜுனன் அறிந்துகொண்டானென்பதே தீர்வை. அப்படியானல், பகவற் கீதையில்

ஸவ௯யஊ௵ு வசிக்௯ஜ௵ ஊஊெகஂ ஶரணஂ வ௵ஜ।
ககூஂகூ ஸவ௯வாவெ௵ா ஒாக௲யிஷ௵ாஸி ஊஶுசஃ ॥

ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம வ்ரஜ।
அஹம்த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச:॥

(இ-ள்) "சகலதர்மங்களையும் விட்டுவிட்டு என்னெருவனையே சரணமாகவடை. நான் உன்னைச் சகல பாபங்களினின்றும் நீக்கி மோட்சத்தையடையும்படிச்செய்வேன். பயப்படாதே." என்று கண்ணன் கூறிய சரமசுலோகத்தின் தாற்பரியம் என்னெனின்

"பரப்பிரம மிவனென்றும் பரசிவன் றானென்றும் பரஞான மிவனென்றும் பராபரன்றானென்றும், அரன்றரு சீர்நிலையெல் லாமிவனேயென்றும் அருட்குருவை வழிபடவே யவனிவன்றா னே, இரங்கியவாரணமாமை மீனண்டஞ்சினையை யியல்பினோ டும் பரிசித்து நினைந்தும் பார்த்தும், பரிந்தவைதானாக்குமா போற் சிவமேயாக்கும் பரிசித்துஞ் சிந்தித்தும் பார்த்துந்தானே." என்னுஞ் சிவஞானசித்திச் செய்யுட் பிரமாணப்படி பிரமத்தி னது தர்மத்தை ஞானவைராக்கிய சம்பூர்ண முடையோரிடத் துச் சோகம் பாவனாவிசேஷத்தாலேற்றிக் கூறுவது நியதமாகை யால், ஆசாரியராகிய கிருஷ்ண பகவானுந் தன்னையே வழிபடுக வென்று உபதேசித்தனர். எல்லாக்கீதாசாரியர்களும் இப்படியே கூறியிருக்கின்றார்கள். பிரமகீதையிலும் "உலகம் யாவும் உயிர் பலவும் நானே சிறிதும் வேறில்லை-அலகிலறிவா லாய்ந் திடினு மாயாவிடத்து மருந்தமிதே" என்று சொல்லியிருக்கின் றது. தேவேந்திரனும் "நான் பிராணனாயிருக்கின்றேன். நான் அறிவு மயமான ஆத்மாவாயிருக்கின்றேன் ஆயுளை அமுதமாக உபாசியுங்கள்" என்று உபதேசித்துள்ளான். வாமதேவ மகா ரிஷியும் "நானே எல்லாமாயினேன்" என்றனர். இவற்றால் கீதாசாரியராகிய கிருஷ்ணமூர்த்திக்கும் அந்தர்யாமி சிவபெரு மானென்பதே கரதலாமலகமாம். விரிக்கிற் பெருகும்.

கிருஷ்ணமூர்த்தி சரீரமும் சிவபெருமான் சரீரியுமாகலின் இவ்விருவருக்குமுள்ள சரீரிசரீர சம்பந்தத்தைப் பொய்கை யாழ்வார் "பொன்றிகழுமேனிப் புரிசடையம் புண்ணியனும், நின்றுலகந்தாய நெடுமாலும்-என்றும், இருவரங்கத்தாற் றிரிவ ரேலும், ஒருவன் ஒருவனங்கத்தென்று முளன்." என்று இனிது பிரகாசப்படுத்தினர். வில்லிபுத்தூரார் பாரதத்தினும் இவ் வாறே கூறப்பட்டுள்ளது. "கண்ணன்மே லணிமல ரனைத்துங் காயெரி-வண்ணன்மேற் காண்டலு மகிழ்ந்து மேதினி-உண்ணு மாதவன் சிவனுருவ மென்றுணர்ந், தண்ணலுமுடல்புளகரும்பினா னரோ" எனலாம். அப்பர்சுவாமிகளும் "பையஞ்சுடர்விடு நாகப் பள்ளிகொள்வா னுள்ளத்தானும்" என்று திருவாய்மலர்ந்தரு ளினர். நம்மாழ்வாரும் "தீர்த்தனுலகளந்த சேவடிமேற் பூந் தாமஞ் சேர்த்தியவையே சிவன்முடிமேற் றான்கண்டு-பார்த்தன்

தெளிந்தொழிந்த பைந்துழாயான் பெருமை-பேர்த்துமொருவராற் பேசக்கிடந்ததே" என்று கிறுவியுள்ளார்.

ஊர்த்வபூர்ணமத:பூர்ணம் மத்யபூர்ணம் சிவாத்மகம்।

(இ-ள்) "மேலும் பூரணமாயும், கீழும்பூரணமாயும், நடுவும் பூரணமாயுள்ளது சிவசொரூபம்" என்று சுக்ல யஜுர்வேத முக்திகோபநிஷத் கூறியபடி சிவம் சர்வபரிபூரணமாயிருத்தலின் சிற்சடங்களின் எந்தப் பாகத்திலிருந்தும் அதிகார பேதத்துக்குத் தக்கவாறு பூஜையை ஏற்றுக்கொள்ளலாம். மத்யம்—நடு. அதாவது கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு என்னும் நான்கு திசைகளும் அதில் அடங்கியுள்ளன. அல்லாமலும், மூலைத்திசைகளையும் அந்நாற்பெருந் திசைகளிலடக்கி மேலுங் கீழுஞ் சேர்த்துத் திசைகள் பத்தென நூல்கள் நவிலாநிற்கும். ஒருபெண்ணினது ஸ்தனத்திலிருந்தும், குதிரை கட்டும் ஆப்பிலிருநதும், ஆட்டுப்பிழுக்கையிலிருந்தும், இன்னும் அநேக நிகுருஷ்ட இடங்களிலிருந்தும் உள்ளன்போடு பரவசமடைந்து செய்த பூஜையைச் சிவபெருமான் ஏற்றுக்கொண்டு அநுக்கிரகஞ்செய்த மான்மியங்கள் பல வைதிக நூல்களினுங் கேட்கப்படுகின்றமையால், கிருஷ்ணரது பாதங்களிலிட்ட போதுகளைச் (சிலர் கொள்கைப்படி) சிவனார் முடியிற்றுங்கியது ஒருபோதுந் தாழ்வாகாது சிவசந்நிதியில் சிற்சடபேதங்கள் யாவுமே நிகிருஷ்டம். கிருஷ்ணரது சிரசு உயர்ந்த உறுப்பென்றும், அவரது பாதம் தாழ்ந்தவுறுப்பென்றுங் கொள்ளும்பட்சத்தில் அவ்வாறு உயர்வு தாழ்வான அங்கங்களையுடைய திருமேனி அப்பிராகிருதமென்றும் உத்கிருஷ்டமென்றும் அவர்கள் சொல்ல முயல்வது குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக்கொண்டதையே மானும். ஸ்ரீ தாயுமானசுவாமிகள், "எல்லா முதவுமுனை யொன்றிற் பாவனையேனுஞ்செய்து, புல்லாயினு மொருபச்சிலையாயினும் போட்டிறைஞ்சி, நில்லேனல்யோக நெறியுஞ் செயேனருணீதி யொன்றுங், கல்லே னெவ்வாறு பரமேபரகதி காண்பதுவே" எனக்கூறியுள்ளதையுமுணர்க. சிவஞான சித்தியாரும் "தாபரஞ் சங்கமங்க ளென்றிரண் டுருவினின்று மாபரன் பூசைகொண்டு மன்னுயிர்க் கருளைவைப்பன்" என்றுறுதியது.

இனி கிருஷ்ணருடைய விசுவரூபத்தைப்பற்றியுஞ் சிறிது கூறுதும். ஆஞ்சநேயர் விசுவரூபங்காட்டினர். வீரவாகு தேவர் விசுவரூபங்காட்டினர். நளாயணியின் மணவாளராகிய மாமுனிவர் ஏககாலத்தில் பலவுருவந்தாங்கி நின்றனர். சௌபரிமுனிவர் மாந்தாதா என்னும் ஓரரசருடைய புதல்வியர் ஐம்பதின்மரை விவாகஞ்செய்து அவ்வைம்பதின்மருக்கும் தமது ஆசிரமத்திலே தனித்தனி மாளிகை முதலாயின அமைப்பித்து அவ்வைம்பதின்மர் மாளிகையிலும் ஒருவரையொருவர் அறியாவண்ணம் அவ்வவரிடத்துத் தனித்தனி வடிவங்கொண்டு ஓர்காலமும் அவ்வவரைப் பிரியாது நெடுங்காலம்போகந்துய்த்துத் தமது தவநிலையும் பெயராதுயோகிருந்தனர். அகஸ்தியர் கடலை ஆசமனஞ்செய்ததோடு விந்தமலையின் கர்வத்தையும் அடக்கினர். உலகந் தென்பாரிசந் தூக்கிக்கொண்டபோது அங்கெழுந்தருளிப் பூமியைச் சமப்படுத்தினர். உபமந்யு பகவான் பாற்கடலை யுண்டனர். இன்னும் அனேக ரிஷிகளும் அசுரர்களும் அனேக அற்புதங்களைச் செய்தார்கள். இவையெல்லாம் சர்வைச்வர்ய சம்பந்நச்சர்வேசுவரராகிய சிவபெருமானது ஐசுவரிய யோகமேயாம். இந்த ஐசுவரிய யோகத்தையே கிருஷ்ணமூர்த்தியும் சோகம் பாவனையாற பெற்றமையானும்,பிராகிருத சித்தர்கள்போலல்லாமல் திரிமூர்த்திகளுஞ் சர்வசக்தர்களாதலின் அவருள்ளும் "விஶ்வ நாராயணம் வரம்-விச்வன்நாராயணன் பரம்" எனவும், "விஶ்வம்விஷ்ணு-விச்வம்விஷ்ணு" எனவும் முறையை சுருதியும் பாரதமும் துதித்தபடி விராட்டுசொரூபம் விஷ்ணுவிற்கே இயற்கையில் அமைந்திருத்தலானும், பரமேசுவரரதுவிசுவரூபத்தை அர்ஜுநருக்குக் காட்டினார் என்று வைதிக சிரேஷ்டர்கள் தெளிந்திடுவர்.

சிவமஹா புராணம்

ஈஶாநஸ்ஸர்வ வித்யாநாம் ஸவவாதி குருர்பதா: |
தஸ்யஶிஷ்யோ மஹா விஷ்ணுஸ்ஸர்வஜ்ஞாந மஹோததி: ||

ஈசானஸ் ஸர்வ வித்யாநாம் ஸஎவாதி குருர்பதா:।
தஸ்ய சிஷ்யோ மஹாவிஷ்ணுஸ் ஸர்வஜ்ஞான மஹோததி:॥

(இ-ள்)"ஓ பண்டிதர்காள்! சர்வவித்தைகளுக்கும் ஈசானனே ஆதி குரு. அவருக்குச் சிஷ்யராகிய மஹாவிஷ்ணு சர்வஞானக் கடலாம்." என்று விஷ்ணுவினது பெருமையைக்கூறினமையால்

ஸ்ரீ தாயுமானசுவாமிகளும் "விஷ்ணுவடிவான ஞானகுருவே." என்று புகழ்ந்தனர். இதனால் ஸ்ரீமந்நாராயணர் தத்துவோபதேசஞ்செய்யுங் ஸ்ரீ குருமூர்த்தியென்று ஏற்பட்டது. இவற்றையெல்லாஞ் சீர்தூக்கிப் பார்க்கும்போது கிருஷ்ணமூர்த்தி "என்னையே வழிபடுக" என்றதும், "யானே உலகமாயினேன்" என்றதும், விசுவரூபங்காட்டியதும், சோகம்பாவனையிற் றலைப்பட்ட பரமாசாரிய ராதலினாலென அறிக.

மேலே உதாஹரித்த அமிர்தநாதோப நிஷத்து வாக்கியத்தில் "ருத்ரா ராதநதத்பர:" என்னும் வசனத்திலுள்ள உருத்திரன் என்ற சொல்லுக்குச் சம்சார பந்தத்தை யொழிக்கும் ஆற்றல் பெற்ற பிறைசூடிப் பிறப்பிலிப்பிரானாகிய துரீய ருத்திரரே பொருளாவாரன்றிப் பிரபஞ்சசங்காரத்தொழிலை மேற்கொண்டு திரிமூர்த்திகளோடு ஒருவராயெண்ணப்பட்டகுணருத்திரரன்று. மூர்த்தித்திரயாதீத சிவனை "த்ரிகுணாஹிதம்" என்று வேதம் பலவிடத்துந் துதித்துத் திருப்தியடைந்ததுமல்லாமல் அந்நிர்க்குண சிவனுக்கு "மஹாவுருத்திரன்" என்னும் நாமமும் யோகரூடியாகவுளதென்று அவ்வேதமே பன்முறை பலவிசேஷ பரத்துவ நிரூபண வாக்கியங்களில் நிரூபித்துள்ளது. நிர்க்குணம் என்பதற்குக் குணசூன்யமென்று சிலர் பொருள் கூறுவர். அது கேவலம் அஸம்பாவிதம். வேறு சிலர் ஹேயகுணரஹிதம் என்பர். அதுவும் அவ்வளவு சிறப்பினதாகா. திருவருள் அல்லது தயா மூலம் (பிரமத்தின் தர்மபூதம்) வெளிப்படாத அவசரமே நிர்க்குணமாகும். அது கேவலம் சத்துசித்தாய் விளங்கும். ஆகையினாலன்றோ, திருவாசகம் "ஒருநாம மோருருவ மொன்றுமில்லாற்காயிரந், திருநாமம் பாடிநாந் தெள்ளேணங் கொட்டாமோ" என்று விதந்தோதியது. பெயரில்லாப் பிரமத்தைப் பெயர்களாற் குறிப்பது உண்மையை யுணர்த்துதற்கே யெனத்தெளிக.

மஹாஸ்காந்த புராணம்

ருஃதி ஸாஸாருஜா உஃவா தஉ்ராவயதி யஃவ்ருஹாஃ

ருஃஉ்ர இதஃ்யுஃச்யதெ ஸஹ்ஃ |

ருத்திஸம்ஸாரஜம் துக்கம் தத்ராவயதிய: ப்ரபு:

ருத்ர இத்யுச்யதே ஸத்பி:।

(இ-ள்) "ருத் என்பது சம்சார துக்கம். அதை எந்தப் பிரபு அபகரிப்பான் அவன் ருத்ரனென்று சத்துக்களாலே

சொல்லப்படுவான்." என்றோதியது. இதற்கிணங்கத் தமிழ் கந்தபுராணமும் "இன்னலங் கடலுட்பட்டோர் யாரையுமெடு க்கு மாற்றால், உன்னரும் பரம மூர்த்தி யுருத்திரனெனும்பேர் பெற்றான்" எனச்சாற்றியது. ஆகையினாலே வேதவேதாந்தங் களை முறைப்படி கற்றுணர்ந்து, அவற்றில் கூறப்பட்டுள்ள சத் கருமங்களை விதிப்படி யநுஷ்டித்து, அவற்றால் சித்தந்தூய்மை பெற்று பிரணவநாதோபாசன சித்தியினுதித்த அன்பின் மேலிட் டால் எல்லாவற்றையுங் கைவிட்டுப் பரசிவ ஆராதனையிற்றலைப் பட்டு அவனருளைப்பெற்று மகாசாம்பவ மணியாய்த் திரியும் உத்தமர்க்கே மீட்சியற்ற சோமலோகப்பிராப்தி யுண்டாகுமே யன்றி ஏனையோர்க்கு எட்டுணையும் வாய்க்காது. இதையே பிரஹ்ம மீமாம்சை எனப்படும் உத்தரமீமாம்சையாகிய வேதா ந்த (ப்ரஹ்ம) சூத்திரமானது "அதாதோ ப்ரஹ்மஜிஜ்ஞாஸா-அதா தோப்ரஹ்மஜிஞ்ஞாஸா—பின்னர் ஆகலின் பிரமத்தையறிய ஆசை" என்று உபக்கிரமத்திற்கூறி அப்பிரமத்தை உபாசிப் போர் அடையும்பலன் பிரமலோகமென்று விளக்கிக்காட்டி அதைச் சூரியதேஜோமார்க்கமென்னும் அர்ச்சிராதி மார்க்கத் தால் அடைவதல்லது வேறு எந்த மார்க்கத்தாலும் அடைய முடியாதென்று வற்புறுத்தி,

ப்ரஹ்மலோகமபிஸம்பத்யதே நசபுநராவர்த்ததே நசபுநராவர்த்ததே।

ப்ரஹ்மலோக மபிஸம்பத்யதே நசபுநரா வர்த்ததே
நசபுநரா வர்த்ததே।

(இ-ள்) "பிரமலோகத்தை அடைந்து அவன் மீளத் திரும் புவானல்லன், அவன் மீளத் திரும்புவானல்லன்" என்றோதிய சாமவேத சாந்தோக்யோபநிஷத் வாக்கியத்துக்கிணங்க,

அநாவ்ருத்திஶ்ஶப்தாத் அநாவ்ருத்திஶ்ஶப்தாத்।

அநாவ்ருத்திச்சப்தா தநாவ்ருத்திச் சப்தாத்।

(இ-ள்.) "மீளத்திரும்புதலில்லை மீளத்திரும்புதலில்லை" என்று உபசங்காரத்தில் முடித்தது. இதனால் பிரமசூத்திரஞ் செய்த முனிவேந்தராகிய வியாசரது தாற்பரியமும் பிரணவத் தின் நான்காவதான அர்த்தமாத்திரையில் பிரதிபாதிக்கப்பட்ட சோமலோகமென்னுஞ் சிவபுரமே, பிரம விஷ்ணு ருத்திர முதலா

யினுடைய பதங்களைக்கடந்த நித்திய நிர்மல நிரதிசயானந்தத்துக்கு உறையிடம் என நன்ருக வியக்தமாயிற்று. இந்தச் சோமலோகத்தையே மணிவாசகப்பிரானும் "வானவூர் கொள்வோம் நாம் மாயைப்படைவாராமே","அண்டர்நாடாள்வோம் நாம் அல்லற்படைவாராமே" என்று திருவாய்மலர்ந்தருளினுர்கள். நாயனுரும் "வரனென்னும் வைப்பு" என்று சிறப்பித்தருளினர்.

மேலே கூறிப்போந்த பிரணவ நாதோபாசனம் மீட்சியற்ற சோமலோகப் பிராப்திக்கே ஏதுவாயுள்ளது. ஆனல் அது நிராலம்பயோகிக்குப் பயன்படாது. அவன் ஓங்காரத்தின் மேணிலையாகிய அமனஸ்கமயோக நிஷ்டையின்பொருட்டுப் பிரணவரதத்தை மறந்து அதன் வாச்சியப்பொருளாம் அதிபதியாகிய ஸ்ரீ பரமேசுவரரது சொரூபத்தையே மௌனசமாதியாற் பற்றவேண்டியது அத்தியாவசியகமாம்.

கிருஷ்ணயஜுர்வேத அமிர்தபிந்தூபநிஷத்

𑌸𑍍𑌵𑌰𑍇𑌣 𑌸𑌂𑌧𑌯𑍇𑌦𑍍𑌯𑍋𑌗𑌮𑌸𑍍𑌵𑌰𑌂 𑌭𑌾𑌵𑌯𑍇𑌤𑍍𑌪𑌰𑌮𑍍 ।
𑌅𑌸𑍍𑌵𑌰𑍇𑌣𑌾𑌨𑍁𑌭𑌾𑌵𑍇𑌨 𑌨𑌾𑌭𑌾𑌵𑍋 𑌭𑌾𑌵𑌇𑌷𑍍𑌯𑌤𑍇 ॥

ஸ்வரேணஸந்தயேத் யோகம் அஸ்வரம் பாவயேத்பரம்|
அஸ்வரேணநுபாவேந நபாவோ பாவஇஷ்யதே ||

(இ-ள்.) "யோகத்தைச் ஸ்வரத்தோடு சேர்க்கவேண்டும். பரத்தைச் ஸ்வரமில்லாமல் பாவிக்கவேண்டும். அசுவரமாகிய அநுபவத்தாலே எவ்விதவிஷய வாசனையுமற்று நிற்றலாகிய பாவனமெனப்படும் சிவமயந்தோன்றும்." எனவும்.

𑌶𑌬𑍍𑌦𑌾𑌕𑍍𑌷𑌰𑌂 𑌪𑌰𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌕𑍍𑌷𑍀𑌣𑍇 𑌯𑌦𑌕𑍍𑌷𑌰𑌮𑍍 ।
𑌤𑌦𑍍𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑌕𑍍𑌷𑌰𑌂 𑌧𑍍𑌯𑌾𑌯𑍇𑌦𑍍𑌯𑌦𑍀𑌚𑍍𑌛𑍇𑌚𑍍𑌛𑌾𑌨𑍍𑌤𑌿𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ॥

சப்தாக்ஷரம் பரம்ப்ரஹ்ம தஸ்மிந்க்ஷீணேய தக்ஷரம்|
தத்வித்வாநக்ஷரம் த்யாயேத் யதிச்சேத் சாந்திமாத்மநஃ ||

(இ-ள்.) "சத்தப்பிரமம், பரப்பிரமம் என இரண்டுள்ளது. சத்தப்பிரமம் லயமடைந்தபோது எந்த அக்ஷரம் மிஞ்சும் அந்த அக்ஷரத்தை (சிவத்தை) வித்வான் தியானிக்கவேண்டும். ஆத்மாவின் சாந்தியை இச்சித்தால்" எனவும் நிரூபணஞ் செய்துள்ளது. இதனுல் நாதமயமாய் நிற்கும் பிரணவத்தையும் பரப்பிரமத்தையும் ஒன்ருக நினைத்து தியானிப்பது முதற்படி. பிறகு பிரணவம் லயமடைந்தவுடன் எஞ்சிய வாச்சியமாகிய சிவ

த்வைத சாக்ஷாத்கரித்து நிஷ்டைகூடியிருத்தல் முடிந்தபடி. அப்படி நிற்கும் நிலையே நாதாதீதமான மௌனநிலையாம். அது தத்துவங்கள் முப்பத்தாறிற்குள்ளடங்கும் சமயக்கூட்டங்களனைத்தினும் மேம்பட்டது. "ஆறுறையுநீத் ததன்மே னிலையைப் பேறு வடியேன் பெறுமா றுளதோ" என்றார் ஸ்ரீ அருணகிரிநாதர். "சைவமுதலாவளவில் சமயம் வகுத்து மேற்சமயங் கடந்த மோன சமரசம் வகுத்த நீ" என்றும், "அதுவென் றன்னு மதுவுமறநின்ற, முதியஞானிகள் மோனப்பொருளது" என்றும் "நானெனவு நீயெனவு மிருதன்மை நாடாமல் நடுவேசும்மா, தானமரும் நிலையெனவே சத்தியஞ் சத்தியமெனநீ தமியனேற்கு, மோனகுரு வாகியுங் கைகாட்டினையே" என்றும் ஸ்ரீ தாயுமான சுவாமிகள் விதந்தோதியதும் இதனையே. மோனசமரசம்என்றது சமயாதீதமாகிய சித்தாந்த சைவத்தை. இதற்கு "மோனவாழ்வு" எனவும், "சும்மாவிருத்தலாகிய சுவாநுபூதி" எனவும் பெயருண்டு. "மோனமென்பது ஞானவரம்பு" என்று ஔவையாரும், "சும்மாவிருக்கச் சுகம் சுகம்" என்று ஷை சுவாமிகளும் அறிவுறுத்தியுள்ளார்கள். ஸ்ரீ அருணகிரிநாதரும் "செம்மான் மகளைத் திருடுந் திருடன், பெம்மான் முருகன் பிறவா னிறவான், சும்மா விருசொல் லறவென் றலுமே, அம்மா பொருளொன்று மறிந்திலனே" என்றார். "அம்மா பொருளொன்று மறிந்திலனே" என்பது "எங்கும் சிவசொரூபமே காணப்படுகின்றதே, இது பேரதிசயம்" என்பதாம். திருவாசகம் உயிருண்ணிப்பத்தில், "எனை நானென்பதறியேன் பகலிரவாவது மறியேன், மனவாசகங் கடந்தானெனை மத்தோன் மத்தனுக்கி" என்றும், பிரார்த்தனைப் பத்தில், "பரமானந்தப் பழங்கடல் சேர்ந்தாவியாக்கை யானெனதென் றியாதுமின்றி யறுதலே" என்றும், திருத்தெள்ளேணத்தில், "ஊன்கெட் டுயிர்கெட் டுணர்வுகெட் டென்னுள்ளமும்போய், நான்கெட்ட வாபாடித் தெள்ளேணங்கொட்டாமோ" என்றும் மாணிக்கவாசகசுவாமிகள் திருவாய்மலர்ந்தருளியுள்ளார்கள். இன்னும் அனேக சிவஞானசிகாமணிகளும் இவ்வாறே கூறியுள்ளார்கள்.

மேலோதிபதியென்றது அதர்வசிகை, அதர்வசிரம், மாண்டூக்கியம் முதலிய உபநிஷத்துக்களில் பிரணவன் எனப்புகழ்ந்து பேசப்பட்ட மூர்த்தித்திரயாதீத பரமசிவத்தையே. ஸ்ரீ ருத்ர

ஸம்ஹிதைகளிலும் ரதிஎன்றும், ரதம்என்றும், ரதிபதிஎன்றும், சிவபெருமானுடைய நாமங்களே எடுத்துவழங்கப்பட்டிருக்கின்றன. பிரணவபதியின் ஸ்தானம் அண்டத்திலே சோமலோகமும், பிண்டத்திலே துவாதசாந்தமும் என்பது வேதவேதாந்தங்களின் முடிந்தமுடிபு. மனமும் வாக்கும் எட்டும் வரையில் ஓங்காரரதம் வேண்டும். பிறகு கேவலம் பாவனாதீதமும், சுழுத்திஸ்தான உருத்திரோபாஸ்தியும் வேண்டும். பிறகு அதுவும் நழுவாமல் நழுவிநிற்கும்பொழுது அவனேதானாகவும், தானே அவனாகவும் நிற்கும் அறிவுமயமான அற்புத மௌனநிஷ்டைவந்து பொருந்தும். அதைவிடச்சிறந்த வின்பநிஷ்டை வேறுகிடையா. அருணைக்கோனுரைத்ததும் அதுவே. ஸ்ரீ தாயுமானசுவாமிகள் கொண்டதும்அதுவேயாம். "யான்றானெனலறலே யின்பநிட்டை" எனவும், "நீயற்ற வந்நிலையே நிட்டையதில் நீயிலையோ, வாயற்றவனே மயங்காதே-போயுற், றிருந்தாலும் நீபோகா வென்றுமுளாய் சும்மா, வருந்தாதே வின்பமுண்டுவா" எனவுங்கூறிப்போந்த சுவாநுபூதிமானான அம்மகான் திருவாக்குகள் இன்றும் என்றும் பிரகாசித்துக்கொண்டிருக்கின்றன. இதையே "ஶிவயோம நித்ரா-சிவயோகநித்ரா" என்று ருக்வேதநிர்வாணோபநிஷத் அறிவுறுத்தியது. தூங்காமற்றூங்கிச்சுகம்பெறுவதும் இதுவேயாம்.

மா.—பிரணவத்தின் நான்குமாத்திரைகளின் நிறங்களையும் தேவதைகளையுங்கூறியருள வேண்டும்.

ஆ. அகாரம் என்னும் முதல்மாத்திரை சிவந்தநிறமுள்ளது. மஞ்சள் நிறமுடைய சக்தியையுடையது. பிரமன் அதற்கு அதிதேவதை. உகாரம் என்னும் இரண்டாம் மாத்திரை நீலநிறமுடையது. மின்னல்போன்ற நிறமுடையசக்தியையுடையது. விஷ்ணு அதற்கு அதிதேவதை. மகாரம் என்னும் மூன்றும்மாத்திரை வெண்ணிறமுடையது. நீலநிறமுடைய சுபைஅசுபைஎன்னும் சக்திகளையுடையது. (அதன்றியும் கௌரீ, காளி, துர்க்கை என்னும் மூன்றவஸ்தைகளில் மூன்று நிறங்களையும் பெற்றுள்ளது.) உருத்திரமூர்த்தி அதற்கு அதிதேவதை. இறுதியிலுள்ள அர்த்தமாத்திரை பலநிறங்களையுடையது. மின்னலைப்போன்ற பளபளப்புள்ள நிறமுடையசக்தியையுடையது. புருஷன் அதற்கு அதிதேவதை. இதற்குப்பிரமாணம்.

அதர்வண வேத அதர்வசிகோபநிஷத்

𑌪𑍍𑌰𑌥𑌮𑌾 𑌰𑌕𑍍𑌤𑌾𑌪𑍀𑌤𑌾 𑌮𑌹𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌦𑍈𑌵𑌤𑍍𑌯𑌾 ।
𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌾 𑌵𑌿𑌦𑍍𑌯𑍁𑌮𑌤𑍀 𑌕𑍃𑌷𑍍𑌣𑌾 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌦𑍈𑌵𑌤𑍍𑌯𑌾 ॥
𑌤𑍃𑌤𑍀𑌯𑌾 𑌶𑍁𑌭𑌾𑌶𑍁𑌭𑌾 𑌶𑍁𑌕𑍍𑌲𑌾 𑌰𑍁𑌦𑍍𑌰𑌦𑍈𑌵𑌤𑍍𑌯𑌾 ।
𑌯𑌾𑌵𑌸𑌾𑌨𑍇𑌽𑌸𑍍𑌯 𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑍍𑌯𑌰𑍍𑌧𑌮𑌾𑌤𑍍𑌰𑌾
𑌸𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑍁𑌮𑌤𑍀 𑌸𑌰𑍍𑌵𑌵𑌰𑍍𑌣𑌾 𑌪𑍁𑌰𑍁𑌷𑌦𑍈𑌵𑌤𑍍𑌯𑌾 ॥

*ப்ரதமா ரக்தாபீதா மஹத்ப்ரஹ்ம தைவத்யா।*
*த்விதீயா வித்யுமதீ க்ருஷ்ணா விஷ்ணுதைவத்யா ॥*
*த்ருதீயா சுபாசுபா சுக்லா ருத்ரதைவத்யா।*
*யாவஸாநே஽ஸ்ய சதுர்த்யர்த்த மாத்ரா*
*ஸாவித்யுமதீ ஸர்வவர்ணா புருஷதைவத்யா॥*

(இ-ள்) "முதல்மாத்திரை ரக்தமாயும் மஞ்சளாயும் இருக்கும். மஹானாகிய பிரம்மாவைத் தேவதையாகவுடையது. இரண்டாவது மாத்திரை மின்னல் நிறமாயும் கருமையாயும் இருக்கும். விஷ்ணுவைத்தேவதையாகவுடையது. மூன்றாவது மாத்திரை சுபமும்அசுபமும் வெண்மைநிறமாயுமிருக்கும். உருத்திரமூர்த்தியைத் தேவதையாகவுடையது. இறுதியிலுள்ள அர்த்தமாத்திரை மின்னல்நிறமாயும் சர்வவர்ணங்களை யுடையதாயுமிருக்கும். புருஷனைத்தேவதையாகவுடையது" எனவாம்.

மா. சகல வியாக்கியான கர்த்தாக்களும் ஐயுறக்கிடக்கும் இப்புருஷசப்தம் எக்கடவுளருக்கு முக்கியமாயுரிய தென்பதை விரிவாய்க் கூறியருளவேண்டும்.

ஆ. புருஷசப்தம் சத்துவம், ரஜசு, தமசுஎன்னும் முக்குணங்களைத் தந்தந்தொழிற்கேற்பப்பெற்றுள்ள விஷ்ணு, பிரமா, உருத்திரன் என்னும் மும்மூர்த்திகளுக்கும் மேலாய்நான்காவது தெய்வமாயுள்ள துரீயருத்திரராகிய சிவபரம் பொருளுக்கே ரூடியாகவுரியது. வேறு எத்தேவதைகளுக்கும் எஞ்ஞான்றும் உரியதன்று. ஏனெனில், அந்தச்சிவமாகிய பிரமமொன்றே எல்லாக் கடவுளரையும் தமக்கு அங்கமாகக்கொண்டு விளங்கிநிற்கும் பெற்றியையுடையது. ருக், யஜுர், சாமம் என்னும் மூன்று வேதபடிதமாயுள்ள புருஷசூக்தத்திலும் பிரமலக்ஷணம் சர்வபரிபூரணமென்றே கூறியுள்ளது. புருஷன் என்ற சொல்லுக்குப் பூரணன் என்றேபொருள் கொள்ளவேண்டுமென்று,

வெணூுக்வாக வுஙுஷ ஐதிஹி விஜ்ஞாயதெ |

பூர்ணத்வாத் புருஷஇதிஹி விக்ஞாயதே।

(இ-ள்) "பூரணனுதலால் புருஷனெனச் சொல்லப்படுகின்ருன்" என்று வாதூலமாமுனிவருங் கூறியுள்ளார். ருக்வேதத்திலும் சாமவேதத்திலும் புருஷசூக்தம் பதினெறுமந்திரங்களாகப் படிக்கப்பட்டிருக்கின்றன. ஆனல் யஜுர்வேதத்தில் மாத்திரம் இருபத்துநான்கு மந்திரங்கள் இரண்டு அநுவாகப்பகுப்புக்களுடன் விளங்குகின்றன. அம்மந்திரங்கள் யாவும் சிவபாரம்யமாகவே இருக்கின்றது. அவற்றைப் பின் விரிப்பாம். அம்மந்திரங்களைப் பின்பற்றியே தைத்திரீய முதலிய உபநிஷத்துக்களும் அமைந்துள்ளன.

அதர்வணவேத மஹா நாராயணேபநிஷத்.

தெஶதஃ காலதொவஸுதஃ வரிவெ்ஹுராஹிதம் ஙுஹ
ஸவவரிவூணம் ஙுஹ ||

தேசதஃ காலதோ வஸ்துதஃ பரிசசேதராஹிதம் ப்ரஹ்ம
ஸர்வபரிபூர்ணம் ப்ரஹ்ம॥

(இ-ள்) "தேசம் காலம் வஸ்து என்னும் பாகுபாடு செய்யப்படும் பரிச்சேதங்களில்லாதது பிரமம். ஸர்வபரிபூரணம் பிரமம்." எனவும்,

சுக்லயஜுர்வேத நிராலம்போபநிஷத்.

தெஶகாலவஸு வரிவெ்ஹுராஹித் விநாத்ஸுரூவம் |

தேசகாலவஸ்து பரிச்சேதராஹித்ய சின்மாத்ரஸ்வரூபம்।

(இ-ள்) "தேசகாலவஸ்து பரிச்சேதங்களில்லாமல் ஞானமய சொரூபமாயுள்ளது (பிரமம்)" எனவும் வரும் வாக்கியங்களால் மூவகை அளவையுங்கடந்து நின்ற பரம்பொருள் எதுவோ அதுவே பிரமம் என வெளியாயிற்று. தேசபரிச்சேதமாவது— இவ்விடத்திலுள்ளது அவ்விடத்திலில்லை யென்னும் முடிபு. காலபரிச்சேதமாவது— இக்காலத்திலுள்ளது அக்காலத்திலில்லை யென்னும் முடிபு. வஸ்துபரிச்சேதமாவது — வியாபகவியாப்பிய அத்துவிதங்கூறுமே. இப்பொருள் அப்பொருள் என்னுந் துவிதமுடிவு. (பரிச்சேதம் என்ருல் முடிவு என்றர்த்தம்) "ஸத்யஂ ஜ்ஞாநமநந்தஂ ஙுஹ-ஸத்யம் ஜ்ஞானமநந்தம் ப்ரஹ்ம" என்னும் தைத்திரீயோபநிஷத் ஆனந்தவல்லியின் வாக்கியத்தி

றுள்ள "அநந்தம்" என்னுஞ்சொல்லுக்குப் பரிச்சேதமில்லாதது என்னும் பொருளே சங்கரபாஷ்யத்திலும் விளக்கியுள்ளது. அதர்வசிரோபநிஷத்தும் அனந்தன் என்னுஞ் சொல்லைச் சிவபரமாகவே நிர்ணயஞ்செய்துள்ளது. இத்தகைய கருத்தை மேற்கொண்டே புருஷசப்தத்துக்குரிய பரிபூரணத்வம் சிவபெருமான் ஒருவருக்கேயுரியதென்று அடியிற்குறிக்கும் வேதாந்த வாக்கியங்கள் சகல ஐயங்களும் அற்றொழியும்பொருட்டு எடுத்து முழக்கியுள்ளன.

கிருஷ்ணயஜுர்வேத சுவேதாசுவதரோபநிஷத்

1. 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌪𑌰𑌂 𑌨𑌾𑌪𑌰𑌮𑌸𑍍𑌤𑌿𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌦𑍍
𑌯𑌸𑍍𑌮𑌾𑌨𑍍𑌨𑌾𑌣𑍀𑌯𑍋 𑌨 𑌜𑍍𑌯𑌾𑌯𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 |
𑌵𑍃𑌕𑍍𑌷 𑌇𑌵 𑌸𑍍𑌤𑌬𑍍𑌧𑍋 𑌦𑌿𑌵𑌿 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑍍𑌯𑍇𑌕𑌃
𑌤𑍇𑌨𑍇𑌦𑌂 𑌪𑍂𑌰𑍍𑌣𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑍇𑌣 𑌸𑌰𑍍𑌵𑌮𑍍 ||

யஸ்மாத்பரம் நா பரமஸ்திகிஞ்சித்
யஸ்மாந்நணீயோ நஜ்யாயோஸ்திகச்சித்।
விருக்ஷ இவஸ்தப்தோதிவி திஷ்டத் யேக:
தேநேதம்பூர்ணம் புருஷேணம் ஸர்வம்॥

(இ-ள்) "எவனைப்பார்க்கிலும் மேலானதும் கீழானதும் ஒன்றில்லை. எவனைப்பார்க்கிலும் சிறியதும் பெரியதும் ஒன்றில்லை. எவன் விருக்ஷம்போல அசைவற்றவனாய், ஏகனாய், பரமாகாசத்தில் இருக்கின்றான். அந்தப்புருஷனாலேயே ஈதெல்லாம் (காணப்படும் பிரபஞ்சமெல்லாம்) பூரணமாயது (வியாபிக்கப்பட்டிருக்கின்றது" எனவும்,

2. 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑌨𑌶𑌿𑌰𑍋𑌗𑍍𑌰𑍀𑌵𑌃 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌗𑍁𑌹𑌾𑌶𑌯𑌃 |
𑌸𑌰𑍍𑌵𑌵𑍍𑌯𑌾𑌪𑍀 𑌸 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑌃 𑌶𑌿𑌵𑌃 ||
ஸர்வாநந சிரோக்ரீவஸ் ஸர்வபூத குஹாசய:।
ஸர்வவ்யாபீசபகவாந் தஸ்மாத் ஸர்வகதச்சிவ:॥

(இ-ள்) "எங்கும் முகத்தையுந் தலையையுமுடையவன். எல்லாப்பூதங்களின் உள்ளத்துமுள்ளவன். எல்லாவற்றையும் வியாபித்தவன். பகவானாதலின் எங்கும் நிறைந்தவன் சிவனாம." (சிவன் பகவானாகவே சிவை "பகவதி" என்னும் நாமம்பெற்றனள். வேறு கடவுளர் சக்திகளுக்கோ அவ்விதச் சிறப்புப்பெயர் கிடையாது). எனவும்,

3. ஏகோ தேவஸ்ஸர்வபூதேஷு கூடஃ
ஸர்வவ்யாபீ ஸர்வபூதாந்தராத்மா ।
கர்மாத்யக்ஷஸ்ஸர்வபூதாதிவாஸஃ
ஸாக்ஷீ சேதா கேவலோ நிர்குணஶ்ச ॥

எகோ தேவஸ் ஸர்வ பூதேஷு கூடஃ
ஸர்வ வ்யாபீ ஸர்வபூதாந்தராத்மா ।
கர்மாத்யக்ஷஸ் ஸர்வபூதாதிவாஸஃ
ஸாக்ஷீ சேதா கேவலோ நிர்குணச்ச ॥

(இ-ள்) "ஒரே தேவன் எல்லாப்பூதங்களினு மறைந்துள்ளவன். எல்லாவற்றையும் வியாபித்தவன். எல்லாப்பூதங்களுக்கும் அந்தராத்மாவாயுள்ளவன். கர்மங்களுக்கு அதிபதி. சர்வ பூதங்களுக்கும் வாசஸ்தானம். சாக்ஷி. சுத்தஞான சொரூபன். கேவலன. நிர்க்குணன்." இவ்வாக்கியம் (பிரம்மோப நிஷத்திலுமுள்ளது.)" எனவும்,

சுக்லயஜுர்வேத ஈசாவாஸ்யோபநிஷத்

4. ஈஶாவாஸ்யமிதꣳ ஸர்வம் யத்கிஞ்ச ஜகத்யாம் ஜகத் ।

ஈசாவாஸ்யமிதக் ஸர்வம் யத்கிஞ்ச ஜகத்யாம் ஜகத்।

(இ-ள்) "உலகத்தில் எது எது தோன்றுகிறதோ இந்த ஸமஸ்தமான பிரபஞ்சமெல்லாம் ஈசராலே வியாபிக்கப்பட்டிருக்கின்றது." (இந்த ஈசசபதம் சிவபெருமானுக்கே ரூடியாக வுரியதென்பது வெளிப்படை.) எனவும்,

தைத்திரீயாருணசாகை நாராயணவல்லி

5. ஸர்வோ வை ருத்ரஸ்தஸ்மை ருத்ராய நமோ அஸ்து ।

ஸர்வோவை ருத்ரஸ்தஸ்மை ருத்ராய நமோ அஸ்து ।

(இ-ள்) "எல்லாம் உருத்திரரே அத்தகைய உருத்திர மூர்த்திக்கு நமஸ்காரம் ஆகுக." எனவும்,

விஶ்வம் பூதம் புவனம் சித்ரம் பஹுதா ஜாதம் ஜாயமானம் ச யத் ।
ஸர்வோ ஹ்யேஷ ருத்ரஃ ॥

விச்வம்பூதம் புவனஞ்சித்ரம் பஹுதாஜாதம் ஜாயமானஞ்சயத்।
ஸர்வோஹ்யேஷருத்ரஃ॥

(இ-ள்) "அனேகமாக ஆனவும், ஆகப்போகின்றனவுமாகிய எல்லா வுலகமும், விசித்ர புவனமுமாகிய இவையெல்லாம் உருத்திரரே." எனவும் வருமாறு காண்க.

இன்னும் இதே கருத்தையுடைய சுருதி வாக்கியங்கள் பலவுள. அவற்றை விரிவஞ்சிவிடுந்தாம். காலதேசவஸ்து பரிச்சேதமில்லாமல் என்றும் ஒரே படித்தாயுள்ள பூரணப் பொருள் பரசிவமேயாதலின் அவரது ஸர்வவியாபகத்துவமும் அந்தர்யாமித்துவமும், (1) அவரது நேத்திரங்களை நித்திய கல்யாணி என்று சுருதிகளால் வந்திக்கப்படும் பிராட்டியார் லீலா மாத்திரமாகத் தங்கரங்களைக்கொண்டு புதைத்த காலத்தும், (2) அவர் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியாய் யோகிருந்தகாலத்தும், (3) அவர் மதுரையில் பிட்டுக்கு மண்சுமந்து தந்திருமேனியில் பிரம்படி பட்டகாலத்தும், (4) அவர் கிராத வடிவந்தாங்கி அர்ஜுனனுடைய கைவில்லடியைத் தஞ்சரீரத்திற் கொண்டகாலத்தும், ஸ்பஷ்டமாய் வெளிப்பட்டமையே போதுமான நிதரிசனமாம். அன்றியும், அவர் யக்ஷகோலந் தாங்கிவந்து ஒருசிறு துரும்பை அசைக்கும்படி எதிரில்போட்டு இந்திரன், அக்னி, வாயு முதலிய சகல தேவர்களையும் பரீக்ஷித்து அவர்கள் அசைக்கமுடியாமல் வருந்தும்படிச்செய்து "அவனன்றி யோரணுவு மசையாது" என்னும் உண்மையை நிலைநாட்டியதே அவர் உள்ளும் புறமும் விபுவென்பதைக் காட்டிக் கொண்டிருக்கின்றது. இந்தவகைய அற்புதச்செயல்களால் சிவனாரது திருமேனி ஜீவர்களாயுள்ள சுரர்கள் தேகம் போலாகாது விபுத்வசித்கனமாய் அளவிடப் படாததாயுள்ளதென்பது சுருதிகளின் திறம்பாத் தீர்வையாம். இதுநிற்க, மேற்சொன்ன தைத்திரீயாருணசாகை நாராயணம் அர்த்தமாத்திரையின் பொருளாயுள்ளவர் துரீயசிவம் என்றே ஸ்தாபிக்க.

[Grantha script line]

புருஷோ வைருத்ரஸ்ஸந்மஹோ நமோநம:।

(இ-ள்) "புருஷனன்றோ ருத்திரன், சத்து, மகான், நமஸ்காரம் நமஸ்காரம்" என்று துரீய ருத்ரமூர்த்தியைப் புருஷசப்தத்தால் புகழ்ந்தது. இவ்வாக்கியத்தில் ஏவகாரப்பொருளைக் குறிக்கும் "அன்றோ" என்னுஞ் சொல்வந்தமையால் பிரமன், விஷ்ணு, உருத்திரன் ஆகிய மும்மூர்த்திகளும் இப்புருஷ சப்தப் பொருள் ஆகாரென்றும், இவர்களுக்கு மேலோராயுள்ள சிவபரஞ்சுடரே அச்சொல்லுக்குரியாரென்றும் வலியுறுத்தப்பட்டது. படவே, தன்னிச்சையாலாவது பிறர்சங்கற்பத்தாலா

வரு பிறக்கின்ற அரிபிரமாதி ஏழைக்தேவர்களைப்போல கருக்குழி நாற்றங்கமழப்பெறுது விசுவாதிதராய் மஹரிஷியாய் வந்திக்கப்படும் முழுமுதற் கடவுளெவரோ அவரே சர்வபரிபூரணத்வமுடைய பரம புருஷர். அவரே விஷ்ணுவாதி சுரர்களுக்கு எட்டாத ஆண்மைவாய்ந்த புண்ணியமூர்த்தி. திருமால் திருவாய்மலர்ந்தருளிய திவ்விய மான்மியப்பேறுபெற்ற தேஜோமயர். ஆரணமுடிகளைப்பண்ணி அவற்றின் உண்மையை நன்குணர்ந்த நிர்மல யோகிகளது உள்ளத்து என்றும் பிரியாமல் அகோராத்திரம் பிரகாசித்துக்கொண்டிருக்கும் பரமாத்மா. எச்சமயத்தும் வேறு எப்பொருளையும் மறந்தும் உணர்த்தாத திரிலோசனன், உமாசகாயன், உமாபதி, விரூபாக்ஷன் என்றற்றொடக்கத்தனவாயுள்ள திவ்விய நாமதேய வைரவாணி யறையப்பெற்ற நற்காரணவாக்கியங்களின் உட்பொருளா யமைந்த எம்பெருஞ் செல்வர். உலகெலாமீன்ற உமையம்மை என்னும் பிரமவித்யாநாயகியின் உள்ளக் கமலத்தைக் கவரும் உத்தமோத்தமர். எவரும் எவ்விடத்தும் எக்காலத்துங் கண்டு வழிபடுஞ் சம்பிரதாயம்பெற்ற மகத்துவமுடையவர். எங்கும் நிறைந்த ஏகநாயகர். இத்தகைய சிவபரமாத்மாவே பரத்துவத்துக்குரிய கடவுளாதலின், அவரைப் புருஷரென்று பிரணவம் நிரூபித்தது. ஆகையினாலே பிரணவம் சிவவாசகம் என்பதற்கு யாதொரு சந்தேகமுங் கிடையாது. அதைவிட்டு வேறு கூறுவதெல்லாம் கீழ்நிலைக்கண்ணதாமென்றுணர்க.

அன்றியும வேதங்களில் எவ்விடத்தும் புருஷச்சொல்லை அவிரோத புத்திகொண்டும், மதாபிமானம் விட்டும் ஆராயப்புகின் அது சிவபரமாகவே முடியுமென்பது எத்தகையோராலும் மறுக்கப்படாத பரமசித்தாந்தமாம். அது எவ்வாறெனின், தைத்திரீய ருணசாகை நாராயணவல்லியில் துரீயருத்திரன், குணருத்திரன், விநாயகன், நந்திகேசுவரன், சுப்பிரமணியன், கருடன், பிரமன், நாராயணன், நரசிம்மன், சூரியன், அக்கினி, துர்க்கை ஆகிய இப் பன்னிருவருக்கும் சர்வசித்தியும் தராநின்ற பன்னிரண்டு காயத்திரி மந்திரங்கள் பிரார்த்தனையின் பொருட்டுக் கூறப்பட்டிருக்கின்றன. அவை வருமாறு.

1. 𑌤𑌤𑍍𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌯 𑌵𑌿𑌦𑍍𑌮𑌹𑍇 𑌮𑌹𑌾𑌦𑍇𑌵𑌾𑌯 𑌧𑍀𑌮𑌹𑌿 ।
𑌤𑌨𑍍𑌨𑍋 𑌰𑍁𑌦𑍍𑌰𑌃 𑌪𑍍𑌰𑌚𑍋𑌦𑌯𑌾𑌤𑍍 ॥

புருஷஸ்யவித்ம ஸஹஸ்ராக்ஷஸ்ய மஹாதேவஸ்யதீமஹி ।

தந்நோருச்ர: ப்ரசோதயாத் ॥

(இ-ள்) "புருஷனை அறிவோம். சகஸ்ராட்சனாகிய மஹாதேவனைத் தியானிப்போம். அந்தத்துரீய ருத்திரமூர்த்தி நம்மை நன்றாகப் பிரேரணை செய்வாராக,"

2. 𑌤𑌤𑍍𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌯 𑌵𑌿𑌦𑍍𑌮𑌹𑍇 𑌮𑌹𑌾𑌦𑍇𑌵𑌾𑌯 𑌧𑍀𑌮𑌹𑌿 |

𑌤𑌨𑍍𑌨𑍋 𑌰𑍁𑌦𑍍𑌰𑌃 𑌪𑍍𑌰𑌚𑍋𑌦𑌯𑌾𑌤𑍍 ||

தத்புருஷாய வித்மஹே மஹாதேவாயதீமஹி ।

தந்நோருத்ர: ப்ரசோதயாத் ॥

(இ-ள்) "அந்தப் புருஷனை அறிவோம். மஹாதேவனைத் தியானிப்போம். அந்தக் குணருத்திரமூர்த்தி நம்மை நன்றாகப் பிரேரணை செய்வாராக."

3. 𑌤𑌤𑍍𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌯 𑌵𑌿𑌦𑍍𑌮𑌹𑍇 𑌵𑌕𑍍𑌰𑌤𑍁𑌣𑍍𑌡𑌾𑌯 𑌧𑍀𑌮𑌹𑌿 |

𑌤𑌨𑍍𑌨𑍋 𑌦𑌨𑍍𑌤𑌿𑌃 𑌪𑍍𑌰𑌚𑍋𑌦𑌯𑌾𑌤𑍍 ||

தத்புருஷாய வித்மஹே வக்ரதுண்டாயதீமஹி ।

தந்நோதந்தி: ப்ரசோதயாத் ॥

(இ-ள்) "தத்புருஷ சிவனை அறிவோம். வளைந்த துதிக்கையுடைய விநாயகரைத் தியானிப்போம். அந்த யானைமுகமுடைய விநாயகர் நம்மை நன்றாகப் பிரேரணை செய்வாராக."

4. 𑌤𑌤𑍍𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌯 𑌵𑌿𑌦𑍍𑌮𑌹𑍇 𑌵𑌕𑍍𑌰𑌤𑍁𑌂𑌡𑌾𑌯 𑌧𑍀𑌮𑌹𑌿 |

𑌤𑌨𑍍𑌨𑍋 𑌨𑌂𑌦𑌿𑌃 𑌪𑍍𑌰𑌚𑍋𑌦𑌯𑌾𑌤𑍍 ||

தத்புருஷாய வித்மஹே சக்ரதுண்டாயதீமஹி ।

தந்நோ நந்தி: ப்ரசோதயாத் ॥

(இ-ள்) "தத்புருஷரூபமானவரை அறிவோம். சக்கரம் போன்ற முகத்தையுடைய நந்திகேசுவரரைத் தியானிப்போம். அந் நந்திகேசுவரர் நம்மை நன்றாகப் பிரேரணை செய்வாராக."

5. 𑌤𑌤𑍍𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌯 𑌵𑌿𑌦𑍍𑌮𑌹𑍇 𑌮𑌹𑌾𑌸𑍇𑌨𑌾𑌯 𑌧𑍀𑌮𑌹𑌿 |

𑌤𑌨𑍍𑌨𑌃 𑌷𑌣𑍍𑌮𑍁𑌖𑌃 𑌪𑍍𑌰𑌚𑍋𑌦𑌯𑌾𑌤𑍍 ||

தத்புருஷாய வித்மஹே மஹாஸேநாயதீமஹி ।

தந்ந: ஷண்முக: ப்ரசோதயாத் ॥

(இ-ள்) "அந்தர்யாமியாய்ச் சகலத்திலும் பூரணமாயுள்ளவரை அறிவோம். பெரிய தேவசேனையையுடைய சுப்பிரமணியரைத் தியானிப்போம். அந்த ஷண்முகர் நம்மை நன்றாகப் பிரேரணை செய்வாராக."

6. 𑌤𑌤𑍍𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌯 𑌵𑌿𑌦𑍍𑌮𑌹𑍇 𑌸𑍁𑌵𑌰𑍍𑌣𑌪𑌕𑍍𑌷𑌾𑌯 𑌧𑍀𑌮𑌹𑌿 ।
𑌤𑌨𑍍𑌨𑍋 𑌗𑌰𑍁𑌡𑌃 𑌪𑍍𑌰𑌚𑍋𑌦𑌯𑌾𑌤𑍍 ॥

*தத்புருஷாய வித்மஹே சுவர்ணபக்ஷாய தீமஹி ।*
*தந்நோ கருடஃ ப்ரசோதயாத் ॥*

(இ-ள்) "புருஷரூபமானவரை அறிவோம். அழகிய இரக்கைகளை யுடையவரைத் தியானிப்போம். அந்தக் கருடமூர்த்தி நம்மை நன்றாகப் பிரேரணை செய்வாராக."

7. 𑌵𑍇𑌦𑌾𑌤𑍍𑌮𑌨𑌾𑌯 𑌵𑌿𑌦𑍍𑌮𑌹𑍇 𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌗𑌰𑍍𑌭𑌾𑌯 𑌧𑍀𑌮𑌹𑌿 ।
𑌤𑌨𑍍𑌨𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌪𑍍𑌰𑌚𑍋𑌦𑌯𑌾𑌤𑍍 ॥

*வேதாத்மநாய வித்மஹே ஹிரண்ய கர்ப்பாய தீமஹி ।*
*தந்நோ ப்ரஹ்ம ப்ரசோதயாத் ॥*

8. 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌾𑌯 𑌵𑌿𑌦𑍍𑌮𑌹𑍇 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌾𑌯 𑌧𑍀𑌮𑌹𑌿 ।
𑌤𑌨𑍍𑌨𑍋 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌃 𑌪𑍍𑌰𑌚𑍋𑌦𑌯𑌾𑌤𑍍 ॥

*நாராயணாய வித்மஹே வாசுதேவாய தீமஹி ।*
*தந்நோ விஷ்ணுஃ ப்ரசோதயாத் ॥*

9. 𑌵𑌜𑍍𑌰𑌨𑌖𑌾𑌯 𑌵𑌿𑌦𑍍𑌮𑌹𑍇 𑌤𑍀𑌕𑍍𑌷𑍍𑌣𑌦𑌂𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌯 𑌧𑍀𑌮𑌹𑌿 ।
𑌤𑌨𑍍𑌨𑍋 𑌨𑌾𑌰𑌸𑌿𑌂𑌹𑌃 𑌪𑍍𑌰𑌚𑍋𑌦𑌯𑌾𑌤𑍍 ॥

*வஜ்ரநகாய வித்மஹே தீக்ஷ்ணதம்ஷ்ட்ராய தீமஹி ।*
*தந்நோ நாரசிம்ஹஃ ப்ரசோதயாத் ॥*

10. 𑌭𑌾𑌸𑍍𑌕𑌰𑌾𑌯 𑌵𑌿𑌦𑍍𑌮𑌹𑍇 𑌮𑌹𑌦𑍍𑌯𑍁𑌤𑌿𑌕𑌰𑌾𑌯 𑌧𑍀𑌮𑌹𑌿 ।
𑌤𑌨𑍍𑌨𑍋 𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌃 𑌪𑍍𑌰𑌚𑍋𑌦𑌯𑌾𑌤𑍍 ॥

*பாஸ்கராய வித்மஹே மஹத்யுதிகராய தீமஹி ।*
*தந்நோ ஆதித்யஃ ப்ரசோதயாத் ॥*

11. 𑌵𑍈𑌶𑍍𑌵𑌾𑌨𑌰𑌾𑌯 𑌵𑌿𑌦𑍍𑌮𑌹𑍇 𑌲𑌾𑌲𑍀𑌲𑌾𑌯 𑌧𑍀𑌮𑌹𑌿 ।
𑌤𑌨𑍍𑌨𑍋𑌽𑌗𑍍𑌨𑌿𑌃 𑌪𑍍𑌰𑌚𑍋𑌦𑌯𑌾𑌤𑍍 ॥

*வைச்வாநராய வித்மஹே லாலீலாய தீமஹி ।*
*தந்நோ அக்நிஃ ப்ரசோதயாத் ॥*

12. 𑌕𑌾𑌤𑍍𑌯𑌾𑌯𑌨𑌾𑌯 𑌵𑌿𑌦𑍍𑌮𑌹𑍇 𑌕𑌨𑍍𑌯𑌕𑍁𑌮𑌾𑌰𑌿 𑌧𑍀𑌮𑌹𑌿 ।
𑌤𑌨𑍍𑌨𑍋 𑌦𑍁𑌰𑍍𑌗𑌿𑌃 𑌪𑍍𑌰𑌚𑍋𑌦𑌯𑌾𑌤𑍍 ॥

*காத்யாயநாய வித்மஹே கந்ய குமாரி தீமஹி ।*
*தந்நோ துர்கிஃ ப்ரசோதயாத் ॥*

இப் பன்னிரண்டு காயத்திரி மந்திரங்களுள் முதல் ஆறு மந்திரங்களே ஈண்டு எடுத்துக்கொண்ட புருஷசப்தவிஷயத்தை

நிருபணஞ்செய்ய முக்கிய ஆதாரமாயிருத்தலின் அவற்றின் பொருளையே விளக்கி எனைய மந்திரங்களின் பொருள்விளக்கம் இங்கு அநாவசியமென்று விட்டனம். இந்த ஆறுமந்திரங்களிற் கூறப்பட்ட தேவதைகளுக்கு மாத்திரம் புருஷசப்தம் விநியோகஞ் செய்யப்பட்டிருக்கின்றதே யன்றி மற்றைய தேவதைகளுக்கு அப்பதப் பிரயோகமே கிடையாது. அதனாலே சிவபிரானொருவருக்கே வேதவழக்கு மந்திரவழக்கு மிகுதிபற்றி புருஷச்சொல் ரூடியாக வுரியதென்று பசுமரத் தாணியறைந்தாலன்ன நாட்டப்பட்டது. என்னை! இங்கு குறிக்கப்பட்ட அறுவர்களோடு கருடனும் ஒருங்குசேர்த்துப் படிக்கப்பட்டிருத்தலால் அவனுஞ் சைவனோ வெனில், சைவனாயினுமாகுக. மந்திரகற்பங்களில் அவனுக்கும் முக்கண் முதலிய சிவ சின்னங்கள் கூறி யிருத்தலானும், கருடசயனத்தில் இஷ்டிகைரூபனான கருடனைத் தோத்திரஞ்செய்து அவனுடைய சரீரத்தி லமைக்கப்பட்ட மகாக்கினியில் பரசிவ பிரீதியர்த்தமாய்ப் பூரண ஆகுதிசெய்யவேண்டுமென்று விதி யிருத்தலானும், அவனையுஞ் சிவப்பிரசாத மெய்திய உத்தம புருஷனென்று கூறுவதில் எம்மவருக்கு யாதொரு ஆட்சேபணையுங் கிடையாது. அங்ஙனமாயின், கிருஷ்ண யஜுர்வேத நாராயணோபநிஷத்தில்

வுரூஷொஹவெ நாராயணொ காமயத
ஹூஜாஸ்ருஜெயெதி ।

புருஷோஹவை நாராயணோ காமயத ப்ரஜாஸ் ஸ்ருஜேயேதி ।

(இ-ள்) "புருஷனன்றோ நாராயணன் பிரஜைகளை யுண்டுபண்ணுவேனென்று இச்சித்தான்" என்று வாக்கியமிருத்தலால் புருஷனென்னுஞ் சொல்லுக்கு நாராயணனையும் பொருளாகக் கூறப்படாதோவெனின், கூறப்படாது. அப்பதம் நாராயணன் என்ற சொல்லுக்கு விசேஷணமாய் (அடைமொழியாய்) நின்றதேயன்றி விசேஷ்யமாய் விநியோகிக்கப்பட்டிருக்கவில்லை. அவ்விடத்து விசேஷச்சொல் நாராயணனே. அதனால் புருஷச்சொல் சாமான்ய பதமாகவே முடிந்தது. அப்படியன்று, புருஷன் நாராயணன் என்னும் இரண்டு சொற்களையும் ஒரே பொருளைக் குறிக்குஞ் சொற்களாகக்கொண்டால் குற்றம் யாதெனின், அப்போது அவை கலயம் குடம் என்பதாதி சொற்களைப்போல உத்

தேசியம், விதேயம் ஆகிய விரண்டும் ஒன்றுபட்டு வாக்கியமே பொருளற்றதாய் முடிந்துவிடும். அப்படியானால் “𑌸𑍈𑌷 𑌵𑍈 𑌰𑍁𑌦𑍍𑌰𑌃—புருஷனன்றோ ருத்திரன்” என்ற வேதவழக்கி லுங்கூட புருஷச்சொல்லை விசேஷணமாகக்கொள்ளுதல் மரபா மேயெனின், அது பொருந்தாது. தைத்திரீயாருணசாகை நாராயணத்தில், “எல்லாமன்றோ ருத்திரன். அந்த ருத்திரமூர்த் திக்கு நமஸ்காரம் ஆகுக” என்று கூறி, அடுத்த வாக்கியத்தில் “புருஷனன்றோ ருத்திரன் சத்து, மகான், நமஸ்காரம், நமஸ்காரம்” என்று ஸ்பஷ்டமாய் நிரூபணஞ் செய்திருக்கின்றமையால் ஸ்ரீ ருத்திரமூர்த்தி யொருவர்க்கே புருஷசசொல் வயிரப்பூச்சா யிற்று. இவ்வாறு சுருதிவந்திதமாயுள்ள உயர்வொப்பற்ற உண்மையை யாதொரு சுருதிப்பிரமாணமுங் காட்டாது புராண வாக்கியங்களைக்கொண்டு சமயாபிமானத்தால் மறைக்கத்துணி தல் ஆதித்தியனை அங்கையால் மறைக்கத்துணிந்தமை போலாம்.

அன்றியும் அடியில் காட்டும் வேறு வைதிகப் பிரயோகங்க ளையும் நடுநிலை குன்றாது ஆராய்ந்து பார்க்கின் உலகெலாங் கடந்த உண்மைப் பொருளாயும் சர்வலோக சரண்யனாயும் விளங்கும் பசுபதியே புருஷசப்த வாச்சியரென்று ஸ்திரமா யேற்படும். அங்கங்களாறுடன் ஆரணங்களைக் கசடறக்கற்றுணர்ந்த மேதாவியர்களுங்கூட அவ்வாறே அபிப்பிராயப்பட்டுள்ளார்கள். அவ் வைதிக பிரபல வாக்கியங்களுட் சிலவற்றை விவேகிகள் மதுகையுறுமாறு ஈண்டு எடுத்துக் காட்டுகின்றோம்.

கிருஷ்ண யஜுர்வேத சுவேதா சுவதரோபநிஷத்.

1. 𑌮𑌹𑌾𑌨𑍍𑌪𑍍𑌰𑌭𑍁𑌰𑍍𑌵𑍈 𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌸𑌤𑍍𑌵𑌸𑍍𑌯𑍈𑌷 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌕𑌃 ।
𑌸𑍁𑌨𑌿𑌰𑍍𑌮𑌲𑌾𑌮𑌿𑌮𑌾𑌂 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌮𑍀𑌶𑌾𑌨𑍋 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌰𑌵𑍍𑌯𑌯𑌃 ॥

மஹான்ப்ரபுர்வை புருஷஸ்ஸத்வஸ்யைஷ ப்ரவர்த்தக: ।
ஸுநிர்மலாமிமாம் சாந்திமீசானோ ஜயோதிரவ்யய: ॥

(இ-ள்) “மகானும் பிரபுவாயுமுள்ள புருஷனே இவனே ஸத்துவகுணப் பிரவர்த்தகன். இந்த அவ்யயனும் (திரிகாலங்களாலும் அளவிடப்படாதவன்), சோதிருபனுமான ஈசானன் முற்றும நிர்மலமான சாந்தியை அளிப்பானாக.” (இவ்வாக்கியத்தி லுள்ள மகான், புருஷன், ஈசானன என்னுஞ் சொற்கள் சிவபரமாக விளங்கும் பேராற்றலுடையனவாம்.)

2. வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம்
ஆதித்யவர்ணம் தமஸ꞉ பரஸ்தாத் |
தமேவம் விதித்வாதி ம்ருத்யுமேதி
நாந்ய꞉ பந்தா வித்யதேயநாய ||

*வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம் ஆதித்யவர்ணம் தமஸ꞉ பரஸ்தாத் ।*
*தமேவம் விதித்வாதி ம்ருத்யுமேதி நாந்ய꞉ பந்தா வித்யதேயநாய ॥*

(இ-ள்) "இந்தப் புருஷனை, மகானை, இருளுக்கு (பிரகிருதிக்கு) அப்பால் ஆதித்தியனைப்போன்ற நிறமுடையவனை யான் (வேதபுருஷன்) அறிவேன். அவனை இவ்வாறறிந்தவர் மிருத்யுவைத் தாண்டுவர். வேறுவழி மோட்சத்துக்கில்லை." (இம் மந்திரம் புருஷசூக்தத்திலு முண்டு.) வேதபுருஷனே குருவாய் நின்று தனது சுவாநுபவத்தை இவ்வாறு வெளியிட்டானாயின் இதைவிட வேறு சிறந்த உபதேசம் யாதுளது.

3. ஸவேத்தி வேத்யம் ந ச தஸ்யாஸ்தி வேத்தா
தமாஹுரக்ர்யம் புருஷம் மஹாந்தம் |

*ஸவேத்திவேத்யம் நசதஸ்யாஸ்திவேத்த*
*தமாஹுரக்ர்யம் புருஷந்தம் மஹாந்தம் ।*

(இ-ள்) "அவன் அறியவேண்டிய வெல்லாவற்றையும் அறிவான். அவனை யறிபவன் எவனுமில்லை. அவனையே முதன்மையான புருஷன், மஹான்" என்பர். (புருஷன், மஹான் என்னுந் தனிச் சொற்கள் எஞ்ஞான்றும் சிவபரவாற்றலையே குறிக்குமென்பது ஒருதலை.)

கிருஷ்ண யஜுர்வேத கைவல்யோபநிஷத்.

4. யயாஶிராத் ஸர்வபாபம் வ்யபோஹ்ய
பராத்பரம் புருஷமுபைதி வித்வாந் |

*யயாசிராத் ஸர்வபாபம் வ்யபோஹ்ய*
*பராத்பரம் புருஷ முபைதிவித்வாந் ।*

(இ-ள்) "எந்தப் பிரமவித்தை வாயிலாக் அறிஞன் விரைவிலே சர்வபாபங்களையு மொழித்து நாராயணருக்குப் பரமான புருஷராகிய சிவபெருமானை யடைவன்."

5. புராதநோஹம் புருஷோஹமீஶோ
ஹிரண்மயோஹம் ஶிவரூபமஸ்மி |

*புராதநோஹம் புருஷோஹமீசோ*
*ஹிரண்மயோஹம் சிவரூபமஸ்மி ।*

(இ-ள்) "பழையோனும் நானே. புருஷனும் ஈசனும் நானே. பொன்னார்மேனியனும் நானே. சிவரூபனும் நானே."

அதர்வணவேத முண்டகோபநிஷத்.

6. [illegible]
[illegible]
[illegible]

யதாபச்ய: பச்யதே ருக்மவர்ணம் கர்த்தாரமீசம்
புருஷம் ப்ரஹ்மயோநிம் । ததாவித்வாந் புண்யபாபே
விதூய நிரஞ்சந: பரமம் ஸாம்ய முபைதி ॥

(இ-ள்) "எப்பொழுது பார்ப்பவன் பொன்வண்ணத்தினருர், கர்த்தரும், ஈசரும், புருஷரும், பிரமாவுக்குக் காரணரூபருமாயுள்ளவரைப் பார்க்கின்றானோ அப்பொழுது அவன் ஜீவன் முக்தனாய்ப் புண்ணியபாபத்தை யொழித்துக் களங்கமற்றவனாய்ச் சிவசாமியத்தை அடைகின்றான்." (சாமியம்=சமம்.)

7. [illegible]
[illegible]
[illegible]

யதா நத்யஸ்யந்த மாநாஸ்ஸமுத்ரேऽஸ்தம் கச்சந்தி
நாமரூபேவிஹாய । ததாவித்வாந் நாமரூபாத் விமுக்த:
பராத்பரம் புருஷ முபைதி திவ்யம் ॥

(இ-ள்) "எவ்வாறு ஓடுகின்ற நதிகள் சமுத்திரத்தில் பாய்ந்து பெயரும் வடிவும் ஒழிந்து மறைகின்றனவோ, அவ்வாறே ஜீவன் முக்தனும் நாமரூபத்தினின்றும் விடுபட்டுப் பரத்துக்குப் பரமாயிருக்குந் திவ்விய புருஷனை அடைகின்றான்."

8. [illegible]
[illegible]

ஸூர்யத்வாரேணதே விரஜா: ப்ரயாந்தி
யத்ராऽம்ருதஸ்ஸ புருஷோஹ்யவ்யயாத்மா ।

(இ-ள்) "பாபஹீனர்கள் சூரிய தேஜோமார்க்கத்தால் அமிர்தனும், அவ்யயனுமான புருஷன் இருக்குமிடத்தை அடைவார்கள்." (அமிர்தனென்னும் பெயர் சிவபெருமானுக்கே ரூடியாக வுரித்தென்பது யஜுர்வேத ஜாபாலோபநிஷத்தில் "சதருத்ரீயத்தில் அடங்கிய பெயர்கள் அமிர்தனுடைய நாமதேயங்கள்" என்று யாஜ்ஞவல்கியர் விடையிறுத்ததே போதுமான சான்றாம்)

9. 𑌯𑍇𑌨𑌾𑌕𑍍𑌷𑌰𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌵𑍇𑌦𑌸𑌤𑍍𑌯𑌂
𑌦𑌿𑌵𑍍𑌯𑍋 𑌹𑍍𑌯𑌮𑍂𑌰𑍍𑌤𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 ।

ஏனாக்ஷரம் புருஷம் வேதஸத்யம் திவ்யோஹ்யமூர்த்த: புருஷ: ।

(இ-ள்) "எதனால் இந்தச் சத்தியாக்ஷர புருஷனை அறிவான். அவன் பரமாகாசத்துள்ளவன். மூர்த்தமில்லாதவன். புருஷன்."

பிருஹதாரண்ணியகோபநிஷத்-காண்வசாகை.

10. 𑌸 𑌏𑌤𑌸𑍍𑌮𑌾𑌜𑍍𑌜𑍀𑌵𑌘𑌨𑌾𑌤𑍍𑌪𑌰𑌾𑌤𑍍𑌪𑌰𑌂 𑌪𑍁𑌰𑌿𑌶𑌯𑌂
𑌪𑍁𑌰𑍁𑌷𑌮𑍀𑌕𑍍𑌷𑌤𑍇 ।

ஏதஸ்மாஜ் ஜீவகநாத்பராத்பரம் புரிசயம் புருஷமீக்ஷதே ।

(இ-ள்) "இந்த ஜீவசமஷ்டிரூபனை ஹிரண்யகர்ப்பர் என்னும் பிரமாவினும் பரராயும், உத்கிருஷ்டராயுள்ள நாராயணரினும் உத்கிருஷ்டராயும் தேகமாம்புரியின்கண்ணே அந்தர்யாமியாய்ச் சயனித்துக்கொண்டிருக்கும் புருஷராகிய சிவபெருமானைக் காண்கின்றான்." (இம்மந்திரம் பிரசிநோபநிஷத்திலும் உள்ளது.)

11. 𑌯𑍋𑌽𑌯𑌂 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌯𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑍇𑌷𑍁
𑌹𑍃𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑍍𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 ।

யோऽயம் விஞ்ஞானமய: ப்ராணேஷு ஹ்ருத்யந்தர்ஜ்யோதி: புருஷ: ।

(இ-ள்) "இவன் விஞ்ஞானமயனைப் பிராணன்களுள்ளே இருதயத்து அந்தர்ஜோதியாயுள்ள புருஷன்."

கிருஷ்ண யஜுர்வேத கடோபநிஷத்

12. 𑌅𑌙𑍍𑌗𑍁𑌷𑍍𑌠𑌮𑌾𑌤𑍍𑌰𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋 𑌮𑌧𑍍𑌯 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿 ।
𑌈𑌶𑌾𑌨𑍋 𑌭𑍂𑌤𑌭𑌵𑍍𑌯𑌸𑍍𑌯 𑌨 𑌤𑌤𑍋 𑌵𑌿𑌜𑍁𑌗𑍁𑌪𑍍𑌸𑌤𑍇 ॥

அங்குஷ்டமாத்ர: புருஷோமத்ய ஆத்மநிதிஷ்டதி ।
ஈசானோ பூதபவ்யஸ்ய நததோ விஜுகுப்ஸதே ॥

(இ-ள்) "அங்குஷ்ட அளவினராகிய புருஷர் இருதயநடுவில் வீற்றிருப்பர். இவர் இறந்தகால எதிர்காலங்களுக்கும் ஈசானராதலின் எவர்க்கும் அஞ்சுவாரல்லர்."

13. 𑌯 𑌏𑌷 𑌸𑍁𑌪𑍍𑌤𑍇𑌷𑍁 𑌜𑌾𑌗𑌰𑍍𑌤𑌿 𑌕𑌾𑌮𑌂 𑌕𑌾𑌮𑌂
𑌪𑍁𑌰𑍁𑌷𑍋 𑌨𑌿𑌰𑍍𑌮𑌿𑌮𑌾𑌣𑌃 ।

யஏஷஸுப்தேஷு ஜாகர்திகாமம் காமம் புருஷோ நிர்மிமாண: ।

(இ-ள்) "நித்திரைசெய்பவரில் விழித்துக்கொண்டிருக்கும் அந்தப் புருஷர் அவரவர் கர்மத்துக்கீடாக ஒன்றன்பின்னொன்றாக விநோதக்காட்சிகளை யுண்டுபண்ணுகின்றார்."

### அதர்வணவேத பிரச்னோபநிஷத்.

14. [illegible]
[illegible]
யஃபுநரேதம் த்ரிமாத்ரேணோமித்யே தேநைவாக்ஷரேண
பரம் புருஷ மபித்யாயீத ।

(இ-ள்) "எவன் இந்தப் பரமபுருஷரை மும்மாத்திரைகளை யுடைய "ஓம்" என்னும் பிரணவவாயிலாகத் தியானஞ்செய்வான்."

### ருக்வேத புருஷஸூக்தம்.

15. [illegible]
[illegible]
புருஷஏவேதம் ஸர்வம் யத்பூதம் யச்சபவ்யம் ।
உதாம்ருதத்வஸ்யே சாநஃ யதந்நே நாதிரோஹதி ॥

(இ-ள்) "எது சென்றது, எது வருவது, ஈதெல்லாம் புருஷனே. அந்த ஈசானனே அமிருதத்தன்மை என்ற மோக்ஷத்துக்குப் பிரபு. இவன் அன்னத்தால் (போக்கிய வஸ்துக்களால்) மறைக்கப்படுவான்." (இம் மந்திரம் சுவேதாசுவதரோபநிஷத்திலுமுள்ளது.) ஈசானன் என்னும் பெயர் ஜகத்காரண பிரமத்தின் பெயராய் வழங்கும் சிவநாமம். புருஷஸூக்தம் சிவபெருமானையே பிரதிபாதிக்கின்றதென்பது போறிவாளர்தீர்வை. இதனைப் பின்னர் தெளிவாக விளக்கிக்காட்டுவோம்.

16. [illegible]
தஸ்மாத்விராடஜாயத விராஜோ அதிபூருஷஃ ।

(இ-ள்) "அவரினின்று விராட்டு பிறந்தான். விராட்டுக்கு மேல் புருஷன்."

### சுக்லயஜுர்வேத மண்டல பிராம்மணோபநிஷத்.

17. [illegible]
[illegible]
[illegible]

ஶிதிகெஷிக | ஃமஹாஷ்டூரா துஃ வாராஷொா ஒதஶுக்ஷ்ய மிதெ்யகெ ||

புத்திகுஹாயாம் ஸர்வாங்க ஸுந்தரம் புருஷரூப மந்தர் லக்ஷ்ய மித்ய பரே। சீர்ஷாந்தர்கதமண்டல மத்யகம் பஞ்சவக்த்ர முமாஸஹாயம் நீல கண்டம் ப்ரசாந்த மந்தர்லக்ஷ்ய மிதிகேசித்। அங்குஷ்டமாத்ரஃ புருஷோந் தர்லக்ஷ்ய மித்யேகே ॥

(இ-ள்) "புத்திகுகையின் கண்ணே சர்வாங்க சுந்தரமுள்ள புருஷர் அந்தர்லட்சியமென அபரரும், சிரசின் உள்ளிடத்து மண்டலமத்தியில் பஞ்சமுகமும், நீலகண்டமும், மிக்க சாந்தத் தன்மையுமுடைய உமாசகாயர் அந்தர்லட்சியமெனச் சிலரும், அங்குஷ்ட அளவினராயபுருஷர் அந்தர்லட்சியமென ஒரு சிலரும் உரைக்கின்றனர்." (இம்மந்திரத்தில் பஞ்சமுகம் உமாசகாயம், நீலகண்டம் முதலிய அடையாளங்கள் வெளிப்படையாகக் கூறப்பட்டிருத்தலால் பிரணவத்தின் நான்காம் மாத்திரையின் தேவதை சிவபெருமானல்லவென்று மறுக்க யாராலும் முடியாது.) பிரசாந்தம்—அன்பரெவரிடத்து எக்குற்றமிருப்பினும் அவற்றைப் பொறுத்தருளும் பெருந்தன்மை. "வெறுப்பனவே செய்யினுமென் சிறுமையை நின்பெருமையினால், பொறுப்பவனே" என்றார் நம் ஆளுடைய வடிகள்.

தைத்திரீயாருண சாகை நாராயணம்.

18. ஃதஂஸதூ்ய வரஂ஬்ரஹ்ம வுருஷஂ க்ருஷ்ணவிஂகலூ |
ஊஜ்ரேதஂ விரூவாக்ஷஂ விஶ்வரூவாயவை நமோ நமஃ ||

ருதம்ஸத்யம் பரம்ப்ரஹ்ம புருஷம் க்ருஷ்ணபிங்களம்।
ஊர்த்வரேதம் விரூபாக்ஷம் விச்வரூபாயவை நமோநமஃ ॥

(இ-ள்) "வாக்கினும் மனத்தினும் பேதமின்மையால் ருதமும் சத்தியமும், எல்லாவற்றையுங் கடந்திருத்தலால் பரப்பிரமமும், தகரபுண்டரிகமாகிய புரியின் கண்ணே சயனித்திருத்தலாற் புருஷரும், பிரணவத்தின் வர்ணவ்யத்யயத்தினலெய்திய (அதாவது அகார உகார மகாரம் (அ, உ, ம) என நிற்பது எழுத்துக்கள் மாறுதலால் உமா வெனவாயிற்று.) உமையாம் பராசத்தியோடியைந்திருத்தலாற் கிருஷ்ணபிங்களரும், அக்கினியை வீரியமாக உடைமையால் ஊர்த்துவ வீரியரும், முக்கணுடைமையால் விரூபாக்ஷரும், அஷ்டமூர்த்தியா யிருத்தலால் விசுவரூபருமாயுள்ளாருக்கு நமஸ்காரம்." (கிருஷ்ணபிங்களர் - அர்த்தநா

ரீசுவரர்.) விசுவரூபம் சிவபெருமானுக்கே சொந்தமென்பது யஜுர்வேத ருத்ரநமகத்தால் எளிதிலுணரக் கிடக்கின்றது.

19. 𑌏𑌷 𑌪𑍁𑌰𑍁𑌷 𑌏𑌷 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌮𑌧𑌿𑌪𑌤𑌿𑌃 ।

ஏஷபுருஷ ஏஷ பூதாநாமதிபதி: ।

(இ-ள்) "இவர் புருஷர். இவர் பூதங்களுக்கு அதிபதி." (பூதங்கள்—சர்வசேதனசேதனப் பிரபஞ்சங்கள்.)

20. 𑌅𑌙𑍍𑌗𑍁𑌷𑍍𑌠𑌮𑌾𑌤𑍍𑌰𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌽𑌙𑍍𑌗𑍁𑌷𑍍𑌠𑌂 𑌚 𑌸𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌃 ।
𑌈𑌶𑌃 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌜𑌗𑌤𑌃 𑌪𑍍𑌰𑌭𑍁𑌃 𑌪𑍍𑌰𑍀𑌣𑌾𑌤𑌿 𑌵𑌿𑌶𑍍𑌵𑌭𑍁𑌕𑍍 ॥

அங்குஷ்டமாத்ர: புருஷோங்குஷ்டஞ்ச ஸமாச்ரித: ।
ஈசஸ்ஸர்வஸ்ய ஜகத: ப்ரபு: ப்ரீணாதி விச்வபுக் ॥

(இ-ள்) "அங்குஷ்ட அளவினராகிய புருஷர் அங்குஷ்டத்தினையும் ஆச்ரயித்திருக்கின்றார். ஈசரும், சர்வஜகத்துக்கும் பிரபுவும், பிரபஞ்சத்தைக் கவளீகரிப்பவருமாயுள்ள இவர் விருப்பமுறுகின்றனர்." இம்மந்திரத்தில் அங்குஷ்டமென்பது ஜீவாத்மாவாகும். "ஹிருதயம்" எனப்படும் ஸ்தானம் தலைமேல்வைத்த பெருவிரலளவுள்ளதாகையால் அவ்விதய சிதம்பரத்தின் வடிவம் அவ்வளவேயாகும். ஆதாரத்துக்கேற்றபடி அளவு குறிக்கப்பட்டிருக்கின்றது. அவ்வளவில் மூர்த்தங்கொண் டெழுந்தருளி இருப்பவர் சிவபெருமானே யாதலின் அவரை அங்குஷ்ட அளவினையுடைய புருஷரென்று சுருதிபுகழ்ந்தது. சோதிமய சுயம்பு லிங்கமும் அதுவே. ஆகையினாலன்றோ, அதே நாராயணம் "சிவாயநம: சிவலிங்காயநம:" என்று துதித்ததோடு திருப்தியடையாமல் "ஆத்மாயநம: ஆத்மலிங்காயநம:" எனவும் பரவி உபசாந்தமடைந்தது. ஆத்மாக்கள் உஜ்ஜீவிக்கும்பொருட்டுப் பகிர்முகசிவாலயங்களிலும் அந்தச் சோதி லிங்காகாரங்களே பிரதிஷ்டிக்கப்பட்டிருக்கின்றன. இதன் விரிவை வந்துழிவந்துழிகாண்க. இத்தகைய வுண்மையினை யுணராப் பேதைமாக்கள் பழிபாவத்துக்குச் சிறிது மஞ்சாமல் வெவ்வேறுவகையாகப் பிதற்றித் திரிந்து எரிவாய் நரகத்துக் காளாகின்றனர். அந்தோ! வினைகொடிது! கொடிது!! "ஊழிற் பெருவலியாவுள மற்றொன்று சூழினுந் தான் முந்துறும்" என்றார் செந்நாப்புலவர்.

21. [illegible] ।
[illegible] ।

யஏஷோந்தர்ஹ்ருதய தஸ்மிந்நயம் புருஷோ மநோமய: ।
அம்ருதோ ஹிரண்மய: ।

(இ-ள்) "இந்த இருதயத்திற்குள்ளே எந்த ஆகாசம் இருக்கின்றதோ அதனிடத்து ஞானத்தாலறியக்கூடிய புருஷனும், பொன் வண்ணனுமான அமிர்தனுளன்." (பொன்வண்ணன் - சிவபெருமான்.) சாமவேத சாந்தோக்யோபநிஷத்.

22. யஏஷோந்தராதித்யே ஹிரண்மய: புருஷோ த்ருச்யதே ஹிரண்யச்மச்ருர்ஹிரண்யகேச ஆப்ரணகாத்ஸர்வ ஏவ ஸுவர்ணஸ்தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகமேவ மக்ஷிணீ ॥

யஏஷோந்தராதித்யே ஹிரண்மய: புருஷோ த்ருச்யதே ஹிரண்யச்மச்ருர்ஹிரண்யகேச ஆப்ரணகாத்ஸர்வ ஏவ ஸுவர்ணஸ்தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகமேவ மக்ஷிணீ ॥

(இ-ள்) "பொற்றாடியும், பொற்கேசமும், நக முதலாக முழுதும் பொன்வண்ணமும், (கம் என்னும் நீரைக் கிரகிக்குந் தன்மையால் கபி எனப்படும்) சூரியனால் அலர்த்தப்பட்ட புண்டரீகம்போலும் இருவிழிகளு முடையவர், இச் சூரியனுக்கு அந்தர்யாமியாயுள்ள ஹிரண்மய புருஷர்." இங்கு கூறிப்போந்த ஹிரண்மயம் (பொன்னிறம்) சிவபெருமானுக்கே யுரியதென்று பற்பல சுருதிவாக்கியங்கள் எழுந்து முழங்கி யிருக்கவும், கடல் வண்ணராகிய திருமாலுக்கு அதை யேற்ற முயல்வது அறியாமையாம். ஹிரண்யசப்தம் "ரமணீயத்வபர: - ரமணீயத்வபர: — விரும்பற்பாலதின்மேற்று" என்று சுருதிப்பிரகாசிகை யுடையாராகிய வைஷ்ணவர் பொருந்தாப் பொருள்கொண்டது கேவலம் அசப்பியம். கௌணார்த்தமாகக்கொண்டால் அவர்கருத்து ஒருவாறு பொருந்தும். ஆழ்வாராதிகளும் விஷ்ணுவினுடைய திருமேனி கடல்வண்ணம், முகில்வண்ணம், காயாம்பூவண்ணம், கருவண்ணம் எனப் புகழ்ந்துள்ளார்கள். சூடிக்கொடுத்த நாச்சியாரும் "பொருத்தமுடைய நம்பியைப் புறம்போலுள்ளுங் கரியானை" என்று வாழ்த்தி மகிழ்ந்தனர். பூதநாதனாகிய சிவபெருமான் பொன்வண்ணரா யிருத்தல்பற்றியே தைத்திரீயாருணசாகை நாராயணம்.

𑌨𑌮𑍋 𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌬𑌾𑌹𑌵𑍇 𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌵𑌰𑍍𑌣𑌾𑌯 𑌹𑌿𑌰𑌣𑍍𑌯
𑌰𑍂𑌪𑌾𑌯 𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌪𑌤𑌯𑍇𑌽𑌮𑍍𑌬𑌿𑌕𑌾𑌪𑌤𑌯 𑌉𑌮𑌾𑌪𑌤𑌯 𑌪𑌶𑍁
𑌪𑌤𑌯𑍇 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 ॥

நமோஹிரண்ய பாஹவே ஹிரண்யவர்ணாய ஹிரண்யரூபாய ஹிரண்ய பதயேம்பிகாபதய உமாபதயே பசுபதய நமோநம: ॥

(இ-ள்) "பொற்றோளருக்கு, பொன்வண்ணருக்கு, பொன் மேனியருக்கு, பொன்னுக்கிறைவருக்கு, அம்பிகாபதிக்கு, உமாபதிக்கு, பசுபதிக்கு நமஸ்காரம், நமஸ்காரம்" என்று வந்தித்தது. அச் சுருதியின்படியே ஆழ்வாரும் "பொன்றிகழும் மேனிப் புரிசடையம் புண்ணியனும்" என்று துதித்துள்ளார் ஆரிய வேதம் மொழிந்தபடியே தமிழ்வேதமும் "பொன்னார் தருமேனியனே புரியும், மின்னேர்சடையாய்" எனவும், "பசும் பொன்னி னிறத்தானைப் பானீற்றானை" எனவும், பொன்னார்மேனியனே புலித்தோலை யரைக்கசைத்து" எனவும், மின்னொளி கொண்ட பொன்னொளிதிகழ" எனவுங் கூறிப் போந்தன. பொன்னிறம் எப்பொழுதும் சிவபெருமானுடைய சோதி சொரூபத்தினையே விளக்கா நிற்கும். அல்லாமலும் மேலே காட்டிய சாந்தோக்கிய வாக்கியத்தில் இரு புண்டரீகம்போலும் கண்களையுடையவர் என்று மொழிந்திருத்தலால் சிவபெருமானுடைய திரிநேத்திரங்களுள் மூன்றாவது நேத்திரம் முகுளித சுபாவமுடையதாதலின் மலர்ந்த நேத்திரங்களிரண்டே ஆண்டு எடுக்கப்பட்டன. அதனால் அவ்வாக்கியம் சிவபெருமானைக் குறிக்கவில்லையென்று ஆக்ஷேபிக்கிறது கூடாது. மூன்று புதல்வர்களையுடைய பிராமணோத்தமரொருவரைப் பார்த்து அவருடைய இரண்டு புதல்வர்கள் சிவஞானச் செல்வர்களென்றால் மூன்றாவது புதல்வர் அவருக்கில்லையென்று அவ்வாக்கியங் கூறியதாகக் கொள்ளுதல் நீதியாமோ. அதுபோல இதுவுமாம். ஆயின் சூரியனுக்குள் ளிருப்பவர் சூரியநாராயணரெனவும் அவரைப் பற்றிச் சந்தியாவந்தன காலங்களில்

𑌧𑍍𑌯𑍇𑌯𑌸𑍍𑌸𑌦𑌾 𑌸𑌵𑌿𑌤𑍃𑌮𑌣𑍍𑌡𑌲𑌮𑌧𑍍𑌯𑌵𑌰𑍍𑌤𑍀
𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌸𑍍𑌸𑌰𑌸𑌿𑌜𑌾𑌸𑌨𑌸𑌨𑍍𑌨𑌿𑌵𑌿𑌷𑍍𑌟𑌃 |

த்யேயஸ்ஸதா ஸவித்ரு மண்டலமத்யவர்த்தி
நாராயணஸ்ஸரஸிஜாஸந ஸந்நிவிஷ்ட: |

(இ-ள்) "சூரியமண்டல மத்தியினராகிய நாராயணர் கமலாசனத்தி லிருப்பவராக எந்நாளும் தியானிக்கற்பாலர்." என உலகினர் எப்பொழுதும் படிக்கின்றனரே என்று கூறின், அது சுருதிவசனமல்ல வென்பதுதான் உத்தரம். சுருதிவசனத்துக்கு விரோதமாக ஸ்மிருதிகூறுமாயின் அவ் வாக்கியம் பிரபலப் பிரமாணமாக அங்கீகரிக்கப்படுவதின்று. இரண்டு லிங்கங்கள் ஒருங்கு கூறப்படின் விசேஷ லிங்கத்தால் சாமான்யலிங்கம் பாதிக்கப்படுமன்றோ. ஆதலால் லௌகிக வசனத்தைக் கௌணமாகவும், துதிபரமாகவுங் கொள்ளுதலே நியதம். இந்த முறைமைப்படி ஒன்றுக்கொன்று விரோதம்போலப் பொருள் போதிக்கும் சுருதிஸ்மிருதி வசனங்களை விரோத முறுவண்ணம கூர்த்தமதி கொண்டு ஆராய்ந்தறிதல் இன்றியமையாத கடனாம்.

கிருஷ்ண யஜுர்வேத தைத்திரீய சம்ஹிதை.

அஸௌயோऽவஸர்பதி நீலக்ரீவோ விலோஹித: ।

அஸௌயோऽவஸர்பதி நீலக்ரீவோ விலோஹித: ।

(இ-ள்) "(சூரியமண்டலத்துள்ளிருந்து உதயாஸ்தமனஞ் செய்விக்கும் பொருட்டு சிவபிரான்) பிரவிர்த்திக்கின்றனர். இவர் நீலகண்டரும் செந்நிறமு முடையவர்" என்றோதியது. இப் பிரபல பிரமாணப்படி ஹிரண்ணிய துல்லியரூபரும், திரிலோசனரும், நீலகண்டரும், உமாபதியும், சமஸ்தலோக காமேசுவரரும், சர்வபாபத் தொடக்கில்லாதவரும், பகவானுமாகிய சிவபெருமானே சூரியனுக்குள்ளிருப்பவரும், சாவித்திரியினாற் பிரதிபாதிக்கப்படுபவரும், முமூட்சுக்களால் சேவிக்கப்படும் சேவ்யருமாயுள்ளாரெனச் சித்திக்கயாதொரு சமுசயமு மின்று. மேலும்,

சுக்ல யஜுர்வேத பிருஹதாரண்யகோபநிஷத்.

யஸ்யாதித்யஶ்ஶரீரம் ய ஆதித்ய மந்தரோ யமயத்யேஷத
ஆத்மாந்தர்யாம்யம்ருத: ॥

யஸ்யாதித்யச்சரீரம் யஆதித்ய மந்தரோய மயத்யேஷத
ஆத்மாந்தர்யாம் யம்ருத: ।

(இ-ள்) "எவனுக்குச் சூரியன் சரீரம். எவன் சூரியனுக்குள்ளிருந்து அவனை இயக்குகின்றான். அவனே ஆத்மாவின் அந்தர்யாமி. அமிர்தன் (சிவன்)" என்று சாற்றியது. இதனானுஞ் சூரியனும் அறியொணாத்தேவன் சூரியாந்தர்யாமியாகிய சிவ

பெருமான் என்பது வெளிப்பட்டது. அதனாலே சூரிய உபாசனையும் சிவ உபாசனையேயாம். சூரியனைச் சிவ வுருவெனக் கொண்டு உபாசிப்பவரே விசேஷ பலன் அடைவர். என்னை! உலகத்திலே சூரியநாராயணன் என்னும் நாமம் மிகவும் பிரசித்திபெற்றிருத்தலின் சூரியவழிபாடு விஷ்ணு வழிபாடேயாகும் எனின், அது கூடாது. சூரிய நாராயணன் என்னும் பிரயோகத்திலுள்ள நாராயண சப்தவாச்சியன் ஆதித்யமண்டலாபிமானியாகிய சூரியனை யன்றி வைகுண்டவாசனான நாராயணன் அல்லன். இதற்குப் பிரமாணம்.

சுக்லயஜுர்வேதமண்டல ப்ராஹ்மணோபநிஷத்.

𑌯𑌾𑌜𑍍𑌞𑌵𑌲𑍍𑌕𑍍𑌯𑍋𑌹𑌵𑍈 𑌮𑌹𑌾𑌮𑍁𑌨𑌿 𑌰𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌲𑍋𑌕𑌂
𑌜𑌗𑌾𑌮𑌤𑌮𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌂 𑌨𑌤𑍍𑌵𑌾𑌭𑍋 𑌭𑌗𑌵𑌨𑍍𑌨𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌤𑌤𑍍𑌤𑍍𑌵
𑌮𑌨𑍁𑌬𑍍𑌰𑍂𑌹𑍀𑌤𑌿 𑌸𑌹𑍋𑌵𑌾𑌚 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌃 ||

யாஜ்ஞவல்க்யோஹவை மஹாமுநி ராதித்யலோகம்
ஜகாமதமாதித்யம் நத்வாபோ பகவந்நாதித்யாத்மதத்வ
மநுப்ரூஹீதி ஸஹோவாச நாராயண: ||

(இ-ள்) "யாஜ்ஞவல்கிய மகாமுனிவர் ஆதித்தியலோகம் புகுந்தனர். அவ் வாதித்தியனை அவர் வணங்கிப் பகவானே! ஆதித்தியனே! ஆத்மதத்துவத்தைக் கூறுதியென நாராயணன் (சூரியன்) கூறுகின்றனன்" என வருமாறு காண்க. இதனாலே சூரியனும் நாராயணன் என்னும் பெயர்கொண்டு விளங்குகின்றனன் என்பது சுருதிசித்தம்.

இன்னும்மேலே உதாஹரித்த (22) பிரபலசுருதி வாக்கியங்களாலும், இவைபோன்ற ஏனைய அளவிறந்த சுருதிப்பிரமாணங்களாலும் வேதவழக்கு மிருதி பற்றிப் பிரணவத்தின் இறுதியிலுள்ள நான்காம் மாத்திரையின் தெய்வமாகப் படிக்கப்பட்ட புருஷர் சிவபெருமானென்றே வெள்ளிடைமலைபோல் ஸ்தாபிக்கப்பட்டது. அனறியும் இச்சிவ பரம்பொருளை வேதம் பலவிடங்களில் "சதுர்த்தம்", "சதுர்த்தம்" என்று துதித்துப் பரத்துவ நிருபணஞ் செய்துள்ளது. நூற்றெட்டு உபநிஷத்துக்களா லடையப்பெறும் மோக்ஷ சாம்பிராஜ்ஜியத்தைத் தீவிரதரபரிபாகிக்கு உடனே யளிக்கும் பெருஞ்சேமநிதி என்று சுக்லயஜுர்வேத முக்திகோபநிஷத்தால்

ஊாஂவுகீக்ஷ்ரெகெவோயா ஊுஊுக்ஷுணாஂ விஊுக்ஷயெ |

மாண்டூக்யமேகமேவாலம் முமுக்ஷூணாம் விமுக்தயே ||

(இ-ள்) "முத்தியில் விருப்பமுடையோருக்கு முத்தியின் பொருட்டு மாண்டூக்யோபநிஷத் ஒன்றே போதும்" எனக் கொண்டாடப்பெற்ற அதர்வணவேத மாண்டூக்யோபநிஷத்.

1. நாஂதஃப்ரஜ்ஞம் நபஹிஃப்ரஜ்ஞம் நோஃயதஃ ப்ரஜ்ஞம் நப்ரஜ்ஞாந஘நம் நப்ரஜ்ஞம் நாப்ரஜ்ஞம் | அடூஷ்டமவ்யவஹாா்யம஗்ராஹ்யமலக்ஷணமசிந்த்யமவ்யபதேஶ்யமேகாத்மப்ரத்யயஸாரம் ப்ரபஞ்சோபஶமம் ஶாந்தம் ஶிவமத்வைதம் சதுர்த்தம் மந்யந்தெ ஸ ஆத்மா ஸ விஜ்ஞேயஃ ||

நாந்தஃப்ரக்ஞம் நபஹிப்ரக்ஞம் நோபயதஃ ப்ரச்ஞம் நப்ரச்ஞானகநம் நப்ரக்ஞம் நாப்ரச்ஞம் | அத்ருஷ்டமவ்யவஹார்ய மக்ராஹ்ய மலக்ஷணமசிந்த மவ்யபதேச்ய மைகாத்ம்ய ப்ரத்யய ஸாரம் ப்ரபஞ்சோபசமம் சாந்தம் சிவமத்வைதம் சதுர்த்தமந்யந்தே ஸஆத்மா ஸவிக்ஞேயஃ ||

(இ-ள்) "சொற்பனவஸ்தை இல்லாததும், ஜாக்கிராவஸ்தையற்றதும், இவ் விரண்டு மில்லாததும், அஞ்ஞானப் பிரஞ்ஞையற்றதும், பிராஞ்ஞசொரூபத்தில் வேறானதும், எத்தகையோருக்கும் ஞானத்தை யளிப்பதும், கண் முதலிய இந்திரிய ஞானத்துக்குக் கோசரமாகாததும், வாக்கிந்திரியத்தின் வியாபாரத்துக் கெட்டாததும், பாணிந்திரியத்துக்குப் பிடிபடாததும், அநுமானப் பிரமாணங்களால் அறியப்படாததும், இது என்று சுட்டியுணர்த்த முடியாததும், இப்படிப்பட்டதென்று நிச்சயிக்கப்படாததும், ஞானனந்த சொரூபமுடையதும், எல்லாப் பிரபஞ்சங்களும் ஒடுங்கும் இடமானதும், சாந்தமானதும், இரண்டற்றதுமாயுள்ள சிவபரம்பொருளை நான்காம் மாத்திரையின் தெய்வமாக எண்ணுகிறார்கள். அவனே பரமாத்மா. அவனை அறியத்தக்கவன்" என்வும்,

2. அமாத்ரஶ்சதுா்த்தோ வ்யவஹாா்யஃ ப்ரபஞ்சோபஶமஃ ஶிவோ௨த்வைத ஏவமோங்காா ஆத்மைவ ஸம்விஶத்யாத்மநாத்மாநம் ய ஏவம் வேத ய ஏவம் வேத ||

அமாத்ரஸ்சதுர்த்தோ வ்யவஹார்யஃ ப்ரபஞ்சோபசமஃ சிவோத்வைத ஏவ மோங்கார ஆத்மைவ ஸம்விசத்யாத்ம நாத்மாநம் யஏவம் வேத யஏவம் வேத ||

(இ-ள்) "(மேலே கூறிப்போந்த அகார உகார மகாரங்களென்னும்) மாத்திரையளவுகளில்லாதவனுயும், வாக்கு மனங்களுக்கு எட்டாதவனுயும், பிரபஞ்சங்களுக்கெல்லாம் லயஸ்தானமானவனுயும், இரண்டற்றவனுயும் (பிரம, விஷ்ணு, உருத்திரர்களுக்கு அதீதப்பட்ட) நான்காவது தெய்வமாயும், பரமாத்மாவாயுமுள்ள சிவபெருமான் ஓங்காரமேயாகின்ருன். அவனை எவன் இப்படி யறிகின்ருனே அவன் அவருடைய அநுக்கிரகத்தினலே அச்சிவ பரமாத்மாவை யடைகின்ருன்" எனவும் சாதித்துள்ளது. இந்த ஓங்காரமே ஹிருதய குகையின் கண்ணுள்ள சிதாகாச சொரூபமா யிருக்கின்றதென்று சாமவேத மைத்ராயண் யுபநிஷத்.

த்ர்யக்ஷரம் புநஃ பஞ்சயாஜ்ஞேயம் நிஹிதம் குஹாயாம்।

த்ர்யக்ஷரம் புநः பஞ்சயாஜ்ஞேயம் நிஹிதம் குஹாயாம்।

(இ-ள்) "மூன்றக்ஷரமுடையதும், ஐந்துவகையா யறிதற்குரியதுமாயுள்ளது இருதயகுகையில் வைக்கப்பட்டுள்ளது." என முடிவுகட்டியது. இதனுல் மறைமுடிவாகிய மாண்டூக்யோபநிஷத்தும்கூட சிதம்பர வித்தையென்று சொல்லப்பட்ட தகரவித்தையையே எடுத்தியம்பிற்றென்பது மறைமுடிவல்லோர் துணிபு.

அன்றியும் அயன் அரி அரன் என்னுந் திரிமூர்த்திகளுக்குமேலே, நான்காவது தெய்வம் பரப்பிரம சிவபிரானுய் இருத்தலினலென்றே சுருதியானது சிவம் என்னும் பரம்பொருளைச் சதுர்த்த சப்த வாச்சியப் பொருளாக ஐயமற வெடுத்து விளக்கிற்று. அச்சிவமும் பஞ்சகிருத்யத் தாண்டவஞ்செய்யும்பிரணவாபினவ நடராஜப்பெருமானே யாவர் என்பதையுமுணர்த்த ஆத்மாக்களுக்கு அனுக்கிரகார்த்தமாயுள்ள மகேசுரமூர்த்தம் இருபத்தைந்தனுள் (வதூமூ...நா...தாரவேகழ-சதுர்த்தம் ந்ருத்தரூபகம்) என ஸ்ரீ நடராஜமூர்த்தியை நான்காம் ஸ்தானத்தில் வைத்து வாதுளோத்ர சுத்தசாதாக்கியம் இயம்பிற்று, திருத்தாண்டகவேந்தரும் "வெள்ளையேறேறும் விகிர்தாபோற்றி மேலோர்க்கு மேலோர்க்கு மேலாய் போற்றி" எனவும், "விண்மேலு மேலும் நிமிர்ந்தாய் போற்றி மேலோர்கள் மேலோர்கள் மேலாய் போற்றி" எனவுந திருவாய்மலர்ந்தருளினர். தாயுமான சுவாமிகளும்,

"இந்த்ராதி தேவதைகள் பிரம்மாதிகடவுளர் இருக்காதி வேதமுனிவர்,
துரிய கணநாதர் நவநாத சித்தர்கள் இரவிமதியாதியோர்கள்,

கந்தருவர் கின்னரர்கள் மற்றையர்களி யாவருங் கைகுவித்திடுந்தெய்வமே கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு கருணாகரக் கடவுளே" என்று நான்காவது தெய்வமே பரம்பொருளென்று பரத்துவ நிர்ணயஞ் செய்தருளினர். (பிரம்மாதி கடவுளர்-பிரமன், விஷ்ணு, உருத்திரன் முதலியோர்.)

இது இங்ஙனமிருக்க, மண்டூக ரூபியான வருணதேவன் நான்கு வியூகரூபமுடைய நாராயணனைப் பரவிய தோத்திரமே இம் மாண்டூக்கியமென்று பாத்ம புராணத்தை ஆதாரவாகக் கொண்டு ஸ்ரீமத் மத்வாசாரியர் தமது பாஷியத்தில் வரைந்து வைத்தனர். மேற்படி சுருதிவாக்கியங்களில் நான்காவது தெய்வப் பெயர் சிவ சப்தமாயிருத்தலினாலும், விஷ்ணுவினது நாமமெதுவும் சுருதியில் யாண்டும் சதுர்த்த சப்தமாகப் படிக்கப் படாமையாலும் அவ்விஷயம் அஞ்ஞான சந்தேக விபரீதமற ஆராயற்பால தவசியமே, அதர்வணவேத அதர்வசிகோபநிஷத்.

𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑌣𑌾𑌨𑌿 𑌮𑌨𑌸𑌿 𑌸𑌂𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌪𑍍𑌯 𑌧𑍍𑌯𑌾𑌨𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌃 ।
𑌪𑍍𑌰𑌾𑌣𑌂 𑌮𑌨𑌸𑌿 𑌸𑌹𑌕𑌰𑌣𑍈𑌃 𑌸𑌂𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌪𑍍𑌯 𑌧𑍍𑌯𑌾𑌤𑌾
𑌰𑍁𑌦𑍍𑌰𑌃 । 𑌪𑍍𑌰𑌾𑌣𑌂 𑌮𑌨𑌸𑌿 𑌸𑌹𑌕𑌰𑌣𑍈𑌰𑍍𑌨𑌾𑌦𑌾𑌨𑍍𑌤𑍇 𑌪𑌰𑌮𑌾
𑌤𑍍𑌮𑌨𑌿 𑌸𑌂𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌪𑍍𑌯 𑌧𑍍𑌯𑌾𑌯𑍀𑌤𑍇𑌶𑌾𑌨𑌂 𑌪𑍍𑌰𑌧𑍍𑌯𑌾𑌯𑌿𑌤𑌵𑍍𑌯𑌮𑍍 ॥

ஸர்வகரணாநி மனஸி ஸம்ப்ரதிஷ்டாப்ய த்யாநம் விஷ்ணு: । ப்ராணம் மனஸி ஸஹகரணைஸ் ஸம்ப்ரதிஷ்டாப்ய த்யாதா ருத்ர: । ப்ராணம் மனஸி ஸஹகரணைர்நாதாந்தே பரமாத்மநி ஸம்ப்ரதிஷ்டாப்ய த்யாயீதே சாநம் ப்ரத்யாயிதவ்யம் ॥

(இ-ள்) "(எல்லாக்கரணங்களும் மனதில் பிரதிஷ்டிக்கப்பட்டிருத்தலின் அம் மனமாயிருக்கிற விஷ்ணு த்யானம் ஆவன். (அது சொற்பனம் போன்ற யோகாவஸ்தை.) அம்மனம் பிராணனில் பிரதிஷ்டிக்கப்பட்டிருத்தலின் அந்தப் பிராணனாயிருக்கிற உருத்திரன் த்யாதா ஆவன். தியாதா-தியானிப்பேன். (அது சுழுத்தியைப்போன்ற சொரூபமாத்திரையாய் நிற்கும் யோகாவஸ்தை) கரணம், மனம், பிராணன் என்பன நாதத்தின் அந்தமாகிய பரமாத்மாவினிடத்தில் பிரதிஷ்டிக்கப்பட் டிருத்தலின் அப்பரமாத்மாவாய்த் தியானிக் கற்பாலராம் ஈசானரைத் தியானிக்க. மிகுதியுந் தியானிக்க" எனவும், அதர்வணவேத பஸ்ம ஜாபாலோபநிஷத்.

𑌅𑌦𑍍𑌵𑍈𑌤𑌂 𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁 𑌰𑍁𑌦𑍍𑌰𑌾𑌤𑍀𑌤𑌂
𑌏𑌕𑌮𑌾𑌸𑌾𑌸𑍍𑌯𑌂 𑌭𑌗𑌵𑌨𑍍𑌤𑌂 𑌶𑌿𑌵𑌂 |

*அத்வைதம் சதுர்த்தம் ப்ரஹ்ம விஷ்ணு ருத்ராதீதம்*
*ஏகமாசாஸ்யம் பகவந்தம் சிவம் ।*

(இ-ள்) "இரண்டற்றவரும், சதுர்த்த சப்த வாச்சியரும், பிரம விஷ்ணு ருத்திரர்களைக் கடந்தவரும், உபாசிக்கத்தக்க ஏகரும், ஷாட்குண்ணிய சம்பந்நருமான சிவபெருமான்" எனவும் முழக்கி நான்காவது தெய்வத்தை வெளிப்படையாய் நிரூபித்தபடியால் இத்திறச் சுருதிவாக்கியங்களுக்கு நேர் விரோதமாய்ப் பாத்மோத்தரங் கூறுமாயின் அப் புராணக் கூற்றின் வன்மை மென்மைகள் எத்திறத்தனவென மேதாவியர்களே அறியற்பாலர். அவ்வக்காலங்களில் அவ்வவ் வாத்மாக்களுடைய பரிபாகத்துக்கேற்ப சிற்சில ஆசிரியன்மார்கள் வெளிப்பட்டுச் சுருதிகளிலுள்ள பொருள்களைச் சமுத்திரகலச நயம்பற்றி ஆண்டாண்டெடுத்துக்கொண்டு திருத்தியும் புதுக்கியும் சமயஸ்தாபனஞ் செய்வார்களாயின் அதுவும் சிவபெருமானது திருவருளேயாகலின் அவர்களைப்பற்றிக் குறைகூற எம்முள்ளந் துணியவில்லை. ஆனால் அவர்கள் கொள்கை மட்டும் எம் வைதிக சைவத்துக்கு முற்றும் விரோதமா யிருத்தலினாலன்றோ அவற்றை மறுத்தாம். "விரிவிலா வறிவினார்கள் வேறொரு சமயஞ்செய்தே - எரிவினாற் சொன்னாரேனு மெம்பிராற் கேற்றதாகும்" என்னும் நாவுக்கரசரது அமுதவாக்கே இதற்கு நிதரிசனமாம். "பேதவாதப் பிசுக்கரைக் காணுகண்வாய்ப்பேசாதப் பேய்களோடே" என்றார் எம் சிவஞானச் செல்வர்.

உபநிஷத்திலகமாகிய மாண்டூக்கிய சுருதிப் பொருள் இவ்வாறிருக்கச் சிவம் என்பதற்கு மங்கள சொரூபனெனவும், சதுர்த்தம் என்பதற்குச் சங்கர்ஷணன், ப்ரத்யும்நன், அநிருத்தன், வியூகவாசுதேவனாகிய துரீயனெனவும் பொருட்படுத்தி இந்நால்வரும் பரவாசுதேவனிடத்திலிருந்து ஆவிர்ப்பவித்து அவனிடத்திலேயே அந்தர்த்தானமாகின்றார்களெனவும், பிரணவத்தின் நான்கு மாத்திரைகள் இந் நான்கு மூர்த்திகளெனவும், இந் நான்கு மாத்திரைகளும் ஒன்று சேர்ந்த சமஸ்டிப்பிரணவம் ஐந்தாவது மூர்த்தியாகிய பரவாசுதேவனெனவும் பாஞ்சராத்திரத்

தைப் பிரமாணமாகக்கொண்டு பொருந்தாப் பொருள் படுத்தியுள்ளார்கள் விசிஷ்டாத்வைத மதசித்தாந்திகள். இப்பொருள் மேற்படி பஸ்ம ஜாபாலோப நிஷத்துக்கும், வேறு சுருதிவாக்கியங்களுக்கும் முற்றும் முரணாயிருத்தல் காண்க. சிவம் என்னுஞ் சொல்லுக்கு மங்களசொரூபனெனப் பொருள் செய்துவிட்டால் அச் சதுர்த்தசப்தத்துக்குரிய தெய்வம் எப்பெயர்கொண்டு அச் சுருதியில் நிரூபித்துள்ளதென அறிய இடமேயில்லை. உபநிஷத்துக்களில் சதுர்த்தசப்தம் வரும் வாக்கியங்கடோறும் சிவம் என்னும் பெயரேயன்றி வாசுதேவ நாராயணாதி நாமங்களில் யாதொன்றும் வரக் காணப்படவில்லை. சிவன் கிருஷ்ணன் முதலிய சொற்கள் மங்களன், கரியன் என்னும் பொருளையுந் தருமென்று நிகண்டுகளிற் படிக்கப்பட் டிருப்பினும், அதே நிகண்டுகள் பரமசிவனுந் திருமாலும் அவற்றின் பொருள்களௌன வேறிடங்களில் எடுத்தோதுவதால் மேற்கண்ட நியாயத்தை விசேஷப் பொருள்களைக் குறிக்காத இடங்களிலேயே விநியோகப் படுத்தவேண்டியது முக்கியம். அங்ஙனமில்வழி சிவன் தேவதை, கிருஷ்ணன் தேவதை என்பனவாதிசுருதி வாக்கியங்களும், ஆன்றோர் வழக்குகளும் அவலமா யொழிந்துபோம். ஆதலால் சிவசப்தத்தின் பொருள் சிவபெருமானென்றறிதலே சுருதியின் சம்மதம். சிவசப்தத்தைக் காதினால் கேட்கவும், வாயினாற் சொல்லவும், உச்சரிப்பவரைக் கண்ணினால் காணவும் உடன்படாதவர்கள் பரத்துவ விஷயத்தில் மட்டும் அதைக் கையாள முயல்வது பொருத்தமாமோ. ஐயகோ! பரிதாபம்!! பரிதாபம்!!! சுருதிகளுக்கு அந்தச் சிவநாமதேய ரத்நரக்ஷாபந்தனம் எத்தகையோராலும் பேதிக்கப்படாத வாய்ப்புடைத்தென்பது சத்தியம். முக்காலுஞ் சத்தியம்.

வேதமாகிய உடலுக்குச் சிவமே உயிரென முன்னமே தெரிவித்துள்ளாம். "யொமாரூடிபெருமியஸீ-யோகாத்ரூடிபலியஸீ-காரணத்தினும் இடுகுறிவன்மை யுடையது" என்னும் இலக்கண நியமனப்படி சிவம் என்னுஞ் சொல்லுக்கு மங்களகரனெனப் பொருளுரைத்தலினும் சிவன் (அகண்ட சச்சிதாநந்தகன உமையொரு பாகன்) எனும் இடுகுறிப் பொருளுரைத்தலே நியாயமன்றோ. இதுவே சர்வ வேதாந்தங்களிலுமுள்ள ஸாரபூதமான பிரமேயம். அரிசி என்னுஞ் சொல்லே அமுது என

வும், காஞ்சி என்னும் நகரைப் பெருமாள்கோயில் எனவும், சிதம்பரம் என்னுஞ் க்ஷேத்திரத்தைச் சித்திரகூடம் எனவும், சிவகங்கை என்னும் ஊரைக் குறுணிக்குண்டு எனவும் குழூஉக் குறியாகக் கூறித்திரியும் மதாவேசம்பூண்ட வைஷ்ணவர்களுக்கு இவ்வரிய பெரியஉண்மை எவ்வாறு விளங்குமோ! மதமொழிந்தால் மறைமொழி விளங்கும்.

இத்தகைய சிறப்புப்பொருந்திய சிவன் எனும் நாமம் தனக்கேயுடைய செம்மேனி அம்மானாகிய சிவபரம்பொருளை சர்வபாஷ்யக் கர்த்தாக்களாலும் புகழ்ந்து பேசப்பட்ட தசோபநிஷத்துக்களுக்குள் ஈசாவாசியத்தில் ஈசன், ஆத்மா, அம்ருதம் எனவும், கேநோபநிஷத்தில் உமாதேவியாராலே தமது நாயகரெனச் சுட்டியுணர்த்தப்பட்ட யக்ஷகோலந்தாங்கிய ப்ரஹ்மம் எனவும், கடோபநிஷத்தில் ப்ரஹ்மம், தேவன், விஷ்ணு, ஈசானன் எனவும், பிரசிநோபநிஷத்தில் பரப்ரஹ்மம், பரமாத்மா, புருஷன் எனவும், முண்டகோபநிஷத்தில் புருஷன், அக்ஷரம், அம்ருதம், ஈசன் எனவும், மாண்டூக்யோபநிஷத்தில் ப்ரஹ்மம், சிவம் எனவும், தைத்திரீயோபநிஷத்தில் ப்ரஹ்மம் எனவும், ஐதரேயோபநிஷத்தில் ஆத்மா, புருஷன் எனவும், சாந்தோக்யோபநிஷத்தில் ஆகாசம், புருஷன், ப்ரஹ்மம், அம்ருதம் எனவும், பிருஹதாரண்யகோபநிஷத்தில் ப்ரஹ்மம், புருஷன், அம்ருதம், அக்ஷரம், ஈசானன் எனவும் பல திவ்விய திருநாமங்களால் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றனர். இந் நாமங்களுள் பொதுப்பெயர்களை யெல்லாம் சிறப்புப் பொருளினிடத்து சாமான்ய விசேஷபாவத்தால் சேர்ப்பது நியாயம். அப்படியே மீமாம்ஸகரும் ஆறும் அத்தியாயத்து ஈற்றதிகரணத்தில் "வாமெளவா ஓதுவணூரக-சாகோவா மந்த்ரவர்ணாத்—சாகமன்றோ மந்திரவர்ணத்தால்" என்னுஞ் சூத்திரத்தில் நியமித்துள்ளார்கள். ஆகையினாலே இங்கு காட்டிய பொதுச் சொற்கள் யாவும் சிவன் என்ற விசேஷச் சொல்லினிடத்தே நிலையுற்றதென ஐயமற வறிக.

அன்றியும் தைத்திரீயாரண்யகத்தில் க்ருஷ்ண பிங்களன், விரூபாக்ஷன், அம்பிகாபதி, உமாபதி, பசுபதி, மஹேஶ்வரன், மஹாதேவன், ஸதாசிவன் எனவும், கைவல்யோபநிஷத்தில் உமாஸஹாயன், த்ரிலோசனன், நீலகண்டன் எனவும், அதர்வசிகோபநிஷத்தில் ஈசானன், சம்பு, சிவன் எனவும், சுவேதாசுவதரோபநிஷத்தில்

ஹரன், உருத்திரன், சிவன், ஈசானன், மஹாதேவன் எனவும், ந்ருஸிம்ஹதாபநீயோபநிஷத்தில் புருஷன், கிருஷ்ணபிங்களன், விரூபாக்ஷன், சங்கரன், நீலலோஹிதன், உமாபதி, பசுபதி, பிநாகி எனவும், யோக தத்வோபநிஷத்தில் முக்கண்ணன், உமைபாகன், வரதன் எனவும், மண்டல ப்ராஹ்மணோபநிஷத்தில் உமாஸஹாயன், நீலகண்டன், ப்ரசாந்தன் எனவும் பல ஆரிய அற்புதநாமதேயங்களால் போற்றப்பட்டிருக்கின்றனர். இன்னும் அனேக உபநிஷத்துக்களிலும், வேதபாகங்களிலும் இவ்வாறே பரத்துவ நிரூபணத்துக் குரிய நற்காரண நாமங்களால் வந்திக்கப்பட்டிருக்கின்றனர். இக்காரண பிரமத்தின் உமையோ டியைந்த திருமேனியே அருண்மயமாதலின் அது பிராகிருத சரீரத்துக் குரிய பாவம், ஜரை, மரணம், பசி, தாகம், சோகம், அசத்தியகாமம், அசத்தியசங்கற்பம் ஆகிய தோஷங்கள் யாதுமின்றி அபஹதபாப்மத்வாதிகுணங்கள் நிறைந்த சித்கனரூபமாய் விளங்குகின்றது. நான்காவது தெய்வத்தைச் சிவம் என்னும் நாமத்தாலே மாண்டூக்கிய சுருதி தனது இருதயத்தில் வைத்துத் துதித்ததற்கும் இதுவே காரணம். இதுவே லீலாமங்கள ரூப சரீரம். விரும்பி யாங்கு கொள்ளப்படுஞ் அருண்மய சரீரமும் இத்தன்மைத்தே.

சாமவேத சாந்தோக்யோபநிஷத்.

𑌏𑌷 𑌆𑌤𑍍𑌮𑌾𑌪𑌹𑌤𑌪𑌾𑌪𑍍𑌮𑌾 𑌵𑌿𑌜𑌰𑍋 𑌵𑌿𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌰𑍍𑌵𑌿𑌶𑍋𑌕𑍋 𑌵𑌿𑌜𑌿𑌘𑌤𑍍𑌸𑍋𑌽𑌪𑌿𑌪𑌾𑌸𑌃 𑌸𑌤𑍍𑌯𑌕𑌾𑌮𑌃 𑌸𑌤𑍍𑌯𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑌃 ।

ஏஷ ஆத்மாபஹதபாப்மா விஜரோ விம்ருத்யுர்விசோகோ விஜிகத்ஸோऽபிபாஸஸ்ஸத்ய காமஸ்ஸத்ய ஸங்கல்ப: ।

(இ-ள்) "இந்தப் பரமாத்மா பாவமில்லாதவர், ஜரையில்லாதவர், மரணமில்லாதவர், சோகமில்லாதவர், பசியில்லாதவர், தாகமில்லாதவர், சத்தியகாமர், சத்திய சங்கற்பர்" என்று துதித்தது. இவ் வெட்டுக்குணங்களையே திருத்தாண்டக வேந்தரும் "எட்டுக்கொலாமவரீறில் பெருங்குணம், எட்டுக்கொலாமவர் சூடுமினமலர்" என வாழ்த்தி மகிழ்ந்தனர். இத்தகைய லீலாமங்கள விக்கிரகமே அளவுக் கடங்கும் பரிச்சேதமாகிய குற்றத்துக்கு உட்படாமல் என்றும் பூரணமும் நித்தியமுமாய் விளங்கிக்கொண்டிருக்கும். ருக்வேதம்.

𑌸𑍍𑌥𑌿𑌰𑍇𑌭𑌿𑌰𑌙𑍍𑌗𑍈𑌃 𑌪𑍁𑌰𑍁𑌰𑍂𑌪 𑌉𑌗𑍍𑌰𑌃 ।

ஸ்திரேபிரங்கை: புருரூப உக்ர: ।

(இ-ள்) "ஸ்திரமான அங்கங்களோடு அனேக வடிவுடையவரும், உக்கிரருமாயினர்" எனவும், சுவேதா சுவதரோபநிஷத்.

நைநமூர்த்வம் நதிர்யஞ்சம் நமத்யே பரிஜக்ரபத் ।
நதஸ்ய ப்ரதிமா அஸ்தி யஸ்யநாம மஹத்யஶ: ॥

நைநமூர்த்வம் நதிர்யஞ்சம் நமத்யே பரிஜக்ரபத் ।
நதஸ்ய ப்ரதிமா அஸ்தி யஸ்யநாம மஹத்யச: ॥

(இ-ள்) "இவனை மேலும், குறுக்கும், இடையும் அளந்தவரில்லை. அவனுக்குச் சமமானவருமில்லை. எவன் பெயரே பெரிய புகழ்" எனவுங் கூறிப் போந்தமையே போதுமான சான்றும். அன்றியும் ஸ்ரீ ருத்ரநமகம்,

யாதே ருத்ர ஶிவா தநூரகோரா பாபகாஶிநீ ।
தயாநஸ்தநுவா ஶந்தமயா கிரிஶந்தாபிசாகஶீஹி ॥

யாதேருத்ர சிவாதநூரகோரா பாபகாசிநீ ।
தயாநஸ்தநுவாசந்த மயாகிரி சந்தாபிசாகசீஹி ॥

(இ-ள்) "ஏ ருத்ரா! சாந்தமானதும், பாவமில்லாததும், பிரகாசமுள்ளதுமான உமது மங்களகரம் பொருந்திய திருமேனி யாது? அந்தப் பரமசுககரமான திருமேனியால் ஓகிரிசந்த! எங்களைப் பிரகாசிக்கும்படிச் செய்வாயாக" என்று கூறிப்போந்தது. இம்மந்திரம் ஆக்னேய காண்டத்தில் படிக்கப்பட்டிருத்தலால் அக்கினிபரமாம் என்று வாய்கூசாது பேசுந் தீவினையாளர்க்கு அது அப்படியல்ல, சிவபெருமானது வைபவ பிரதிபாதகமேயாம் என இடித்துக் காட்டுதற்கு இதேமந்திரம் சுவேதாசுவதரோபநிஷத்திலும் அநுவதித்துக் கூறப்பட்டுள்ளது. அக்னி, ருத்ரன், ஸவிதா, என்னும் மூன்றுசொற்கள் வேதங்களில் பிரமப்பிரகரணங்களிலும், கர்மப் பிரகரணங்களிலும், மகாக்நி சயனத்திலும் வரும்போது அவை சிவபரமேயாகும். அவரே சர்வகர்ம ஆராத்யர். அவருடைய கிருபையும், உத்திரவும் ஒவ்வொரு கர்மத்துக்கும் அவசியம் வேண்டுமென்பது வேதத்தின் முடிந்த துணியாம். யஜுர்வேதம்,

ருத்ரோ வா ஏஷ யதக்நி: ருத்ரோ க்நி ஸ்விஷ்டக்ருத் ।
ருத்ரோவா ஏஷயதக்கி: ருத்ரோக்நி ஸ்விஷ்டக்ருத் ।

(இ-ள்) "உருத்திரனன்றோ இவ்வக்கினி. உருத்திரனே சுவிஷ்டகிருத் எனப்படும் அக்நி" என்று சாற்றியது. "ஸ்விஷ்டக்ருத்" என்பது ஸு-நன்றாக, இஷ்ட-யாகாதி கிரியைகளை,

க்ருத்-செய்பவன். அதாவது கர்மங்களில் ஏதேனும் லோபம் ஜீவசுபாவத்தால் வருமாயின் அவற்றைப் பொறுத்துக்கொண்டு ஆத்மாக்களுக்குச் சுகமளிப்பவன் என்பதாம். இந்தச் சுவிஷ்ட கிருத் தேவதையின் ஹோம வழிபாடின்றி எந்த வைதிக லௌகிக ஹோமங்களும் விரும்பிய பிரயோசனத்தைத்தரா. இதற்குப் பெருஞ்சான்று கிருஷ்ணயஜுஸ் முதலிய வேதபாகங்களிற் காணப்படும் தக்ஷயாகமே. இதனால் சர்வகர்மபலதாதிருத்துவமாதிலக்ஷணங்கள் கூறப்படும் பிரகரணங்களில் பரமசிவனொருவனே ஸவிதா எனப்படுகின்றனன். இவனே எல்லாருள்ளத்தையும் நடாத்தும் ஏகநாயகனன காயத்திரீவல்லப காளகண்ட பரப்பிரமசிவம். இவனைத்தான் சர்வகர்ம ஆரம்பங்களிலுந் துதிக்கவேண்டுமென்று சாமவேத பிரபதப்ராஹ்மணம் "தவஸ்வதெ ஜவஸ்வதெ-தபச்சதே ஜபச்சதே" என்று ஆரம்பித்து "க்ஷூராயி வதயெநஃ-கர்மாதி பதயேநமஃ" என்று நிறுவியது. இந்தச் சிவநாமத்தின் மகிமையினையே காஞ்சிபுராணம் "குறைவிலாமங்கலக் குணத்தனதலின், நிறைமலமநாதியே நீங்கிநிற்றலின், அறைகுவர் சிவனென வறிவின்மேலவர், இறையவன் பெருமையையாவர் கூறுவார்" என்று நன்குப் பிரகாசப்படுத்தியது. இத்தகைய பலகாரணங்களால் பரம்பொருளாகிய பசுபதியே பரமகாரணரென் றறிவாயாக. இது இவ்வாறிருக்க,

வைஷ்ணவ பூர்வாசாரியர்களுள் ஒருவராகிய வடக்குத் திருவீதிப்பிள்ளை திருக்குமாரரென்னும் பிள்ளைலோகாசாரியர் தாம் வரைந்துள்ள அஷ்டாதச ரஹஸ்யம் என்னும் கிரந்தத்தின் ஓர் பகுதியாகிய தத்வசேகரத்தில் மூர்த்தித்திரயாதீத ஸதாசிவம் பிரத்தியட்ச சுருதி விரோதமென்றும், ஸர்வ கிரந்த பரஸ்பர விரோதமென்றும், பிராந்தி கல்பிதமென்றும் தம்மனம் போனவாறு வரைந்து வைஷ்ணவ வுலகத்தை மயக்கிவைத்துள்ளார். இவ்வபத்த வாக்கியங்கள் சுருதிகளுக்கு முற்றும் விரோதமென்பது யாம்மேலேவிளக்கிக்காட்டிய பற்பல பிரமாணங்களானும், நியாயங்களானும், இனி வரும் விசேஷ சுருதிவாக்கியங்களானும் தெள்ளிதிற்றுணியப்படும். இவருடைய வார்த்தையை இவருக்குப்பின் வந்தோர்பலர் ஆசாரியாபிமான மேலீட்டால் உண்மையாக நம்பி சைவசித்தாந்தத்தில் பிரதிபாதிக்கப்படுங் கடவுள் திரிமூர்த்திகளிலொருவரான உருத்திரமூர்த்தியே என

வும், அவர் தாமசகுணத்தை மேற்கொண்டு சங்காரத் தொழில் செய்பவர் எனவும், அவருக்கு மோட்சமளிக்கும் வன்மை திரிகாலத்து மில்லை எனவும், பிருகு முனிவருடைய பாதத்தால் உதையுண்டபோது அம் முனிவரைக் கோபியாது புகழ்ந்து வணங்கிய சாத்துவிக சர்வேசுவரனை வைகுண்ட நாதனுக்கு அவ் வுருத்திரன் தாழ்ந்தவன் எனவும் பலவாறு நிந்தைசெய்து வாளா நழுவிப்போயினர். அனேகர் போயிக்கொண்டு மிருக்கின்றனர். வேறு சிலர் உண்மையைப் பிரத்தியட்சமா யறிந்தும் தம்மனசாக்ஷி தம்மைப் பிடர்பிடித்துந்துதலால் சைவ சித்தாந்திகள் வணங்குந் தெய்வமாகிய துரீயமூர்த்தி வேறு, குணமூர்த்தி வேறு என்று ஒப்புக்கொண்டும், காரண விஷ்ணு, காரிய விஷ்ணு என்று உறவாடிக்கொண்டும் மதாவேசம்பூண்ட வைஷ்ணவர்களது கோஷ்டியில் கலவாமல் மௌனஞ் சாதிக்கின்றார்கள். மேற்சொன்ன லோகாசாரியர் தம்முடைய விசிஷ்டாத்வைத மதக்கடவுள் திரிமூர்த்திகளுள் ஒருவராயிருத்தலினாலும், நாராயணனை நான்காவது தெய்வமாக சுருதிபாண்டும் படிக்காததினாலும், திரிமூர்த்திகளுக்குமேல் துரீயமூர்த்தி யொருவருண்டென்று ஒப்புக்கொள்ளும் பட்சத்தில் தம் மதத்தினருக்கு வைஷ்ணவத்திலுள்ள பற்று படிப்படியாகக் குறைந்துபோமென்னும் அச்சத்தினாலோ, அல்லது வேறு எக்காரணத்தினாலோ அறியோம், அவ்வாறு மனசாக்ஷிக்கும் சுருதிகளுக்கும் நேர்விரோதமாக வரைந்து வைத்தனர். சிவத்துவேஷங் காரணமாக வெளிப்பட்ட அவரது ஆபாசஞானம், மறையவர்கள் மறைத்துவைத்த மறைகள் மண்ணுலகெங்கும் பரவிவரும் இக்காலத்தில், சுருதி சுளுக்கொண்டு போனதிசை பகராமல் ஓட்டெடுக்கும்படிச் செய்து எமது வைதிக சைவ வுண்மையைப் பிரமத்தை இடையறாது சிந்திக்கும் பிரமவாதிகள் கண்டு களிக்குமாறு தெளிவாய்த் திருப்பியாம்.

திரிமூர்த்திகளி லொருவரான விஷ்ணுமூர்த்தியே வைஷ்ணவ சமயக்கடவுளெனவும், அம்முடிபே ஆழ்வார்களுக்குஞ் சம்மதமெனவும் யாம் கூறியதற்குப் பிரமாணம் வருமாறு.

திருமங்கையாழ்வார் பெரிய திருமொழி.

1\. மூவரிலெங்கண்மூர்த்தி யிவனென முனிவரோடு
தேவர் வந்திறைஞ்சு நாங்கூர்த்திருமணிக்கூடத்தானே.

2. மூவரிலொருவனாய வொருவனை யுலகங்கொண்ட-கோவினை.

போய்கையாழ்வார் இயற்பா.

3. முதலாவார் மூவரே யம்மூவருள்ளும். முதலாவான் மூரிநீர்வண்ணனே

தொண்டரடிப்பொடி யாழ்வார்.

4. தலையறுப்புண்டு சாவேன் சத்தியங்காண்மின்னையா
சிலையினாலிலங்கைச்செற்ற தேவனே தேவனாவான்.

நம்மாழ்வார் திருவாய்மொழி.

5. மொய்கொள் சோதியோடாயினு னொருமூவராகிய மூர்த்தியே.
6. மூவராகிய மூர்த்தியை முதன்மூவர்க்கு முதல்வன்றன்னை.
7. மூவர் முதல்வனொரு மூவுலகாளி.
8. திருமாலான்முகன் செஞ்சடையா னென்றிவர்களெம்
பெருமான்றன்மையை யாரறிகிற்பார்.
9. நன்னெறி நாரண னான்முக னரனென்னு மிவரை
ஒன்றநும்மனத்து வைத்துள்ளினும் மிருபசையறுத்து.
10. பிறையேறு சடையானும் நான்முகனு மிந்திரனும்
இறையாத லறிந்தேத்த வீற்றிருத்த லிதுவியப்பே.
11. பேசநின்ற சிவனுக்கும் பிரமன்றனக்கும் பிறர்க்கும்
நாயகனவனே கபால நன்மோக்கத்திற் கண்டுகொண்மின்.
12. மேவித்தொழு மிந்திரன் சிவனுதிக்கெல்லாம்
நாவிக்கமல முதற்கிழங்கே உம்பரந்ததுவே.
13. அவாவறச்சூழரியை யயனை யரனையலற்றி
அவாவற்று வீடுபெற்ற குருகூர்ச்சடகோபன்.

ஸாமவேத மஹோபநிஷத்.

14. 𑌏𑌕𑍋 𑌹 𑌵𑍈 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣 𑌆𑌸𑍀𑌨𑍍 𑌨 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾 𑌨𑍇𑌶𑌾𑌨𑌃 |
ஏகோஹவை நாராயண ஆஸீந் நப்ரஹ்மா நேசாந: |

(இ-ள்) "நாராயணன் ஒருவனன்றே இருந்தான். பிரமனிருந்திலன், ஈசானன் இருந்திலன்."

கிருஷ்ணயஜுர்வேத நாராயணோபநிஷத்.

15. 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌾𑌤𑍍 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌜𑌾𑌯𑌤𑍇 |
𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌾𑌤𑍍 𑌰𑍁𑌦𑍍𑌰𑍋𑌜𑌾𑌯𑌤𑍇 |
நாராயணாத் ப்ரஹ்மாஜாயதே | நாராயணாத் ருத்ரோஜாயதே |

(இ-ள்) "நாராயணனிடத்தினின்று பிரமன் பிறந்தான். நாராயணனிடத்தினின்று உருத்திரன் பிறந்தான்."

இத்யாதிப் பிரமாணங்களானும், மற்றுமுள்ள சுருதிவாக்கியங்களானும் விஷ்ணுமூர்த்தி திரிமூர்த்திகளில் ஒருவராகப் படிக்கப்பட்டிருக்கின்றனரேயன்றி அவர்களுக்கு மேம்பட்ட துரீய மூர்த்தியாகப் படிக்கப்பட்டிருக்கவில்லை. அதனாலே விஷ்ணுவின் பாரம்யமுழுதும் தம்மினுங் கீழிட்ட பிரமாதிகளிடத்தமையுமேயன்றி துரீய மூர்த்தியாகிய சிவத்தினிடத்துச் சிறிதும் அமையாது. அப்படியன்று, ஸ்ரீ வாசுதேவனையே துரீயமூர்த்தியாக ஸ்ரீ வைஷ்ணவர்கள் கூறுகின்றாரெனின் அதுவும் பொருந்தமன்று. நான்காவது மூர்த்தியையும் இரண்டாவது மூர்த்தியையும் ஒருவரேயென்று சாதித்தல் கேவலம் அஸங்கதம். அது எஜமானனையும் வேலைக்காரனையுஞ் சமமென்று கூறுதற்கொக்கும். சுருதிகளிலும் புராணங்களிலும் விஷ்ணுவுக்குக் கூறப்பட்ட அபகர்ஷங்களனைத்தும் எஜமானனாகிய வாசுதேவனிடஞ் சார்ந்து அவரையும் அவதிக்குள்ளாக்கிவிடும். நான்காவது மூர்த்தி வேறு, இரண்டாவதுமூர்த்தி வேறு என்றியம்பவோ விசிஷ்டாத்வைதமதம் இடந்தரவில்லை. ஆதலின் வாசுதேவன் மும்மூர்த்திகளுக்கும் மேற்பட்டவரென்று சொல்ல நியாயமே இல்லை. திரிமூர்த்திகளில் ஒருவராயுள்ள நாராயணரை மேலான தெய்வமென்று ஸ்தாபிக்கும் வாக்கியம் ஐந்து இராத்திரியிற் சொன்ன பாஞ்சராத்திரத்தினன்றி வேதத்தில் யாண்டும் மொழியப்பட்டிருக்கவில்லை. ஆகையினாலே விஷ்ணுபரத்துவம் வேதோக்தமாகாது. "நாலு வேதங்களிலும் பரமபுருஷார்த்தம் இன்னதென்று அகப்படாமல் பின்பு இப்பாஞ்சராத்திரத்தைக் கற்றான்" என்று அப்பாஞ்சராத்திரமே கூறுகிறதாக ஸ்ரீ பாஷ்யக்காரராகிய இராமநுஜர் தமது சூத்ரபாஷ்யத்தில் வரைந்திருத்தலால் அதற்கு மேலும் வேறு பிரமாணம் வேண்டுமோ. "பாஞ்சராத்திரம்" என்னுஞ் சொல் நாலாயிரப்பிரபந்தத்தில் கூறப்பட்டிருக்கவில்லை என்பது யாவரு மறிந்தவிஷயம்.

அல்லாமலும், "நாராயணன் ஒருவனன்றோ இருந்தனன். பிரமன் இருந்திலன். ஈசானன் இருந்திலன்" என்னுஞ் சுருதியின் தாற்பரியம் ஸூக்ஷ்ம சிருஷ்டிக்குப் பின்னும், ஸ்தூல சிருஷ்டிக்கு முன்னமே கொள்ளத்தக்கது. ஏனெனின், திரிமூர்த்திகளும் பரப்பிரம சிவபிரானின்றும் தோன்றினதாக வேதமறைதலால் அப்பிராகிருதமாகிய ஸூக்ஷ்ம சிருஷ்டிக்குக் காரணர்

நாராயணருக்கு அந்நியமாக வேறொரு தேவதை வேண்டப்படுவ தவசியம். கிருஷ்ணயஜுர்வேத சுவேதாசுவதரம் "சிவ ஏவ கேவலः" (10-ம் பக்கம் பார்க்க) என்னும் வாக்கியத்தில் இருள் எனப்படும் பிரகிருதிமாத்திரம் உள்ளதென நினைக்கக்கூடிய பிரதமமகா சிருஷ்டிகாலத்தில் அந்தத்தேவதையாகிய சிவபரம்பொருளொன்றே இருந்ததென்று அதற்கு ஸத்பாவங்கூறி ஜகஜ்ஜந்மாதி காரணத்துவத்தை அப்பரம்பொருளுக்கே ஸமர்த்தித்தது. மணிவாசகப்பிரானும் "நள்ளிருளில் நட்டம்பயின்றாடு நாதனே" என்றருளிச்செய்தனர். ஆகையினாலே ஸூக்ஷ்மசிருஷ்டி ஸ்தூல சிருஷ்டி ஆகிய இருவகைச் சிருஷ்டிகளுக்குப் பூர்வம் சிவபெருமான் ஒருவரே இருந்தனரென்பது தெள்ளிதிற்றுணியப்பட்டது. படவே, அவரே சர்வ ஸம்ஹாரகாலத்துக்குப் பின்னும் இருந்தனரென்பதற்கும் சுருதிப்பிரமாணம் வருமாறு.

அதர்வணவேத அதர்வசிரோபநிஷத்.

கூஒகஸ்ூா ஊ௱வுூ௰த வஊகொரு௱ஊ௰ஃ
வஊக வஊவ ரு௱ெஊ௰நஃஷிதீயாய தஸ்ூ௱ஃ ।
யஐஃாநு ஸொகாநீஶத ஈஶநீய௱ஃ ஜநநீய௱ஃ
வுூதூஜ் ஜநாஷிஷ்௱தி ஸாம௱கொ வாஜகாமெ
ஸஂஸுூஜ௰ விஶ்வா ஹ௱வநாநி ெகாவுா
தஸ்ூாஊ௱வுூ௰த வஊகொ ரு௱ஊ௰ஃ ।

அதகஸ்மா துச்யத ஏகோருத்ரஃ ஏக ஏவருத்ரோ நத்விதீயாய தஸ்துஃ । யஇமாந் லொகாநீசத ஈசநீயுஃ ஜநநீயுஃ ப்ரத்யங் ஜநாஸ்திஷ்டதி ஸஞ்சுகோசாந்தகாலே ஸம்ஸ்ருஜ்ய விச்வா புவநாநி கோப்தா தஸ்மாதுச்யத ஏகோருத்ரஃ ।

(இ-ள்) "இனி எதனால் ஏகருத்திரனெனப்படுகின்றான். ஒருவனே உருத்திரன். இரண்டாமவனில்லை. எவன் இந்த உலகங்களை ஈசனிகளாலும் ஜனனிகளாலும் ஆளுகின்றான். ஜனங்களிடத்துப் பிரத்யக்ரூபனாயுள்ளான். மஹாசம்ஹாரகாலத்தில் எல்லாவற்றையுந் தன்னுள்ளொடுக்கிக்கொள்ளுகிறான். ஸமஸ்தவுலகங்களையுஞ் சேர்த்து ரட்சிக்கின்றான். அதனாலே ஏகருத்திரனெனப்படுகின்றான்" எனவும், (இங்கு ஒருவனேயென்று தேற்றியும் போதாமல் இரண்டாமவனில்லை என்று சொன்னமையால் பிரமலக்ஷணங் குறிப்பிக்கப்பட்டது.) ஏகனென்றும், உருத்திரனென்றும் சிவபெருமானுக்கு வெவ்வேறு நாமங்க

ளிருப்பினும் ஏகருத்திரன் என்பது விசேஷணத்துடன் கூடிய இருசொற்களா லமைந்த ஒப்பற்ற சிவநாமம். இம்மந்திரம் சிறிது பேதந்தோன்ற சுவேதாசுவதரோபநிஷத்திலு முள்ளது.

### கிருஷ்ண யஜுர்வேத தக்ஷிணாமூர்த்யுபநிஷத்.

[illegible]
[illegible]

யஸ்ஸர்வோ பரமகாலே ஸர்வாநாத்மந் யுபஸம்ஹ்ருத்யஸ்வாத்மா
நந்தே ஸுகே மோததே ப்ரகாசதேவா ஸதேவ: ।

(இ-ள்) "பராந்தகாலத்திலே எல்லாவற்றையும் தம்முள் உபசம்ஹாரஞ் செய்து தமது ஆத்மாநந்த சுகத்தில் சந்தோஷித்திருப்பவர் எவரோ அவரே தேவர்" எனவும்,

### அதர்வணவேத சரபோபநிஷத்.

[illegible]
[illegible]

யோந்தகாலே ஸர்வலோகாந் ஸம்ஹார ஸஏக ச்ரேஷ்டச்ச ஸர்வ சாஸ்தாஸஏவ ।

(இ-ள்) "அந்திய காலத்தில் ஸர்வலோகங்களையும் ஸம்ஹரிப்பவரும், ஏகரும், சிரேஷ்டரும், யாவரையுஞ் சிக்ஷிக்கத்தக்கவரும் அவரே" எனவும்,

### கிருஷ்ண யஜுர்வேத பஞ்சப்ரஹ்மோபநிஷத்.

[illegible]
[illegible]

பஞ்சக்ருத்ய நியந்தாரம் பஞ்சப்ரஹ்மாத்மகம் ப்ருஹத் ।
பஞ்சப்ரஹ்மோப ஸம்ஹாரம் க்ருத்வாஸ்வாத்ம நிஸ்திதம் ॥

(இ-ள்) "சிருஷ்டி முதலிய பஞ்சகிருத்திய நியமனகர்த்தரும், பெரிய சொரூபமுடையவரும், பஞ்சபிரமங்களாகிய பிரமன் முதலிய பஞ்சகர்த்தாக்களைத் தம்மிடத்தில் உபஸம்ஹாரஞ் செய்து உறுதியாயிருப்பவருமான பஞ்சபிரம சொரூபர்" எனவும்,

### ஸாமவேத மஹோபநிஷத்.

ப்ரஹ்மா விஷ்ணுச்ச ருத்ரச்ச. (11-ம் பக்கம் பார்க்க) எனவும் போந்தவாறறிக. அன்றியும் ஸ்ரீ ராமபிரான் இராவணனைக் கொல்லக்கருதி, ஸ்ரீ உருத்திரரது மகாகௌரவமுள்ள சம்ஹாரத்தொழிலை மேற்கொண்டு, கோதண்டத்தைத் தாங்கி எதிரில்

கின்றபோது இராவணனுடைய கண்களுக்கு அவ்விராமன் மகா பிரளயகால உருத்திரனைப்போல் விளங்கியபடியால் அவனைத் திரிமூர்த்திகளுக்கும் மேலானவனென்று அரக்கர் கோன் கூறியதைக் கம்பராமாயணம் "சிவனோ வல்லன் நான்முக னல்லன் திருமாலோ, அவனுமல்லன் மெய்வரமெல்லா மடுகின்றான், தவனோ வென்னிற்செய்து முடிக்குந் தரமல்லன், இவனோதானவ் வேத முதற்காரணமாவான்" என்று விளக்கி இருப்பதையுமோர்க. தவங்கிடந்து பெறுஞ் சிவானுக்கிரகமில்லையாயின் அரி பிரம்மாதி அமரர்களுங்கூட அசுரர்களைக் கொல்லமுடியாது. இவ்வரிய பெரியதொழிலைக் கேவலம் தாமசகுணமெனப் பிதற்றித் திரிதல் பண்டையத் தீவினைப்பயனேயாம். சிவன் வரங்கொடுப்பவர் விஷ்ணு அதை யழிப்பவர் என்னும் வெறுங்கூற்று இதனால் கண்டிக்கப்பட்டொழிந்தது.

இத்தகைய அசாதாரண கிருத்தியங்களே பிரமத்துக்குரிய முக்கியலக்ஷணம். அதாவது உலகத்தைச் சிருஷ்டித்தலும், காத்தலும், அழித்தலுமேயாம். துரீய சிவத்துக்கு மேலொரு தெய்வமும், மஹாஸம்ஹாரத்துக்கு மேலொரு கிருத்தியமும் இல்லையென்பது இவற்றால் துணியப்பட்டது. அநுக்கிரக கிருத்தியம் என்னும் பாசக்ஷயம் இந்த ஸம்ஹாரத்தில் அடங்கியதாகும். அன்றியும், சாமவேத பைங்களோபநிஷத்தும், சாமவேத சாந்தோக்யோபநிஷத்தும் "[illegible]—ஏகமேவாத்விதீயம்ப்ரஹ்ம" என்று கூறியுள்ளன. இதில "பிரமமொன்றேயுள்ளது இரண்டாவது வஸ்து இல்லை" என்று பெறப்பட்டது. அப்படியே அதர்வ சிரோபநிஷத்தும், சுவேதாசுவதரோபநிஷத்தும் "[illegible]—ஏகஏவருத்ரோ நத்விதீயாயதஸ்து:" என்றோதின. இதில் உருத்திரன் ஒருவனே உளன். இரண்டாமவன் இல்லையென்று ஏற்பட்டது. இவைகளினாலே துரீய ருத்திராகிய பிரமத்துக்கு இரண்டாவதாக ஒன்றுமில்லையென்று நிர்ணயிக்கப்பட்டது. இருவித சுருதி வாக்கியங்களினும் ஏவகாரங்களும் அத்விதீய நத்விதீய பதங்களும் இருக்கின்றமையால் இவை ப்ரஹ்மத்வ நிருபண சுருதி போதங்களாயின. இந்தச் சுருதிகளோடு "ஏகோஹவை நாராயண ஆஸீத்" என்ற சுருதி இணைப்படாது. இதில் ஏவகாரமும் அத்விதீயபதமும் இல்லாமையால் பரதத்துவ நிருபணத்துக்கு

ஒருபோதும் ஸாதகமாகமாட்டாது. "நாராயண பரப்ப்ரஹ்ம நாராயணநமோஸ்துதே" என்னும் மஹாநாராயணோபநிஷத்தினும் வேறு உபநிஷத்துக்களிலுமுள்ள நாராயண பரத்துவமும் இம்முடிபிற்றானே அடங்குமென்று தெளிக.

ஸாமவேத மைத்ரேயோபநிஷத்.

𑌏𑌕𑌮𑍇𑌵𑌾𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌂 𑌯𑌦𑍍𑌗𑍁𑌰𑍋𑌰𑍍𑌵𑌾𑌕𑍍𑌯𑍇𑌨 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌂 । 𑌏𑌤𑌦𑍇𑌕𑌾𑌨𑍍𑌤𑌂 ।

ஏகமேவாத்விதீயம் யத்குரோர்வாக்யேநிச்சிதம் | ஏததேகாந்தம் |

(இ-ள்) "குருவாக்கியத்தினாலே அத்விதீயமாயுள்ளபொருள் ஏகமேயென எது நிச்சயிக்கப்பட்டதோ அதுதான் ஏகாந்தம்" என்று அறிவுறுத்தியிருத்தலால் ஏகாந்தஸ்தானத்தில் சுகாசனமிட்டுத் தலையுங்கழுத்தும் உடம்பின்மீது செவ்வே தளராமல் நிறுத்தி, குருவை நமஸ்கரித்து நிஷ்டை கூடுகின்றவர்களுக்கே இவ்வுண்மை அங்கை நெல்லிக்கனிபோல்விளங்காநிற்கும். ஏனையோர்க்கு விளங்குவதரிது. சிவபிரானே ஷை உபநிஷத்தில் "நான் பந்தமோக்ஷமில்லாதவனாயிருக்கிறேன். சுத்தமான பிரமமாயிருக்கிறேன்" என்னும் பொருள் போதர

𑌬𑌦𑍍𑌧𑌮𑍋𑌕𑍍𑌷𑌵𑌿𑌹𑍀𑌨𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌶𑍁𑌦𑍍𑌧𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌸𑍍𑌮𑌿 𑌸𑍋𑌽𑌸𑍍𑌮𑍍𑌯𑌹𑌂 ।

பந்தமோக்ஷவிஹீநோஸ்மி சுத்தம் ப்ரஹ்மாஸ்மி ஸோஸ்ம்யஹம் ||

என்று திருவாய் மலர்ந்தருளியுள்ளார். இதனாலே சிவமும் பிரமும் ஓரே பொருளைக்குறிக்கும் பரியாயப் பெயர்களாம். எல்லாப் பொருள்களுக்கும் பெரிதாயிருத்தலின் சிவம், பிரமமெனப்படுவதாயிற்று. "𑌬𑍍𑌰𑌹𑍍𑌮-ப்ரஹ்ம" என்னும் வடசொல் "𑌬𑍃𑌹-ப்ருஹ" என்னுந் தாதுவினின்றுந் தோன்றியது. அது ப்ருஹத்வமென்னும் மேன்மையையும், ப்ருஹ்மணத்வமென்னும் பெருத்திருக்குந்தன்மையையும் உணர்த்தாநின்றது.

தைத்ரீயோபநிஷத் ஆனந்தவல்லி

𑌸𑌤𑍍𑌯𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌨𑌨𑍍𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌯𑍋 𑌵𑍇𑌦 𑌨𑌿𑌹𑌿𑌤𑌂 𑌗𑍁𑌹𑌾𑌯𑌾𑌂 𑌪𑌰𑌮𑍇 𑌵𑍍𑌯𑍋𑌮𑌨𑍍 ।

ஸத்யம் ஜ்ஞானமனந்தம் ப்ரஹ்மயோ வேதநிஹிதம் குஹாயாம் பரமேவ்யோமந் |

(இ-ள்) "பிரமம் எப்பொழுதும் ஓரே தன்மையாயுள்ளது. அறிவாயுள்ளது. முடிவில்லாதது. இருதய குகையின்கண்

பரமாகாசத்திலுள்ள அதனை எவன் அறிகின்றான்" என்று விளக்கியது. அன்றியும், பிரமத்துக்குக் கடவுள் என்னும் பெயர் எங்கும் பிரசித்தமாயுள்ளது. கடவு + உள் = கடவுள். உள்ளமே உள் எனப்பட்டது. அதாவது, ஆத்மாவின் உள்ளக் குகையிலிருந்து ஆத்மாவை யியக்குதலால் உயிர்க்குயிராயுள்ள அந்தப்பிரமம் கடவுளெனப்பட்டதென்றறிக. ஸ்ரீமணிவாசகப் பிரானும் "ஆதிப்பிரமம் வெளிப்படுத்த வருளறிவா ரெம்பிரானுவாரே" என்று சிவமே பிரமமென ஓதியருளினார். நம் தாயுமான சுவாமிகளும் "தெரிவதற்கரிய பிரமமேயமல சிற்சுகோதய விலாசமே" என்றருளிச்செய்தனர். இவை இங்ஙனமிருக்க,

மேலே 77-ம் பக்கத்தில் உதாஹரித்த 15-வது சுருதிவாக்கியத்தில் சொல்லப்பட்ட உருத்திர மூர்த்தியினது பிறப்பு ஒரு கற்பத்தில் பரமசிவ சங்கற்பத்தின்படித் தோன்றிய குணருத்திரரையே பிரதிபாதிக்குமேயன்றி பிரமவிஷ்ணு ருத்ரேந்திரர்களாகிய யாவருக்கும் ஜனகரான துரீய ருத்திரரை ஒருபோதும் பாதிக்கமாட்டாது. அவருக்குப் பிறப்பிறப்பு சுருதிகளில் யாண்டுங் கேட்கப்பட்டிருக்கவில்லை. பண்டும் இன்றும் என்றுமுள்ள பரம்பொருள் அதுவேயாம். பிரம ருத்திரர்களுக்கு ஜனகர் நாராயணரென்று இந்தச் சுருதி கூறியபடியே,

அதர்வணவேத சரபோபநிஷத்

(1) [Grantha text]
(2) [Grantha text]

(1) யஸ்யாங்கஜோஹம் ஹரிரிந்த்ர முக்யா ।
(2) மமாபி விஷ்ணோர் ஜநகம் தேவ மீட்யம் ।

(இ-ள்) (1) "(பிரமனாகிய) நானும், விஷ்ணுவும், இந்திரனு பிறக்க உற்பத்திலயஸ்தானமானவர்" (2) "(பிரமனாகிய) எனக்கும், விஷ்ணுவுக்கும் ஜனகரும் புகழத்தக்க தேவருமாயிவர்" என்று கூறியுள்ளது. இதனாலே பிரம விஷ்ணுக் ஜனகர் உருத்திரமூர்த்தியென்றும் ஸ்பஷ்டமாய்த்தெரி இப்பிரமாணங்களால் விஷ்ணுவினிடம் உருத்திரர் தும், உருத்திரரிடம் விஷ்ணுபிறப்பதும், அவ்விருவ மன் உதிப்பதும், அவனிடத்தில் அவ்விருவர் தோ பபேதத்தாலென்றே அறியத்தக்கது. ஆகையி

லொருவருங் காரணராகார். அம் மூவரையுந் தோற்றுவிக்கும் சம்புவாகிய நான்காவது தெய்வமே (துரியசிவமே) பரமகாரண ராவர். அவரைப் பிறப்பித்தவர் நாராயணரென்று ஒருவசனம் சுருதியில் வெளிப்படுமாயின் அப்பொழுது பரமசிவத்துக்கு நாயகன் ஸ்ரீமந்நாராயணனென்று சைவர்கள் ஒப்புக்கொள்ள யாதொரு சமுசயமுமின்று. அப்படிக்கின்றி மதாபிமானத்தால் ஆசாரியவார்த்தைக்குப் பத்தை கட்டிப் பிடிவாதமாய்ப் பேசுவது அறிஞர் ஸதஸில் ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது. நித்தியத்வங் கேட்கப்போய் நித்ரைத்வங் கேட்டுப் பெற்றதையே நிகர்க்கும். இவ்வரிய உண்மைகளைப் புலன்கொள உணரமாட்டாரனைவரும் தத்தமக்சேற்றவா றெல்லாஞ் சாற்றுவர். அவை அங்கீகரிக்கப்படுவனவல்ல. துரீய பரசிவமே திரிமூர்த்திகளுந் தொழுந் தெய்வமென்பது வஜ்ஜிரலேபமாக நாட்டப்பட்டது. ஆண்டானை அடிமையாகவும், அடிமையை ஆண்டானாகவுங் கருதுதல் மாபாதகமாகும். "கனியிருக்கக் காய்கவர்ந்தகள்வனேனே." "கரும்பிருக்க இரும்புகடித் தெய்த்தவாறே." "பனிநீராற் பாவைசெயப் பாவித்தேனே." "விளக்கிருக்க மினிமினித்திக்காய்த்தவாறே." என்னுந் தித்திக்கும் அப்பர்வாக்கியங்களை உளத்திற்கொண்டு உய்வது கடனாம்.

மேலும் அக்கினி தத்வாதிஷ்டான தெய்வமாகிய குணருத்திரரைப் பிரம விஷ்ணுக்களுக்குத் தாழ்ந்தவரென்று கூறுதலுங் குற்றமாகும். பிருதிவியிலாவது அப்புவிலாவது அக்கினி பிறக்குமாயின் பிரமனிடத்திலாவது விஷ்ணுவினிடத்திலாவது இவ்வுருத்திரர் பிறந்தாரென்பது பொருந்தும். அப்படிக் கூறத் தத்துவ சாஸ்திரம் இடங்கொடாமையானும், "ஆகாசாத்வாயு: வாயோ
...யோரக்ஷிரவெஹராவ கூ ...ஹ்யிவி - ஆகாசாத்வாயுர்வாயோ
...ந்நிரக்நேராப அத்ப்ய: ப்ருதிவி" (இதன் பொருள் வெளிப்
...) என்று தைத்திரீயோபநிஷத்தும் ஸுபாலோப நிஷத்தும்
...ற்பத்தியைப் புகன்றபடி ஜலத்திற்கு அதிதேவதையா
...ராயணர் அக்கினிக்கு அதிதேவதையாயிருக்கிற உருத்
...க்குத் தாழ்ந்தவராகாமை யானும், பூதலயக்கிரமத்
...ரது ஸம்ஹாரத்தில் நாராயணர் லயமாகின்றமை
...தப் பூதக்கிரமம் பிறழாதிருக்கவே "பிரம விஷ்
...ணும் பிரயோகம் வேதங்களில் பலவிடங்களிலும்

படிக்கப்பட்டிருக்கின்றமையானும் குணருத்திரருக்கு ஜனகர் பிரம விஷ்ணுக்களல்லரென் றறிவாயாக. விஷ்ணுநாமம் பெரும் பான்மையும் உருத்திர சப்தத்துக்குக் கீழே படிக்கப்பட் டிருப்பதற்குங் காரணமிதுவே. "𑌅𑌨𑍍𑌤𑌰𑍍𑌬𑌹𑌿𑌶𑍍𑌚 𑌤𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌂 𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌯 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌸𑍍𑌥𑌿𑌤𑌃-அந்தர்பஹிச்ச தத்ஸர்வம் வ்யாப்யநா யண ஸ்திதஃ-உள்ளும் புறமும் அதனையெல்லாம் வியாபித்து நின்றனன் நாராயணன்" என்னுந் தைத்திரீய சுருதிகூறிய வுண் மையின் சர்வ வியாபகத்துவம் பிரகிருதியின்பாற் படுமேயன்றி அதன்மேற் செல்லாதென்றோர்க.

இனி திரிமூர்த்திகளுக்கும் அப்பாற்பட்ட துரீயமூர்த்தியே சைவசமயக் கடவுளெனவும், அம்முடிபே தேவார திருவாசகங் களிலும், சைவபுராணங்களிலும், முக்கியோபநிஷத்துக்களிலும் கூறப்பட்டிருக்கின்றன வெனவும் யாம் முடிவு கட்டியதற்குப் பிரமாணம் வருமாறு:—

## திருவாசகம்.

1. மூவரென்றே யெம்பிரானொடு மெண்ணி விண்ணுண்டுமண்மேற்
றேவரென்றே யிறுமாந்தென்ன பாவந்திரிதவரே.

2. தேவர்கோ வறியாத தேவதேவன்
செழும்பொழில்கள் பயந்துகாத் தழிக்குமற்றை
மூவர்கோ னாய்நின்ற முதல்வன் மூர்த்தி
மூதாதை மாதாளும் பாகத்தெந்தை.

3. முன்னானை மூவர்க்கு முற்றுமாய் முற்றாச்சும்
பின்னானைப் பிஞ்ஞகனைப் பேணு பெருந்துறையின்.

4. முந்து நடுவு முடிவு மாகிய மூவரறியாச்
சிந்துரச் சேவடி யானைச் சேவகனை வரக்கூவாய்.

5. முந்திய முதனடு விறுதியுமானாய், மூவருமறிகிலரியாவர் மற்றறிவார்

6. முழுமுதலேயைம்புலனுக்கு மூவர்க்கு மென்றனக்கும்-வழிமுதலே.

7. தேவதேவன் மெய்ச்சேவகன் றென்பெருந்துறை நாயகன்
மூவராலு மறியொணா முதலாய வானந்த மூர்த்தியான்.

8. மூவருமுப்பத்து மூவருமற்றொழிந்த, தேவருங் காணாச்சிவபெருமா

## திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் தேவாரம்.

9. தேவராயு மசுரராயுஞ் சித்தர்செழு மறைசேர்
நாவராயு நண்ணுபாரும் விண்ணெரி காணீரு

மேவராய விரைமலரோன் செங்கண்மாலீசனென்னு
மூவராய முதலொருவன் மேயதுமுதுகுன்றே.

10. வரியாய மலரானும் வையந்தன்னை -யுரிதாயளந்தானு முள்ளுதற்கங்கரியானுமறியாத கள்ளின்மேயான்-பெரியானெனன்றறிவார்கள் பேசுவாரே.

## சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம்.

11. மாவையுரித்ததன் கொண்டங்க மணிந்தவனை வஞ்சர் மனத்திறையுநெஞ்சணுகாதவனை-மூவருருத்தனதா மூலமுதற்கருவை.

## திருமூலர் திருமந்திரம்.

12. அவனன்றி மூவராலாவதொன்றில்லை-அவனன்றியூர்புகுமாறறியேனே

## பொன்வண்ணத்தந்தாதி.

13. வீரனயனரி—யாருமறியாவகை யெங்களீசர் பரிசுகளே.

## பெரியபுராணம்.

14. மூவருக் கறிவரும் பொருளாகிய மூலத்
தேவர்தந் திருவாவடு துறைத் திருத்தொண்டர்
பூவலம்புதண் பொருபுனற் றடம்பணை புகலிக்
காவலர்க் கெதிர்கொள்ளு மாதரவுடன் கலந்தார்,

## திருவிளையாடற்புராணம்.

15. முத்தொழிலின் மூவராய் மூவர்க்குந்தெரியாத முக்கண்மூர்த்தி.

16. மலர்மகனாகி மூன்று வையமும் படைத்து மாலாய்
அலைவற நிறுத்தி முக்கணாதியா யழித்தம் மூவர்
தலைவனாய்ப் பரமாகாச சரீரியாய் முதலீறின்றி
தொலைவரும் சோதியா மிச் சுந்தர லிங்கந்தன்னில்.

17. சச்சிதாநந்தமா மத்தனிப்பரசிவனே தன்ன
திச்சையாலகில மெல்லாம் படைத்தளித்தீறுசெய்யும்
விச்சைவானவரைத் தந்த மேலவன் பிறவித்துன்பத்
தச்சமுற்றிடுவோர்க்கானு வின்பவீடளிக்கு மன்னோன்,

## திருவெண்காட்டடிகள்.

18. விதியார்படைப்பு மரியாரளிப்பும் வியன்கயிலைப்
பதியார் துடைப்பும் நம்பாலணுகாது.

## திருவருணைக்கலம்பகம்.

ஓதருணைவித்தகனை மூவரிலொருத்தனென வோதியிடு மற்பமதியீர்.

## சூதசம்ஹிதை.

ருமறியா முதல்வனுமிறைவன் மூர்த்தியாய் முழுந்திய வருளாற்
கண்ணி பங்கனாய் வந்து தோன்றினன் கண்ணினாற்காண.

21. முத்தேவருக்கு மருள் புரியு முதல்வனீயே மற்றுமுள்
எத்தேவருக்கும் வரங்கொடுக்கு மிறைவனீயே.

## அதர்வணவேத அதர்வசிரோபநிஷத்.

1 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑍁𑌦𑍍𑌰𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌸𑍍𑌤𑍇 𑌸𑌂𑌪𑍍𑌰𑌸𑍂𑌯𑌨𑍍𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌚𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌸𑌹𑌭𑍂𑌤𑍈𑌰𑍍𑌨𑌕𑌾𑌰𑌣𑌂 𑌕𑌾𑌰𑌣𑌾𑌨𑌾𑌂 𑌧𑍍𑌯𑌾𑌤𑌾 𑌕𑌾𑌰𑌣𑌂 𑌤𑍁 𑌧𑍍𑌯𑍇𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑍈𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌸𑌂𑌪𑌨𑍍𑌨𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇𑌶𑍍𑌵𑌰𑌃 𑌶𑌂𑌭𑍁𑌰𑌾𑌕𑌾𑌶𑌮𑌧𑍍𑌯𑍇.

ஸர்வமிதம் ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரேந்த்ராஸ்தே ஸம்ப்ரஸூயந்தே ஸர்வாணி சேந்த்ரியாணி ஸஹபூதைர்நகாரணம் காரணாநாம் த்யாதா காரணந்துத்யேயஸ் ஸர்வைச்வர்ய ஸம்பந்நஸ் ஸர்வேச்வரச் சம்புராகாச மத்யே.

(இ-ள்) "பிரமன், விஷ்ணு, உருத்திரன், இந்திரனாகிய இவர்களெல்லாம் படைக்கப்படுகின்றனர். இந்திரியங்களெல்லாம் பூதங்களோடு பிறப்பிக்கப்படுகின்றன. (ஆதலின்) அவர்களும் அவைகளும் காரணங்களாகா. தியாதாக்களாகிய அவ்வவாந்தர காரணர்களாலே தியானிக்கப்படும் பொருளாகிய(பரம) காரணனன்றோ த்யேயன். ஸர்வைசுவரியங்களுமுடைய ஸம்பந்நன். ஸர்வேசுவரன். சம்பு. பரமாகாசமத்தியி லிருப்பவன்."

2. ப்ரதமா ரக்தா பீதா மஹத்ப்ரஹ்ம—(47-ம் பக்கம் பார்க்க.)

## கிருஷ்ணயஜுர்வேத கைவல்யோபநிஷத்.

3. 𑌉𑌮𑌾𑌸𑌹𑌾𑌯𑌂 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌂 𑌪𑍍𑌰𑌭𑍁𑌂 𑌤𑍍𑌰𑌿𑌲𑍋𑌚𑌨𑌂 𑌨𑍀𑌲𑌕𑌣𑍍𑌠𑌂 𑌪𑍍𑌰𑌶𑌾𑌨𑍍𑌤𑌂 । 𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌵𑌾 𑌮𑍁𑌨𑌿𑌰𑍍𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 𑌭𑍂𑌤𑌯𑍋𑌨𑌿𑌂 𑌸𑌮𑌸𑍍𑌤𑌸𑌾𑌕𑍍𑌷𑌿𑌂 𑌤𑌮𑌸𑌃 𑌪𑌰𑌸𑍍𑌤𑌾𑌤𑍍 ॥ 𑌸 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾 𑌸 𑌶𑌿𑌵𑌃 𑌸𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌃 𑌸𑍋𑌽𑌕𑍍𑌷𑌰𑌃 𑌪𑌰𑌮𑌃 𑌸𑍍𑌵𑌰𑌾𑌟𑍍 । 𑌸 𑌏𑌵 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌃.

உமாஸஹாயம் பரமேச்வரம் ப்ரபும் த்ரிலோசனம் நீலகண்டம் ப்ரசாந்தம் । த்யாத்வாமுநிர்கச்சதி பூதயோநிம் ஸமஸ்த ஸாக்ஷிம் தமஸ: பரஸ்தாத் ॥ ஸப்ரஹ்மா ஸசிவஸ் ஸேந்த்ரஸ் ஸோக்ஷர: பரமஸ்வராட் । ஸஏவ விஷ்ணு:.

(இ-ள்) "உமாசகாயரும், பரமேசுவரரும், பிரபுவும், முக்கண்ணரும், நீலகண்டரும், பரமசாந்தரும், பூதகாரணரும், சமஸ்த சாக்ஷியுமாயுள்ளவரைத் தியானித்து அதனால் துறவியானவன் பிரகிருதிக்கு அப்பாற் செல்வான். அவரே பிரமன். அவரே சிவன் (குணருத்ரன்). அவரே இந்திரன். அவரே அக்ஷரன்.

அவரே பரமன். அவரே ஸ்வராட் (சொப்பிரகாசன்). அவரே விஷ்ணு."

அதர்வணவேத நராத பரிவிராஜகோபநிஷத்.

4. 𑌕𑌵𑌿𑌂 𑌪𑍁𑌰𑌾𑌣𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮𑍋𑌤𑍍𑌤𑌮𑌂 𑌸𑌰𑍍𑌵𑍇𑌶𑍍𑌵𑌰𑌂 𑌸𑌰𑍍𑌵𑌦𑍇𑌵𑍈𑌰𑍁𑌪𑌾𑌸𑍍𑌯𑌂 । 𑌅𑌨𑌾𑌦𑌿 𑌮𑌧𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌮𑌨𑌨𑍍𑌤𑌮𑌵𑍍𑌯𑌯𑌂 𑌶𑌿𑌵𑌾𑌚𑍍𑌯𑍁𑌤𑌾𑌮𑍍𑌭𑍋𑌰𑍁𑌹𑌗𑌰𑍍𑌭𑌭𑍂𑌧𑌰𑌮𑍍 ।

கவிம் புராணம் புருஷோத்தமோத்தமம் ஸர்வேச்வரம் ஸர்வதேவை ருபாஸ்யம் । அநாதி மத்யாந்த மநந்த மவ்யயம் சிவாச்யுதாம் போரு கர்ப பூருஹம் ।

(இ-ள்) "சர்வஞ்ஞனும், பழமையோனும், உத்தமபுருஷர்களில் உத்தமனும், சர்வேசுவரனும், சர்வதேவதைகளால் உபாசிக்கப்படுபவனும், ஆதிமத்யாந்தமில்லாதவனும், எல்லையற்றவனும், நாசமற்றவனும், சிவன், விஷ்ணு, பிரமர்களுக்குக் காரணனும்."

5. ப்ரபஞ்சோபசமம் சிவம் சாந்தமத்வைதம் சதுர்த்த மந்யந்தே.

கிருஷ்ணயஜுர்வேத ப்ரஹ்மோபநிஷத்.

6. தத்ர சதுஷ்பாதம் ப்ரஹ்ம விபாதி.—(10-ம் பக்கம் பார்க்க).

ஸாமவேத மஹோபநிஷத்.

7. ப்ரஹ்மா விஷ்ணுச்சருத்ரசச.—(11-ம் பக்கம் பார்க்க).

கிருஷ்ணயஜுர்வேத் பஞ்சப்ரம்மோபநிஷத்.

8. அவஸ்தாத்ரிதயாதீதம் துரீயம்.—(12-ம் பக்கம் பார்க்க).

அதர்வணவேத பஸ்ம ஜாபாலோபநிஷத்.

9. அத்வைதம் சதுர்த்தம் ப்ரஹ்மவிஷ்ணு ருத்ராதீதம்.—(70-ம் பக்கம் பார்க்க).

அதர்வணவேத மாண்டூக்யோபநிஷத்.

10. நாந்தஃ ப்ரக்ஞம் நபஹி ப்ரக்ஞம் நோபயதப்ரக்ஞம்.—(67-ம் பக்கம் பார்க்க).

11. அமாத்ரச்சதுர்த்தோ வ்யவஹார்ய: ப்ரபஞ்சோபசமம்.—(67-ம் பக்கம் பார்க்க).

அதர்வணவேத ந்ருஸிஹ்ம பூர்வ உத்தரதாபிந்யுபநிஷத்.

12. ப்ரபஞ்சோபசமம் சாந்தம் சிவமத்வைதம் சதுர்த்த மந்யந்தே.

அதர்வணவேத ராமோத்தரதாபிந்யுபநிஷத்.

13. ப்ரபஞ்சோபசமம் சாந்தம் சிவமத்வைதம் சதுர்த்தமந்யந்தே.

கிருஷ்ண யஜுர்வேத சுவேதாசுவதரோபநிஷத்,

14. 𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌪𑌤𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑍇𑌶𑌃 ।

ப்ரதாநக்ஷேத்ரஜ்ஞ பதிர்குணேச: ।

(இ-ள்) "முக்குணமயமான பிரகிருதி, க்ஷேத்ரக்ஞன் ஆகிய இரண்டுக்கும் பதி குணேசன் (அதாவது குணமூர்த்திகளாகிய பிரம விஷ்ணு ருத்ரமூர்த்திகளுக்கு நியந்தா.)"

மஹாபாரதம் அநுசாஸநிகபர்வம்.

15. 𑌸𑌏𑌷𑌭𑌗𑌵𑌾𑌨𑍀𑌶𑌸𑍍 𑌸𑌰𑍍𑌵𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌦𑌿𑌰𑌵𑍍𑌯𑌯𑌃 ।
𑌸𑌰𑍍𑌵𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌵𑌿𑌧𑌾𑌨𑌜𑍍𑌞𑌃 𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌪𑍁𑌰𑍁𑌷𑍇𑌶𑍍𑌵𑌰𑌃 ॥
𑌸𑍋𑌸𑍃𑌜𑌦𑍍𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌾𑌦𑌙𑍍𑌗𑌾𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌣𑌂 𑌲𑍋𑌕𑌸𑌂𑌭𑌵𑌮𑍍 ।
𑌵𑌾𑌮𑌪𑌾𑌰𑍍𑌶𑍍𑌵𑌾𑌤𑍍𑌤𑌥𑌾𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌂 𑌲𑍋𑌕𑌰𑌕𑍍𑌷𑌾𑌰𑍍𑌥𑌮𑍀𑌶𑍍𑌵𑌰𑌃 ॥
𑌯𑍁𑌗𑌾𑌨𑍍𑌤𑍇𑌚𑍈𑌵𑌸𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍇 𑌰𑍁𑌦𑍍𑌰𑌂 𑌪𑍍𑌰𑌭𑍁𑌰𑌥𑌾𑌸𑍃𑌜𑌤𑍍 ।

ஸஏஷபகவாநீசஸ் ஸர்வதத்வாதிரவ்யய: ।
ஸர்வதத்வவிதாநஜ்ஞ: ப்ரதாநபுருஷேச்வர: ॥
ஸோஸ்ருஜத் தக்ஷிணாதங்காத் ப்ரஹ்மாணம் லோகஸம்பவம் ।
வாமபார்ச்வாத் ததாவிஷ்ணும் லோகரக்ஷார்த்த மீச்வர: ॥
யுகாந்தே சைவஸம்ப்ராப்தே ருத்ரம் ப்ரபு ரதாஸ்ருஜத் ।

(இ-ள்) "இந்தப் பகவானாகிய ஈசர் சகல தத்துவங்களுக்கும் ஆதியானவரும், அளவிடப்படாதவரும், சகல தத்துவங்களையும் உண்டுபண்ண அறிந்தவரும், பாசுபசுக்களுக்கு ஈசுவருமாக உள்ளவர். அவரே உலகங்களை படைக்கும்பொருட்டுத் தனது வலதுபுறத்தில் பிரமதேவனையும், உலகங்களைக் காக்கும்பொருட்டுத் தனது இடதுபுறத்தில் விஷ்ணுவையுஞ் சிருஷ்டித்தனர். யுகத்தின் முடிவில் சம்ஹாரத்தின்பொருட்டு உருத்திரனை அந்தப் பிரபுவே சிருஷ்டித்தார்." (இதே வாக்கியங்கள் வாயுசம்ஹிதை 27-ம் அத்தியாயத்திலு முள்ளன.)

மேலே கூறிப்போந்த தென்மொழி வடமொழிகளின் ஸர்வோத்தம பிரபல பிரமாண பாஹுள்யங்களால் படைத்தற்கடவுளாகிய பிரமனும், காத்தற்கடவுளாகிய விஷ்ணுவும், சங்கார கடவுளாகிய உருத்திரரும் பரமகாரண ரல்லரென்றும், அவர்களுக்கும் அதீதராயுள்ள துரீய சிவமே பரமகாரணரென்றும் ஸ்தாபித்ததாயிற்று. திரிமூர்த்திகளிற் போந்த உருத்திரர் சைவர்கள் வணங்கும் பரப்பிரமப் பொருளல்லர் என்று இனியாவது வைஷ்ணவர்களறிந்து க்ஷேமமடைவார்களாக. இதுவே சைவநூல்களெல்லாவற்றிலுமுள்ள துணிபு. இந்த வுருத்திரர் "ய்ஃ ஜ்-த்யாதாருத்ரஃ" என்று அதர்வணவேத அதர்வசிகோபநிஷத் அறைந்தபடி சேதனருள் விசிஷ்டர். சித்ஜடப் பிரபஞ்சங்கள் யாவும் சிவபிரானது திருமேனியாகலின் அவை யாவுமே பிரமம் என்று வேதஞ்சாற்றியது சால்புடைத்தே. அவற்றுள்ளும் திரிமூர்த்திகள் விசிஷ்டமுடையவர்களாதலின் அவர்களை வேறுபிரித்துத் தனித்தனி பிரமங்களெனப் புகழ்ந்ததும் அவ்வேதத்துக்குச் சிறப்பே. அவர்களினும் உருத்திரமூர்த்தி அதிக விசிஷ்டமுடையவராதலின் அவரைப் பிரமத்தில் அபேதமாகப்படித்து அப்பிரமத்தின் யோகரூடி நாமங்களைக் கொண்டு அவ்வுருத்திரரைப் பரவியதும் இன்னும் அதிக பெருமையே. சிவசாரூப்பிய மெய்திய இக்குணருத்திரர் சைவர்களுள் சமயதீக்ஷைபெற்றவர்களாலும், மற்றவர்களாலும் வழிபடுந் தெய்வமாயிருத்தலானும், நான்காவது மூர்த்தியாகிய துரீய மகாவுருத்திரரது நாமதேயங்களையுந் தாங்கி அத் திரிமூர்த்திகளில் முதன்மைபெற்று விளங்குதலானும், அவருக்கு வேறாகச் சுருதிவந்திதமான நான்காவது மூர்த்தி இல்லை யென்று இக்கலகாசாரியர் வரைந்துவைத்த அசட்டுக்கூற்று அவலமாயிற்றன்றோ. பொய்யைக் கற்பித்து இவர் சிவநிந்தையில் இழிந்தாலும் "ஸத்யமேவஜயதே" என்னும் உபநிஷத் பிரமாணம் பொய்க்குமோ! அல்லாமலும் சிவபெருமானது திருமேனியோ ஞானகனம். உருத்திர மூர்த்தியினது திருமேனி மாயாகனம். இவ்விரண்டிற்குமுள்ள பேத மறியாமல் பெயரொற்றுமையைக்கொண்டே சைவர்களுக்குத் துரீயமூர்த்தி யில்லையென்று நிந்தித்தல் கேவலம் அஸப்பியம். இவரை ஒருவர் பெருமாளென்றழைத்தால் நாம ஒற்றுமையால் இவர் பெருமாளாய்விடுவாரா. கூர்த்தமதி கொண்டுணர்வார்க்கன்றோ இவ்வுண்மை விளங்கா நிற்கும்.

சாதாரணமாய் ஸ்தபதியினால் சமைக்கப்பட்ட அசேதன சிலாரூபமாகிய சிவ வடிவம் சிவமென்றே எண்ணப்பட்டுப் பக்தி, சிரத்தையோடு ஆராதனை செய்யப்பட்டுவருமாயின் நாமரூப தொழிலொற்றுமைகளால் சிவமாகவே விளங்கும் சேதன விசிஷ்டகுணருத்திரர் பிரமமாதற்கு யாது தடை. சிலாரூபமான சிவ வடிவைச் சிவமாகப் பாராமல் கல்லாகப் பார்த்தபோது அது எப்படி தியஜிக்கப்படுகின்றதோ அதுபோலக் குணருத்திரரைத் துரீயமூர்த்தியாகப் பாராமல் குணருத்திரராகப் பார்த்தபோது சுருதி கூறியபடி நகாரணமாக வொத்துக்கத்தக்கவரே யன்றி வேறல்லர். இவரது கதியே இவ்வாறிருப்பின் கருக்குழி நாற்றங்கமழப்பெற்றுப் பிறந்திறந்துழலும் பிரம விஷ்ணுக்களைப்பற்றி கேட்கவும் வேண்டுமோ! ஆதலினன்றோ ஸ்ரீ பகவத் பாதாசாரியாளாகிய சங்கராசாரியர் தாமியற்றிய சிவானந்தலஹரியில் "எனக்குப் பிரம விஷ்ணுக்களாய்ப் பிறந்திறந்துழலும் ஜன்மங்கள் வேண்டாம். அப்படியான் பிறப்பின் ஹம்ஸமாகவும் வராஹமாகவும் வடிவெடுத்து அஹங்காரத்தா லுன்னை யறந்து துயரத்தில் அழுந்தகேரிடும்" என்று சிவபிரானை இரந்து வேண்டிக்கொண்டனர். அவர் சிவனை விஷ்ணுவாதியோரால் ஸேவிக்கப்படும் ஸேவ்யரென்று பன்முறையுந் துதித்துள்ளார். விஷ்ணுவைப் பிரமனாதியோரால் ஸேவிக்கப்படும் ஸேவ்யரென்று வந்தித்துள்ளாரேயன்றி சிவனைச் சேவகரென்று யாண்டுங் கூறினாரல்லர், மணிவாசகப்பிரானும் "கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு குடிகெடினும், நள்ளேன" என்று அறைந்தருளினர். கண்ணுடைய வள்ளலாரும் "மாலயனு யிந்திரனுய் வாழுவதாய் மாளுவதாஞ்-சாலமயல் பார்த்துத் தலையசைப்பர்" என்றனர். இவற்றையெல்லாஞ் சீர்தூக்கிப் பார்க்கின்றபோது வைஷ்ணவ சமயிகளது தெய்வம் திரிமூர்த்திகளில் ஒருவராகிய நாராயணரெனவும், வைதிக சைவர்களது தெய்வம் திரிமூர்த்தியுத்தீரண சிவபெருமானெனவும ஸ்தாபிக்கப்படுகின்றது. நாராயணரைத் தியேயப் பொருளாகக் கூறிய வசனம் வேதத்தில் யாண்டுங் கிடையாது. சிவபிரானைத் தியேயப் பொருளாகத் துதித்த வசனங்கள் அனேகமுள. அவற்றை முன்னரும் பிரஸ்தாபித்தாம். பின்னரும் இடம் வந்துழிமொழிவாம்.

முனிவேந்தராகிய வியாசரது அபிப்பிராயமும் சிவபெருமானே பரம்பொருளென்பது அவரது அஷ்டாதச புராணங்களாலும் அறியக்கிடக்கின்றது. புராணங்கள் பதினெட்டனுள் சிவபுராணம் பத்து. விஷ்ணுபுராணம் நான்கு. பிரமபுராணம் இரண்டு. சூரியபுராணம் ஒன்று. அக்கினிபுராணம் ஒன்று. இந்தப் புராணங்கள் யாவும் சிவன், விஷ்ணு, பிரமன், சூரியன், அக்கினி என்னும் ஐந்து தேவதைகளையே பிரதிபாதிக்கின்றன. அவருள் பிரமன், சூரியன், அக்கினி ஆகிய இவர்களை ஜகத்காரணப் பிரமங்களென்று அங்கீகரிக்கும் வைதிக சிரேஷ்டர்கள் ஒருவருமில்லை. சிவனையும் விஷ்ணுவையுமே சைவருள் ஒருசாராரும் வைஷ்ணவரும் முறையே பரவஸ்துவாகக்கொண்டு வழிபட்டு வருகின்றார்கள். ஆனால்,

ஸாமவேத மைத்ராயண்யுபநிஷத்.

𑌤𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌾 𑌅𑌗𑍍𑌰𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑌨𑌵𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾 𑌰𑍁𑌦𑍍𑌰𑍋 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑌿𑌤𑌿 ।

தஸ்யப்ரோக்தா அக்ர்யாஸ்தநவோப்ரஹ்மா ருத்ரோவிஷ்ணுரிதி ।

(இ-ள்) "அந்தப் பரமாத்மாவாகிய பிரஜாபதி என்னும் பசுபதிக்குப் பிரமன், விஷ்ணு, உருத்திரன் என்னும் மூவர்களும் முதன்மையான சரீரங்கள் என்று சொல்லப்படும" என்று சாற்றியது. இவ்வாக்கியத்தில் சிவனையும் விஷ்ணுவையும் பிரமனோடு சேர்த்து தநுக்களென்றோதியபடியால் (தநுவாவது—ஆத்மா.) இவர்களுக்கு அந்தர்யாமியாகிய சைதந்யம் வேறென்றும், அதுவே நான்காவது தெய்வமாகிய சிவமென்றும், திரிமூர்த்திகளுந் தேகத்தைப்போல் ஸ்வதந்தரமற்ற ஜீவர்களென்றும் அங்கை நெல்லிக்கனிபோல் விசதமாயிற்று. அதனாலே, சிவபுராணங்களில் கேட்கப்படும் விஷ்ணு நிந்தையும், விஷ்ணு புராணங்களில் கேட்கப்படுஞ் சிவநிந்தையும் அவ்விருவர்களும் மற்ற மூன்று தேவதைகளைப்போல் ஜீவர்களென்று சாதித்தற்கேயன்றி வேறன்று.

சுக்லயஜுர்வேத நிராலம்போபநிஷத்.

1\. 𑌸 𑌏𑌵 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌷𑍍𑌣𑍍𑌵𑍀𑌶𑌾𑌨𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌦𑍀𑌨𑌾𑌂 𑌨𑌾𑌮𑌰𑍂𑌪𑌦𑍍𑌵𑌾𑌰𑌾
𑌸𑍍𑌥𑍂𑌲𑍋𑌹𑌮𑌿𑌥𑍍𑌯𑌾𑌧𑍍𑌯𑌾𑌸𑌵𑌶𑌾𑌜𑍍𑌜𑍀𑌵𑌃 ।

ஸ ஏவ ப்ரஹ்மவிஷ்ணவீசா கேந்த்ராதீநாம் நாமரூபத்வாரா
ஸ்தூலோஹ மித்யத்யாஸவசாஜ்ஜீவ: ।

(இ-ள்) "ஈசுவரனே பிரமன், விஷ்ணு, உருத்திரன், இந்திரன் முதலிய நாமரூபவாயிலாகத் தூலமாயிருக்கிறேன் என்று (அத்யாஸம்) சுமத்திக்கோடலாற் ஜீவனாகின்றனன்" எனவும்,

அதர்வணவேத சரபோபநிஷத்.

2. 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌦𑍇𑌵𑌾𑌃 𑌪𑌶𑍁𑌤𑌾𑌮𑌵𑌾𑌪𑍁𑌃 𑌸𑍍𑌵𑌯𑌂 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌪𑌶𑍁
𑌪𑌤𑌿𑌰𑍍𑌭𑌵 । 𑌤𑌸𑍍𑌮𑍈 𑌰𑍁𑌦𑍍𑌰𑌾𑌯 𑌨𑌮𑍋𑌽𑌸𑍍𑌤𑍁 ।

ஸர்வேதேவா: பசுதாமவாபு:ஸ்வயம் தஸ்மாத்பசுபதிர்பூவ தஸ்மை ருத்ராய நமோஅஸ்து ।

(இ-ள்) "எல்லாத் தேவர்களும் பசுக்களாயுள்ளார்கள். அவர்களை யாளுபவர் பசுபதியாகிய சிவபெருமான். அத்தகைய உருத்திரமூர்த்திக்கு நமஸ்காரம்" எனவும்,

3. 𑌵𑌿𑌷𑍍𑌣𑍍𑌵𑌾𑌦𑌿 𑌕𑌾𑌂𑌸𑍍𑌸𑍁𑌰𑌾𑌨𑍍 – விஷ்ணவாதி காந்ஸுராந்

(இ-ள்) "விஷ்ணு முதலியசுரர்கள்" எனவும் கூறிப்போந்தவாறு காண்க.

ஆகையினாலே அஷ்டாதசபுராணங்களிற் சொல்லப்பட்ட பரத்துவமும் மஹிமையும் நான்காவது தெய்வத்துக்கே சொந்தமென்பது சுருதி யுக்தி அநுபவவாயிலாக அறியக்கிடக்கின்றது. இவற்றை ஒவ்வொருவரும் ஊன்றி விசாரிக்கவேண்டிய தவசியம். ஸ்தூலபார்வையில் ஒவ்வொரு புராணமும் அந்தந்த தேவதாபரமாகவே தோன்றும். ஸூக்ஷ்மபார்வையிலேயோ அத்தேவதைகளுக்கு அந்தர்யாமியாய், ஸர்வகாரண துரீய பரசிவ பரத்வபோதகமாய் விளங்காநிற்கும். இவ்வாறு புராணங்களின் பிராணனை அறியாவிடத்து அவையாவும் பிதற்றேயாகும். இவ்வுண்மையைக் கடைப்பிடித்துய்க.

இனி எடுத்துக்கொண்ட விஷயத்தை இனிது முடிப்பாம். வேதங்களில் பல சாகைகளிலுமுள்ள ருத்ரசம்ஹிதை அம்பிகைபாகனொருவனையே சர்வசொரூபனென்று கூறியிருப்பது வேதவிற்பன்னர்கள் யாவரும் அறிந்தவிஷயம். ஏதோ சில ஏகதேசவசனங்கள் அரிபிரமாதி அமரர்களையுங்கூட சர்வசொரூபர்களென்றுநிரூபித்தனவாயினும் வேதசாகைகள்தோறும் ருத்ரசம்ஹிதைசிவனே சர்வசொரூபனென்று பலபடியாலும்நிர்ணயித்து அச்சம்ஹிதைகளுக்குப் பேரணியாய் விளங்குதலால் அவற்றின்

முன் இவ்வேகதேசவசனங்கள் பிரபலபிரமாணங்களாகா. வைணவ பூர்வாசாரியர்களுக்குள் ஒருவராகிய யமுனைத்துறைவர் "யாவன் புண்டரீகநயனன்" "யாவன் புருடோத்தமன்" என்றற்றொடக்கத்தனவான தோத்திரமாலை யொன்று இயம்பியுள்ளார். அதற்கு உரைசெய்த ஆசிரியர் வெங்கடநாதர் புருஷச்சொல்லுக்கு நாராயணனே பொருளென்று எட்டு ஹேதுக்களைக் கொண்டு சாதித்துள்ளார். அவையாவும் அப்பொழுதே ஸ்ரீமத். அப்பைய தீக்ஷித சுவாமிகள் முதலிய மகான்களால் சுருதிகளைக்கொண்டே நியாயவாயிலாகக் கண்டிக்கப்பட்டு எரிமுன் பூளைபோல் மாய்ந்தொழிந்து போயின. புராண வசனங்களால் விஷ்ணுமூர்த்தியும், புராண வேத வசனங்களால் உருத்திரமூர்த்தியும் புருஷச்சொல்லுக்குப் பொருளாயிருத்தலின் வைதிகவிவகாரத்தில் வைதிக விவகாரமே பிரதானமாகும். புருஷனென்பது பூரணன் என்னும் பொருளைத் தருமென்று முன்னமே விரிவாய்ச் சுருதிவாக்கியங்களைக் கொண்டு விளக்கியுள்ளோமாதலின் புருஷசூக்தம் சிவபரமாகுமேயன்றி நாராயணபரம் ஒருபோது மாகாதென்பது தேற்றம். புருஷசூக்தப்பொருள் பிரம விஷ்ணு உருத்திரர் என்னும் மூவருமாகார். ஓங்காரவாச்சியரும் நான்காவது தெய்வமுமான சிவபெருமானேயாவர் என்பதை அஞ்ஞான சந்தேக விபரீதமற அடியில் விளக்கிக் காட்டுவாம்.

எல்லாக்கடவுளரும் தாமாகவிளங்கப்பெற்ற சாக்ஷாத்பரப்பிரம சிவபிரானார் புருஷசூக்தத்துக்கு உட்பொருளாயமைந்துள்ளாரென்று கூறும் அளவிறந்த வேதப்பிரமாணங்களுட் சிலவற்றை மாத்திரம் ஈண்டு எடுத்துச்சொல்வோம். சிரத்தையோடும் பக்தியோடுங் கேட்டுத் தெளிவாயாக. புருஷசூக்தமானது யஜுர்வேதத்தில் இருபத்துநான்கு மந்திரங்களாய் இரண்டு அநுவாகப் பகுப்புகளுடன் விளங்குகின்றதென்று முன்னமே கூறினுமன்றோ. அவற்றுள் முதல் அநுவாகம் பதினெட்டு மந்திரங்களையும் இரண்டாவது அநுவாகம் ஆறுமந்திரங்களையும் பெற்றுள்ளன,

1. சூக்தத்தின் உபக்கிரம (ஆரம்பம்)த்திலுள்ள "ஸஹஸ்ர ஶீர்ஷா புருஷ: - ஸஹஸ்ரசீர்ஷா புருஷ:" என்பதுமுதல் "யதந்நேநாதிரோஹதி - யதந்நேநாதிரோஹதி" என்பதுவரை

யிலுமுள்ள இரண்டுமந்திரங்களைப் பஞ்சருத்திரங்களிலொன்றா கிய மந்திரோபநிஷத் என்னும் சுவேதாசுவதரோபநிஷத் சொற்றி ரிவு சிறிதுமின்றி அப்படியே படித்துச் சிவபரமாய் விளக்கிக் காட்டினமையானும்,

2. அவ்விரண்டு மந்திரங்களின் அரும்பொருளை அவற்றிற்கு வியாக்கியானமாக அவற்றின் பின்வரும் அடியிற்காட்டிய இர ண்டு மந்திரங்களால், அவ்வுபநிஷத்தே நன்கு நிரூபித்திருக்கின் றமையானும்,

𑌸𑌰𑍍𑌵𑌤𑌃 𑌪𑌾𑌣𑌿𑌪𑌾𑌦𑌂 𑌤𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌤𑍋𑌽𑌕𑍍𑌷𑌿 𑌶𑌿𑌰𑍋𑌮𑍁𑌖𑌮𑍍 ।
𑌸𑌰𑍍𑌵𑌤𑌃𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌮𑌲𑍍𑌲𑍋𑌕𑍇 𑌸𑌰𑍍𑌵𑌮𑌾𑌵𑍃𑌤𑍍𑌯 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿 ॥
𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑍁𑌣𑌾𑌭𑌾𑌸𑌂 𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯 𑌵𑌿𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌮𑍍 ।
𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌭𑍁𑌮𑍀𑌶𑌾𑌨𑌂 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌶𑌰𑌣𑌂 𑌸𑍁𑌹𑍃𑌤𑍍 ॥

ஸர்வதஃ பாணிபாதந்தத் ஸர்வதோக்ஷி சிரோமுகம் ।
ஸர்வதச்ருதிமல்லோகே ஸர்வமாவ்ருத்யதிஷ்டதி ॥
ஸர்வேந்திரியகுணாபாஸம் ஸர்வேந்திரியவிவர்ஜிதம் ।
ஸர்வஸ்யப்ரபுமீசாநம் ஸர்வஸ்யசரணம் ஸுஹ்ருத் ॥

(இ-ள்) "அது எங்குங் கையுங் காலுமுள்ளது. எங்குங் கண்ணும், தலையும், முகம் உள்ளது. எங்குங் காதுள்ளது. உலகமெல்லாம் வியாபித்துக்கொண்டிருக்கின்றது."

"எல்லாவிந்திரிய குணங்களையும் விளக்குவது. எல்லாவிந் திரியங்களும் இல்லாதது. எல்லாவற்றிற்கும் பிரபு ஈசானன். எல்லாச் சீவராசிகளுக்கும் புகலிடமாயுள்ளது. எல்லாரையும் நல்வழியில் நடத்துவது" என்பதாம்

3. "𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌕𑍍𑌷𑌃" - "புருஷஃ ஸஹஸ்ராக்ஷஃ" என்னும் இரண்டுசொற்கள் 𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌯 𑌵𑌿𑌦𑍍𑌮-புருஷஸ்யவித்ம" என்றற்றொடக்கத்தனவான சிவகாயத்திரியின் முதலடியில் வரு கின்றமையானும்,

4. "𑌪𑍁𑌰𑍁𑌷𑌃-புருஷஃ" என்னும் பதம் மேலே எடுத்துக் காட்டியுள்ள சிவபெருமான், உருத்திரர், கணேசர், சுப்பிரமணி யர் முதலியோருடைய காயத்திரி மந்திரங்களிற் படிக்கப்பட் டிருத்தல்போல பிரமன், நாராயணன், ந்ருசிம்மன் முதலியோ ருடைய காயத்திரி மந்திரங்களில் படிக்கப்படாமையானும்,

5. "புருஷனே, சென்றது வருவது எவை, அவையெல்லாம்" என்னுஞ் சூக்தமந்திரத்துக்கிணங்க "ஸர்வமுமன்றோ இந்த வுருத்திரன்" "அவனலிது பூரணம் புருஷனலெல்லாம்"! என்று தைத்திரீயாருணசாகை நாராயணமும், சுவேதாசுவதரமும் ஓதியிருக்கின்றமையானும்,

6. "ஆயிரஞ் சென்னியன்" "ஆயிரங்கண்ணன்" "ஆயிரம் பாதன்" என்னும் வாக்கியங்களின் பொருளையே "எங்குங் கண்கள். எங்கும் முகங்கள். எங்குங் கைகள். எங்குங் கால்கள் என்றற்றொடக்கத்தனவான பிரயோகங்கள் கீழ்வரும் மந்திரங்களில் ஸ்பஷ்டமாய்க் காணப்படுகின்றமையானும்,

கிருஷ்ணயஜுர்வேத சுவேதாசுவதரோபநிஷத்.

விஶ்வதஶ்சக்ஷுருத விஶ்வதோமுகோ
விஶ்வதோபாஹுருத விஶ்வதஸ்பாத் ।

விச்வதச்சக்ஷுருத விச்வதோ முகோ
விச்வதோ பாஹுருத விச்வதஸ்பாத் ।

(இ-ள்) "எங்குங் கண்ணுள்ளான். எங்கும் முகமுள்ளான். எங்குங் கையுள்ளான். எங்குங் காலுள்ளான்" (இம்மந்திரம் அதர்வசிரோபநிஷத்திலு முள்ளது.)

ஸர்வானந ஶிரோக்ரீவஸ் ஸர்வபூத குஹாஶய: ।

ஸர்வாநந சிரோக்ரீவஸ்ஸர்வபூத குஹாசய: ।

(இ-ள்) "எங்கும் முகத்தையுந் தலையையு முடையவன். எல்லாப் பூதங்களின் உள்ளத்தும் உள்ளவன்" என வருமாறு காண்க.

7. "உதாம்ருதத்வஸ்யேஶான: – உதாம்ருதத்வஸ்யேசாந: – மோட்ச மென்னும் அம்ருதத்தன்மையன் ஈசானன்" என்னும் விசேஷப் பொருளை "எதைச் செபித்தால் அமிர்தத்வமெய்தும்" என்று பிரமசாரிகள் வினவியதற்கு "சதருத்ரீயத்தைச் செபித்தால் – அதிலடங்கியவை அமிர்தனுடைய திருநாமங்களன்றோ" என்று யாஜ்ஞவல்கியர் விடையிறுத்ததைச் சுக்லயஜுர்வேத ஜாபலோபநிஷத் பகர்கின்றமையானும்,

8. ஒவ்வொரு வேதத்தினுமுள்ள ஸ்ரீ ருத்ரசம்ஹிதை சிவநாம பரிபூரணம் என்பது எத்தகையோராலும் மறுக்கப்படாத சிறப்புரிமையானும்,

9. "அமிர்தன்" என்னுஞ் சொல் மரணப்பிணிக்கு என்றும் ஆளாகாத பிறப்பிலிப்பிரானுகிய உமையொரு பாகன் என்னும் நான்காவது தெய்வத்துக்கே யோகரூடியாய்ப் பிரகாசிக்கின் றமையானும்,

10. "அமிர்தத்தன்மையாவது"-பிரபஞ்சமெல்லாந் தன்மாட் டொடுங்கத் தானே தானுய் அறிவாய் நிற்கும் சுத்தசிவ சொரூபமேயன்றி பந்தமுக்தி, பதமுக்தி, அபரமுக்தி ஆகிய இவைகளிலொன்றல்லாமையானும்,

11. "ஈசானன்" என்னும் நாமம் சர்வஜகத்காரண பிரம மாம் சிவபெருமானொருவருக்கே யுரியதென மேலே காட்டிய பிரமாணங்களாலும், அடியிற் காட்டும் வேதாந்த வாக்கியங்க ளாலும் தெளிவாய் அறியக் கிடக்கின்றமையானும்,

## அதர்வணவேத அதர்வசிரோபநிஷத்.

(க) 𑌅𑌥𑌕𑌸𑍍𑌮𑌾𑌦𑍁𑌚𑍍𑌯𑌤 𑌈𑌶𑌾𑌨𑍋 𑌯𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌾𑌁𑌲𑍍𑌲𑍋𑌕𑌾𑌨𑍀𑌶𑌤
𑌈𑌶𑌨𑍀𑌭𑌿𑌰𑍍𑌜𑌨𑌨𑍀𑌭𑌿𑌃 𑌪𑌰𑌮𑌶𑌕𑍍𑌤𑌿𑌭𑌿𑌃 । 𑌅𑌭𑌿𑌤𑍍𑌵𑌾𑌶𑍂𑌰𑌨𑍋𑌨𑍁𑌮𑍋
𑌦𑍁𑌗𑍍𑌧𑌾 𑌇𑌵𑌧𑍇𑌨𑌵𑌃 । 𑌈𑌶𑌾𑌨𑌮𑌸𑍍𑌯 𑌜𑌗𑌤𑌸𑍍𑌸𑍁𑌵𑌰𑍍𑌦𑍃𑌶𑌮𑍀𑌶𑌾𑌨
𑌮𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌤𑌸𑍍𑌥𑍁𑌷𑌃 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍁𑌚𑍍𑌯𑌤 𑌈𑌶𑌾𑌨𑌃 ॥

*அதகஸ்மாதுச்யத ஈசாநோ யஸ்ஸர்வாந்லோகாநீசத ஈசநீபிர்ஜநநீபிः பரமசக்திபிः । அபித்வாசூரநோநுமோ துக்தா இவதேநவः । ஈசானமஸ்ய ஜகதஸ்ஸுவர்த்ருசமீசாந மிந்த்ரஸ்துஷः தஸ்மாதுச்யத ஈசாநः ॥*

(இ-ள்) "இனி எதனுல் ஈசானனெனப்படுகின்றான். எவன் இந்த உலகத்தையெல்லாம் ஈசநிகளும் ஜநநிகளுமான பரம சக்திகளால் ஆளுகின்றான். ஓ சூர! பாலில்லாப் பசுக்களைப் போன்ற யாம் தாவர சங்கமங்களான இவ்வுலகத்துக்கு நாத னும், மோட்சத்துக்குவழிகாட்டியும், சமஸ்த பிரபஞ்சங்களுக்கு அதிபதியுமாயுள்ள ஈசானனைத் தோத்திரஞ் செய்கின்றோம். ஆதலால் அவன் ஈசானனெனப்படுகின்றான்" எனவும்,

## ஸாமவேத மைத்ராயண்யுபநிஷத்.

(உ) 𑌏𑌷𑌹𑌿 𑌖𑌲𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑍇𑌶𑌾𑌨𑌶𑍍𑌶𑌮𑍍𑌭𑍁𑌰𑍍𑌭𑌵𑍋 𑌰𑍁𑌦𑍍𑌰𑌃 ।

*ஏஷஹி கல்வாத்மேசாநச்சம்புர்பவோ ருத்ரः ।*

(இ-ள்) "இனி அந்தப்பரமாத்மாவன்றே ஈசானன், சம்பு, பவன், ருத்ரன்" எனவும் வருமாறு காண்க.

12. "வாசுதேவ: பர: ப்ரக்ருதி", "விச்வம் நாராயணம்" என்னுஞ் சுருதிகளின்படி சிவபெருமானிடந்தோன்றிய நாராயணனே விராட்டு, விச்வரூபி ஆதலின், "ஆயிரஞ்சென்னியன்" முதலிய சிறப்பிலக்கணங்கள் நாராயணனிடத்துள்ளனவென வேதமஹோபநிஷத்து முதலிய உபநிஷத்துக்கள் கூறியது காரணத்தினின்றுங் காரியத்தின்மேலேற்றியதெனக் கொள்ளக்கிடக்கின்றமையானும்,

13. மஹோபநிஷத்தில் கூறப்பட்டுள்ள சிவனதுபிரப்பு சங்காரத்தொழிலைச் செய்யும் குணருத்திரன்பாற் பெறப்பட்டதேயன்றி "பிறக்காதவனன்றே" என வேதம் புகழ்ந்தோதிய பிறப்பிலிப்பெருவள்ளலாகிய துரீய ருத்திரமூர்த்தியாற் பெறப்படாமையானும்,

14. சூக்தத்தின் பதினாறாவது மந்திரத்திலுள்ள "வாருஷம் ஹோஞா - புருஷம் மஹாந்தம்" என்னும் இருசொற்கள் முறை பிறழ அமைக்கப்பட்டிருப்பினும் போதாயன கற்பசூத்திரக்காரர் நித்திய விஷ்ணுபூஜையில் மஹாபுருஷன் என்னுந் தொகைச் சொல்லை நாராயணனிடத்தே சேர்த்துப் படித்திருத்தலால் அது நாராயண பரமாகுமேயன்றி சிவபரமாகாதென்று ஆக்ஷேபிக்கின், அதுகூடாது. மஹான், புருஷன் என்னும் இருசொற்கள் தனித்தனியாய்ச் சிவநாமதேயங்களென்று வேதம் பன்முறையும் வழங்கிவருகின்றமையானும். அவ்விருசொற்கள் விஷ்ணுவை ரூடியாய்க்குறிக்குமென்பதற்குச் சுருதிப்பிரமாணம் யாதுமின்மையானும், மந்திரத்தில் அவ்விருமொழிகளும் தொகாநிலையாய்த் தனித்து நிற்பனவேயன்றி தொகையின்பாற் படாமையானும், தொகைச்சொல்லின்கண் ணமைந்த நாராயண பரவாற்றலைவிடத் தனிமொழிகளின்கண் ணமைந்த சிவபரவாற்றல் மிகச் சிறப்புடைமையானும், ஈசானபலி, மஹாந்யாசம் முதலிய பல சத்கருமங்களில் மஹான் என்னுஞ் சொல் சிவபெருமானிடத்தே இடுகுறியாக விநியோகிக்கப் பட்டிருக்கின்றமையானும், சுருதிகளும், ஸ்மிருதிகளும், கற்பசூத்திரங்களும், புராணங்களும், இதிஹாஸங்களும், ஆகமங்களும் மஹான் என்னுந் தனிச்சொல்லைச் சிவபிரானது அஷ்டமூர்த்தத்துக் கமைந்த எட்டு திருநாமங்களில் சேர்த்துபடித்திருக்கின்றமையானும்,

15. "ஆதித்யவர்ணம் - ஆதித்யவர்ணம்" என்பது காயத்ரீ வல்லபையையும், ஆதித்திய அந்தர்யாமியையும், பொன்னார்மேனியனையுங் குறிப்பதன்றி மழைமுகில் தழுவிய உருவினனான நாராயணனைச் சிறிதொன்றும் குறிக்காமையானும்,

16 சூக்தத்தின் இரண்டாவது அநுவாகத்தில் ஆறுவது மந்திரத்திலுள்ள "ஹ்ரீச்சதே லக்ஷ்மீச்ச பத்ந்யௌ - ஹ்ரீச்சதே லக்ஷ்மீச்சபத்ந்யௌ" என்னும் வாக்கியம் ஹ்ரீ என்னும் மந்திரத்தின் முக்கியப்பொருளான பிரணவ சொரூபிணியாகிய உமாதேவியையும், "மஹேசுவரீசக்தி மஹாலக்ஷ்மி எனப்படுவாள். அவள் தேகங் கருமை. சர்வாங்கசுந்தரம்" என்று புராணம் புகன்றபடி மஹேசுவரியையும் சக்திகளாகக் கொண்டிருக்கின்றமையானும், பிரம விஷ்ணுக்கள் செய்த சிவஸ்தவத்தில் "லக்ஷ்மீபதி உன்னை வணங்குவாம், ஹ்ரீபதி யுன்னை வணங்குவாம்" என்று வந்தித்ததாக வாமனபுராணம் வற்புறுத்தி அறைந்திருக்கின்றமையானும்,

17. "அஹோராத்ரே பார்ச்வே - அஹோராத்ரே பார்ச்வே" என்றது பவளநிறம்போன்ற ஒரு பாதியும், இந்திரநீலம்போன்ற மற்றொருபாதியுமுடைய எமது விரூபாட்சனாகிய கிருஷ்ணபிங்களனையே குறிக்கின்றமையானும்,

18. சிவபூஜையிலும், விஷ்ணுபூஜையிலும், குபேரபூஜையிலும் இன்னும் எத்தேவர்பூஜைக்குத் தனிமந்திரமில்லையோ அத்தேவர்பூஜையிலும், அதர்வணவேதத்திலுள்ள பதினெண்மகா சாந்திப் பிரகரணத்தின் வைஷ்ணவ சாந்தியிலும் விநியோகிக்கப் பட்டிருத்தலின், விநியோகத்திற்கேற்ப தேவதையை நிச்சயித்தல் கௌணமும் துதிபரமுமாய் முடிகின்றமையானும்,

19 "வாமதேவ்யம்" முதலிய மந்திரத்தொகுதிகளை அவ்வவ்விருஷிகளின் பெயரால் அழைப்பதுபோல நாராயணன் எனப்படும் ஓர் ரிஷி இச்சூக்தத்தைக் கண்டமையால் நாராயணம் என்னும் பெயர் அமைந்ததேயன்றி ஸ்திதிகர்த்தாவாகிய நாராயணனை உட்பொருளாகக்கொண்டு அமையாமையானும்,

20. சூக்தத்தின் பதினேழாவது மந்திரத்திலுள்ள "தமேவம் வித்வாநம்ருத இஹ பவதி நாந்ய: பந்தா வித்யதேயநாய - தமேவம் வித்வாநம்ருத இஹ பவதி நாந்ய: பந்தாவித்யதேயநாய"

(இ-ள்) "அவனை இவ்வாறறிந்தவர் அமிர்தத்தன்மை யடைவர். மோட்சத்துக்கு வேறு வழியில்லை" என்னுஞ் சொற்றொடர் வாக்கியங்களையே அநுவதித்துக் கைவல்யோபநிஷத்தும், சுவேதாசுவதரோபநிஷத்தும் நன்கு விளக்கிச் சிவபரமாக நாட்டினமையானும், ஞானதாதா, மோக்ஷதாதா சிவபெருமான் ஒருவனே என்று இதுவரையிலுங் காட்டலுற்ற பிரமாணங்களாலன்றி இன்னுங் காட்டலுறும் பிரமாணங்களாலும் அறியக்கிடக்கின்றமையானும், புருஷசூக்தம் என்னும் வேதபாகம் சிவபரமே என்பது குன்றின்மேலிட்ட விளக்காம். இச்சூக்தத்துக்கு ரிஷி நாராயணர். தேவதை உத்தமோத்தம புருஷராகிய சிவபெருமான். இன்னும் இதனை விரிக்கிற் பெருகுமாதலால் இவ்வளவில் நிறுத்தி உபரதியடைந்தாம்.

இவ்வாறு மேலேகூறிப்போந்த (20) வேதப் பிரமாணங்களாலும் பிரபல ஏதுக்களாலும், ஓங்காரத்தின் நான்காவதான அர்த்தமாத்திரையிலுள்ள சோமலோகம் அம்பிகை பாகனை ஸ்ரீபசுபதிக்கே உரித்தென்றும், அவனே அவ்வர்த்த மாத்திரையின் பொருளாயுள்ள புருஷனென்றும், திரிமூர்த்திகளில் ஒருவரும் அதற்குரியாரல்லரென்றுந் தெரிவித்ததாயிற்று. அப்படியாவும் வேதபடிதமாயிருந்தும் அவற்றைக்கடந்து பிடிவாதமாய் வார்த்தைசொல்ல பூர்வபட்சிகள் முயல்வார்களாயின் அவர்களுடைய பாவத்தின் பயனே சிவமஹிமைகளில் விசுவாசத்தையுண்டு பண்ணவில்லையென்று பரிகாரந்தேடி விச்ராந்தியடைவாம். அந்தகர்களுக்கு எத்தனை ஆதித்தியர்கள் பிரகாசித்தாலும் நேத்திரந்தெரியாதவாறுபோல.

மா.—பிரணவத்தின் முதற்கூறாகிய அகார மாத்திரை பிரமனுக்கும், இரண்டாங்கூறாகிய உகார மாத்திரை விஷ்ணுவுக்கும், மூன்றாங்கூறாகிய மகார மாத்திரை உருத்திரனுக்கும், நான்காங் கூறாகிய அர்த்தமாத்திரை புருஷராகிய சிவபெருமானுக்கும் உரியனவென்று சுருதி கூறுமாயின் ஓங்காரமந்திரத்தின் பொருளாவார் யாவர்?

ஆ.—ஓங்காரமாகிய பிரணவம் சமஷ்டிப்பிரணவமெனவும், வியஷ்டிப் பிரணவமெனவும் இருவிதமாகச் சொல்லப்படும். அவற்றுள் சமஷ்டிப் பிரணவம் "ஓம்" என்று தொகுத்துக் கூறுவது. வியஷ்டிப் பிரணவம் அகாரம், உகாரம், மகாரம் என்று

வகுத்துக் கூறுவது. நாம் நமது வாயைத் திறக்கின்றபோது சிருஷ்டியும், திறந்தவாயை அப்படியே வைத்திருக்கும்போது ஸ்திதியும், அந்த வாயை மூடும்போது ஸம்ஹாரமும் ஏற்படுதல் போல சிருஷ்டிகர்த்தாவாகிய பிரமனை அகாரத்துக்கும், ஸ்திதிகர்த்தாவாகிய விஷ்ணுவை உகாரத்துக்கும், ஸம்ஹாரகர்த்தாவாகிய உருத்திரனை மகாரத்துக்கும் வாச்சியப்பொருளாக வேதம் உபசரித்துக் கூறியது. அதனாலே அவர்கள் அவ்வட்சரத்திரயங்களுக்குச் சுதந்தரராகமாட்டார்கள். சுதந்தரராவார் அம்மூவருக்கும் அப்பாற்பட்ட புருஷராகிய சிவபரம்பொருளே. அது எவ்வாறெனில், ஒரு பெரிய தேசத்துக்கு அதிபதியாகிய சக்கரவர்த்தி தன் தேசத்தை மூன்றுபாகமாகப் பிரித்து ஒரு பாகத்தை ஒரு பிரதிநிதிக்கும், இரண்டாவது பாகத்தை மற்றொரு பிரதிநிதிக்கும், மூன்றாவது பாகத்தை வேறொரு பிரதிநிதிக்குங் கொடுத்து அவற்றை ஆளும்படி ஆஞ்ஞாபித்தான். அவர்கள் அவற்றை ஆண்டுவரும்போது அவ்வப் பாகத்தைத் தங்களுக்கே யுரியதென்று கூறி அரசு செலுத்துவது வழக்கம். அதனால் அவர்கள் அந்தப் பாகங்களுக்குச் சர்வசுதந்தரரல்லர். அம் மூன்று பாகங்களையுங் கொண்டு விளங்கும் தேசம் அம் மூன்று பிரதிநிதிகளுக்கும் வேறாய், நான்காவதான சக்கரவர்த்திக்கு எப்படிச் சர்வசுதந்தரமாயுள்ளதோ அப்படியே அகார உகார மகாரங்களில் வசிக்கும் பிரமன் முதலிய மூவரும் அவ்வட்சரத்திரயங்களுக்குச் சுதந்தரராகார். அவ்வட்சரங்கள் மூன்றும் ஒன்று கூடிய ஓங்காரத்துக்கும், அவ்வட்சரங்களில் வசிக்கும் மூவருக்கும், சர்வாதிபதியாயுள்ள சிவபெருமானாகிய புருஷரொருவரே ஓங்காரப் பொருளாயுள்ளாரென்று தெள்ளிதிற்றுணியப்பட்டது.

அதர்வணவேத ந்ருசிம்ம தாபநீயோபநிஷத்.

𑌅𑌕𑌾𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌣𑌂 𑌨𑌾𑌭𑍌 𑌉𑌕𑌾𑌰𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌂 𑌹𑍃𑌦𑌯𑍇 |
𑌮𑌕𑌾𑌰𑌂 𑌰𑍁𑌦𑍍𑌰𑌂 𑌭𑍍𑌰𑍂𑌮𑌧𑍍𑌯𑍇 𑌓𑌂𑌕𑌾𑌰𑌂 𑌸𑌰𑍍𑌵𑍇𑌶𑍍𑌵𑌰𑌂 𑌦𑍍𑌵𑌾𑌦𑌶𑌾𑌨𑍍𑌤𑍇 ||

அகாரம் ப்ரஹ்மாணம் நாபௌ உகாரம் விஷ்ணும் ஹ்ருதயே।
மகாரம் ருத்ரம் ப்ரூமத்யே ஓங்காரம் ஸர்வேச்வரம் த்வாதசாந்தே ॥

(இ-ள்) "அகாரமென்னும் ஸ்தூலனாகிய பிரமனை நாபியிலும், உகாரமென்னும் சூக்ஷ்மனாகிய விஷ்ணுவை இருதயத்திலும், மகாரமென்னும் சூக்ஷ்மதரனாகிய உருத்திரனைப் புருவநடு

விலும் ஓங்காரமென்னும் சூக்ஷ்மதமமாகிய (துரீய) சர்வேசுவரனைத் துவாதசாந்தத்திலும் தியானிக்கவேண்டும்'' எனவும்,

அதர்வணவேத அதர்வசிரோபநிஷத்.

𑌹𑍃𑌦𑌿𑌸𑍍𑌥𑌾 𑌦𑍇𑌵𑌤𑌾𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌾𑌃 𑌹𑍃𑌦𑌿 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌾𑌃 ।
𑌹𑍃𑌦𑌿𑌤𑍍𑌵𑌮𑌸𑌿𑌯𑍋𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌤𑌿𑌸𑍍𑌰𑍋𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌃 𑌪𑌰𑌸𑍍𑌤𑍁𑌸𑌃 ॥

ஹ்ருதிஸ்தா தேவதாஸ்ஸர்வாः ஹ்ருதிப் ப்ராணாः ப்ரதிஷ்டிதாः ।
ஹ்ருதித்வமஸியோநித்யம் திஸ்ரோமாத்ராः பரஸ்துஸः ॥

(இ-ள்) "இருதயத்திலே ஸர்வதேவதைகளும் இருக்கின்றார்கள். இருதயத்திலேதான் பிராணன்களிருக்கின்றன. இருதயத்திலே நீ நித்தியமா யிருக்கின்றாய். அந்த நீ மூன்று மாத்திரைகளையும் கடந்து நின்றவன்.'' எனவும்,

அதர்வணவேத அதர்வசிகோபநிஷத்.

𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌮𑍋𑌂𑌕𑌾𑌰𑌗𑌤𑌿𑌂𑌚 𑌸𑌰𑍍𑌵𑌧𑍍𑌯𑌾𑌨 𑌯𑍋𑌗𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌨𑌾𑌂
𑌯𑌤𑍍𑌫𑌲𑌂 - 𑌓𑌂𑌕𑌾𑌰𑍋 𑌵𑍇𑌦𑌪𑌰 𑌈𑌶𑍋𑌵𑌾 ।

க்ருத்ஸ்நமோங்காரகதிஞ்ச ஸர்வத்யாந யோகஜ்ஞாநாநாம்
யத்பலம் - ஓங்காரோ வேதபர ஈசோவா ।

(இ-ள்) "ஓங்காரத்தின் சொரூபமெல்லாவற்றையும், சர்வவிதமான தியானங்கள், யோகங்கள், ஞானங்கள் ஆகிய இவற்றின் பலன்களையும் பிரணவ சொரூபனான ஈசனே அறிவன்'' எனவுங் கூறிப்போந்தன. இவ்வாக்கியங்களால் வியஷ்டிப்பிரணவம் திரிமூர்த்திபரமும், சமஷ்டிப் பிரணவம் சர்வேசுவரராகிய சிவபெருமான் பரமுமாயின வாறறிக. இதுவே சர்வ வேதவேதாந்த ஸம்பிரதிபந்நம். இதற்கு நேர்விரோதமாக அகாரம் நாராயணபரமெனவும், உகாரம் லக்ஷ்மிபரமெனவும், மகாரம் ஜீவபரமெனவும் ஒரு சாராரும், அகாரம் காத்தற்றொழிலுக்குரிய கடவுளாகிய நாராயணரெனவும், உகாரம் தேற்றேகாரப் பொருளை விளக்க வெழுந்ததெனவும், மகாரம் ஜீவனெனவும் (அதாவது நாராயணனுக்கே உரியவனான நான் என) மற்றொருசாராரும் தந்தம் மதத்திற்கேற்ப பாத்மோத்தர ஸம்ஹிதை முதலியவற்றைப் பிரமாணமாகக்கொண்டு சாதித்துள்ளார்கள். இத்தகைய உரைகள் சுருதிகளில் யாண்டும் படிக்கப்பட்டிருக்கவில்லை. சுருதி சந்நிதியில் அவை நில்லாதபோது அவை அப்பிரமாணங்களாம். வேதக்

தால் வாதிக்கப்பட்டது பிரமாணமன்று. அன்றியும் அகாராதி மும்மாத்திரைகளுங்கூட சிவபெருமானையே பிரதிபாதிக்கின்றன வென்பதற்கும் சுருதிப்பிரமாணம்.

ஸாமவேத மைத்ரேயோபநிஷத்.

𑌏𑌕𑌸𑌂𑌖𑍍𑌯𑌾 𑌵𑌿𑌹𑍀𑌨𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌦𑍍𑌵𑌿𑌸𑌂𑌖𑍍𑌯𑌾 𑌵𑌾𑌨𑌹𑌂𑌨𑌚 ।
𑌅𑌕𑌾𑌰𑍋𑌕𑌾𑌰𑌰𑍂𑌪𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌮𑌕𑌾𑌰𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌸𑌨𑌾𑌤𑌨𑌃 ।
𑌹𑍃𑌦𑌯𑌗𑍍𑌰𑌨𑍍𑌥𑌿 𑌹𑍀𑌨𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌹𑍃𑌦𑌯𑌾𑌮𑍍𑌬𑍁𑌜𑌮𑌧𑍍𑌯𑌗𑌃 ।

ஏகஸங்க்யா விஹீநோஸ்மி த்விஸங்க்யா வாநஹம்நச ।
அகாரோகார ரூபோஸ்மி மகாரோஸ்மி ஸநாதந: ।
ஹ்ருதயக்ரந்தி ஹீநோஸ்மி ஹ்ருதயாம்புஜமத்யக: ।

(இ-ள்) "நான் (ஏகம்) ஒன்று என்னும் எண்ணும் அற்றவனாயிருக்கிறேன். (துவிதம்) இரண்டு என்னும் எண்ணும் அற்றவனாயிருக்கிறேன். அகார உகாரரூபமா யிருக்கிறேன். மகாரரூபமா யிருக்கிறேன். இருதய கிரந்தி அற்றவனாய் இருதய நடுவில இருக்கிறேன்" என்றோதியது. இவ்வாக்கியம் சிவபெருமான் மைத்ரேயருக்கு அருளிச்செய்தது. இதில் அகார உகார மகாரப்பொருள் சிவபெருமானென்றே விளங்குகின்றது. அதனால் அம்மூன்று அக்ஷரங்களும் சிவபெருமானாலே மும்மூர்த்திகளுக்கும் அவரவர்கள் காரியார்த்தமாக அளிக்கப்பட்டனவென்று நிச்சயமாயிற்று. விஷ்ணுவையும், மற்றிருவர்களையும் பிரணவசொரூபிகளென்றும், ஓங்கார வாச்சியர்களென்றும் சுருதிகள் மொழிவதெல்லாம் சமஷ்டிப் பிரணவமாகிய ஓங்காரத்தின் வியஷ்டிப் பிரணவத்திலும், உபசரிப்பிலும், துதியிலுமே அடங்கும். இவ்வுண்மையைச் சிவலிங்கத்திலும் பிரத்தியட்சமாயறியலாம். அகண்டாகார நித்தியவியாபக சச்சிதானந்த சுத்தசிவம் ஆத்மாக்களின் தியானபாவனைநிமித்தம் நிஷ்களசகளத்திருவுருக்கொண்ட நிலையே இலிங்கமென்று சொல்லப்படும். இலிங்கத்தின் பீடிகை-சக்தி சொரூபம். அதாவது கிரியாசக்திவடிவம். இலிங்கம்-சிவசொரூபம். அதாவது ஞானசக்திவடிவம். இவையிரண்டும் சிவம் அதிஷ்டிக்கும் தேகம். இத்தேகத்தை பதிஷ்டித்துள்ளதேகி பரமசிவமாகிய இலிங்கி பீடத்தின் மேற்புறம் உருத்திரபாகமென்று சொல்லப்படும். அடிப்புறம் (அதாவது அடி நான்குமூலை) பிரமபாகமென்று கூறப்படும். நடுப்புறம் (அதாவது எட்டுமூலை) விஷ்ணுபாகமென்று இயம்பப்படும்,

இவற்றுள் பிரமபாகம் நபும்ஸகலிங்கம். விஷ்ணுபாகம் ஸ்திரி லிங்கம். உருத்திரபாகம் புன்லிங்கம். இதுவே பிரணவமுகற் பொருள். இதன்ஜோதி சொரூபமே அகார உகார மகாரமாகும். அகாரம்-சிவம், உகாரம்-சத்தி, மகாரம்-பரம். இவ்வாறு வேதங்கூறுகின்றது. திருவிளையாடற்புராணமும் "சத்தியாய்ச் சிவமாகித் தனிப்பர, முத்தியான முதலைத் துதிசெய்ய" என்று முதற்கண்ணெடுத்துச் சாற்றியது. அல்லாமலும், லிங்-லயம், கம்-தோற்றம். சிருஷ்டியாதி பஞ்சகிருத்தியங்களைச் செய்யவும் ஈசுவரப்பிரபாவமே லிங்கம் எனவும்படும். இவ்விலிங்காராதனமே கிருஷ்ணார்ஜுனர்களிருவருக்கும் பரமதாரகமாயிருந்தது. சர்வாத்மாக்களுக்கும் சர்வஐசுவர்யங்களும் கொடுக்கத்தக்கதாயுமுள்ளது. ஆலயங்கள்தோறும் சுயம்புமூர்த்தமாய் அருட்குறியாய் விளங்கியிருப்பதும் இதுவே.

ருக்வேதம். ரு-ஆம் மண்டலம்

𑌤𑍍𑌵𑌂 𑌶𑍍𑌰𑌿𑌯𑍇 𑌮𑌰𑍁𑌤𑍋 𑌮𑌰𑍍𑌜𑌯𑌨𑍍𑌤 𑌰𑍁𑌦𑍍𑌰 𑌯𑌤𑍍𑌤𑍇 𑌜𑌨𑌿𑌮 𑌚𑌾𑌰𑍁 𑌚𑌿𑌤𑍍𑌰𑌮𑍍।

தவச்ரியே மருதோ மர்ஜயந்தருத்ரயத்தேஜநிம சாருசித்ரம்।

(இ-ள்) "ஏ ருத்ர! மருத்துக்கள் (தேவர்கள்) நினது செல்வத்தையடையும்வண்ணம் நின்னுடைய அழகிய சித்திரரூப இலிங்கத்தை அபிஷேகாதி ஆராதனை புரிந்தனர்" எனவும்,

அதர்வணவேத பஸ்மஜாபாலோபநிஷத்.

𑌲𑌿𑌙𑍍𑌗𑌰𑍂𑌪𑌿𑌣𑌂 𑌮𑌾𑌂 𑌸𑌂𑌪𑍂𑌜𑍍𑌯 𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑌨𑍍𑌤𑌿 𑌯𑍋𑌗𑌿𑌨𑌃 𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌃 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂
𑌗𑌤𑌾 𑌯𑌜𑌨𑍍𑌤𑌿 𑌯𑌜𑍍𑌵𑌾𑌨𑍋 𑌮𑌾𑌮𑍇𑌵 𑌸𑍍𑌤𑍁𑌵𑌨𑍍𑌤𑌿........𑌕𑌾𑌶𑍍𑌯𑌾𑌂

லிங்கரூபிணம் மாக்ஸம்பூஜ்ய சிந்தயந்தியோகிநஸ் ஸித்தாஸ்ஸித்திம்
கதாயஜந்தியஜ்வானோ மாமேவஸ்துவந்தி........காச்யாம்

(இ-ள) "இலிங்கரூபியாகிய என்னைக் காசியில் யோகிகளும் சித்தர்களும் மிகுதியும் பூசித்துச் சிந்தனைசெய்கிறார்கள். சித்தியையடைகிறார்கள். தீக்ஷிதர்களும் என்னையே யஜனஞ்செய்கிறார்கள்." எனவும்,

பராசரபுராணம்.

𑌰𑍌𑌦𑍍𑌰𑌂 𑌲𑌿𑌙𑍍𑌗𑌂 𑌮𑌹𑌾𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌰𑍍𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌶𑍁𑌦𑍍𑌧𑌂 𑌶𑌿𑌲𑌾𑌮𑌯𑌮𑍍।
𑌚𑌾𑌰𑍁𑌚𑌿𑌤𑍍𑌰𑌂 𑌸𑌮𑌭𑍍𑌯𑌰𑍍𑌚𑍍𑌯 𑌲𑌬𑍍𑌧𑌵𑌾𑌨𑍍 𑌪𑌰𑌮𑌂𑌪𑌦𑌮𑍍॥

ரௌத்ரம் லிங்கம் மஹாவிஷ்ணோர்பக்த்யாசுத்தம் சிலாமயம்।
சாருசித்ரம் ஸமப்யர்ச்சய லப்தவாந் பரமம்பதம்॥

(இ-ள்) "மஹாவிஷ்ணுவானவர் சுத்தமும், நிலாமயமும், அழகிய சித்திரரூபமுமாகிய சிவலிங்கத்தைப்பக்தியோடு அர்ச்சித்துப் பரமபதத்தையடைந்தனர்" எனவும் விளக்கியவாறறிக. ருக்வேதம் "சாருசித்ரம் ஜநிம" என்று கூறியதையே புராணம் "சாருசித்ரம் ரௌத்ரம் லிங்கம்" எனப்பொருள் விரித்தது. திருக்குறளிலும் "அகரமுதல" என்னுந்தேவர்மொழி உலககாரணனை சிவ பட்சத்தையே நாட்டிநின்றது. எப்படி பரமசிவத்தின் சொரூபம் பிரம விஷ்ணு உருத்திர துரீயாகாரமாய் விளங்குகின்றதோ அப்படியே அவரது வாசகமான பிரணவமும் நான்காய் நின்று சர்வசொற்கூற்றுப் பொருட்கூற்றுப் பிரபஞ்சங்களுக்கும் காரணமாயிருக்கின்றது. அதனுலேயும் பிரணவம் சிவபெருமானுக்கே யுரித்தென்பது தேற்றம்.

மா—பிரணவம் சிவவாசகமாயின் அதன் வேறு பெயர்களும் சிவபெருமானையே குறிக்கின்றனவோ?

ஆ—ஆம். ஐயுறவேண்டாம். ஓங்காரம், பிரணவம், ஸர்வவியாபீ, அனந்தன், தாரம், சூக்ஷுமம், சுக்லம், வைத்யுதம், பரப்பிரமம் ஆகிய இவ்வொன்பது பெயர்களும் வாசகங்களாகும். ஏகன், ஏகருத்திரன், ஈசானன் பகவான், மகேசுவரன், மகாதேவன் ஆகிய ஆறுபெயர்களும் வாச்சியங்களாகும். இவ்வாறு வாசகவாச்சியங்களுக்குள்ள அபேதம் வேதத்திலேயே கூறப்பட்டிருக்கின்றது.

அதர்வணவேத அதர்வசிரோபநிஷத்.

𑌸𑌓𑌂𑌕𑌾𑌰𑍋𑌯 𑌓𑌂𑌕𑌾𑌰𑌃 𑌸𑌪𑍍𑌰𑌣𑌵𑍋𑌯𑌃 𑌪𑍍𑌰𑌣𑌵𑌃
𑌸𑌸𑌰𑍍𑌵𑌵𑍍𑌯𑌾𑌪𑍀𑌯𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌵𑍍𑌯𑌾𑌪𑍀 𑌸𑍋𑌨𑌨𑍍𑌤𑍋 𑌯𑍋𑌨𑌨𑍍𑌤𑌃
𑌤𑌤𑍍𑌤𑌾𑌰𑌂 𑌯𑌤𑍍𑌤𑌾𑌰𑌂 𑌤𑌤𑍍𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌂 𑌯𑌤𑍍𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌂
𑌤𑌚𑍍𑌛𑍁𑌕𑍍𑌲𑌂 𑌯𑌚𑍍𑌛𑍁𑌕𑍍𑌲𑌂 𑌤𑌦𑍍𑌵𑍈𑌦𑍍𑌯𑍁𑌤𑌂 𑌯𑌦𑍍𑌵𑍈𑌦𑍍𑌯𑍁𑌤𑌂
𑌤𑌤𑍍𑌪𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍇𑌤𑌿
𑌯𑌏𑌕𑌸𑍍𑌸𑌏𑌕𑍋 𑌰𑍁𑌦𑍍𑌰𑌃 𑌸𑌈𑌶𑌾𑌨𑌸𑍍𑌸𑌭𑌗𑌵𑌾𑌨𑍍
𑌸𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌸𑍍𑌸 𑌮𑌹𑌾𑌦𑍇𑌵𑌃 ॥

ஸ ஓங்காரோய ஓங்காரஃ ஸப்ரணவோயஃ ப்ரணவஃ
ஸஸர்வவ்யாபீ யஸ்ஸர்வவ்யாபீ ஸோநந்தோயோநந்தஃ
தத்தாரம் யத்தாரம் தத்ஸூக்ஷ்மம் யத்ஸூக்ஷ்மம்
தச்சுக்லம் யச்சுக்லம் தத்வைத்யுதம் யத்வைத்யுதம்

*தத்பரம் ப்ரஹ்மேதி*
*யஏகஸ்ஸ ஏகோருத்ர: ஸஈசானஸ்ஸபகவாந்*
*ஸமஹேச்வரஸ்ஸ மஹாதேவ:॥*

(இ-ள்) "எவன் ஓங்காரன் அவன் ஓங்காரன். எவன் பிரணவன் அவன் பிரணவன். எவன் ஸர்வவியாபீ அவன் ஸர்வவ்யாபீ. எவன் அனந்தன் அவன் அனந்தன். எது தாரம் அது தாரம். எது ஸூக்ஷ்மம் அது ஸூக்ஷ்மம். எது சுக்லம் அது சுக்லம். எது வைத்யுதம் அது வைத்யுதம். அது பரப்பிரமம் என்று. எவன் ஏகன் அவன் ஏகனான உருத்திரன். அவன் ஈசானன். அவன் பகவான். அவன் மகேசுரன். அவன் மகாதேவன்" என்றது.

இந்த வாக்கியங்கள் வாசக வாச்சியங்களுக்குள்ள பொருளொற்றுமையை நன்முக விளக்கவே எழுந்தன. இவ் வுபநிஷத்து பிரணவ சிவாபேதத்தை நாட்டவெழுந்த லொப்பற்ற பிரம வித்தை என்பதில் யாதொரு ஆக்ஷேபமுமில்லை. இது வேதங்களின் சிகரத்தேயுள்ள அதர்வசிரஸ் என்னும் சாகையின் அந்தத்திலமைந்துள்ளது. இச்சாகை வேதங்களனைத்துக்கும் சமமாயுள்ள வேதபாகமெனவும், அதனாலே சர்வவேத பவித்திரமெனவும் போதாயனர், கௌதமர் முதலிய மஹாரிஷிகளால் புகழ்ந்து போற்றப்பட்டிருக்கின்றது. இதில் கண்ட பொருள் விளக்கம் புராணங்களிலும் பாரதத்திலும் வெகு விரிவாயுண்டு. இது சிவபரத்துவத்தை நாட்டவெழுந்த பஞ்சருத்ரங்களில் ஒன்றாயும் விளங்குகின்றது.

## சுக்லயஜுர்வேத மந்திரிகோபநிஷத்.

पुरुषं निर्गुणं सांख्यं अथर्वशिरसो विदुः ।

*புருஷம் நிர்க்குணம் ஸாங்க்யம் அதர்வசிரஸோவிது:॥*

(இ-ள்) "நிர்க்குணனாயும் வேதாந்தப் பிரதிபாத்யனாயுமுள்ள புருஷராகிய சிவபெருமானை அதர்வசிரமறிந்தோர் அறிவர்" என்று இவ்வுபநிஷத்தைப் புகழ்ந்துள்ளது. தசரதமகாசக்கரவர்த்தியினுடைய புத்திரோற்பத்திக்காக இவ்வுபநிஷத் சாகையிலமைந்துள்ள காமயேஷ்டிப்பிரகாணத்தில் சொல்லியிருக்கிற யாகத்தையே ருஷிய சிருங்க மகரிஷியானவர் அச்சக்கரவர்த்திக்குச் செய்வித்தனரென்று ஸ்ரீவால்மீகிபகவான் தமது இராமாயணத்தில் அடியில் போந்தவாறு செப்பினரென்றால் இதன் பெருமையைச் சொல்லவும் வரம்புளதோ!

ഇഷ്ടിംതേഹംകരിഷ്യാമി പുത്രിയാം പുത്രകാരണാത്।
അഥർവശിരസി പ്രോക്തൈഃ മന്ത്രൈഃ ദൃഷ്ടൈർവിധാനതഃ॥

இஷ்டிந்தேஹம்கரிஷ்யாமி புத்ரியாம் புத்ரகாரணாத்।
அதர்வஸிரஸி ப்ரோக்தைஃ மந்த்ரத்ருஷ்டைவிதாநதஃ॥

(இ-ள்) "ஓ அரசனே! அதர்வசிரஸ் என்ற வேதபாகத்தில் சொல்லியிருக்கிற மந்திரங்களைக்கொண்டு புத்திரகாமேஷ்டியாகத்தைப் புத்திரோற்பத்திக்காக உனக்கு நான் விதிப்படி செய்விப்பேன்" என வருமாறு காண்க.

அல்லாமலும், பிரமபுத்திரராகிய அதர்வமகரிஷியானவர் பரமசிவ தியானநிஷ்டையிலே யிருந்தகாலத்தில் அவரது நபாக்கினியானது விஷ்ணுவின் சொரூபமான இளாநாடிக்கும், பிரமாவின் சொரூபமான பிங்களா நாடிக்கும் மத்தியிலுள்ள உருத்திரமூர்த்தியின் சொரூபமான சுஷும்நா நாடியின் வழியாக மேலேசென்று பிரமரந்திரத்தைப் பேதித்துப்புறப்பட்டுக் கபாலத்தைப்பிளந்து வெளிகிளம்பி இச்சாகையாக உருக்கொண்டு விளங்கினபடியால் இப்பிரமவித்தை பரமவைதிக பாசுபதசைவோபநிஷத்தென்று பிரம்மவாதிகள் யாவராலும் அங்கீகரிக்கப்பட்ட முடிந்த தீர்வையாம். இத்தகைய அரிய பெரிய உபநிஷத்து பிரணவ வித்தையை விளக்கும்பொருட்டுச் சிவநாமதேயங்களையே விரித்து அவற்றின்வழி சிவவழிபாட்டைத் தெளிவாய் நிரூபித்திருக்கின்றமை பிரத்தியட்சம். இதனையே யாமும் மிகச் சிறந்த பிரமாணமாகக்கொண்டு ஓங்கார விளக்கமுரைத்தாம். உண்மையுணர்ந்து இன்புறுவாயாக.

மா —வாசகங்களாகிய ஓங்காரமுதல் பரப்பிரமம் ஈறுகச் சொல்லப்பட்ட ஒன்பது பெயர்களுக்கும், வாச்சியப் பொருளாகிய ஏகன் முதல் மகாதேவன் ஈறாகக்கூறப்பட்ட ஆறு பெயர்களுக்கும் பொருள் ஒற்றுமையானுல் ஓங்கார சப்தத்தின் பொருள்யாது?

ஆ—கூறுதும். அதர்வணவேத அதர்வசிகோபநிஷத்.

സകൃദുച്ചരിതമാത്ര ഊർധ്വമുന്നാമയതീത്യോങ്കാരഃ।

ஸக்ருதுச்சரிதமாத்ர ஊர்த்வ முந்நாமயதீத்யோங்காரஃ।

(இ-ள்) "ஒருமுறையுச்சரித்த மாத்திரத்தில் உயர்ந்தகதியில் கொண்டுபோய்ச் சேர்த்தலால் ஓங்காரமெனப்படுவர்." எனவும்,

## அதர்வணவேத அதர்வசிரோபநிஷத்.

𑌅𑌥 𑌕𑌸𑍍𑌮𑌾𑌦𑍁𑌚𑍍𑌯𑌤 𑌓𑌙𑍍𑌕𑌾𑌰𑌃 𑌯𑌸𑍍𑌮𑌾𑌦𑍁𑌚𑍍𑌚𑌾𑌰𑍍𑌯𑌮𑌾𑌣 𑌏𑌵
𑌸𑌰𑍍𑌵𑌂 𑌶𑌰𑍀𑌰𑌂 𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌮𑍁𑌨𑍍𑌨𑌾𑌮𑌯𑌤𑌿 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍁𑌚𑍍𑌯𑌤 𑌓𑌙𑍍𑌕𑌾𑌰𑌃।

*அதகஸ்மாதுச்யத ஓங்காரः யஸ்மாதுச்சார்யமாண எவ ஸர்வம் சரீரம் ஊர்த்வமுந்நாமயதி தஸ்மாதுச்யத ஓங்காரः।*

(இ-ள்) "எதுபற்றி ஓங்காரமெனச் சொல்லப்படுகின்றது. எதனால் உச்சரித்த மாத்திரத்தில் ஸ்தூலசூக்ஷ்மகாரணம் என்னும் மூன்று சரீரங்களையும் அகற்றி பிரகிருதி மண்டலத்துக்கு மேலே செலுத்துகின்றது. அதனாலே ஓங்காரமெனப் படுகின்றது." எனவுங்கூறின. வேதமூலமாகிய ஓங்காரம் சர்வமந்திர ஸாரபூதமாயிருத்தல்பற்றியே உச்சாரணமாத்திரத்தில் பாசத்தினின்றுந்தாண்டி உயர்க்கும்வன்மை பெற்றுள்ளது. அது ஸ்தூலம், சூக்ஷ்மம், சூக்ஷ்மதரம், சூக்ஷ்மதமம் என நான்காய் வகுக்கப்பட்டு ஹ்ரஸ்வம், தீர்க்கம், ப்லுதம் என மூவகையாக உச்சரிக்கப்பட்டு வருகின்றது. அவற்றுள் முதலாவது ஹ்ரஸ்வம். அது சுபாவத்திலேயே இரண்டு மாத்திரைகளையுடையது. இரண்டாவது தீர்க்கம். அது மூன்று மாத்திரைகளையுடையது. மூன்றாவது ப்லுதம். அது நான்கு மாத்திரைகளையுடையது. இவ்வாறு இரண்டு, மூன்று, நான்கு மாத்திரைகளையுடைய ஓங்காரத்தை ஆசிரியன் உபதேசித்தபடி கிரமமாக மூன்றுமுறையுச்சரித்து நான்காம்முறையில் ஐந்து மாத்திரையுள்ள அவ்வோங்காரத்தை அமனஸ்கமயோகத்தால் அநுசந்தித்த உடனே உபாசகன் அந்த அதிசூக்ஷ்மமான நாதத்தோடு கூடவே துரீய சிவாபேதத்தை யடைந்துவிடுகின்றனன். அப்பொழுது அவன் சர்வபிரபஞ்சலயஸ்தானமாய், பரமசாந்தனாய், சிவமேயாய் விடுகின்றனன். இத்தகைய அரியபெரிய பிரணவயோகம் பிரணவநிஷ்டாபரர்களுக்கன்றி ஏனையோருக்கு எட்டுணையும் சித்தித்தல் அருமையினும் அருமை. ஏனெனின், அவர்கள் அதனுண்மையை மதாபிமானத்தால் உள்ளவாறறியுந்திறனற்று ஓது முறைப்படி யுச்சரித்து நிஷ்டைகூடாமல் வேறுவகையாகப் பொருள் கொண்டு பிணங்குவர். இந்தப் பிரணவயோகவாயிலாக அடையும் அநுபூதிஞானம் ஸ்ரீமந் நாதமுனிகள் காலத்துக்குப்பின் உபதேசவாயிலாக அடையத்தவறிப்போய்விட்டபடியால் அக்காலத்திலிருந்து வைஷ்ணவர்கள் யாருக்கும் யோக ஞானுப

வம் இல்லாமல் ஒழிந்துபோய்விட்டது. அதனுலேதான் அவருக்குப்பின்வந்த ஆசாரியர்களுள் முதன்மையானேருங்கூட நோவுசாத்தியே மிகவுந் தளர்ந்து தேகத்தை விடநேர்ந்தது. இவ்விஷயம் வடகலே தென்கலே குருபரம்பரா பிரபாவங்களில் பரக்கக்காணலாம்.

கிருஷ்ணயஜுர்வேத சுவேதாசுவதரோபநிஷத்.

𑌪𑍃𑌥𑍍𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌯 𑌤𑍇𑌜𑍋 𑌨𑌿𑌲𑌖𑍇𑌸𑌮𑍁𑌤𑍍𑌥𑌿𑌤𑍇
𑌪𑌂𑌚𑌾𑌤𑍍𑌮𑌕𑍇𑌯𑍋𑌗𑌗𑍁𑌣𑍇 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑍇 ।
𑌨 𑌤𑌸𑍍𑌯 𑌰𑍋𑌗𑍋 𑌨 𑌜𑌰𑌾 𑌨 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌃
𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌸𑍍𑌯 𑌯𑍋𑌗𑌾𑌗𑍍𑌨𑌿𑌮𑌯𑌂 𑌶𑌰𑍀𑌰𑌮𑍍 ॥

ப்ருத்வ்யாப்ய தேஜொ நிலகே ஸமுத்திதே
பஞ்சாத்மகேயோக குணப்ரவ்ருத்தே ।
நதஸ்ய ரோகோ நஜரா நம்ருத்யுஃ
ப்ராப்தஸ்ய யோகாக்நிமயம் சரீரம் ॥

(இ-ள்) "பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் ஆகிய விவற்றைக் கடந்து ஐவகையான யோககுணங்கள் நிறையப்பெற்றால் அவனுக்கு ரோகம் உண்டாகாது கிழத்தனம்வாராது. மரணங்கிடையாது. அவன் யோகாக்நிமயமான சரீரத்தைப் பெற்றவனுவான்" என்று சாற்றியது. இதனுல் யோகங்களிற் சிறந்த ராஜயோகத்தைத் தியானமார்க்கத்தாற் கைப்பற்றிச் சித்தியடைந்தபுருஷன்ஒருவனே பூதஜயம் பெற்றவனுதலின் அவனுக்குப்பௌதிகத்தால் உண்டாகும் தாபங்கள் ஒன்றுமேகிடையா. அவன் தியானசித்தி பெற்றவனுகலின் அவனுக்குச் சரீராவஸ்தையாகிய மூப்பும், வாதபித்த சிலேத்துமங்களின் நானமிகுதிகளால் விளையும் ரோகங்களும், எவ்வகைசிகிச்சைகளுககும் வசப்படாத பசி, தாகம், நித்திரை முதலிய பிணிகளும் அணுகா. அவன் சமாதிசித்தி பெற்றவனுகலின் அவனுக்கு மரணமு மில்லையாம். மரணம் இல்லையென்றுல் என்றும் மரணமில்லையென்று கருத்தல்ல. தான் கருதியகாலத்தில் உண்டாவதன்றி தன்னுடைய இச்சையின்றி கர்மகதிக்கேற்றவாறு குறிக்கப்பட்ட காலத்தில் சம்பவியாதென்பது பொருளாம். ஆகையினுலன்றோ நம் தாயுமான சுவாமிகள் "ஜகமீதிருந்தாலும் மரணமுண்டென்பது சதாநிஷ்டர் நினைவதில்லை, சிந்தையறியார்க்கீது போதிப்பதல்லவே செப்பினும வெகுதர்க்கமாம்" என்றறைந்தருளினர். ஞானங்க

னிந்தபக்தியின் அருணலம் இத்தகையதென்று உலகினருக்கு வெளிப்படையாகக் காட்டும்பொருட்டே அழுது அழுது அடியடைந்த நம் மணிவாசகப்பிரான் “சாதல் சாதல் பொல்லாமை” எனவும், “செத்தேபோனற் சிரியாரோ” எனவும், “கரணங்களெல்லாம் கடந்து நின்ற கறைமிடற்றன், சரணங்களே சென்று சார்தலுமேதானெனக்கு, மரணம் பிறப்பென்றிவை யிரண்டின் மயக்கறுத்த, கருணைக் கடலுக்கே சென்றூதாய்க் கோத்தும்பீ” எனவுந் திருவாய்மலர்ந்தருளினதுமன்றி பரவெளியிற் பலருங் காணமறைந்தருளினர். சிவதருமோத்தரமும் “மரிப்பதினருந் துயர் மதிக்கின் மற்றிலை” என்றும், “பட்டிடப்படுந் துயர் பகரற்பாலதோ” என்றுஞ் சாற்றியது.

உலகத்தில் நிகழும் வழக்கம்போல் தேகங் கட்டையைப் போல் பிணவியலாய் விழுந்துபோதலும், உயிர் முத்தியடைதலும் பந்தவியல்பாகும். அது மேலான முத்தியன்று. என்னை! பிராரத்துவத்துக்கேற்ப தேகம் நழுவிப்போதல் இயல்புதானே யெனின் அதுவும் பொருத்தமன்று. பிராரத்துவம் சுபத்தமெனவும், மந்தமெனவும், தீவிரமெனவும் மூன்றுவிதப்படும். அவற்றுள் சுபத்தம் சிவதர்மங்களில் ஒருப்பட்டவரை வாதியாது. மந்தம் சிவஞானிகளை வாதியாது. தீவிரம் எல்லாரையும் வாதிக்குமாஞலும் சிவஞானிகளை மிகுதியும் வாதியாது. அதாவது, வெந்தபடம்போல் சத்தி கெட்டுப்போய் வாதனை மாத்திரையாய் நின்று சிறிதே தாக்குவதல்லது வாதனையாற் செய்யக்கடவது ஒன்று மின்று. பெருங்காயம் இருந்தொழிந்த பாத்திரத்தில் அவ்வாசனையிருந்து கந்தித்தும், ஒரு கறிக்கும் உபயோக மாகாததுபோல் தேக நீங்குமளவுமிருந்து பின் அதனோடு மாய்ந்தொழிந்துபோம். ஆகையினலே சிவாக்நியினற் றகிக்கப்பட்ட ஜீவன் முக்தனுடைய சரீரம் அக்கினியில் நன்கு புடமிட்டபொன்போற்றிகழ்தலால் உருவச்சித்தி, அருவுருவச் சித்தி, அருவச்சித்தி என்னும் மூவகைச் சித்திகளுள் ஏதாவதொன்றை யடைதல்திண்ணம். அப்போதுதான் அச்சீவனுக்கு மேலொரு புனர்ஜன்மமில்லை யென்பது நிசசயம். இவற்றிற்குப் பிரமாணம்-திருவாசகம் “மண்மேல் யாக்கை விடுமாறும் வந்துன் கழற்கே புகுமாறும், அண்ணு எண்ணக்கடவேனே” எனவும் தாயுமானசுவாமிகள் பாடல் “உலகநெறிபோற் சடலமோய வுயிர்

முத்தி இரண்டுமெனல் பந்தவியல்பே பராபரமே” எனவும், “முத்தியிலுந் தேகமிசை மூவிதமாஞ் சித்திபெற்றோர், எத்தனைபே ரென்றுரைப்ப தெந்தாய்பராபரமே”எனவும், “தேகம் யாதேனு மொரு சித்திபெற சிவன்முத்தி, யாகும் நெறி நல்ல நெறியையா பராபரமே” எனவும் வருமாறு காண்க. இத்திறவைதிகசைவ முத்தி பெறுவது மிகவும் அருமையானதென்று அச்சமுற்றோ? அல்லது வேறெக்காரணத்தாலோ, ஏனைய சமயத்தினர் இதனைக் கொள்வாராயினரல்லர். நம்மாழ்வாரும் “சரணமாகுந் தனதாளடைந்தார்க்கெலாம், மரணமானபின் வைகுந்தங் கொடுக்கும்பிரான்” எனவும், “அமரர்தொழப்படுவானை யனைத்துலகுக்கும் பிரானை, அமரமனத்தினுள் யோகுபுணர்ந் தவன்றன்னோ டொன்றாக, அமரத்துணிய வல்லார்களொழிய வல்லாதாரெல்லாம், அமரநினைந்தெழுந்தாடி யரற்றுவதே கருமமே” எனவும் அருளிச்செய்தனர். அவ்வாணையின்படி வைஷ்ணவர்கள்யாவரும் இக்காலத்தில் ஆடிப்பாடி யரற்றுவதையே கருமமாகக் கொண்டார்களேயன்றி முக்திசாதனமான அந்தர்யாக ராஜயோகத்தை கைப்பற்றினவர்களல்லர். இது எங்கும் நிகழும் பிரசித்தமான லௌகிகவிஷயம். பகிர்முக அந்நியவழிபாடு அத்துவித சொரூபஞானத்தை ஒருபோதும் பயவாது. நிர்க்குணசிவம், தானாகி நிற்கும் ஞானநிஷ்டையே நிஷ்டை. அது எளிதில் கைகூடுவதன்று. “யோகியர்க்கே ஞானமொழுங்காம்பேரன்பான, தாகியரும் யோக முன்னே சார்ந்தோர் பராபரமே” என்று கட்டளையிட்டருளினார் நம் தாயுமான சுவாமிகள்.

மா—பிரணவம என்னுஞ்சொல்லுக்குச் சப்தார்த்தம்யாது?

ஆ—விளக்குதும். கேட்பாயாக.

அதர்வணவேத அதர்வசிகோப நிஷத்.

𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌨𑍍 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌪𑍍𑌰𑌣𑌾𑌮𑌯𑌤𑍀𑌤𑌿 𑌪𑍍𑌰𑌣𑌵𑌃
𑌚𑌤𑍁𑌰𑍍𑌧𑌾𑌵𑌸𑍍𑌥𑌿𑌤 𑌇𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌦𑍇𑌵𑌵𑍇𑌦𑌯𑍋𑌨𑌿𑌃
𑌸𑌰𑍍𑌵𑌵𑌾𑌚𑍍𑌯 𑌵𑌸𑍍𑌤𑍁 𑌪𑍍𑌰𑌣𑌵𑌾𑌤𑍍𑌮𑌕𑌮𑍍।

ப்ராணாந் ஸர்வாந் பரமாத்மநி ப்ரணாமயதீதி ப்ரணவ:
சதுர்த்தாவஸ்தித இதி ஸர்வதேவ வேதயோநி:
ஸர்வவாச்ய வஸ்து ப்ரணவாத்மகம்।

(இ-ள்) “எல்லாப் பிராண விருத்திகளையும் பரமாத்மாவினிடத்தில் சேர்ப்பிக்கின்றமையால் பிரணவமென்று சொல்லப்

படும். நான்காயிருப்பதால் எல்லாத்தேவர்களுக்கும் எல்லா வேதங்களுக்குங் காரணம். எல்லா வாச்யப்பொருள்களும் பிரணவசொரூபமாகும்.'' எனவும்,

அதர்வணவேத அதர்வசிரோபநிஷத்.

𑌅𑌥 𑌕𑌸𑍍𑌮𑌾𑌦𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 𑌪𑍍𑌰𑌣𑌵𑌃 𑌯𑌸𑍍𑌮𑌾𑌦𑍁𑌚𑍍𑌚𑌾𑌰𑍍𑌯𑌮𑌾𑌣 𑌏𑌵
𑌋𑌚𑍋 𑌯𑌜𑍂𑌂𑌷𑌿 𑌸𑌾𑌮𑌾𑌨𑍍𑌯𑌥𑌰𑍍𑌵𑌾𑌙𑍍𑌗𑌿𑌰𑌸𑌶𑍍𑌚
𑌯𑌜𑍍𑌞𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌚 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍇𑌭𑍍𑌯𑌃 𑌪𑍍𑌰𑌣𑌾𑌮𑌯𑌤𑌿
𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 𑌪𑍍𑌰𑌣𑌵𑌃।

அதகஸ்மாதுச்யதே ப்ரணவः யஸ்மாதுச்சார்யமாண ஏவ
ருசோயஜூம்ஷி ஸாமான்ய தர்வாங்கிரஸச்ச
யஜ்ஞேப்ரஹ்மச ப்ராஹ்மணேப்யः ப்ரணாமயதி
தஸ்மாதுச்யதே ப்ரணவः।

(இ-ள்) "இனி எதுபற்றி பிரணவமென்று சொல்லப்படுகின்றான், எதனால் உச்சரித்தவுடனே ருக், யஜூர், ஸாமம், அதர்வணம் என்னும் வேதங்கள் நான்கையும், அவற்றின் பிரதிபாத்தியனான பரமேசுவரனாகிய தன்னையும் பிராமணர்களுக்கு யஞ்ஞத்தில் தோற்றுவிக்கின்றான் அதனாலே பிரணவன் என்று சொல்லப்படுகின்றான்'' எனவும் மொழிந்தன. ஆசாரியாபிமானம் மேலிட்ட பிரணவோபாசகன் ஆசாரியனுடைய திருவடிகளைப் பணிந்து அவனுபதேசித்தபடியே நிஷ்டைகூட அப்பியாசித்தவுடன் அவனுடைய இந்திரியங்களும், பிராணன்களும், அந்தக்கரணங்களும் எளிதில் லயமடைந்து விடுகின்றன. அப்பொழுது அவனுக்குப் பிரணவசித்தி எய்துகிறது. அதனாலே, பிரபஞ்ச சொரூபமறிந்தவன் பிரபஞ்சவிகாரங்களை யெல்லாம் எளிதிலுணர்வதுபோல, பிரணவ சொரூபமறிந்தவன் அதன் காரியபேதங்களனைத்தையும் அறிந்தவனாகின்றான். அவன் நினைத்த மாத்திரத்தில் சர்வ வேதங்களும் அவனுக்கு முன்னிலைப்படும். அப்பொழுது அவற்றின் ரஹஸியார்த்தங்களை சுலபமாய்த் தெரிந்துகொள்ளுகிறான். பிரணவம் என்னுஞ்சொல் "ணு'' துதித்தல் என்னுந் தாதுவினின்றுந் தோன்றியது. பிறகு தோத்திரம் என்றபொருளில் "நவः'' என்னுஞ் சொல்லுண்டாக அதனோடு "ப்ர'' என்ற உபசர்க்கஞ் சேர்ந்து "ப்ரணவ'' என்றாயிற்று. அதனால் பிரணவத்தினின்றுந் தோன்றிய சமஸ்தவாச்சியங்களும் பிரணவாபின்ன தேவதையாகிய பரப்பிரம சிவத்தின்

தோத்திரங்களாய் அமைவுறுவனவாயின. தோத்திரம் என்பது குணமுடைய பொருளினிடத்து அக்குணங்களை யெடுத்துப் புகழ்ந்து கூறுதல். உலகத்திலுள்ள எல்லாப் பொருளின் கண்ணும் அவ்வப்பொருட்குச் சிறப்பியல்பா யமைந்துள்ள சுகுணம் பரம சிவசொரூபமேயாம். ஆகையினாலே பரமசிவனே எல்லாத் தோத்திரங்கட்கும் உரியவராகின்றனர். ஒரு சக்கரவர்த்தியின் அதிகாரம் மந்திரிமுதல் கிராமாதிகாரிவரையிலும் மேலும் கீழுமாய் வகுத்து அளிக்கப்படினும் அவர்கள் யாவரிடத்தும் ஜனங்கள் செலுத்தும் கௌரவ முதலியன அரசன்பாற் செலுத்துங் கடமையேயன்றோ. அதுபோல எல்லாக் கடவுளருக்குச் செய்யும் நமஸ்காரமும் எல்லாக் கடவுளரும் தாமாக விளங்கப்பெற்ற சிவபெருமா னொருவருக்கே சொந்தமாகும். நமஸ்காரமெல்லாம் பரமசிவத்தின் சொத்தாமென பலவேதபாகங்கள் நிரூபிக்கின்றமையால் அவருக்குச் செய்யும் பலவகை வழிபாடுகளில் நமஸ்காரம் ஒன்றே மிகச் சிறந்ததாகும். இக்கருத்தை அகத்திற் கொண்டே ருக்வேதத்தில் பல மந்திரங்கள் பின்வருமாறு கூறப்பட்டுள்ளன :—

[Grantha script]

ஸ்தோமம் வோ கத்யருத்ராய சிக்வஸே । க்ஷயத்வீராய நமஸாதிதிஷ்டந । ஏபிச்சிவஸ்வ வாம் எவயா வபிஃ । திவஸ்விஷக்தி மருதோ நிகாமாபிஃ ।

(இ-ள்) "ஓ தேவர்களே! உங்களைக் குறித்து நாங்கள் செய்த தோத்திரங்களையும் வணக்கங்களையும எல்லாம் வல்ல உருத்திரமூர்த்தியினிடத்து அர்ப்பியுங்கள். இவற்றிற்கெல்லாம் உரியவர் அவரேயாம். அவர் நீங்கள்கொண்ட வெண்ணத்தை நிறைவேற்றி உங்களை அநுக்கிரகிப்பர்."

(1) [Grantha script] (2) [Grantha script]

(1) நமச்லோக்யாயச । (2) இமம் ஸ்தோம மர்ஹதே ॥

(இ-ள்) (1) "தோத்திரங்களுக் குரியவரை வணங்குவாம். (2) இத்தோத்திரத்துக் கேற்றவர்."

(1) [Grantha script] (2) [Grantha script]

[illegible] (3) [illegible]

(1) இதம் பித்ரேமருதா முச்யதேவச: । ஸ்வதோஸ்வா தீயோ ருத்ரஸ்யவர்தநம் । (2) இமாருத்ராய ஸ்திரதந்வநேகிர: । க்ருணீமஸித்வேஷம் ருத்ரஸ்யநாம ॥ (3) தமுஷ்டிஹி ।

(இ-ள்) (1) "தேவதைகளின் பிதாவாகிய உருத்திரமூர்த்தி திருப்தியடையவேண்டி இனிமையினும் இனிமையான சொற்களை அவருக் களிப்போம். (2) ஸ்திரமான வில்லையுடைய உருத்திரமூர்த்திக்கு இவ் வாக்குகளை அர்ப்பிப்போம். பிரகாசமுள்ள உருத்திர நாமதேயங்களைக் கிரஹிப்போம். (3) அவரையே துதிப்பாயாக."

அன்றியும், அதர்வணவேத ஸம்ஹிதையில் பதினோராங் காண்டம், இரண்டாம் அத்தியாயமாகிய ஸ்ரீ ருத்ராத்தியாயம். [illegible] – மோபாராம ஜிஹ்வயேயமாநம்.

(இ-ள்) "நாவினால் அடையப் படுபவரை என்றும் ஒழியற்க". என்றுஉணர்த்தியது. இவ் வேதவாக்கியங்களினாலே மும்மூர்த்திகளுக்கும் மேலாய்த்திகழும் ஓங்காரவாச்சிய பரமேசுவரரே சமஸ்தவேத புராணேதிஹாசங்களால் வந்திக்கப்படும் பிரமமெனவும், மற்றைய தேவர்களைத் துதித்தல் கௌணமெனவும் நன்கு நிரூபிக்கப்பட்டனர். இவ்வுண்மையையே கஞ்சனூர்ச் செல்வராகிய ஹாதத்த யோகிகளும் போகாவலியில் விரித்திருக்கின்றார். அவ்விரிவை அங்கே காண்க.

அல்லாமலும், "சர்வ வேதங்களும் எப்பதத்தைப் பகர்கின்றனவோ, பதங்களெல்லாம் எப்பதத்தைச் சொல்கின்றனவோ, பிரமசரியத்திருப்போர் எப்பதத்தை விரும்புகின்றனரோ அப்பதத்தைச் சங்கிரகமாக "ஓம்" என்று உனக்குச் சொல்லுகிறேன்" என்னும் பொருள் போதா

## கிருஷ்ணயஜுர்வேத கடோபநிஷத.

[illegible]

ஸர்வேவேதாயத்பதமாமநந்தி தபாம்ஸிஸர்வாணிசயத்வதந்தி ।
யதிச்சந்தோ ப்ரஹ்மசர்யம்சரந்தி தத்தேபதம் ஸங்க்ரஹேண
ப்ரவீம்யோமித்யேதத்॥ ..........என்று சாற்றியது.

இதனாலே பிரணவமே ஸர்வ வேத மூலமெனவும், அதுவே எல்லாத்தவமெனவும் அதைவிரும்பியே பெரியோர் பிரமசரியம் பெறுவரெனவும் ஸ்தாபிக்கப்பட்டது. பட்டுவே சமஸ்தவேதங் களுக்கும் மூலமாயுள்ள "ஓம்" என்னும் பதத்தால் நிர்ணயிக்கப் பட்டபொருள் சாக்ஷாத் சிவபெருமான் என்றே அறிவுறுத்தப் பட்டது.

மா.—தாரம் என்னும் பதத்தின் பொருளைப் பலசமயிகள் பலவாறாகக்கூறுதலால் அதன் இரகசியப் பொருளையும் விளக் கியருள வேண்டும்.

ஆ.—அப்படியேசொல்லுகிறோம். கவனமாய்க்கேட்பாயாக.

அதர்வணவேத அதர்வசிகோபநிஷத்.

𑌸𑌰𑍍𑌵𑍇𑌭𑍍𑌯𑍋 𑌦𑍁𑌃𑌖𑌭𑌯𑍇𑌭𑍍𑌯𑌃 𑌸𑌂𑌤𑌾𑌰𑌯𑌤𑍀𑌤𑌿 𑌤𑌾𑌰𑌣𑌾𑌤𑍍 𑌤𑌾𑌰𑌃।

ஸர்வேப்யோ துஃகபயேப்யஸ் ஸந்தாரயதீதிதாரணாத்தாரஃ।

(இ-ள்) "எல்லாவித துக்க பயங்களினின்றுந் தாரணஞ்செய் விப்பதால் தாரம் என்று சொல்லப்படுகிறது" எனவும்,

அதர்வணவேத அதர்வசிரோபநிஷத்.

𑌅𑌥 𑌕𑌸𑍍𑌮𑌾𑌦𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 𑌤𑌾𑌰𑌂 𑌯𑌸𑍍𑌮𑌾𑌦𑍁𑌚𑍍𑌚𑌾𑌰𑍍𑌯𑌮𑌾𑌣 𑌏𑌵 𑌗𑌰𑍍𑌭 𑌜𑌨𑍍𑌮 𑌜𑌰𑌾𑌮𑌰𑌣 𑌸𑌂𑌸𑌾𑌰𑌮𑌹𑌦𑍍𑌭𑌯𑌾𑌤𑍍 𑌸𑌂𑌤𑌾𑌰𑌯𑌤𑌿 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 𑌤𑌾𑌰𑌂।

அதகஸ்மாதுச்யதே தாரம் யஸ்மாதுச்சார்யமாணஎவ கர்ப்ப ஜந்ம ஜராமரணஸம்ஸாரமஹத்பயாத் ஸந்தாரயதி தஸ்மாதுச்யதே தாரம்।

(இ-ள்) "இனி எதனால் தாரமெனப்படுவான். எதனால் உச் சரித்தமாத்திரத்தில் கர்ப்பம், ஜன்மம், ஜரை, மரணம் ஆகிய சம் சாரமகாபயத்தினின்றுந் தாண்டும்படிச்செய்வான் அதனால் தா ரம் எனப்படுவான்" எனவும் மொழிந்தன. சம்சாரபயமாவது- கருக்குழியிலமைதலும், யோனிவாய்ப்பட்டுப்பிறத்தலும், பல வகைச் சரீராவஸ்தைகளையடைதலும், சரீரம் நீங்கினபின் பலபல நரகயாதனைகளை அநுபவித்தலும், யான் எனது என்னும் அகங் காரமமகாரங்களுக்கு இருப்பிடமாகிய சரீரம்,மனைவி,மக்கள்,பந் து,மித்திரர்,வீடு,நிலம், குளம், கூவம், தோட்டம் முதலியவைகளி டம் அபிமானம் வைத்திருத்தலுமேயாம். இவற்றால்விளையும் அபா யங்களோ அபாரமாகும். இத்தகைய மகா பயத்தினின்றுந் தாண்

டிச்செல்வதற்கு இப்பிரணவமே பரமதாரகமாயிருத்தலால் இதை த்தாரமென்று ஆரணங்கள்வழங்கின. தாரம் என்ற சொல்லுக்குப் பொருளாயுள்ளவர் பரமசிவனேயாம். "நமஸ்தாராய நமஸ்ஸம்பவே ச மயோபவே ச" என்றற்றொடக்கத்தனவான ஸ்ரீ ருத்ரநமகத்திலுள்ள தாரசப்தம் அவரையே பிரதிபாதிக்கின்றது. ஆத்மாக்களுக்குப் புனர்ஜனனம் உண்டாகாது காக்கும் புண்ணியமூர்த்தியும் அவரே. அவரொருவரே ஜனனமரணமென்னும் கொடியபவப்பிணியணுகப் பெறாத முழுமுதற்கடவுள். ஏனையபிரமன்மால் முதலிய சமஸ்த சுரர்களும் ஸர்வஞ்ஞர்களாயும் ஈசுவரர்களாயும் இருப்பினுங்கூட அவர்களனைவரும் அக்கொடிய பவப்பிணியை யகற்றிக்கொள்ள சக்தியற்றவர்கள். அவர்கள் ஏதாவதொருகாரியத்தை முன்னிட்டுத்தங்கள் இச்சையாலாவது பிறர்சங்கற்பத்தாலாவது கருக்குழி நாற்றங்கமழப்பெறுங் கர்ப்பவாசத்தையடைந்து பிறக்கின்றார்களென்றாலும் அதுவுங் குற்றங்குற்றமே. "மற்றைத்தெய்வங்கள் வேதனைப்படுமிறக்கும் பிறக்குமேல் வினையுஞ்செய்யும்" என்னுஞ் சிவஞான சித்தியாரின் பிரமாணப்படி அத்தகைய குற்றங்கள் சிறிதும் அணுகப்பெறாத ஒருபொருளுண்டாயின் அது அவர்களினுஞ் சிறந்ததன்றோ. பிறவியென்னும் பெரும்பிணி நீங்காதபோது பிறர்சங்கற்பத்துக்கும் கர்மத்துக்கும்வசப்பட்டே தீரவேண்டும்.

அப்பொழுது தாம் கருதியவண்ணம் எதையும் பூர்த்திசெய்யக்கூடாமையாய்விடும். பலவித இடையூறுகளுக்கும் ஆளாகவேண்டிவரும். அதனால் அவர்களுக்குச் சுதந்தரஹீனம் சம்பவிக்கும். இவ்வித பல ஏதுக்களால் அரிபிரமாதி அமரர்களனைவரும் சுருதியிலோதியவாறு ஜீவர்களாதலின் சம்சாரமகாபயத்துக்கு உட்பட்டவர்களென்றே ஆரணங்கள் பலவிடத்தும் பன்முறையும் அறைகின்றன. அவர்களில் ஒருவரும் மோக்ஷதாதாவாகக் கருதப்பட்டிருக்கவில்லை. பிறவிப்பிணியால் பீடிக்கப்பட்டிருக்கிற ஜீவர்களைக் காக்கவேண்டுமாயின் அப்பிணிபிடித்து அலைகின்றவர்களுக்கு அது சாத்தியமாகுமோ! அம்புலிசூடிய அம்பிகைபாகனான எம்பிரானொருவனே திரிமூர்த்திகளையும் ஈன்ற துரீயமூர்த்தியாதலின் அவனே பிறப்பிலிப்பெருமானாவன். அவனை ஈன்றவர்கள் ஒருவருமேயில்லை. அவன் இயல்பாகவே

பாசங்களினின்றும் நீங்கி சர்வசுதந்தரனாய் விளங்குபவன். அவனே தாரபத்துக்குப் பொருளாயுள்ளானென்பது சர்வவேதாந்த பிரதிபந்நம். மோக்ஷதாதா, ஞானதாதா, ஆத்மபந்து, சர்வசொரூபன் அவனேயாம்.

### கிருஷ்ணயஜுர்வேத சுவேதாசுவதரோபநிஷத்.

[illegible]
[illegible]

*அஜாதஇத்யேவகச்சித்பீருః ப்ரபத்யதே*
*ருத்ரயத்தே தக்ஷிணமுகம் தேநமாம் பாஹிநித்யம்॥*

(இ-ள்) "ஜனனமரணசம்சாரத்துக்குப்பயந்த ஒருவன் பிறக்காதவனென்றே உன்னை வழிபடுகின்றான். ஏ ருத்ரா! எது உனது தென்முகம் அதனால் என்னைநித்தியமுங்காப்பாயாக" எனவும்,

[illegible]
[illegible]
[illegible]

*நதஸ்யகச்சித்பதி ரஸ்திலோகே நசேசிதாநைவசதஸ்யலிங்கம்।*
*ஸகாரணம் காரணாதிபாதிபோ நசாஸ்யகச்சிஜ்ஜநிதாநசாதிபః॥*

(இ-ள்) "உலகத்தில் அவ்வுருத்திரமூர்த்திக்கு மேலானபதியுமில்லை. பிரபுவுமில்லை. அவருக்குக் குறியுமில்லை. அவரேகாரணர். காரணாதிபதிகளுக்கு அதிபர். அவரைப் பிறப்பித்தவரும் அவருக்கு நாயகருமில்லை" எனவும்,

[illegible]
[illegible]

*ஜந்மநிரோதம் ப்ரவதந்தியஸ்ய ப்ரஹ்மவாதிநோயம் ப்ரவதந்திநித்யம்॥*

(இ-ள்) "எவருக்குஜன்மமில்லை. எவர் நித்யர் என்று பிரம்மவாதிகள் சொல்வார்கள்" எனவும்,

[illegible]

*அஜம்த்ருவம் ஸர்வதத்வைர் விசுத்தம்।*

(இ-ள்) "பிறப்பில்லாதவர். நித்தியர். தத்துவங்களையெல்லாங்கடந்தவர்" எனவும் முழக்கிப்போந்தன. இவ்வாக்கியங்களால் துரீயருத்திரமூர்த்தியின்பிறப்பு வேதத்தில் கேட்கப்படவில்லையென்பது பசுமரத்தறைந்த ஆணிபோன்றதாம். "பிறப்

பில் பெருமானைபின்றாழ்சடையானை” என்றது தமிழ்மறை. “பிறப் பிலிபிஞ்ஞகன் பேரருளாளன், இறப்பிலியாவர்க்குமின்பமதரு ளும்” என்றார் திருமூலதேவர். “பிறப்பதுமிறப்பதும் பெயருஞ் செய்கையு, மறப்பது நினைப்பதும் வடிவும் யாவையுந், துறப்பது மின்மையும் பிறவுஞ் சூழ்கலா, சிறப்புடையரனடி சென்னிசேர்த் துவாம்” என்றார் கச்சியப்பசிவாசாரியர்.

என்னே! “நாராயணாத் ருத்ரோ ஜாயதே-நாராயணாத்ருத் ரோஜாயதே-நாராயணனிடத்திலிருந்து உருத்திரன் பிறந்தான்” என்று கிருஷ்ணயஜுர்வேத நாராயணோபநிஷத்தும், “ப்ரஹ்மண: புத்ராய- ப்ரஹ்மண:புத்ராய” என்றற்றொடக்கத்தவாக்கியத் தில் பிரமனுடையபுத்திரர் இவர்” இவரை (துரீயசிவனுக்கேருடி யாக உரிய) பசுபதி, சர்வர், பவர், உருத்திரர், உக்கிரர், பீமர், ஈசானர், மகாதேவர் என்னும் அஷ்டநாமங்களைக்கொண்டு இவர் தந்தையாகியபிரமா அழைத்தாரென்று ருக்வேத சாங்காயனப் பிராம்மணமும், ஸாமவேத சதபதப் பிராம்மணமும் கூறுதலால், உருத்திர மூர்த்தியைப்பிறக்காதவரென்று எவ்வாறு அங்கீகரிக் கக் கூடுமென்றாலோ, அதர்வசிகை, அதர்வசிரஸ், கைவல்லியம், சுவேதாசுவதரம், சரபம், பஸ்மஜாபாலம், பிரமம், முதலியபல உப நிஷத்துக்கள் பிரமன், விஷ்ணு, உருத்திரன் என்னுந் திரிமூர்த்தி களுக்கும் ஜனகர் துரீயப்பிரமமாகிய குணத்திரயாதீத ருத்ர மூர்த்தி என்று நிருபித்திருத்தலால் வேதங்களில் ஒருவனையே பெற்றவனாகவும் பிறந்தவனாகவுங் கூறுவதாகப்பொருள்கொண்டு அவ்வேதவாக்கியங்களை அப்பிரமாணமாக்குதல் முற்றும் அசம் பாவிதமாகும். ஆதலால் பிறவாத்தன்மையைச்சர்வகாரணருத் திர மூர்த்தியினிடத்தும் பிறப்பைக் காரியமூர்த்தியினிடத்தும் சேர்த்திடல்நடுநிலை குன்றாவைதிகர்களனைவருக்கும் ஒப்பமுடிந் ததீர்வையாகும் இந்தத் துரீயப்பொருளினிடமே சர்வ வேதாந் தங்களும் நிலைபெறுகின்றன. இதுவே சமஸ்த பிரமவித்துக்க ளாலும் அடையற்பாலதான பரமதத்துவம். சர்வாந்தர்யாமி பாவத்தால் பரிபூரணசொரூபமாய் விளங்கும் பொருளும் இது வேயாம். வேதங்களில் மிகவும் ரகசியமென உபநிஷத்துக்களில் மறைக்கப்பட்ட பிரமப்பொருள் இத்துரீயசிவமே. இதுவன்றி வேறுதாயகம் சிற்றுயிர்களுக்கில்லையில்லை. சுவேதாசுவதரமும்,

[illegible]

**தத்வேதகுஹ்யோப நிஷத்ஸுகூடம்** . . . என்றது.

இவ்வுண்மை குருபக்தி சிவபக்தி நிறைந்த ஒருவர்க்கே விளங்கும். அவை யில்லாதார்க்கு கன்மேல்மழை, கானகத்துநிலா முதலியவற்றைப்போல் வாளாவொழியும்.

பராசர புராணமும்.

[illegible]

[illegible]

வைஷ்ணவேஷு புராணேஷு யோऽபகர்ஷஸ் தத்ருச்யதே ।
ருத்ரஸ்யாஸௌ ஹரஸ்யாஸ்ய விபூதிரேவ கேவலம் ॥

(இ-ள்) "வைஷ்ணவபுராணங்களிலே எந்தஉருத்திரர் அபகர்ஷமுடையராய்த்தோன்றுகின்றாரோ அந்தஉருத்திரர் இந்தத்துரீயசிவனை துகேவலம் விபூதியாம் (காரியமூர்த்தியாம்)" எனப்போதித்துள்ளது. ஆகையால் சுருதிகளில் உருத்திரருக்கு அபகர்ஷங்காணுமிடந்தோறும் இவ்வாறே பொருள்கொள்ளவேண்டுமென்பது சர்வவேதாந்த வேதிகளின் தீர்மானம். உபப்பிருங்கணமாகிய சிவ மஹா புராணம்.

[illegible]

[illegible]

அஜாதமிமமேவைகம் மத்வாஜந்மபீரவः।
ருத்ரஸ்யாஸ்யப்ரபத்யந்தே ரக்ஷார்த்தம் தக்ஷிணம் முகம்॥

(இ-ள்) "இந்த (துரீயருத்திரமூர்த்தி) ஒருவரை பிறவிப்பிணியற்றவரென நம்பி ஜனனத்தில் அச்சமுற்றோன் இவருடைய தென்திருமுகத்தைக் காத்தலுக்காகச்சரணமடைவன்" என்று மேற்காட்டிய மந்திரோபநிஷத் வாக்கியத்தைத் தெளிவாய்விரித்தது. சர்வேசுவரன மகேசுவரன், பரமேசுவரன், விசுவேசுவரன் முதலிய திருநாமங்கள் அத்துரீயப்பொருளுக்கே அமைவனவன்றி ஏனையோருக்கு எட்டுணையும் அமைவனவல்ல. அத்தகைய அசாதாரண இலக்கணங்களமைந்த சிவபிரானொருவரே யாவராலும் வழிபடத்தக்க சர்வபிராம்மணகுலதேவதையென்று வேதங்களே குருவாய்நின்று அடியில்வருமாறு உபதேசியாநின்றன.

## கிருஷ்ணயஜுர்வேத சுவேதாசுவதரோபநிஷத்.

𑌤𑌮𑍀𑌶𑍍𑌵𑌰𑌾𑌣𑌾𑌂 𑌪𑌰𑌮𑌂 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌂 𑌤𑌂 𑌦𑍈𑌵𑌤𑌾𑌨𑌾𑌂 𑌪𑌰𑌮𑌂 𑌚 𑌦𑍈𑌵𑌤𑌮𑍍 | 𑌪𑌤𑌿𑌂 𑌪𑌤𑍀𑌨𑌾𑌂 𑌪𑌰𑌮𑌂 𑌪𑌰𑌸𑍍𑌤𑌾𑌤𑍍 𑌵𑌿𑌦𑌾𑌮 𑌦𑍇𑌵𑌂 𑌭𑍁𑌵𑌨𑍇𑌶𑌮𑍀𑌡𑍍𑌯𑌮𑍍 ||

*தமீச்வராணும் பரமம் மஹேச்வரம் தம்தைவதாநாம்பரமஞ்சதைவதம்।*
*பதிம்பதீநாம்பரமம்பராஸ்தாத் விதாமதேவம் புவனேசமீட்யம்॥*

(இ-ள்) "ஈசுவரர்களாகிய மும்மூர்த்திகளுக்கும் மேலோராய்த்திகழும் மகேசுவரரும், அக்கினி முதலிய தேவர்களுக்குஞ் சிறந்தோராய்விளங்கும் மகாதேவரும், இந்திரன் முதலிய பதிகளுக்கும் பரமராய் இலங்கும் பசுபதியும், புகழத்தக்க புவனேசுவரரும், தமசுக்கு அப்பாற்பட்ட தேவரே என அறிவோம்." எனவும்,

𑌨 𑌤𑌸𑍍𑌯 𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌕𑌰𑌣𑌂 𑌚 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 𑌨 𑌤𑌤𑍍𑌸𑌮𑌶𑍍𑌚𑌾𑌭𑍍𑌯𑌧𑌿𑌕𑌶𑍍𑌚 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 | 𑌪𑌰𑌾𑌸𑍍𑌯 𑌶𑌕𑍍𑌤𑌿𑌰𑍍𑌵𑌿𑌵𑌿𑌧𑍈𑌵 𑌶𑍍𑌰𑍂𑌯𑌤𑍇 𑌸𑍍𑌵𑌾𑌭𑌾𑌵𑌿𑌕𑍀 𑌜𑍍𑌞𑌾𑌨𑌬𑌲𑌕𑍍𑌰𑌿𑌯𑌾 𑌚 ||

*நதஸ்ய கார்யம் கரணஞ்ச வித்யதே நதத்ஸமச்சாப்யதிகச்ச வித்யதே।*
*பராஸ்யசக்திர் விவிதைவச்ரூயதே। ஸ்வபாவிகீ ஜ்ஞாந பலக்ரியாச॥*

(இ-ள்) "அவருக்குக் காரியமுமில்லை கரணமுமில்லை. அவருக்குச் சமானருமில்லை அதிகருமில்லை. அவருடைய சக்திபரையெனவும் பலவகையாகவுங் கேட்கப்படுகின்றனர். ஆயினும் இயற்கையிலமைந்தது ஞானமும் பலமுங் கிரியையுமாம்." எனவும் போந்தன.

இவ்வாக்கியங்களால் வேதங்களுக்குப் பேரணியாயுள்ள பரமேசுவரரை எந்நாளும் புகழ்வதும், பாடுவதும், உணர்த்துவதுமே அவைகளுக்குப் பெருமையென்றாயிற்று. அதனால் சமஸ்த வேதபுராணேதிகாசங்களால் புகழப்படுபவரும் உணர்த்தப்படுபவரும் அவரேயாம். அவரே வேதோக்தமான வைதிக சைவநெறி நின்றோராகிய எம்மனோரால் எக்காலமும் வழிபடும் நான்காவது தெய்வம். அவர் பஞ்சகிருத்திய அதிகாரஞ்செய்து நிற்குந்தன்மையில் பதி எனவும், அவ்வதிகாரத்தினின்றும் நீங்கித் தன்னியல்பில் அறிவுமாத்திரையாய் நிற்குந்தன்மையில் சிவம் எனவும் போற்றப்படுகின்றனர். காந்திப்பொருளில் வரும் "வஶ - வச" என்னும் வினைப்பகுதியினின்றும் "ஶிவ-சிவ" என்

னுஞ் சொல் பிறந்தமையானும், "வஶகாந்தௌ - வசகாந்தௌ" என்று பாணினி வியாகரணசூத்திரம் அதை விளக்கினமையானும், "பஶ்யக: - பச்யக:" என்பது "கஶ்யப: - கச்யப:" எனவும், "ஹிம்ஸி - ஹிம்ஸி" என்பது "ஸிம்ஹ - ஸிம்ஹ" எனவும் வர்ணவிபர்யயமுற்று வந்தாற்போல, "வஶ-வச" என்னுந் தாதுவும் வர்ணவிபர்யயமடைந்து "ஶிவ-சிவ" எனப்போந்தது. இவ்வாறே ஸ்ரீ அப்பையதீக்ஷித சுவாமிகள் தாம் இயற்றியருளிய சிவதத்துவவிவேக உபோற்காதத்தில் சிவ என்னுஞ் சொல்லுக்குரைத்த பொருளில் கூறியுள்ளார். மேலும்,

"சி" என்னுந்தாது கிடத்தலெனப் பொருள்படுதலின் சர்வசேதனுசேதனப்பிரபஞ்சங்களும் இறுதிக்காலத்துத் தன்மாட்டுவந்து ஒடுங்கத் தான் ஒன்றினும் ஒடுங்குதலின்றி அவற்றிற்கெல்லாம் புகலிடமாய் நிலைபெற்று நின்று என்றும் ஒரேபடித்தாயிருக்கும் நீர்மையதாம். அதாவது, ஊழிக்காலத்து உலகனைத்தும் தத்துவங்களினும், தத்துவங்கள் மாயையினும், மாயை சிவசக்தியினும், சிவசக்தி சிவத்தினும் ஒடுங்கச் சிவம் அவையனைத்தையும் தன் மாட்டொடுக்கிக்கொண்டு சுயம்பிரகாசமாய் விளங்காநிற்கும். "சி" என்னும் வினைப்பகுதி மெலிவித்தல் எனவும், கூருவித்தல் எனவும் பொருள்படுதலின் ஆத்மாக்களின் ஆணவமலசக்தியை மெலிவித்துச் சிவசக்தியைக் கூருவித்தல் என்பதும் அதன்பொருளாம். "வ" என்பது சிவசக்தியையுணர்த்தாநிற்கும். சிவசக்தியாவது சிவத்தினதுகுணம். அது சூரியனில் ஒளிபோல்வது. சூரியனும் ஒளியும் வெவ்வேறு பொருள்களல்லவாயினும் விஷயங்களை விளக்குமிடத்து ஒளியெனவும், தன்னை விளக்குமிடத்துச் சூரியனெனவும் தாதாத்மியமாய் இருதிறப்பட்டுக் குணகுணிபாவத்தால் இருமையாக எண்ணப்படுவதுபோலச் சக்தியும் சிவமும் புறப்பொருளைநோக்கி நிற்குநிலையில் சக்தியெனவும், புறப்பொருளை நோக்காது அறிவுமாத்திரமாய் நிற்கு நிலையில் சிவமெனவும் இருதிறமாக எண்ணப்பட்டுக் குணத்தன்மை குணித்தன்மை என்னுந் தன்மை வேறுபாட்டால் இருவகையாகப் போற்றப்பட்டு நிற்கும். அவ்வாறு போற்றப்பட்டிருப்பினும் இருதன்மையும் வேறல்லவாதலால் ஈரியலினையும் அடக்கிக்கொண்டு பேரறிவாம் சுத்தசைதன்னியம்

எனப் பொருள்கொள்ளும்படி "சிவம்" என விளங்காநிற்கும். இதுவே வேதவேதாந்தங்களாலும் சிவாகமங்களாலும் பிரதிபாதிக்கப்படும் உண்மை. வேதமூலமாகிய ஓங்காரமும், காயத்திரி மகாமந்திரமும், மகாவாக்கியங்கள் நான்கும் உணர்த்தும் பொருளுமிதுவே. ஆத்மாக்களுக்கு அந்தர்யாமியாய் அறிவாய் நிலவுவதும் இந்தச் சிவமே. இதுவன்றி வேறுதாரகம் சிற்றுயிர்களுக்கில்லை. சிவமென்னும் நாமம் சிவபெருமானுக்கேயன்றி வேறு எக் கடவுளருக்கும் எவ்விடத்தும் வேதங்கள் மறந்தும் மொழிந்ததின்று. ஆகையினாலன்றோ திருநாவுக்கரசுமூர்த்திகள்,

சிவனெனுநாமந்தனக்கேயுடைய செம்மேனியம்மான்
அவனெனையாட்கொண்டளித்திடுமாகி லவன்றனையான்
பவனெனுநாமம் பிடித்துத்திரிந்து பன்னாளழைத்தால்
இவனெனைப்பன்னாளழைப் பொழியானென்றெதிர்ப்படுமே.

என்று திருவாய்மலர்ந்தருளினார். திருமூலதேவரும், "சிவ சிவ வென்கிலர் தீவினையாளர், சிவசிவ வென்றிடத் தீவினைமாளும், சிவசிவ வென்றிடத் தேவருமாவர், சிவசிவ வென்ன சிவகதி தானே" என்று பணித்தருளினார்.

அதர்வணவேத பிருஹஜ்ஜாபாலோபநிஷத்தும்.

𑌧𑌿𑌗𑍍𑌭𑌸𑍍𑌮𑌰𑌹𑌿𑌤𑌂 𑌭𑌾𑌲𑌂 𑌧𑌿𑌗𑍍𑌗𑍍𑌰𑌾𑌮𑌮𑌶𑌿𑌵𑌾𑌲𑌯𑌂 ।
𑌧𑌿𑌗𑌨𑍀𑌶𑌾𑌰𑍍𑌚𑌨𑌂 𑌜𑌨𑍍𑌮 𑌧𑌿𑌗𑍍𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌮𑌶𑌿𑌵𑌾𑌶𑍍𑌰𑌯𑌾𑌂 ॥

திக்பஸ்மரஹிதம் பாலம் திக்ராமம சிவாலயம் ।
திகநீசார்சநம் ஜந்ம திக்வித்யாம சிவாச்ரயாம் ॥

(இ-ள்) "பஸ்மமணியாத நெற்றியைச்சுடு. சிவாலயமில்லாத கிராமத்தைக் கொளுத்து. சிவார்ச்சனையில்லாதவன் ஜன்மத்திலே தீயை வை. சிவனை ஆச்சிரயிக்காத சாஸ்திரங்களை யெரித்துவிடு" என்றோதியது. இந்தச் சுருதிவாக்கியமே கூர்மபுராணத்தினும் வந்துளது. பாவமனைத்தையும் தகிக்கும் இச்சிவநாமம் மங்களம், இன்பம் என்னும் பொருளினுங்கூட வருதலுமுண்டு. "மனிதர்களுக்கு இன்பஞ்செய்ய விரும்பி எப்பொருள்களுக்கும் நித்தியமாய் உபக்கிரமமாயுள்ளதை விருத்திசெய்தலினால் அந்தத் தேவன் சிவன் எனப்படுவன்" என்னும் பொருள்பட மஹாபாரதம் துரோணபர்வம் அடியில்வருமாறு வியாக்கியானஞ் செய்துள்ளது.

𑌸𑌮𑍇𑌤𑍍𑌯 𑌯𑌤𑌿𑌯𑌨𑍍𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌸𑌰𑍍𑌵𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑌾𑌮𑍁𑌪𑌕𑍍𑌰𑌮𑌮𑍍 ।
𑌶𑌿𑌵𑌮𑌿𑌚𑍍𑌛𑌨𑍍𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌣𑌾𑌂 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌦𑍇𑌵𑌃 𑌶𑌿𑌵𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌃 ॥

ஸமேதயதியந்நித்யம் ஸர்வார்த்தாநா முபக்ரமம் ।
சிவமிச்சந்மநுஷ்யாணாம் தஸ்மாத்தேவச்சிவः ஸ்ம்ருதः ॥

அன்றியும், "இரு அக்ஷரமாகிய சிவநாமத்தை வாக்கினொலொருமுறை யுச்சரிப்பின் அது விரைந்து மனிதர் பாவங்களையெல்லாம் நாசமாக்கும்" எனப் புராணமும் மொழிந்துள்ளது. பதினெண்வித்தைகளுக்குள்ளே மேலானது சுருதி. அச்சுருதியுள்ளும் மேலானது ஸ்ரீ ருத்ரம். அவ்வுருத்திரத்துள்ளும் மேலானது ஸ்ரீ பஞ்சாக்ஷரம். அப் பஞ்சாக்ஷரத்துள்ளும் சிவ என்னும் ஈரெழுத்தே மிகவும் மேலானது என்றோர்க.

இஃதிவ்வாறிருக்க, "யோனியைவிட்டு வெளிவருவேனாயின் பரமேசுவரரும், பர்க்கரும், பசுபதியும், உருத்திரரும், ஜகத்குருவுமான மகாதேவரைச் சரணமடைவேன்" என்னும் பொருள்தோன்ற

𑌯𑌤𑌿𑌯𑍋𑌨𑍍𑌯𑌾𑌂 𑌪𑍍𑌰𑌮𑍁𑌚𑍍𑌯𑍇𑌯𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 ।
𑌭𑌰𑍍𑌗𑌂 𑌪𑌶𑍁𑌪𑌤𑌿𑌂 𑌰𑍁𑌦𑍍𑌰𑌂 𑌮𑌹𑌾𑌦𑍇𑌵𑌂 𑌜𑌗𑌦𑍍𑌗𑍁𑌰𑍁𑌮𑍍 ॥

யதியோர்யாம் ப்ரமுச்யேயம் ப்ரபத்யே பரமேச்வரம் ।
பர்க்கம் பசுபதிம்ருத்ரம் மஹாதேவம் ஜகத்குரும் ॥ என்று

தாயினுடைய கர்ப்பத்திலிருக்குஞ் சிசுவுக்குங்கூட சிவோபாசன வுணர்ச்சி இயற்கையிலமைந்துள்ளதென கிருஷ்ண யஜுர் வேத கர்ப்போபநிஷத்து கழறுமாயின் தார பதார்த்தின் பொருள் சிவபெருமான் அல்லவென்று சொல்ல யார்தான் துணிவர். அப்படித் துணிந்து சொல்ல ஒருவன் முற்பட்டுவருவானாயின் அவனை ஆணவத்தடிப்பேறிய அகாரண சிவத்துவேஷங்கொண்ட அசடனென்றே மேதாவியர் மதிப்பார்களன்றோ. வேதவுண்மை இவ்வாறிருக்கவும், பாத்மோத்தர முதலிய புராணவசனங்கள் சிலவற்றைப் பேராதரவாகக்கொண்டு வேறு தேவதைகளுக்கு மோக்ஷதானுதிபத்தியங் கூறுதல் கேவலம் அசங்கதமாம். உருத்திரன் என்ற சொல்லுக்கு "மோக்ஷதாதா" "முத்திநாதன்" என்று சர்வ வேதங்களுக்கும் வியாக்கியானஞ்செய்த மாதவாசாரியரும், எல்லா வேதவேதாந்த பாஷ்யக்காரர்களும் பொருள் கூறி யிருத்தல் பிரத்தியட்சம். உருத்திரசப்தத்துக்கு யாம் விரி

வாக எழுதியுள்ள பொருளை எமது திருவாசக விஷய சூசனத்தில் "உருத்திரனுக்குந் தீபற" என்பதற்கு எழுதியவற்றை வாசித்து மகிழ்க. ஏனைய வானோர்க்கு என்றும் அமையாத சிறப்பியல்புகள் இந்நாமத்தில் அடங்கியுள்ளன. பந்தமுக்தி பதமுக்தி ஆகிய இரண்டினையே விஷ்ணுமுதலிய சுரர்கள் கொடுக்குந் தகைமையுடையவர்களன்றி சமுசாரதுக்கநாசமுக்தியாகிய அபரமுக்தி பரமுக்திகளையளிக்க அவர்கள் தாமே சுதந்தர ரல்லர். அவற்றைப் பிரசாதிப்பவர் திரிமூர்த்திகளுக்கும் மேலாகத் திகழும் பரமாத்மாவாகிய பசுபதியென்னும் சிவபெருமானேயாம். அவற்றிற்குப் பிரமாணம் வருமாறு.

### அதர்வணவேத சரபோபநிஷத்.

𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍍𑌯 𑌧𑍍𑌯𑍇𑌯𑌾𑌨𑍍 𑌵𑌿𑌷𑍍𑌣𑍍𑌵𑌾𑌦𑌿𑌕𑌾𑌨𑍍 𑌸𑍁𑌰𑌾𑌨𑍍 ।
𑌶𑌿𑌵 𑌏𑌵 𑌸𑌦𑌾 𑌧𑍍𑌯𑍇𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌸𑌂𑌸𑌾𑌰𑌮𑍋𑌚𑌕𑌃 ॥

தஸ்மாத் ஸர்வாந் பரித்யஜ்ய த்யேயாந் விஷ்ண்வாதிகாந் ஸுராந் ।
சிவஎவ ஸதாத்யேயஸ்ஸர்வ ஸம்ஸாரமோசகஃ ॥

(இ-ள்) "சமுசார துக்க நாசமுக்திப்பிராப்தியின்பொருட்டு விஷ்ணுமுதலிய சர்வதேவர்களையும் விட்டு எப்பொழுதும் தியேயனாகவுள்ள சிவபெருமானையே தியானிக்கவேண்டும்." (இம்மந்திரத்தில் சிவபெருமானைச்சேவிப்பவர்கள் விஷ்ணுவாதிசுரர்களென்று பெறப்பட்டமையால் தேவர்களாகிய இவர்கள் பிரமமாகாதொழிந்தனர்) எனவும்;

### அதர்வணவேத அதர்வசிகோபநிஷத்

𑌶𑌿𑌵 𑌏𑌕𑍋 𑌧𑍍𑌯𑍇𑌯𑌃 𑌶𑌿𑌵𑌙𑍍𑌕𑌰𑌃 𑌸𑌰𑍍𑌵𑌮𑌨𑍍𑌯𑌤𑍍 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍍𑌯

சிவஏகோத்யேயச் சிவங்கரஸ்ஸர்வமந்யத்பரித்யஜ்ய

(இ-ள்) "மோட்சமென்னும் இன்பகரமாகிய சிவத்துவத்தைக்கொடுப்பவரான சிவபெருமானொருவரே அந்நியமாயுள்ள எல்லாவற்றையும் விட்டுவிட்டுத் தியானிக்கத்தக்கவர்." (சிவனொருவரே என்ற பிரயோகத்தால் உற்பத்தி, திதி, நாசமுடைய பிரம விஷ்ணு ருத்ராதியர்கள் த்யேயரல்லரென்று விலக்கப்பட்டனர்.) எனவும்,

### சுக்லயஜுர்வேத நிராலம்போபநிஷத்.

𑌸𑌰𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌾𑌨𑍍 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍍𑌯 𑌨𑌿𑌰𑍍𑌮𑌮𑍋 𑌨𑌿𑌰𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑍋
𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌕𑌂 𑌶𑌰𑌣𑌮𑍁𑌪𑌗𑌮𑍍𑌯

ஸர்வதர்மாந் பரித்யஜ்ய நிர்மமோ நிரஹங்காரோ
பூத்வா ப்ரஹ்மைகம் சரணமுபகம்ய

(இ-ள்) "எல்லாத்தருமங்களையும் விட்டுவிட்டு நான் எனது என்னும் அகங்கார மமகாரமில்லாதவனைப் பிரமமொன்றையே சரணமாகவடைந்து" (பிரமம் என்னும் பெயர் சிவத்துக்கே ரூடியாக உரியது. விஷ்ணுமுதலிய தேவர்களை அப்பெயர்கொண்டு வேதமழைத்தல் சிவதர்மாரோபணைத்தாலென்றறிக.) எனவும்,

## கிருஷ்ணயஜுர்வேத கைவல்யோபநிஷத்.

𑌤𑌦𑌾𑌦𑌿𑌮𑌧𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌵𑌿𑌹𑍀𑌨𑌮𑍇𑌕𑌂 𑌵𑌿𑌭𑍁𑌂 𑌚𑌿𑌦𑌾𑌨𑌨𑍍𑌦𑌮𑌰𑍂𑌪𑌮𑌦𑍍𑌭𑍁𑌤𑌮𑍍 | 𑌉𑌮𑌾𑌸𑌹𑌾𑌯𑌂 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌂 𑌪𑍍𑌰𑌭𑍁𑌂 𑌤𑍍𑌰𑌿𑌲𑍋𑌚𑌨𑌂 𑌨𑍀𑌲𑌕𑌣𑍍𑌠𑌂 𑌪𑍍𑌰𑌶𑌾𑌨𑍍𑌤𑌮𑍍 | 𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌵𑌾 𑌮𑍁𑌨𑌿𑌰𑍍𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 𑌭𑍂𑌤𑌯𑍋𑌨𑌿𑌂 𑌸𑌮𑌸𑍍𑌤𑌸𑌾𑌕𑍍𑌷𑌿𑌂 𑌤𑌮𑌸𑌃 𑌪𑌰𑌸𑍍𑌤𑌾𑌤𑍍 ||

*ததாதிமத்யாந்த விஹீநமேகம் விபும் சிதாநந்தமரூபமத்புதம் । உமாஸஹாயம் பரமேச்வரம் ப்ரபும் த்ரிலோசனம் நீலகண்டம் ப்ரசாந்தம் । த்யாத்வாமுனிர்கச்சதி பூதயோநிம் ஸமஸ்தஸாக்ஷிம்தமஸ: பரஸ்தாத் ॥*

(இ-ள்) "தத்பதப்பொருளாயும், முதல்நடு ஈறிலராயும், ஏகராயும், வியாபகராயும், ஞானாநந்தரூபராயும், அரூபராயும், அற்புதராயும், உமாசகாயராயும், பரமேசுவரராயும், பிரபுவாயும், முக்கண்ணராயும் நீலகண்டராயும், மிக்க சாந்தமுள்ளவராயும், பூதகாரணராயும் சமஸ்தசாக்ஷியாயுமிருப்பவரைத் துறவியானவன் தியானித்துப் பிரகிருதிக்கு மேலே செல்வான்" (இம்மந்திரங்களில் சிவபரம்பொருளே தியானிக்கப்படுபொருள் என விளக்கிக்காட்டியதுமல்லாமல் அவரது முக்தப் பிராப்பிய உமாசகாயாதி லிங்கங்களையும் ஸ்பஷ்டமாய்க் குறிப்பிட்டிருப்பதைக் கவனிக்க) எனவும்,

## ஸாமவேத தர்சனோபநிஷத்.

𑌪𑍁𑌰𑍁𑌷𑍇 𑌸𑌰𑍍𑌵𑌶𑌾𑌸𑍍𑌤𑌾𑌰𑌂 𑌬𑍋𑌧𑌾𑌨𑌨𑍍𑌦𑌮𑌯𑌂𑌶𑌿𑌵𑌮𑍍 |
𑌧𑌾𑌰𑌯𑍇𑌦𑍍 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌮𑌾𑌨𑍍𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌸𑌰𑍍𑌵𑌪𑌾𑌪 𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌯𑍇 ||

*புருஷே ஸர்வசாஸ்தாரம் போதாநந்த மயம்சிவம் ।*
*தாரயேத் புத்திமாந்நித்யம் ஸர்வபாப விசுத்தயே ।*

(இ-ள்) "புருஷனிடத்தே எல்லாவற்றிற்கும் நியந்தாவும், போதாநந்தமயனுமான சிவபெருமானைப் புத்திமானுயுள்ளவன் எல்லாப் பாவங்களும் ஒழிய என்ஞான்றும் தரிக்கவேண்டும்"

(இவ்வசனத்தில் ஜீவனுக்கு அந்தர்யாமி சிவபெருமான் என நிரூபிக்கப்பட்டது.) எனவும்,

சுவேதா சுவத்தரோபநிஷத்.

**விச்வஸ்யைகம் பரிவேஷ்டிதாரம் ஜ்ஞாத்வாசிவம் சாந்திமத்யந்தமேதி ।**

(இ-ள்) "உலகமெல்லாம் சூழ்ந்துகொண்டிருக்கின்ற ஒருவரான சிவபெருமானையறிந்து துக்கவொழிவை ஸம்பூரணமாய் அடைகின்றனன்." (இவ்வாக்கியத்தில் சர்வபரிபூரணத்வம் சிவபெருமானுக்கே சொந்தம் என்று பெறப்படுகின்றது.) எனவும்,

*தமீசானம் வரதம் தேவமீட்யம் நிசாய்யேமாம் சாந்தி மத்யந்தமேதி।*

(இ-ள்) 'அந்த வரதனும், துதிக்கத்தக்கவனுமான ஈசானனெனுந் தேவனையறிந்து இந்தப்பிரபஞ்ச வொழிவைப் பூரணமாய்ப்பெறுவன்." எனவும்,

**யதாசர்மவதாகாசம் வேஷ்டயிஷ்யந்திமாநவா:।**
**ததாசிவ மவிஜ்ஞாய துஃகஸ்யாந்தோபவிஷ்யதி॥**

(இ-ள்) "எப்பொழுது மனிதர்கள் ஆகாசத்தைத் தோலாடையாக எடுத்துப் போர்த்துககொள்வார்களோ அப்பொழுது தான் சிவனை யறியாமல் பாசக்ஷயமாகிய துக்கநிவிர்த்தியை யடைவார்கள்." எனவும் கூறிப்போந்தவாறறிக. இக்கடைசி மந்திரம் ஆகாசத்தைத் தோலாகப் போர்த்துக்கொள்ளுதல் எவ்வாறு அசம்பாவிதமோ அவ்வாறே சிவனை யறியாமல் மோட்சங் கூடுமெனல் முற்றும் அசம்பாவிதமென ஸ்பஷ்டமாய்த் தெரிவிக்கின்றது. ஆகாசவாடையால் ஒருவருக்கு வெய்யில், மழை, பனி, குளிர் முதலிய உபத்திரவங்கள் நீங்குவனவன்று. அதுபோல சிவனை யறியாமல் ஏனைய கடவுளரது உபாசனையால் ஜனனமரணரூபமான சம்சார துக்கம் நீங்குவதில்லை. அது நீங்காததாயின் மோட்சமடைவதும் முயற்கொம்பேயாம். ஆகையினு

லன்றே மோட்சத்தை விரும்பும் ஒவ்வொருவரும் பரமசிவத்தையே அடையவேண்டுமென்பது சுருதியின் இருதயம்.

யொ஽ந்யாம் தெவதா ஊவாஸெ ந ஸ வெட யதா பஶு: ।

யோந்யாம் தேவதா முபாஸ்தே நஸவேத யதா பசுঃ ।

(இ-ள்) "எவன் வேறான தேவதையை யுபாசிப்பான் அவன் உண்மையை யறியான். பசுவைப்போல" என்று புராணங்களும் இவ்வேத மந்திரத்தையே அநுசரித்து மொழிந்தன. மேலே காட்டிய சுருதிவாக்கியங்களில் சிவஞானம் ஒன்றே மோட்சசாதனமென்றும், வீடுகூட வேறுவழியில்லையென்றும் வற்புறுத்தினமையால் கேவலம் பக்தி மாத்திரமே மோட்சசாதனமெனக் கூறும் துவைதிகளும், கர்மமே மோட்சத்தைக் கொடுக்குமென்று வாதிக்கும் மீமாம்ஸகரும், பிரகிருதிபுருஷபேத விஞ்ஞானமே மோட்சத்துக்கு நேர்வாயிலெனப்பகரும் சாங்கியரும், ஜீவாத்ம பரமாத்ம சம்யோகசாதனமே முக்திசாதனமென மொழியும் யோகிகளும், தீக்ஷாதி சமஸ்காரங்களே மோட்சஹேதுவென மயங்கும் சைவருள் ஒருசாராரும், கர்மம், ஞானம், பக்தி, பிரபத்தி, ஆசாரியாபிமானம் ஆகிய இவையெல்லாம் ஒருங்கு சேர்ந்தே மோட்சசாதகமென அறையும் பாஞ்சராத்திரிகளும், கேவலம் நாமயஜனாதிகளே முத்திசாதனமெனக் குறிக்கும் பாகவதரும், கிரியாரூபமான பகவதர்ச்சனமே மோட்சசாதகமெனச் சாற்றும் சிலவைகானசரும், கர்மஞானங்களிரண்டுமே சேர்ந்து முக்திசாதனமாமெனுஞ் சில சைவ வைஷ்ணவர்களும் மறுக்கப்பட்டவாறறிக. ஆனால் இவற்றாற் பிரயோசன மில்லையோவெனின்! அற்றன்று. கர்மமுதலியவற்றுள் சில சித்தசுத்தியைக் கொடுப்பனவாகவும், வேறு சில சுத்தியடைந்த சித்தத்தில் தோன்றும் ஞானத்துக்கு நேர்சாதனமாகவும் அமைந்திருத்தலால் கர்மங்களும், யோகங்களும், பக்தியும், ஆசார்ய பிரபத்தியும் ஞானோற்பத்திக்கு ஒன்றன்மேலொன்றாய்ச் சிறப்புற்று விளங்கும் பரமசாதனங்களாமென அறிவாயாக. அன்றியும் அவற்றைப் பிரதிபாதிக்குஞ் சாஸ்திரங்களும் இன்றியமையாத உத்தம சாதனங்களாக வமைந்துள்ளன

அங்ஙனமாயின் ஆளுடையடிகள் "பக்திவலையிற் படுவோன்காண்க." எனவும், பிரபல உபநிஷத்துக்கள் "ஈசன் அன்

யின் வசப்பட்டவன்.'' ''பக்தியாலடையற்பாலன்'' ''சம்சாரத்தில் பிணைக்குற்ற வெவர்க்கும் பரமேசுவர சரணுகதியே பரம தாரகம்'' எனவும் மொழிந்தவற்றின் உண்மைக்கருத்து யாதெனின், பல்கோடி பவங்களிலீட்டிய நல்வினைகளின் பரிபாகப் பயனுனும், படைப்பளிப்பழிப்பு என்னும் முத்தொழில்களைச் செய்யும் மும்மூர்த்திகளுக்கும் மேலாய் முக்கண் முதல்வனையன்றி வேறெப்பொருளையும் பொருளெனமதியாத இடையறுவுள்ளன்பானுங்கிடைத்த அருள்வழிநிற்றலாகிய பராநுரக்தியே பேரன்பு என்று சொல்லப்படும். அதுகால முதலிய அளவைகளைக் கடந்த சுத்தமான அந்தக்கரண விருத்திரூபம். அது ஞானத்துக்கு அடுத்ததாம் பரமாந்தரங்க முக்கிய சாதனமுமாகும். அஃதின்றி மோட்சஹேதுவான ஞானம எஞ்ஞான்றுங் கைகூடாது. உள்ளன்பிலாது கொடுக்கும் உணவினை சிற்றறிவினராகிய நாமே அங்கீகரிக்கமாட்டோமானல் பக்தியில்லாமற் செய்யும் பூஜையைச் சர்வ ஜகத்காரண சர்வஞ்ஞராகிய சிவபெருமானே அங்கீகரிப்பர். பக்தியில்லாமல் நாடகமாகவும் சீரப்பழக்கமாகவும் செய்யும் பூஜை, தவம், ஜபம், தியானம், ஆராதனை, திருப்பணி ஆகிய இவைகள் எப்பொழுதும் திருவருளையுண்டாக்கமாட்டாது. திருவருள்கிட்டாதாகவே மோட்சமும் சித்திக்கமாட்டாது. ஆதலால் நாடகமின்றி உள்ளன்போடு செய்யும்பக்தியே உண்மைப்பக்தியாகும். அப்பக்தி சரியை, கிரியை, யோகம், ஞானம் என்றும் நான்குபாதங்களில் நிறைந்திருத்தலால் உபாஸகனையும் உபாஸ்யனையும் கீழ்மேலாகக்காட்டிச் சிறிது பேதஞானத்தை மிச்சப்படுத்தினும், பக்தியின்முதிர்ச்சியாகிய சொரூபபக்தி என்னும் இறுதியிற்கூறிய சிவஞானமே ஜீவபோதத்தைமுற்றுந்த்விர்த்துச் சிவபரிபூரணத்தை மேலிடும்படிச்செய்து, வேறெதன்தோற்றத்தையுந் தலையெடுக்காவண்ணஞ் சூன்யப்படுத்தித் தன்மயமாக்கிவிடும். அதுவேஸாக்ஷாத்காரமும், பிராம்ஹீபாவமும், சுத்தாத்வைதநிலையுமாம். ஆகையினலன்றோ ஸ்ரீ தாயுமானசுவாமிகள் பக்தியின்படித்திறத்தைக் கூறிவரும்போது ''விரும்புஞ்சரியைமுதன் மெஞ்ஞானநான்கும், அரும்புமலர்காய்கனிபோலன்றோ பராபரமே'' என்று இடித்துரைத்தனர். அப்படியிருந்தும், சிலர் வாசாஞானஆவேசத்தைமேற்கொண்டு மோட்சத்துக்குச்சாதன சதுஷ்டயங்களை

முக்கியமன்றி சரியையாதிகள் அநாவசியமென்றும், அவை தாழ்ந்தபடியென்றுங் கூறுவர். அந்தோ இவர்கள் விவே இருந்தவாறென்னே! சாதன சதுஷ்டயங்களால் அடையப் பெறும் இறுதிப்பலன் முமூட்சுத்துவமாகும். முமூட்சுத்துவமே மோட்சத்தில் இச்சையுடைமை. சரியையாதிகளால் அடையப்பெறும் முக்கியப்பலன் பரமுக்தி. அது தேகத்தைச் சிவத்துக்கு அர்ப்பணஞ்செய்தலினாலும், இந்திரியங்களை அர்ப்பணஞ்செய்தலினாலும், அந்தக்கரணங்களை அர்ப்பணஞ்செய்தலினாலும், ஆத்மாவாகிய தன்னையே அர்ப்பணஞ்செய்தலினாலும் கிடைக்கப்பெறுவது. ஆகையினாலே சாதன சதுஷ்டயங்கள் தாழ்ந்தபடியென்றும், சரியையாதிகள் மேலான படியென்றும், சாதன சதுஷ்டயங்கள் கைவரப்பெற்று முமூட்சுத்துவம் அடைந்தபின்னரே உண்மைச் சரியையாதிகளின் திறம் உள்ளவாறு விளங்குமென்றுங் கூர்த்தமதிகொண்டுணரக்கிடக்கின்றது. ...ஷி சுவாமிகளும் "நான்கு சாதனமு மோர்ந்திட், டான நெறியாஞ் சரியையாதி சோபானமுற்று" என்று சாதன சதுஷ்டயங்களை முன்னும் சரியையாதிகளைப் பின்னும் வைத்துக் கூறி மகிழ்ந்தனர். இவ்வுண்மையைக் கடைப்பிடித்து நிற்க. மேலே நிரூபித்த சுத்தாத்வைத நிலையே சுக்லயஜுர்வேத மண்டலப்ராஹ்மணோப நிஷத்திலும்.

[illegible]

தந்மனோவிலயம்யாதி தத்விஷ்ணோः பரமம்பதம்। தல்லயாச்சுத்தாத்வைதஸித்திः। பேதாபாவாத்। எததேவபரமதத்வம் ॥

(இ-ள்.) "மனோலயமுண்டாயபோது விஷ்ணுவின் பரமபதமெய்தும். அப்பதம் லயமாயபோது சுத்தாத்வைத சித்தியுண்டாம். பேதமின்மையே பரமதத்வம்" என நிறுவியுள்ளது. ஸ்ரீ தாயுமானசுவாமிகளும் "பொய்கண்டார் காணுப் புனிதமெனு மத்துவிதம்" எனப் புகழ்ந்துள்ளார். (புனிதம்-சுத்தம்). ஏகாத்மவாதிகள்கொள்ளுங் கேவலாத்வைதமும், வைஷ்ணவர்கள் கொள்ளும் விசிஷ்டாத்வைதமும், துவைதிகள் கொள்ளும் துவிதாத்வைதமும் வேதங்களில் யாண்டும் படிக்கப்பட்டிருக்கவில்லை. சுத்தாத்வைதமொன்றே கூறப்பட்டுள்ளது. ஆகையினாலே அது அறுதியான சித்தாந்தமாகும். அதையே "சைவ சித்தாந்தம்"

என்றும், ''வைதிக சைவம்'' என்றும், ''சித்தாந்த சைவம்'' என்றும் மேலோர் வழங்குவர். இடையில் தோன்றிய மதத்திரயத்தில் அது சேராததற்குக் காரணமும் அதுவேயாம். அதன் ஆசிரியர்கள் குருக்கள்மாரெனவும், சிவாசாரியரெனவும், சிவத்விஜர் எனவும், ஆதிசைவரெனவும் பண்டைக்காலந்தொட்டு அழைக்கப்பட்டு வருகின்றனர்கள். முப்பொழுதும் திருமேனி தீண்டுவாரென்றால் அவர்கள் மகிமைக்கு எல்லையுமுளதோ !

உலகத்திலுள்ள எல்லா ஆத்மாக்களும் நல்லறிவுபெற்று உண்மையுணர்ந்து உய்வதற்கு ஏதுவாயுள்ளது வேதம். அது புண்ணியப் பேற்றையுடையாருக்கும் சமயாசார வெல்லைக்குட்பட்டவருக்கும் பொதுவகையா யமைந்துள்ளது. ஆகையினலே அவ்வவ்வாத்மாக்கள் தந்தம் அறிவுக்கும், ஆற்றலுக்கும், காதலுக்கும் ஏற்றவாறு அவ்வேத மார்க்கங்களை அநுஷ்டித்து உய்தி பெறலாம். வேதத்தில் கூறியுள்ள புண்ணியங்களும் சத்கருமங்களும் பலவகைப்பட்டிருத்தலின் அதன் போதனைகளும் அவ்வாறே பலதிறப்பட்டு விளங்குகின்றன. அப்பலவகைப் போதனைகளுள் பூர்வபட்சமதங்கள் ஒவ்வோர் பகுதியினைத் தனித்தனியெடுத்துக்கொண்டு ஒவ்வோர் அதிகாரியை நோக்கித் தனித்தனி போதியாநிற்கும். அம்மதங்களை உலகிற் பரப்பினர் பிறந்திறந்துழலும் உயிர்களாகிய மனிதரும், சித்தரும், முனிவரும், தேவரும், பிறருமாம். ஆனல் சித்தாந்த செந்நெறியாகிய வைதிக சைவத்தை மனிதராவது, சித்தராவது, முனிவராவது, தேவராவது, உருத்திரர் முதலியோராவது நிலை நிறுத்தவில்லை. பிறந்திறவாப் பெருவாழ்வுடைய அநாதி மல முத்த சித்துருவென்னும் பரமபதியாகிய சிவபெருமானே நிலைநிறுத்தியுள்ளார். ஏனைய சமயங்கள் வேத வேதாந்தங்களில் பூர்வபட்சங்களாய்த் திகழ இச்சித்தாந்த செந்நெறியொன்றே சித்தாந்த பக்கமாய் விளங்குகின்றது. இந்நெறியாலடையும் பலன் மேலான பரமுத்தியேயாம். இதையடையும்பொருட்டே மற்றைச் சமயங்கள் யாவும் சோபனமாய் வைக்கப்பட்டிருக்கின்றன. அதனல் அச்சமயங்கள் ஒருபோதும் அவலமான மார்க்கங்களாகா. அந்த மார்க்கங்களில்லையாயின் ஆத்மாக்கள் சித்தாந்த நெறியிற்றலைப்படுதலும், முத்தியடைதலும் முயற்கோடாம். அஃதுணர்ந்தே அந்தந்த சமயாசாரிகள் அவ்வவ்மார்க்கங்களை உலகில் போதித்து

வளர்த்தார்கள். அவர்கள் செய்த அச்செயலும் அவர்கள் சுதந் தரத்தாலாயதின்று. சிவபரம்பொருளே அவர்களை யதிஷ்டித்து அவ்வக்காலங்களுக்கேற்ப அவ்வவ் மார்க்கங்களை உண்டுபண்ணி வைத்தனரென்று கொள்ளவேண்டும். காலபேதத்தால் ஒவ் வோர் சமயம் வளர்ச்சி பெறுதலும், பின்னர் சித்தாந்த செந் நெறி மேம்பட்டு அதை யழித்தலுமாகிய இவையெல்லாம் அப் பரம்பொருளின் செயலால் நடப்பனவேயன்றி வேறல்ல. ஆத லால் சித்தாந்தமாகிய வைதிகசைவநெறி யொன்றே பூரண சமய மாகும். அதன் இயல்பு என்றுந் திரியாமல் ஒரே படித்தாயிருக் கும். அது பல நதிகள் சென்றடையுங் கடலை நிகர்த்தது. தாயு மானசுவாமிகள் "வேறுபடுஞ் சமயமெலாம் புகுந்து பார்க்கின் விளங்கு பரம்பொருளே நின்விளையாட்டல்லால், மாறுபடுங் கருத்தில்லை முடிவில் மோனவாரிதியினதித்திரள்போல் வயங்கிற் றம்மா" எனவும், "திரமென்று தந்தம் மதத்தையே தாமதச் செய்கை கொடுமுளறவறிவார், ஆறு சமயங்கடொறும் வேறு வேறாகி விளையாடுமுனையாவரறிவார், அண்ட பகிரண்டமு மடங் கவொரு நிறைவாகி யாநந்தமானபரமே" எனவும், திருமூலர் "ஒன்றதே பேரூர்வழியாறதற்குள" எனவும் வற்புறுத்தியுள் ளார்கள்.

வைதிக சைவத்தில் கூறப்படாத பொருளியல்புகள் ஒன் றுமே கிடையா. வேறு சமயங்கள் போதிக்கும் பொருளியல்பு களெல்லாம் அதன் சில பகுதிகளில் அடங்கிவிடும் அதன் பொருளியல்புகளோ அவ்வாறு அடங்குவதின்று. சைவத்திலடங் காத ஒருண்மையை வேறொருசமயம் அரிதாகக்கண்டு கூறிற் றென்பதை நாமறியோம். உதாரணமாக, உலகத்திலுள்ள சம யங்கள் பலவற்றுள் சில பௌதிகமான உலகத்தை மாத்திரம் ஏற்று மற்றுள்ள பொருள்களை மறுக்கும். வேறு சில பௌதிக உலகத்தோடு அதன் காரணமான பூதங்களையும் ஏற்று மற்றுள்ள பொருள்களை மறுக்கும். மற்றுஞ் சில பூதபௌதிகங்களோடு அவற்றின் காரணமான தத்துவங்களையும் ஏற்று ஏனையவற்றை மறுக்கும். இன்னுஞ் சில அவற்றோடு பிரகிருதி, கர்மம், ஆத்மா ஆகிய இவைகளை ஏற்று மற்றவற்றை மறுக்கும் வேறு சில அவற்றோடு பிரபஞ்ச காரண கர்த்தாக்களிற் சிலர் சிலரை ஏற்று மற்றவற்றை மறுக்கும். பின்னுஞ்சில அவர்களோடு ஆணவ

மைத்தினையும், சுத்த தத்துவங்கள் ஒவ்வொன்றனையும், அவற்றின் காரண கர்த்தாக்களான அதிகார போக லய சிவபேதங்களில் ஒவ்வொன்றனையும் ஏற்று ஏனையவற்றை மறுக்கும். சில இறைவனுடைய தடஸ்தநிலையே நிலையாகக்கொண்டு நிலவும். இவ்வாறு சமயங்கள் யாவும் ஒவ்வொரு வகையாகக்கூறித் தம்முள் மாறுபட்டு நிற்கவும் வைதிக சைவமோ அச்சமயபேதங்கள் கூறும் பொருளியல்புகள் யாவற்றையும் தன்னகத்தே அடக்கி அப்பௌதிக உலகவியல்பினையும், அதன் காரணபூதங்கள், தத்துவங்கள், பிரகிருதிகள் ஆகிய அவற்றின் தன்மைகளையும், ஆணவமலம், கர்மமலம் ஆகிய அவற்றின் வேறுபாடுகளையும், ஆத்மா சிவம் என்னும் பொருள்களின் சொரூபதடஸ்த நிலைகளையும் உள்ள உள்ளவாறு உள்ளங்கை நெல்லிக்கனிபோல் எடுத்து விளக்கி அச்சமயபேதங்கள் யாவற்றினும் முதன்மைபெற்றுத் தானொன்றே சித்தாந்தமெனச் சிறப்புப் பெயர்பெற்றுப் புகழ அச்சமய பேதங்கள் பலவற்றுள்ளும், தலையாயும், தாயகமாயும் விளங்கிக்கொண்டு நிற்கும். அத்தகைய அரிய பெரிய சைவத்திறமாகிய செந்நெறியை ஏனைய சமயங்களுள் ஒன்றென மதித்தல் கேவலம் அசங்கதம். "சைவ நெறியே உய்யுநெறியது" எனவும், "சைவ சமயமே சமயம்" எனவும், "சைவத்தின் மேற்சமயம் வேறிலை" எனவும், "சைவமாஞ்சமயஞ்சாரும் ஊழ்பெறலரிது" எனவும், "வேதச்சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றால் சைவத்திறத்தடைவர்" எனவும், பலவான்றோர் பரிந்து பகர்ந்தவற்றை யுய்த்துணர்க. அன்றியும்,

அதர்வணவேதமுண்டகோபநிஷத்.

நிரஞ்ஜந꞉ பரமம்ஸாம்யமுபைதி

நிரஞ்சன꞉ பரமம்ஸாம்யமுபைதி

(இ-ள்). "மலமற்றவனாய்ப் பரம சாம்மியத்தை யடைகின்றான்" எனவும்,

ப்ரஹ்மவேத ப்ரஹ்மைவபவதி-ப்ரஹ்மவேத ப்ரஹ்மைவபவதி

(இ-ள்). "பிரமத்தை யறிபவன் பிரமமாக ஆகின்றான்" எனவும்;

ஸாமவேத சாந்தோக்யோபநிஷத்.

தரதிஶோகமாத்மவித்—தரதிசோகமாத்மவித்

(இ-ள்). "பரமாத்மாவையறிந்தவன் சோகத்தைத் தாண்டுகின்றான்" எனவும்,

தைத்திரீயோபநிஷத், ஆனந்தவல்லி.

[illegible]—ப்ரஹ்மவிதாப்நோதிபரம்

(இ-ள்) "பிரமத்தையறிந்தவன் நிரதிசயபிரமானந்தத்தையடைகின்றான்" எனவும்,

வாயுஸம்ஹிதை பூர்வபாகம்.

[illegible]—முக்தச்சிவஸமோபவேச்

(இ-ள்). "முக்தன் சிவசமமாகின்றான்" எனவும் அறிவுறுத்திபடியே திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் "விதிபாலேத்தப் பதியாவாரே" எனவும், மாணிக்கவாசக சுவாமிகள் "சிவமானவாபாடித்தெள்ளேணங்கொட்டாமோ" எனவுஞ் சாற்றியருளினார்கள். இவ்வாறு ஆரிய வேதங்களும் தமிழ் மறைகளும் மோட்சத்தின்பொருட்டு முமூட்சுக்களாலே சேவிக்கப்படும் பொருள் பரமசிவமேயன்றி வேறு கடவுளரல்லரென்று ஒருங்கெழுந்து ஓரேமுடிபாய் முரசடித்து முழக்கினமை கண்கூடாக அறியக்கிடக்கின்றது. "சிவனொடொக்குந் தெய்வந்தேடினுமில்லை, அவனொடொப்பாரிங்கியாவருமில்லை" எனத் திருமந்திரமும், "சிவனை யாவரே யருச்சனை செயாதவர் சிவன் மற்றெவரையாயினு மருச்சனையியற்றியதுண்டோ" எனக் காஞ்சிபுராணமும் வற்புறுத்தியுள்ளன. திருவாசகம் "செய்யானை வெண்ணீறணிந்தானைச் சேர்ந்தறியாக் கையானை" எனவும், திருத்தாண்டகம் "தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான சங்கரனை" எனவும் விளக்கியுள்ளன. ஸ்ரீமத். தாயுமானசுவாமிகளும் தம்மநுபவத்தில் இரண்டு உண்மைகளைக் கைகண்ட பலனாக உணர்ந்தாரென்றும், அவற்றால் தான் உய்ந்தாரென்றும் அடியில்வரும் பாசுரத்தால் நன்குவிளக்கிக் காட்டியுள்ளார். அதாவது "தெய்வம் வேறுளதென்பவர் சிந்தனை, நைவரேன்பதும் நற்பரதற்பர, சைவசிற்சிவனேயுனைச் சார்ந்தவர், உய்வரேன்பதும் யானுணர்ந்தேனுற்றேன்" என்பதே. நிற்க மேலே உதாஹரித்த கர்ப்போபநிஷத்மந்திரத்தில் (123-ம் பக்கம் பார்க்க) பர்க்கம் என்னும் ஒரு தெய்வப்பெயர் வந்துளதன்றோ. அது சிவபெருமானுக்கேயுரிய

இடுகுறிநாமம். வடமொழிநிகண்டுகள் "𑌭𑌰𑍍𑌗𑌸𑍍𑌤𑍍𑌰𑍍𑌯𑌮𑍍𑌬𑌕𑌃-பர்க்கஸ் த்ரயம்பக:" எனவும், "𑌹𑌰𑌃 𑌸𑍍𑌮𑌰𑌹𑌰𑍋 𑌭𑌰𑍍𑌗𑌃-ஹர: ஸ்மர ஹரோபர்க்க:" எனவுங் கூறின. அத்தெய்வத் திருநாமம் காயத்திரி மகாமந்திரத்தில் கூறப்பட்டிருத்தலானும், வேறு தெய்வப் பெயர் அதில் காணாமையானும் அம்மகா மந்திரத்தின் அரும் பொருளாயுள்ளவர் சிவபெருமான் என்பது கரதலாமலகமாம். அவரே சர்வ பிராமணகுல உபாஸ்யரென்று பண்டைக்காலந் தொட்டு அநுஷ்டானத்திலும் வந்துகொண்டிருக்கின்றது.

ஸாமவேதம் (பிரபதப்ராஹ்மணம்).

𑌤𑍍𑌵𑌂 𑌦𑍇𑌵𑍇𑌷𑍁 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍋𑌽𑌸𑌿 𑌅𑌹𑌂 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑍇𑌷𑍁
𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍋 𑌹𑌿 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌮𑍁𑌪𑌧𑌾𑌵𑌤𑌿 𑌉𑌪𑌤𑍍𑌵𑌾𑌧𑌾𑌵𑌾𑌮𑌿
𑌤𑍍𑌵𑌯𑌾𑌪𑍍𑌰𑌸𑍂𑌤 𑌇𑌦𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 ॥

த்வம் தேவேஷு ப்ராஹ்மணோஸி அஹம் மநுஷ்யேஷு
ப்ராஹ்மணோஹி ப்ராஹ்மண முபதாவதி உபத்வாதாவாமி
த்வயாப்ரஸூத இதம் கர்ம கரிஷ்யாமி ॥

(இ-ள்). "உருத்திரமூர்த்தி என்னும் நீ தேவர்களுள் பிராம்மணன். நான் மனிதர்களுள் பிராம்மணன். பிராம்மணன் பிராம்மணனையன்றோ வழிபடுவான். ஆதலின் யான் உன்னை வழிபடுவேன். உன்னுடைய ஆணையையேற்று இக்கருமத்தைச் செய்கிறேன்" எனவும்,

கிருஷ்ணயஜுர்வேதசுவேதாசுவதரோபநிஷத்.

𑌯𑍁𑌞𑍍𑌜𑌤𑍇 𑌮𑌨 𑌉𑌤 𑌯𑍁𑌞𑍍𑌜𑌤𑍇 𑌧𑌿𑌯𑍋
𑌵𑌿𑌪𑍍𑌰𑌾 𑌵𑌿𑌪𑍍𑌰𑌸𑍍𑌯 𑌬𑍃𑌹𑌤𑍋 𑌵𑌿𑌪𑌶𑍍𑌚𑌿𑌤𑌃

யுஞ்ஜதேமந உதயுஞ்ஜதேதியோ
விப்ராவிப்ரஸ்ய ப்ருஹதோவிபச்சித:

(இ-ள்). "பிராம்மணர்கள் அந்த வித்வான் (முற்றறிவுடையவன்) ஆன பெரிய பிராம்மணனிடத்து மனத்தையும் சித்த விருத்திகளையும் சேர்த்திடுவர்" எனவுங் கூறிப்போந்தன. இவ் வாக்கியங்களால் பரமசிவன் ஒருவனே பிராம்மணோபாஸ்யன் என்றமை பொருந்தியவாறறிக. காஞ்சிபுராணமும் "பிராமணனீயே கடவுளர் தம்முட் பிஞ்ஞகா வேனையர் தம்முட், பிராமணன் யானே பிராமணன் றனக்குப் பிராமணன்கதி" எனவுஞ் சாற்றுகிறது. இவற்றையெல்லாந் தழுவியே மநுஸ்மிருதியும்,

𑌵𑌿𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌦𑍈𑌵𑌤𑌂 𑌶𑌂𑌭𑍁𑌃 𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌾𑌂𑌤𑍁 𑌮𑌾𑌧𑌵𑌃।
𑌵𑍈𑌶𑍍𑌯𑌾𑌨𑌾𑌂𑌤𑍁 𑌭𑌵𑍇𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾 𑌶𑍂𑌦𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌗𑌣𑌨𑌾𑌯𑌕𑌃॥

விப்ராணாம் தைவதம் சம்பும் க்ஷத்ரியாணாந்து மாதவ:|
வைச்யா நாந்துபவேத் ப்ரஹ்மா சூத்ராணாம் கணநாயச:||

(இ-ள்). "பிராம்மணருக்குத் தெய்வம் சிவன். க்ஷத்திரியருக்குத் தெய்வம் விஷ்ணு. வைசியருக்குத் தெய்வம் பிரமன். சூத்திரருக்குத் தெய்வம் கணநாயகன்" என்று விளக்கியது. கணநாயகன் மருதநிலக்கடவுளான இந்திரன். உண்மையிவ்வாறிருக்கவும் சிவபிரானை வழிபடாது ஏனைய கடவுளரைப் பரமுத்தியின்பொருட்டு வழிபடுவோர் ஒருபோதும் துக்கநிவர்த்தி எய்தப்பெறார்! எய்தப்பெறார்!!

இனி வேத சம்பந்தமான காயத்திரி மகா மந்திரத்தைப்பற்றியும் உனக்கு ஸங்கிரகமாகச் சொல்வோம் கேட்பாயாக. சித்தசுத்தி சாதகமான நாற்பது ஸம்ஸ்காரங்களாற் ஸம்ஸ்கரிக்கப்பட்ட பிராம்மணர்களுக்கு விதிக்கப்பட்ட வைதிக கர்மங்களில் மிகவும் முக்கியமான கர்மம், காலையிலும் மாலையிலும் செய்யப்படும் சந்தியாவந்தனம். அவ்வந்தனம் வேதங்களிலே விதிக்கப்பட்டுள்ளது. மத்தியானத்தில் செய்யப்படும் மாத்தியாஹ்நிகம் வேதத்தில் விதிக்கப்பட்டதன்று. அது ஸ்மிருதி புரோக்தம். சந்தியாவந்தனம் சைவர், வைஷ்ணவர், ஸ்மார்த்தர், மாத்துவர் என்னும் நால்வருக்கும் பொதுநோக்கில் ஒன்றுபோலிருப்பினும் சிறப்புவகையில் பேதப்பட்டேயிருக்கின்றது. அவ்வவர் முத்திநிலை வெவ்வேறுவகைப்பட்டிருத்தலே அதற்கு முக்கிய காரணமாகும்.

ஆத்மாக்கள் உண்மையறிந்துய்யும் வண்ணம் பரமேசுவரரால் அருளிச்செய்யப்பட்ட பதினெண்வித்தைகளுக்குள் ருக், யஜுர், ஸாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்களே மிகவும் சிரேஷ்டமானவை. ஏனெனில் சர்வ வித்தைகளும் அவ்வேதங்களுக்குள் அடக்கம். அவ்வேதங்களோ காயத்திரி மகா மந்திரத்திற்குள் அடக்கம். அக்காயத்திரி மந்திரமோ பிரணவத்துக்குள் அடக்கம். அதனால் பிரணவத்தின் பொருளும் காயத்திரி மந்திரத்தின் பொருளும் ஒன்றேயாம். ஒவ்வொரு மந்திரத்திற்கும் ஒவ்வொரு அதிதேவதை, ரிஷி, சந்தஸ் இருப்பதுபோல

காயத்திரி மந்திரத்திற்கும் உண்டு. சந்தஸ் - இருபத்துநான்கு அக்ஷரமுள்ள காயத்திரி சந்தஸ், ரிஷி - விசுவாமித்திரர். இவர் ராஜாவாகவிருந்து பிறகு பிரம்மரிஷி ஆனவரல்லர். சிருஷ்டி காலத்திற்றோன்றிய சப்த ரிஷிகளில் ஒருவர். அதிதேவதை-சூரியனிடத்திலுள்ள ஞானஸ்வரூபராகிய ஹிரண்மய பரமாத்ம புருஷர். இவரது ஞான தேஜஸே சித்ரூபிணியாகிய பராசக்தி.

மந்தேகாள் என்னும் அசுரர்கள் (அதாவது மூலமலகாரியமும் உயிர்ப்பகையுமாயுள்ள காமம், குரோதம், லோபம், மோஹம், மதம் மாற்சரியம் என்னும் அரிஷ்டவர்க்கங்கள்) தினந்தினம் ஸ்தூல சித்தாகிய ஆத்மாவை மறைத்துப் பீடிக்கின்றபடியினாலே அவற்றைத் தூரத்தியோட்டும்பொருட்டுக் காயத்திரி மந்திரத்தைத் தியானித்து உச்சரித்து, அம்மந்திர ஜலத்தைக் கையிலெடுத்து, அம்பு எய்தல்போல அவற்றின்மீது தெரித்தலாம். அதாவது மார்ஜனம், ஆசமனம், பிராணாயாமம் முதலிய கிரியைகளால் பிராமணன் வாக்கு, காயங்களைச் சுத்தி செய்துகொண்டு பிறகு காயத்திரி மந்திரத்தால் மனத்தைத் தூய்மைப்படுத்திக் கொள்ளுதலாம்.

ஒருவர் காயத்திரி மந்திரத்தின் உண்மையை யுணர்ந்து அதை வாய்மையோடும் பக்தியோடும் ஜபித்துவரின் அவர் நலம் பெறுவது திண்ணம், அன்றியும் அவரது உபாசனை கிரமமாக நடைபெற்றுவருமாயின் அவர்மூலமாக உலகம் முழுதும் நலம் பெற யாதொரு தடையுமின்று. “நல்லாரொருவருளரேலவர் பொருட்,டெல்லார்க்கும் பெய்யுமழை” என்பது மூதறிஞர்மொழியன்றோ. அவரே பிராஹ்மணன் என்னுஞ் சொல்லுக்கு இலக்கானவர். காயத்திரி மந்திரத்தில் இரண்டு பன்மைகள் பிரயோகிக்கப்பட்டிருத்தலால் அம்மந்திரத்தை ஜபிக்கின்றவர்கள் சர்வ ஜீவராசிகளின் நலத்தையும் விரும்பினவராகவே அந்தப் பன்மைகள் தெரிவிக்கின்றன. ஆகையினாலன்றோ மநுஸ்மிருதி “மைத்ரோ ப்ராஹ்மண உச்யதே-மைத்ரோப்ராஹ்மண உச்யதே - பிராஹ்மணன் எல்லாஜீவராசிகளுக்கும் மித்திரன்” என்றுகூறிப்போந்தது. இவ்வுண்மையையே தெய்வப்புலமை திருவள்ளுவரும் “அந்தணரென்போரறவோர் மற்றெவ்வுயிர்க்குஞ்,செந்தண்மை பூண்டொழுகலான்” என்று திருக்குறளில் விளக்கியருளினர். இதனால்

ஜாதியினால் மாத்திரம் பிராஹ்மணரென்று தம்மைத்தாமே புகழ்ந்துகொள்வது அவ்வளவு சிறப்புடையதன்று "பிறப்பொழுக்கங் குன்றக்கெடும்" என்றது ஒத்து. ஜாதிப்பெருமை ஒன்றையே பாராட்டி பூணூல் தரித்துக்கொண்டு ஏனைய வருணத்திலுள்ள சிவஞானச் செல்வர்களை இழித்துக்கூறுதல் எப்பொழுதும் மோக்ஷப்பிராப்திக்கு விக்கினமேயாகும். ஆதலின் அது கூடாதென்று "வருணாச்சிரம தரும கரும சங்கல்பம் பந்தம்" என்னும் பொருள்போதர "வணாராமயமெகம ஸாகெலா வஹய:" வர்ணாச்ரம தர்ம கர்ம ஸங்கல்போபந்தா:" என்று யஜுர்வேத நிராலம்போபநிஷத் சாற்றியது. எமமை அடிமையாகவுடைய ஆளுடையவடிகளும் "சாதி குலம் பிறப்பென்னுந்தடஞ் சுழியிற் றடுமாறி" என்று திருவாய்மலர்ந்தருளினர்.

கிருஷ்ணயஜுர்வேதப்ரஹ்மோபநிஷத்.

யதக்ஷரம் பரம்ப்ரஹ்ம தத்ஸூத்ரமிதி தாரயேத் |
யதக்ஷரம் பரம்ப்ரஹ்ம தத்ஸூத்ரமிதி தாரயேத்।

(இ-ள்) "எது அக்ஷரப்பரம்பிரமம் அது தரித்துக்கொள்ளத்தக்க சூத்திரம்" என்றோதியது. இம்மந்திரத்தை ஆதாரமாகக்கொண்டே "க்ருஷிகோரக்ஷவாணிஜ்யம் வைஶ்யகர்ம ஸ்வபாவஜம்-க்ருஷிகோரக்ஷவாணிஜ்யம் வைசியங்கர்ம ஸ்வபாவஜம்."

(இ-ள்). "பயிரிடுவதும் பசுகாத்தலும் வியாபாரஞ் செய்தலும் வைசியருடைய சுவபாவமாயுள்ள தொழில்கள்" என்று கண்ணபிரான் கீதையில் மொழிந்துள்ளபடி வைசிய குலமாகிய வேளாண்மரபிலுதித்த சிவம்பழுத்த நெஞ்சத்துப் பக்தி வடிவினரனைவரும் உலகினர் காணுமாறு உடம்பில் பரமமாயும் பவித்திரமாயுமுள்ள பூணூலைத் தரிக்காது, இவ்வுண்மை ஞான சூத்திரத்தையே எஞ்ஞான்றும் தரித்து வருகின்றார்களென்பதை ஈண்டு குறிப்பித்தாம். "நாலுஞ் சிகையும் உணரார் கின்மூடர்கள், நாலது வேதாந்தம் நுண்சிகை ஞானமாம்" என்னும் திருமந்திரத்திருத்தூக்கானு மோர்க. கிருஷித்தொழில், கோரக்ஷணம், பிரதமமொத்த வர்த்தகமாகிய வாணிபம் ஆகிய இம்மூன்றையும் ஒருங்கே செய்பவர் வேளாளரே. அவர்கள் உழவுத்தொழில் முதலியவற்றை செய்யுங்காலத்து கீழ்வருணத்தாரோடு நெருங்கிப் பழகவேண்டியிருத்தலால் யஞ்ஞோபவீதத்தை எப்

பொழுதுந் தரிக்காது விவாகம், சீமந்தம், தர்ப்பணம், அந்தியேஷ்டி, ஆப்தீகம் முதலிய முக்கிய வைதிக கருமங்களில் மாத்திரம் தரித்து வருகின்றார்கள். அதனால் அவர்கள் வைசியர்களல்லரென்று புறங்கூறி அவர்களிடத்தில் தானத்தைமாத்திரம் பிராம்மணர்கள் பெற்றுக்கொள்ளுதல் பெரியதோர் ஏதமாம். சூத்திரனிடத்தில் தானம்வாங்கப் பிராம்மணனுக்கு விதியில்லை. ஆரியர்கள் தென்னாட்டில் குடிபுகுந்தபொழுது அவ்விடத்திலிருந்த வேளாளரையுஞ்சேர்த்து நான்காம் வருணத்தாரென்று தாம் அழைத்ததுமல்லாமல் தம் நூல்களிலும் வரைந்துவைத்து விட்டார்கள். அக்கருத்தைப் பின்பற்றியே சில தமிழ் நூல்களும் எழுந்தன. சில நூல்களில் அக்கருத்து நுழைக்கவும்பட்டன. அதனால் அவைகள் கீதா வாக்கியத்தின்முன்னே பிரபல பிரமாணங்களாகா. இதை விரிக்கிற் பெருகுமாதலால் இம்மட்டில் நிறுத்தி எடுத்துக்கொண்ட விஷயத்தைக் கூறுவாம்.

காயத்திரி மந்திரத்திலுள்ள உண்மையை அறிவிப்பது சப்தவியாஹிருதிகளாம் அவற்றையுச்சரித்த பின்னரே மந்திரத்தையுச்சரிக்கவேண்டியது வேதவிதியாகும். சப்தவியாஹிருதிகளாவன:- "ஹூ:, புவ:, ஸுவ:, மஹ:, ஜந:, தப:, ஸத்யம்-பூ:. புவ:, ஸுவ: மஹ:, ஜந: தப:, ஸத்யம்" என்பவைகளாம். இவற்றின் உபாசனக்கிரமம் தைத்திரீயாருணசாகை நாராயண, பிருஹதாரண்யக, சாந்தோக்ய, ஸூர்யோபநிஷத்துக்களிற் கூறப்பட்டிருக்கின்றது. ஆங்கு கண்டு தெளிக.

காயத்திரி என்ற சொல் வடமொழியில் ஸ்திரி லிங்கமாகப் படிக்கப்பட்டிருக்கின்றமையால் அம்மந்திரம் பரமேசுவரப் பிரதிபாதிதமாயிருப்பினும் தேவியாகவேஉபாசிக்கப்பட்டுவருகின்றது. அப்படி உபாசனை நிகழும்போது அக்கினியிற் சூடுபோல ஹிரண்மயமான சிவபெருமானை விட்டுப்பிரியாமல் அபின்னமாயுள்ள பராசக்தியையே யுபாசிக்கவேண்டியது இன்றியமையாத கடனும். சிவோபாசனைக்குச் சிவசக்தியே நியமமாக வேண்டப்படுகின்றனர். பரமேசுவரன் பரன் ஆகவே அவரது சக்தி பரையென்று சொல்லப்படுகின்றனர். அவ்வம்மைக்கே தனியாலயங்கள் எங்கும் பிரசித்தம். கேனோபநிஷத்தில் தேவேந்திரனுக்குத் தத்துவோபதேசஞ்செய்த உமாதேவியே காயத்திரியின் தேவ

தையாகும். அந்தத்தேவியே சுவேதா சுவதரோபநிஷத்தில் பல வகைச் சங்கைகளுற்ற உண்மை தெரியாது உழன்றபிரஹ்மவாதிகளுக்கு உண்மைபுகட்டி யருள்புரிந்த தேவாத்மசக்தி. அப்பராசக்தி சர்வலோக மாதாவாயிருக்கின்றாள் என்பதை ருக்வேத பஹ்வ்ருசோபநிஷத் "ஸைவஜகதண்ட மஸ்ருஜத-ஸைவ ஜகதண்டமஸ்ருஜத-அந்தத்தேவியே ஜகத்தாகிய அண்டங்களை யீன்றவள்" என்று முழக்கியது. அவ்வம்மையைக் காலையில் சிவப்பு வஸ்திரமணிந்த காயத்திரி தேவியாக மூலாதாரத்தில் தியானஞ்செய்ய வேண்டும். மத்தியானத்தில் வெள்ளை வஸ்திரமணிந்த சாவித்திரி தேவியாக புருவமத்தியில் தியானம் பண்ணவேண்டும். சாயங்காலத்தில் நீலவஸ்திரமணிந்த சரஸ்வதி தேவியாக ஹிருதயத்தில் தியானஞ்செய்யவேண்டும்.

காயத்திரிக்கு மூன்று பாதங்கள் உள்ளன. அம்மூன்று பாதங்களும் முறையே பூலோக, புவர்லோக, சுவலோக சம்பந்தங்களைத் தெரிவிக்கின்றன. "ஸோஹம்" "ஹம்ஸ:" "தத்வமசி" முதலிய மகாவாக்கியங்களின் அர்த்தங்களையே காயத்திரி மந்திரம் அடக்கியுள்ளதென்பது பேரறிவாளர் கொள்கை. ருக்வேதிகள், யஜுர்வேதிகள், ஸாமவேதிகள் ஆகிய எல்லோரும் ஒரே காயத்திரியை உபாசிக்கின்றார்கள். ஆனால் அவர்களுக்குள் ஸ்வரபேதமாத்திரமுண்டு. சந்தியா அங்கங்கள் விஷயத்திலும் சில வேற்றுமைகளுள்ளன.

இம்மந்திரத்தின் பொருளை மதபேதங்களுக்குத் தக்கவாறு பல வாசிரியர்கள் பலவிதமாக உரைசெய்திருக்கின்றார்கள். ஆயினுஞ் சாதாரணமான வாக்கியார்த்தத்தை ஈண்டு பதச்சேதஞ் செய்து காட்டுகின்றாம்.

### தைத்திரீயாருண சாகை நாராயணம்.

தத்ஸவிதுர்வரேண்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி।
தியோ யோ நஃ ப்ரசோதயாத் ॥

தத்ஸவிதுர் வரேண்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி।
தியோ யோநஃ ப்ரசோதயாத்॥

(இ-ள்.) யஃ-எவன், நஃ-நம்முடைய, தியஃ-புத்திகளை, ப்ர-நன்றாக. சோதயாத்-நடத்துவானோ, தத்-அந்த, ஸவிதுஃ-ஸவிதாவென்னுஞ் சூரியனுக்கு அந்தர்யாமியாகிய, பர்கஃ-பார்க்கனென்

னும் நாமம் வகித்த, தேவஸ்ய-ஹிரண்மயபுருஷராகிய மகாதேவ னுடைய, வரேண்யம்-மேன்மையான (ஞானதேஜஸை), யீமஹி-தியானிப்போம்.

இம்மந்திரத்தில் கூறிப்போந்த பரமபுருஷர் சகுணப்பிரம மாகிய ஹிரண்மய சிவபெருமான். அவருடைய பராசக்தியே ஞானதேஜஸ் என்று சொல்லப்படுபவர். அவர் சூரியனுக்குப் பிர காசத்தைக் கொடுத்துக்கொண்டு அவனுக்கு அந்தராத்மாவாக விளங்குகின்றனர். சிவபெருமானுடைய அஷ்டமூர்த்தங்களுள் சூரியனும் ஒன்ருகலின் சூரியனுள் சிவன் இருக்கின்றனன் என் பது பொருத்தமே. மேலும் விளக்கின்பெயர் அவ்விளக்கிருக்குந் தண்டிற்குமாவதுபோல் சிவநாமமாகிய பர்க்கச்சொல் சூரியனுக் குமாயிற்று. திரிகுணரஹிதமான பிரமம் சகுணமாக உபாசிக் சப்படும்பொழுது சூரியனைக் கருதப்படுகின்றது. அப்பொழுது உபாசனைக்குப் பலன் அளிப்பதற்காகப் பிரமப்பொருள் சூரியன் வாயிலாக உபாசனையைக்கிரஹித்துக்கொண்டு வேண்டும்பேற்றை யளிக்கின்றது. இதனுல் உபாசிக்கப்படும் பொருள் சூரியனல்ல. அந்தச் சூரியனுக்கு ஆத்மாவாயுள்ள பரப்பிரமசிவபிரானுரே. இத்தகையஉபாசனைக்கே அந்தராதித்திய வித்தையென்றபெயர். இதை ஸ்ரீகண்ட சிவாசாரியர் "அந்தஸ்தத்தர்மோபதேசாத்-அந் தஸ்தத்தர்மோபதேசாத் (இ-ள்) உள்ளே யுள்ளார் (சிவபெரு மான்) அவர் குணங்கள் கூறப்படலால்" என்னும் பிரம சூத்தி ரத்தில் நன்ருக விளக்கியுள்ளார்.

காயத்திரி மகாமந்திரத்தின் அரும்பொருளை விளக்க எழுந்த சாமவேத மைத்ராயண்யுபநிஷத் அம்மந்திரத்தின் மூன்று பாதங் களை அடியில் வருமாறு விரிக்கின்றது.

(முதற்பாதம்) தத்ஸவிதுர்வரேண்யமித்யஸௌவா ஆதித்ய ஸ்ஸவிதாஸவா ஏவம் ப்ரவரணீய ஆத்மகாமேநேத்யாஹுர் ப்ரஹ்மவாதிந:

தத்ஸவிதுர் வரேண்யமித்யஸௌவா ஆதித்யஸ் ஸவிதாஸவா ஏவம் ப்ரவர்ணீய ஆத்மகாமே நேத்யாஹுர்ப்ரஹ்மவாதிந:

(இ-ள்) தத்ஸவிதுர்வரேண்யம் என்ருல் "இந்த ஆதித்யனே ஸவிதா. அவனே இவ்விதமான சித்தியை அபேட்சிக்கும் ஆத்ம காமனுல் (உபாசிக்கத் தக்கவன்) என்று பிரமவாதிகள் சொல்லு கிருர்கள்." எனவும்,

(இரண்டாம் பாதம்) ஃயஹமெ_ா ஜெவஸு யீஃஹீ_தீ ஸவி தாமெவெ_த வஷி_தாயொஸு ஸஃ_ஹும் ஸாவிஷயாஃதூ ஹூ உ_ஹுவாதிநஃ

அதபர்கோ தேவஸ்ய தீமஹீதி ஸவிதாவை தேவஸ்திதாயோஸ்ய பர்கஸ்தம் ஸம்சிந்தயாமீத்யா ஹுர் ப்ரஹ்மவாதிநஃ

(இ-ள்) இனிபர்கோ தேவஸ்யதீமஹி என்றால் "ஸவிதாவே இங்கு தோன்றும் பொருள்களெல்லாம். அவனுடைய பர்க்கன் ஆவனே அவனைச் சிந்திக்கின்றேன் என்று பிரமவாதிகள் சொல் லுகிறார்கள்." எனவும்,

(மூன்றும் பாதம்) ஃயயியொயொநஃ ஊ வொஉயாதி வொஃயொமெவ யிபஸா யொஸாகஃ உ_மொஉயாகு ஊ_தூ ஹூ உ_ஹுவா_திநஃ

அதியோயோநஃ ப்ரசோதயாதிதி புத்தயோவை தியஸ்தாயோஸ் மாகம் ப்ரசோதயாத் இத்யாஹுர் ப்ரஹ்மவாதிநஃ

(இ-ள்) இனித்யோயோந: ப்ரசோதயாத் என்றால் "புத்தி களை எவன் எமக்குப்பிரேரணைஞ் செய்வான் அவன் என்று பிரமவாதிகள் சொல்லுகிறார்கள்" எனவுமாம்.

இன்னும் அம்மந்திரத்தில் பரமரகசியமாய் அமைந்துள்ள பர்க்க சப்தத்தின்பொருளை அந்த உபநிஷத்தே அடியில் காட் டியபடி நிரூபிக்கின்றது.

ஃயஹமஃ ஊதி யொஹவா கஸிநாதிதெ நிஹிதஸாரகெகஷிணி வெஷ ஹமஃாவெ ஹாஹி மஃதி ரஸுஹீதி ஹமெ_ாஹஜஃய தீதிவெஷ ஹமஃா ஊதி ரூஜாவ ஹுவாதி_நஃ॥

அதபர்க இதியோஹவா கஸ்மிந்நாதித்யே நிஹிதஸ் தாரகேக்ஷிணி சைஷ பர்காக்யோ பாபிர்கதி ரஸ்யஹீதி பர்கோ பர்ஜயதீதி வைஷ பர்கா இதிருத்ரோ ப்ரஹ்மவாதிநஃ॥

(இ-ள்) "இனி பர்க்கனென்பான், எவன் இந்த ஆதித்திய னிடத்தும் கண்ணின் கருவிழியினிடத்தும் உள்ளவன். பர்க்க னென்ற பேருடையவன் ஸா என்ற பிரகாசத்தால் இவனுக்குக் கதியிருத்தலின் பர்க்கன். வெதுப்புவதால் (சங்கரிக்குந் தொழி லால்) பர்க்கன் இவன். உருத்திரன் என்று பிரமவாதிகள் சொல் லுகிறார்கள்." இம்மந்திரத்தால் அந்தராதித்த வித்தை, அட்சி

வித்தை ஆகிய விரண்டும் சிவபரமேயென நிரூபிக்கப்பட்டது. இவ்விரு வித்தையிலும் பிரதிபாதிக்கப்பட்ட பரமபுருஷரே காயத்திரி மகாமந்திரத்தின்கண் பர்க்கன் என்னுஞ்சொல்லாற் குறிப்பிக்கப்பட்டா ரென்றுணர்த்த “ஸமூாவு௱-பர்காக்ய:-பர்க்கனெனப் பெயருடையான்” என இடு குறிப்பெயரால் சுருதி நிச்சயித்தது. இனி அதன் காரணப்பொருளையும் சுருதி அட்சரப்பிரிவு செய்து விளக்குகின்றது.

ஈயஹமூ இதி ஹாஸயதீமாநுலோகாநு இதி ரஞ்ஜயதீமாநிஹூதாநி மச்சத இதி மச்சந்த்யஸ்மிந்நா மச்சந்த்யஸ்மா இமா: ப்ரஜாஸ்தஸ்மாத் ஹாரகத்வாத் ஹமூ:॥

அதபர்க இதிபாஸயதீமாந் லோகாந்இதி ரஞ்ஜயதீமாநி பூதாநி கச்சத இதி கச்சத்யஸ்மிந்நா கச்சத்யஸ்மா இமா: ப்ரஜாஸ்தஸ்மாத் பாரகத்வாத் பர்க:॥

(இ-ள்) “இனி பர்க்கனென்றது (ஹ)ப-உலகங்களை விளக்கி நிற்போன். (ர)ர-எல்லாவுயிர்களுக்கும் பிரீதிவிளைவிப்போன். (ம) க-எல்லாவுயிர்களும் (சம்ஹாரகாலத்தில்) இவனை யடைகின்றன. மீளவும் (சிருஷ்டிகாலத்தில்) வெளிப்படுகின்றன. ஆதலின் பர்க்கனெனப்படுகின்றான்.” என்பதாம். இங்கு பிரமவாதிகள் சொல்லுகிறார்கள் என்றதனால் பிரமவாதிகளாவார் வேதங்களை முற்றுங் கசடறக் கற்றுணர்ந்த மேதாவியர். அவர்களே இவ்வாறு உண்மைப் பொருளைத் தெளிந்தோதினார்களென்றால் வேதங்களைச் செவ்வையாய் உணராத ஏனையோர் இத்தகைய அரிய பெரிய வுண்மையைத் தெளியமாட்டார்களென்றும், அவர்கள் லௌகிக நியாயங்களைக்கொண்டே வேறு கடவுளருக்குப் பொருட்படுத்தி இடர்ப்படுவார்களென்றும் ஏற்பட்டது. அத்தகையோர்களது பதர்மொழிகளைத் துச்சமென்றொதுக்குவதே விவேகிகளுக்கு ஒப்பமுடிந்த துணிபாம். இவ்வாறு சுருதியுக்தமான ஏதுக்களால் ஓங்காரவாச்சியப் பொருளாயுள்ளவர் எவரோ அவரே உயர்காயத்திரியின் ஒப்பிலாப் பொருளான உமையொருபாகரெனவும், தண்மதிசூடிய தனிமுதற்கடவுளெனவும், கைகூப்பி யறியாக் கண்ணுதற் பெருமானெனவும் பசுமரத்தாணிபோல் இறுக்கி நாட்டப்பட்டது.

இஃதிங்ஙன மிருக்க, வைஷ்ணவர்களுக்குள் காயத்திரி இராமாயணம் என்னும் ஓரரிய நூல் மிக்க பக்திசிரத்தை ஆராதனை

களோடு வழங்கப்பட்டு வருகின்றது. அவ்விராமாயணம் வால்மீகிபகவான் அருளிச்செய்த 24000 கிரந்தங்களமைந்துள்ள ஒவ்வோர் ஆயிரஞ்சுலோகங்களினின்றும் காயத்திரி மந்திரத்தின் ஒவ்வொரு அட்சரத்தையும் முதலிற்கொண்ட 24 சுலோகங்களால் திரட்டப் பட்டடுள்ளது.

சாதாரணமாய் வால்மீகி இராமயணம் ஆத்மாக்களுக்குரிய சர்வதர்மங்களையும் கதா நாயகர் மூலமாய் அநுஷ்டித்துக் காட்டும் ஒப்பற்ற காவியம் என்பது யாவரும் அறிந்தவிஷயம். இந்த * 24 சுலோகங்களும் கதா சந்தர்ப்பத்தில் அந்தந்த இடங்களுக்குத் தக்கவாறு பொருளமைந்திருப்பினும் அந்தச் சுலோகங்களை ஒருங்குசேர்த்துப் பொருள் கொண்டால் அவை ஒருவன் உபநயனஞ் செய்து கொண்டது முதல் அவன் ஜன்ம முடியும் வரையிலும் அநுசரிக்கவேண்டிய முக்கிய தர்மங்களை வியவகரித்து அவனுடைய புத்தியைச் செவ்வையாய் ஏவிநடத்துந்திறன் வாய்க்கப் பெற்றதென அறியலாம். முதல் மூன்று சுலோகங்களும் பிரமசரிய ஆச்ரமதர்மத்தையும், 4 முதல் 12 வரையிலு முள்ள சுலோகங்கள் கிருகஸ்தாச்ரம தர்மத்தையும், 13 முதல் 18 வரையிலுமுள்ள சுலோகங்கள் வானப்பிரஸ்தாச்ரமதர்மத்தையும், 19 முதல் 23 வரையிலுமுள்ள சுலோகங்கள் சந்நியாச ஆச்ரமதர்மத்தையும், 24 வது சுலோகம் மோக்ஷப்பிராப்தியையும் ஸங்கிரஹமாகக் குறிப்பிடுகின்றன. ஆகையால் வால்மீகி இராமாயணம் காயத்திரியிலும், காயத்திரிமந்திரம் பிரணவத்திலும், பிரணவம் பராசத்தியினிடத்திலும், பராசத்தி பரப்பிரமத்தினிடத்திலும் ஒடுங்குமென அறிக.

---

* இச்சுலோகங்களை வரைந்து அவற்றின் பொருளை விளக்கின் நூல் விரியுமென்றஞ்சி அவற்றை ஈண்டு வரையாது விடுத்தனம். ஆயினும் சுலோகங்கள் வரும் இடங்களை மாத்திரம் எடுத்துக்காட்டும். முதற்சுலோகம்-பாலகாண்டம் முதல்ஸர்க்கம் முதற்சுலோகம்; 2ம்சு-30-22; 3ம்சு-67-12 4ம்சு-அயோத்தியாகாண்டம் 15-20, 5ம்சு-40-15, 6ம்சு-67-34. 7ம்சு-99-25, 8ம்சு-ஆரண்யகாண்டம் 11-14, 9ம்சு-43-17, 10ம்சு-72-17, 11ம்சு-கிஷ்கிந்தாகாண்டம் 22-20, 12ம்சு-43-34, 13ம்சு-சுந்தரகாண்டம் 4-1, 14ம்சு-26-41, 15ம்சு-53-27, 16ம்சு-யுத்தகாண்டம் 10-27, 17ம்சு-41-67, 18ம்சு-59-139, 19ம்சு-72-112, 20ம்சு-94-26, 21ம்சு-119-23, 22ம்சு-உத்தரகாண்டம் 16-26, 23ம்சு-34-41, 24ம்சு-66-1.

### அதர்வணவேத ராமரஹஸ்யோபநிஷத்

𑌰𑌾𑌮 𑌏𑌵 𑌪𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌰𑌾𑌮 𑌏𑌵 𑌪𑌰𑌂 𑌤𑌪𑌃।
𑌰𑌾𑌮 𑌏𑌵 𑌪𑌰𑌂 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑌾𑌰𑌕𑌂।

*ராமஏவபரம்ப்ரஹ்ம ராமஏவபரந்தப:।*
*ராமஏவபரம்தத்வம் ஸ்ரீராமோ ப்ரஹ்மதாரகம்॥*

(இ-ள்). வெளிப்படை. இந்தச்சுருதி இராமனை பரப்பிரமமென்று நிச்சயித்தலால் காயத்திரி இராமாயணம் காயத்திரி மந்திரத்தை விளக்க எழுந்ததென்பது அவர்களது அபிப்பிராயம் அதனால் இராமாயண பாராயணஞ் செய்தால் காயத்திரியை அநுஸந்திப்பதாக அவர்களது நிச்சயம். அதற்கு யாதொரு சந்தேகமுங் கிடையாது. எப்படி இராஜாங்க உத்தியோகஸ்தனை ஒருவன் அரசமுத்திரையைச் சிரசிற்றாங்கிக் கனம் பெறுகின்றானோ அப்படியே சர்வமந்திரங்களும் அக்ஷரத்திரயாத்மக பிரமவாசகமாகிய பிரணவஞ்சேர்ந்தே பயன் படுவது சர்வவேத சம்மதம். அதுபோல இவ்விராமாயணமும் காயத்திரி மகா மந்திரத்தின் சார்பால் மிக்க சிரேயஸை யடைந்து ஆதிக்கியம் பெற்று நித்திய பாராயணத்துக்கு யோக்கிய மாயிற்றென்பதே தேற்றம். மந்திரங்களுள் பிரணவமும், பஞ்சாக்ஷரமும், காயத்திரியும், திரியம்பக மந்திரமும் ஒன்றை யொன்று அபேக்ஷியாமல் தனியாகவே உபாசகர்களுக்குப் பலன்கொடுப்பது உலகப் பிரசித்தமன்றோ. காயத்திரிமந்திரத்திற்கு விசுவாமித்தரர் ரிஷியாகவும், ஸவிதாவாகிய சூரியமண்டல மங்கள மணியான பர்க்கன் (சிவபெருமான்) அதிதேவதையாகவும் இருப்பதுபோல ஆதித்திய குலத்தில் இராமன் அவதரித்தவுடனே விசுவாமித்திர மஹரிஷிவருவதும் இதற்கு நிதரிசனமாம். அவ்வபேதத்தைப்பற்றியே காயத்திரி ராமாயணம் எனப் பெயர் பெற்றதென் றுணர்க.

ஆயின் சதுர்த்த சப்த வாச்சியப்பொருளாகிய சிவபெருமானையல்லாமல் திரிமூர்த்திகளை உபாசிப்பது வீண்செயலோவெனின், அற்றன்று. அம்மூர்த்திகளின் பதவிகளை அவாவுவோரும், மோக்ஷத்திற்காக விரூபாக்ஷனை வழிபடுவதற்குப் பூரணாதிகாரம் பெறாதவர்களும், அப்பரமேசுவரன் றிருவருள் கிட்டவேண்டி அவனது விபூதிகளாயும், அவனது திருமேனிகளாயும், அவனுக்கடுத்தபடியில் நிற்பவர்களாயுமுள்ள அக்கடவுளரை

உபாசிக்கவேண்டியது இன்றியமையாத கடனும். ஆதலினன்றோ கூர்மபுராணத்து இறுதி அத்தியாயம்,

𑌅𑌤𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌶𑌕𑍍𑌤𑍋𑌽 𑌰𑍁𑌦𑍍𑌰𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌣𑌮𑌰𑍍𑌚𑌯𑍇𑌤𑍍।

*அத்ராப்யசக்தோ ருத்ரம் விஷ்ணும் ப்ரஹ்மாண மர்ச்சயேத்।*

(இ-ள்). "(திரிகுணரஹித சிவோபாசனையைச் செய்யமுடியாத) அசக்தன் உருத்திரனையும், விஷ்ணுவையும், பிரமனையும் வழிபடுக" என்று கூறிப்போந்தது. என்னை!

### கிருஷ்ண யஜுர்வேத ஸ்கந்தோபநிஷத்.

𑌶𑌿𑌵𑌾𑌯 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑍂𑌪𑌾𑌯 𑌶𑌿𑌵𑌰𑍂𑌪𑌾𑌯 𑌵𑌿𑌷𑍍𑌣𑌵𑍇।
𑌶𑌿𑌵𑌸𑍍𑌯 𑌹𑍃𑌦𑌯𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑍍𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌶𑍍𑌚 𑌹𑍃𑌦𑌯𑌂 𑌶𑌿𑌵𑌃॥
𑌯𑌥𑌾𑌨𑍍𑌤𑌰𑌂 𑌨 𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 𑌤𑌥𑌾 𑌮𑍇 𑌸𑍍𑌵𑌸𑍍𑌤𑌿𑌰𑌾𑌯𑍁𑌷𑌿।
𑌯𑌥𑌾𑌨𑍍𑌤𑌰𑌂 𑌨 𑌭𑍇𑌦𑌾𑌃 𑌸𑍍𑌯𑍁𑌃 𑌶𑌿𑌵𑌕𑍇𑌶𑌵𑌯𑍋𑌸𑍍𑌤𑌥𑌾॥

*சிவாய விஷ்ணு ரூபாய சிவரூபாய விஷ்ணவே।*
*சிவஸ்யஹ்ருதயம் விஷ்ணுர் விஷ்ணோச்சஹ்ருதயச்சிவ:॥*
*யதாந்தரம் நபச்யாமிததாமே ஸ்வஸ்திராயுஷி।*
*யதாந்தரம் நபேதாஸ்யுச்சிவ கேசவ யோஸ்ததா॥*

(இ-ள்). "விஷ்ணு ரூபமாயிருக்கிற சிவன் பொருட்டும், சிவரூபமாயிருக்கிற விஷ்ணுவின்பொருட்டும் (நமஸ்காரம்). சிவனுடைய ஹிருதயமே விஷ்ணு. விஷ்ணுவினுடைய ஹிருதயமே சிவன். எப்படி இவ்விருவரினும் நான் பேதங்காணவில்லையோ அப்படியே எனக்குச் சந்தோஷமும் ஆயுளும் உண்டாகக்கடவது" என்று சிவ விஷ்ணுக்களை அபேதமாகப் பாவிக்க வேண்டுமென்று முழக்கிய மறைமொழி அற்ப மொழிகளோவெனின், அஞ்சவேண்டாம். சமாதானம் மொழிவாம்.

பெருந்தேவர்களாகிய விஷ்ணு சிவன் என்னும் இருவரும் தனித்தனி மூர்த்திகளாயிருப்பினும் விஷ்ணுமூர்த்தி தமது வலப் பாகத்தைச் சிவனுக்கும், சிவமூர்த்தி தமது இடப்புறத்தை விஷ்ணுவுக்குங் கொடுத்திருத்தலால் இருவர் உருவமும் ஒருருவமாக வமைந்து ஓரேமூர்த்தமாயிருக்கின்றது. ஆதலால் இருவருக்கும் பேதமில்லையென்பது சுருதியின் தாற்பரியம். ஆழ்வார்களுக்கும் இவ்விதக்கருத்தே உடன்பாடாதலின் இரண்டுருவமும் ஒன்றேயென்று மங்களாசாஸனஞ் செய்துள்ளார்கள்.

பெரியாழ்வார் இயற்பா.

தாழ்சடையு நீண்முடியு மொண்மழுவுஞ் சக்கரமுஞ்
சூழரவம் பொன்னாணுந் தோன்றுமால்—சூழுந்
திரண்டருவி பாயுந் திருமலைமே லெந்தைக்
கிரண்டுருவு மொன்றா யிசைந்து..................எனவும்.

பொய்கையாழ்வார் இயற்பா.

அரனா ரணனாம மான்விடைபுள் ளூர்தி
யுரைநூன் மறையுறையுங் கோயில் - வரைநீர்
கரும மழிப்பளிப்புக் கையதுவே னேமி
யுருவமெரி கார்மேனி யொன்று.. .......... .....எனவும்.

வருமாறுகாண்க. இதையே கேசவார்த்த மூர்த்தமெனவும், சங்கர நாராயண மூர்த்தமெனவுங் கூறுப. புராணங்களும்.

ஸவஶக்திமயோஹ்யேஷ: ப்ரஹ்மணஸ்ஸமநந்தர:|

ஸர்வசக்திமயோஹ்யேஷ: ப்ரஹ்மணஸ்ஸமநந்தர:|

(இ-ள்). "சர்வசக்திகளுமுடையவனிவன். பிரமத்திற்கடுத்தவன்." என விஷ்ணுவின் பெருமையை எடுத்துச சாற்றின. உண்மை இவ்வாறிருக்க ஹரன் ஹரியைப்பற்றி யிராதபோது அவருக்குச் சத்தை குலையுமென்றும், பற்றியிருக்கும்போது பகவத் ஸ்தோத்திரத்திற்கு யோக்கியரென்றும், வேறுபட்டபோது அவ்வித யோக்கியத்திற்கு அருகரல்லரென்றும், இக்காரணங்களால் ஹரியும் ஹரனுமாயுள்ள மூர்த்தியை ஆழ்வார்கள் துதித்தார்களென்றும் வைஷ்ணவபுமான்கள் கூறுவதுண்டு. அவ்வெம்மொழிகள் ஆசரிக்கத்தக்கனவோ அல்லவோவென்பதை முமூட்சுக்களே பகுத்தறியக்கடவர்.

அன்றியும், இளஞ்சந்திரனை ஜடாமண்டலத்தில் தரித்த சிவபிரானை நாயனாக வலப்புறத்தில் வைத்துகொண்டு பிரமதேவனாகிய புத்திரனைத் தமது உந்தியாகிய கமலயோநிவழியாய்த் தந்தவர் விஷ்ணுமூர்த்தியாதலானும், பிரமதேவர் தந்தையைப்போலவே சுவர்ண நிறமுடையராய் ஐந்து முகங்களோடு தோன்றினமையானும், சிவசக்திமூர்த்தம் நான்கனுள் விஷ்ணுமூர்த்தி புருஷசக்தியாயிருத்தலானும், அச்சிவ சக்திகளுள்ளும் திருமால் பிகிருதி ரூபிணியாகிய மாயாசக்தியாய் விளங்களானும், சிவகேசவர்களிருவரும் அபேதமாகவே எண்ணப்பட்டுள்ளார்கள். இவ்விருவருக்குமுள்ள பர்த்ருபார்யா சம்பந்தத்தைக்குறித்து

யஜுர்வேத ருத்ர ஹ்ருதயோபநிஷத்.

𑌰𑍁𑌦𑍍𑌰𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 𑌬𑍀𑌜𑌂 𑌬𑍀𑌜𑌯𑍋𑌨𑌿𑌰𑍍𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨𑌃।
𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌃 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾 𑌕𑌾𑌰𑌣𑌂 𑌤𑍁 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌃॥

*ருத்ராத் ப்ரவர்த்தே பீஜம் பீஜயோநிர்ஜநார்தநஃ।*
*கார்யம் விஷ்ணுஃ கிரியா ப்ரஹ்மா காரணந்து மஹேச்வரஃ॥*

(இ-ள்). "பிரபஞ்ச சிருஷ்டியாகிய கிரியையை நடத்தப் பிரமந்தவனைத் தருங்காரணத்தினாலே உருத்திரமூர்த்தி பீஜமெனவும், அந்தப்பீஜத்துக்கு யோநிஜநார்த்தனனாகிய விஷ்ணுவெனவும் சொல்லப்படுகின்றார்கள்" என்று விளக்கியுள்ளது. இதனால் சிவபெருமான் பீஜமுடைய பீஜீ, பிரமன் பீஜம், ஹரி யோநி என்று ஏற்பட்டது பீஜமாவது சிவனாரது ஊர்த்துவ சுவர்ண ரேதஸ். இச்சுருதியில் விஷ்ணுவையும், பிரமனையும், சிவனையும் கூறிய முறைப்படியே சடகோபரும் தாம்பாடியருளிய திருவாய்மொழியின் இறுதிப்பத்து இறுதிச்செய்யுளில் "அவாவறச் சூழரியை யயனை யரனை யலற்றி, அவாவற்று வீடுபெற்ற குருகூர்ச் சடகோபன்" என்று அவர்களை யமைத்துத் துதித்துள்ளார். அங்கப்பாசுரத்தில் "ஹரன்" என்னுஞ் சொல்லுக்குப்பின்னே யாதொரு தெய்வப் பெயரும் இல்லாமையானும், "சிறப்புடைப் பொருளைப் பிற்படக்கிளத்தல்' என்னுஞ் சூத்திரப்படி அரனை மமே அவர் வாக்கினின்றும் முடிபாக எழுந்தமையானும், ஒருபுடை "முற்படக்கிளத்து பொருள் சிறப்புடைத்தாகும்" என்னும் பிரமாணப்படி ஹரியை முதலில் வைத்து மகிழ்ந்தமையானும், அவ்விருவர்மத்தியில் அவர்களது காரியமாகிய பிரமனை வைத்து ஓதினமையானும், அவ்வாழ்வாருக்கும் பர்த்ருபார்யா சம்பந்தம் உடன்பாடாகி, அவ்விருவருக்குமுள்ள அபேதத்தன்மையைச செவ்வனே நிலைநாட்டியருளினரென்பது வெள்ளிடைமலைபோல் விளங்குகின்றது. மேலும் திருமங்கையாழ்வாருங் பெரிய திருமொழியில் "ஒருகுறளாய்" என்றபத்தில் "பிறைதங்கு சடையானை வலத்தேவைத்துப் பிரமனைத் தன்னுந்தியிலே தோற்றுவித்துக், கறைதங்கு வேற்றடங்கண் திருவை மார்பிற் கலந்தவன்" என்னும் பாவில் இதே உண்மையைச்சிறப்பித்துச் சாதித்தருளினர். 'வைத்து' என்னும் பதப்பிரயோகம் இப்பாவில் தெளிவாயமைந்திருத்தலின் பிரமனுடைய தோற்றத்துக்கு முன்னரே சிவபெருமான் இருந்தனரென்பது ஆழ்வாருக்குஞ் சம்மத

மாயிற்று. இதுநிற்க, ஆசிரியராகிய கண்ணபிரானும் "ஊஹம்வை ஹாவ௱வபூ ஸூஜ௱தஃ காரணத்ரயம்-அஹம்ப்ரஹ்மாசசர்வச்சஜக தஃகாரணத்ரயம்-யானும், பிரமனும், உருத்திரனும் உலகத்துக்கு முக்காரணங்களாய்" என்றருளிச் செய்தனர்.

இலக்குமிக்குப் பதி விஷ்ணு என்னும் அர்த்தத்தில் "லக்ஷ்மீ பதிஃ" என்னுஞ்சொல் வைதிகநூல்களில் வழங்கற்பட்டு வருதல் போல ஹரிக்குப் பதி ஓங்காரசிவன் என்னும் அர்த்தத்தில் "ஹரிஃஓம்" என்னும் மாற்றமும் வழங்கப்பட்டு வருகின்றது. சிவன் ஹரனுகவே விஷ்ணு ஹரியாயினர். ஆகையினுலே திருத்தாண்டகவேந்தர், "பிரிவிலா வமரர்கூடிப் பெருந்தகைப் பிரானென்றேத்தும், அரியலாற் றேவியில்லை யையனை யாறனுர்க்கே" என்று திருவாய்மலர்ந்தருளினர். இலிங்கபுராணமும், "மலைமகள் கொழுநன் பிசிநீ பீசமற்றியான் யோநிதன்பீசம், உலகெலாமுன்னந் தோற்றுவிப்பதற்கென் யோநியில் வைத்தனன்" எனவும், மதுரைக்கலம்பகம், "போதலர்பைந் துழாய்ப்படலைப் புயல்வண்ணந் தொருவனிரு பூவைமார்க்குக், காதலனுய் மற்றுனக்கோர் காதலியாய் நிற்பதொரு காட்சிதானே" எனவுங் கூறிப்போந்தன. சக்தன் சக்தி என்பனபோல ஹரன் ஹரி என நின்றமையால் திராவிட வேதபாராயணத்துக்கு முதலினும் முடிவினும் "திருச்சிற்றம்பலம்" என்று கூறுமாறே ஆரிய வேதபாராயணத்துக்கும் ஆதியினும் அந்தத்தினும் ஹரிநாமத்தை வந்தன வசனமாகச் சில வைதிகர் வழங்கிவருவது, ஹரனது சக்திபால் அனைத்தும் உதித்தொடுங்குமென்பதை குறிப்பிக்கும்பொருட்டே.

சிவபெருமானுக்கும் விஷ்ணுவுக்கும் நாயக நாயகி சம்பந்தத்தால் யாதொரு பேதமுமில்லாதிருந்தாலும் உள்ளே சத்துவமும் வெளியே தமசுமுடைய இக்குணசிவமூர்த்தி, உள்ளும் புறமும் ரஜசுடைய பிரமனையும், உள்ளே தமசும் வெளியே சத்துவமுமுடைய விஷ்ணுவையும் சம்ஹாரகாலத்தில் தம்மிடத்தில் ஒடுக்கிக்கொண்டு பின்னர் சிருஷ்டிகாலத்தில் தோற்றுவிக்கின்ற காரணத்தால் இவ்விருவரினும் அவரே உயர்ந்தோராவர். இதற்குச் சுருதிப்பிரமாணம்,

அதர்வண வேத சரபோபநிஷத்.

யஸ்மாத்பரம் நாபரமஸ்திகிஞ்சித்யஸ்மாந்நாணீயோ நஜ்யாயோஸ்திகஸ்சித்॥

(Grantha lines as printed:)
வெபா௱தாபதமெ௱ வைஷ்ா தத்பா௱தா௱பமெதாஹாபிஃ।
தத்பா௱தாபமெதா ஷீ௱ஷஷாத்ூமெ௵ாயிகொநஹி॥

*பராத்பரதரோப்ரஹ்மா தத்பராத்பரதோஹரி:।*
*தத்பராத்பரதோ ஹீசஸ்தஸ்மாத்துல் யோதிகோநஹி॥*

(இ-ள்). "பரத்துக்குப் பரம் பிரமன். அவருக்குப் பரம் ஹரி. அவருக்குப் பரம் ஈசன். அவருக்குச் சமானரும் அதிகருமில்லை" என்றது. இத்தகைய சுருதியின் உண்மையை யுணராமலும், "அறிவும் சிவமும் ஒன்று" என்னும் ஆன்றோர் அநுபவ வுரையைப் பொருட்படுத்தாமலும் "அரியுஞ் சிவனும் ஒன்று அரியாதவன் வாயில் மண்ணு" என்று தம் மனம்போனவாறு பிதற்றிக்கொண்டு திரியும் மந்தப் பிரஞ்ஞையுடையோரது ஊழ் இருந்தவாறு என்னே! என்னே!! சங்கார கர்த்தாவாகிய உருத்திரமூர்த்தியையும், திதிகர்த்தாவாகிய விஷ்ணுமூர்த்தியையும் சமப்படுத்தல் இராஜாவையும் மந்திரியையும் சமப்படுத்தலுக் கொக்கும். ஆகையினாலன்றோ ஸ்ரீ தாயுமானசுவாமிகள், "அல்லலாந் தொழில் படைத்தே அடிக்கடி யுருவெடுத்தே, மல்லன்மாஞாலங் காக்க வருபவர் கடவு ளென்னின், தொல்லையாம் பிறவி வேலை தொலைந்திடா திருணீங்காது, நல்லது மாயைதானும் நானென வந்துநிற்கும்.' என வற்புறுத்தியருளினர். இந்தக் குண சிவம் நான்காவது தெய்வத்துக்குரிய எல்லாப் பெயரும், வடிவும், தொழிலும் பெற்றிருந்தாலும், சதுர்த்த சப்த வாச்யப் பொருளென்று வேதங்களால் வந்திக்கப்பெற்ற எங்கள் பரசிவமல்லர். இவருக்கும் பஞ்சவக்திரங்களும், சதாசிவன் என்னும் பெயரும், பிறவுமுள. அவைபற்றி மயங்கற்க. "பண்டையிற் படைப்புங் காப்பும் பறந்தன மாயையோடே" என்று ஷை சுவாமிகள் பூஷித்தபடி, படைப்புத் தொழிலையும், காப்புத் தொழிலையும் தன்னிடத்தில் அடக்கும் ஆற்றல்பெற்ற இக்குணமூர்த்தியையுங்கூட ஒடுக்குபவர் ஐந்தொழில் முதல்வரான பரமசிவமே. இவ்வாய்மையை யுணராது பரமசிவத்தை மூவரில் ஒருவராகத் தியானிப்பவரெல்லாம் பதமுத்தியை யடைவான்றி அபரமுத்தி, பரமுத்திகளையடையாரென்பது திண்ணம்.

சுக்லயஜுர்வேத ஈசாவா ஸ்யோபநிஷத்.

𑌅𑌨𑍍𑌧𑌂𑌤𑌮𑌃 𑌪𑍍𑌰𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑌿 𑌯𑍇𑌽𑌸𑌮𑍍𑌭𑍂𑌤𑌿𑌮𑍁𑌪𑌾𑌸𑌤𑍇।
𑌤𑌤𑍋 𑌭𑍂𑌯 𑌇𑌵 𑌤𑍇 𑌤𑌮𑍋 𑌯 𑌉 𑌸𑌮𑍍𑌭𑍂𑌤𑍍𑌯𑌾𑌂 𑌰𑌤𑌾𑌃॥

*அந்தந்தம: ப்ரவிசந்தி யேऽஸம்பூதி முபாஸதே।*
*ததோபூய இவதே தமோ யஉஸம்பூத்யாக்ரதா:॥*

(இ-ள்). "எவர்கள் (ஜடமாகிய) பிரகிருதியை உபாசிக்கின்றார்களோ அவர்கள் மிக்க அஞ்ஞான இருட்டை யடைகின்றார்கள். எவர்கள் உற்பத்தியுடையதில் ஆசையுடையவர்களோ அவர்கள் முற்கூறிய இருட்டைப்பார்க்கிலும் விஸ்தாரமான இருளில் பிரவேசிக்கின்றார்கள்" என்று நல்லறிவு புகட்டியது. அசம்பூதி-பிரகிருதி. சம்பூதி-உற்பத்தி நாசமுடைய பொருள்கள். அதாவது ஜடமாகிய பிரதானத்தையே பிரமமென்று உபாசித்தலையும், உற்பத்தி நாசமுடைய பிரம விஷ்ணு ருத்ராதிகளையும், சூரியன் அக்கினி முதலிய இயற்பொருள்களையும் பிரமமெனப்பாவியாது பிரமமென்றே உபாசித்தலைச் செய்வோர் அந்தகாரத்தையடைவர் என்பது கருத்து. ஆகையினாலே "பெம்மானுன்னையல்லாற் பெரிதேத்தமாட்டேனே" எனவும், "உள்ளேன் பிறதெய்வமுன்னையல்லா தெங்களுத்தமனே" எனவும் தேவாரமும் திருவாசகமும் முழக்கின. மணிவாசகப்பிரானும், "ஆட்டுத்தேவர்தம் விதியொழித்தன்பா லையனேயென்றுன் னருள்வழியிருப்பேன்" என்று மனங்கசிந்துருகினர். (ஆட்டுத்தேவர் - ஆட்டப்பட்டதேவர். அவர்களே பிரமாதிகிருத்தியக் கடவுளர்)

இனி எடுத்துக்கொண்ட தாரசப்தப்பொருளை விளக்குவாம். தாரமென்றாலும், தாரகமென்றாலும், தாரகப் பிரமமென்றாலும் பொருள் ஒன்றே. இம்மூன்று சொற்களும் ஓங்காரமென்னும் பிரணவத்தையே குறிக்கின்றன. தாரகப்பிரமம் என்னும் இரு சொற்கள் ஒன்றாகச்சேர்ந்து வரும்போது அவை பிரணவத்தினிடத்தே யமையுமென்பது வேதவிற்பன்னர்களின் தீர்மானம். இராமன் தாரகப்பிரமம் என்பார்கூற்றை இடம்வந்துழி விசாரிப்பாம்.

மா - தாரக மந்திரம் பிரணவமென்றியம்புதற்கு வேதப்பிரமாணங்களுளவோ ?

ஆ - ஆம். உள அவற்றை விரிவாய் விளக்கிக் காட்டுவாம்.

### சுக்ல யஜுர்வேத ஜாபாலோபநிஷத்.

அத ஹைநம் அத்ரி: பப்ரச்ச யாஜ்ஞவல்க்யம் ய ஏஷோऽனந்தோऽவ்யக்த ஆத்மா தம் கதமஹம் விஜானீயாமிதி। ஸ ஹோவாச யாஜ்ஞவல்க்ய: ஸோऽவிமுக்த உபாஸ்ய: ...

அத்ரஹிஜந்தோ: ப்ராணேஷூத்க்ரமமாணேஷு ருத்ரஸ்தாரகம் ப்ரஹ்மவ்யாசஷ்டே। தேநாஸாவம்ருதீ பூத்வா மோக்ஷீபவதி॥

(இ-ள்). "இங்கு ஜந்துக்களுக்குப் பிராணன் வெளிப்படும் பொழுது உருத்திரமூர்த்தி தாரகப் பிரமோபதேசஞ்செய்வர். அதனால் அச்செந்து அமிர்தமாய் மோட்சத்தைப்பெறும்." என்றது. (இங்கு - ஸ்ரீ காசி க்ஷேத்திரத்தில்)

வாரணாசி என்னுங் காசி க்ஷேத்திரத்திலே சர்வஞ்ஞத்துவம் வாத்ஸல்லியம் முதலிய அற்புத குணங்கள் நிறைந்த ஸ்ரீவிசுவேசுவரர், பிரமவித்தியாநாயகி என்னும் விசாலாக்ஷியம்மையார் தமது அருட்டிருமேனியில் விளங்க, மரிக்கின்ற ஜந்துவின் எதிரே பிரசன்னமாகி, அச்செந்து இளைப்பாறும் பொருட்டு அதன் வலது செவியில் மெதுவாகத் தாரக மந்திரோபதேசஞ்செய்து பாசத்தைச் சேதிக்கின்றார் என்பதாதி தாரக மந்திரவித்தை காசிகண்ட முதலிய புராணபாகங்களில் விரிவாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. அசசுலோகங்களின் மொழிபெயர்ப்பு "இத்தலமெய்தி யிறக்குநர் யாருமிளைப்பாற, உத்தரியத்தொடுமாதுமைவீசிட வுமைபோர்பால், வைத்தவரும் பொருள் மேவருதாரக மறையோதி, முத்தியளித்திடு மிப்பதியார்விட முயல்வாரே" எனவும், "காசி தன்னிடைமுடிபவர்க் கெம்பிரான் கழறும், மாசில்தாரகப் பிரமமா யதன் பயனுய்ந்தான்" எனவும் வருமாறுகாண்க. இத்தாரக மந்திரம் பிரணவமே என்பதற்கு மேலே எடுத்துக்காட்டிய அதர்வசிகை அதர்வசிரசுக்களின் மந்திரங்களல்லாமல் அடியில்காட்டும் உபநிஷத் வாக்கியங்களுஞ் சிறந்த பிரமாணங்களாகும்.

சுக்லயஜுர்வேத அத்வய தாரகோபநிஷத்.

஗ர்ப்ப ஜந்ம ஜராமரண ஸம்ஸார மஹத்பயாத் ஸந்தாரயதி
தஸ்மாத் தாரகமிதி।

கர்ப்பஜந்ம ஜராமரண ஸம்ஸார மஹத்பயாத் ஸந்தாரயதி
தஸ்மாத்தாரகமிதி।

(இ-ள). "கர்ப்பம், ஜன்மம், ஜரை, மரணம், சம்சாரம் ஆகிய மகாபயத்தினின்றுந் தாண்டச்செய்கின்றது. அதனாலே தாரகமென்று சொல்லப்படுகின்றது' எனவும்,

அதர்வணவேத ராமோத்தர தாபநியோபநிஷத்.

தாரகத்வாத் தாரகோ பவதி - ததேவ தாரகம் ஸூக்ஷ்மம்
விஜ்ஞேயம் - ததேவோபாஸிதவ்யமிதி ஜ்ஞேயம்। ஗ர்ப்ப ஜந்ம ஜராமரண

ஸம்ஸாரமஹாபயாத் ஸந்தாரயதீதி தஸ்மாது³ச்யதே ஷட³க்ஷ-
ரம் தாரகமிதி।

*தாரகத்வாத்தாரகோபவதி ததேவதாரகம் ப்ரஹ்மத்வம் விதி - ததே வோபாஸி தவ்யமிதிஜ்ஞேயம்। கர்ப்பஜன்ம ஜராமரண ஸம்ஸாரமஹத்பயாத் ஸந்தாரய தீதி தஸ்மாதுச்யதே ஷடக்ஷரம் தாரகமிதி।*

(இ-ள்). "*தாரகமாதலால் தாரகமெனப்படும். அதையே தாரகப் பிரமமென்றறி. அதுவே உபாசிக்கப்பாலதென்றுணர். கர்ப்பம், ஜன்மம், ஜரை, மரணம், சம்சாரமாகிய மகா பயத்தினின்றுந் தாரணஞ் செய்விப்பதால் அது தாரக மெனப்படும். அது ஷடக்ஷர தாரகமாம்.*" (ஷடக்ஷரம்-அகாரம், உகாரம், மகாரம், அர்த்தமாத்திரை, பிந்து, நாதம்) எனவும்,

அதர்வணவேத பாசுபத ப்ரஹ்மோபநிஷத்.

ப்ரணவஸ்தாரகஸ்ஸ ஏவம்வேத³-ப்ரணவஸ்தாரகஸ்ஸஏவம்வேத।

(இ-ள்). "*பிரணவம் தாரகம், அதை யெவன் அறிவான்*" எனவும்,

அதர்வணவேத பஸ்ம ஜாபாலோபநிஷத்.

ஜபம்தஸ்தாரகம் ப்ரணவம் மோத³மா நாஸ்திஷ்ட²ந்தி।

*ஜபம்தஸ்தாரகம் ப்ரணவம் மோதமா நாஸ்திஷ்டந்தி।*

(இ-ள்). "*தாரகமாகிய பிரணவத்தை ஜபித்துக்கொண்டு சந்தோஷத்தோடிருக்கின்றார்கள்*" எனவும்,

சுக்லயஜுர்வேத தார ஸாரோபநிஷத்.

தாரகத்வாத்தாரகோ ப⁴வதி ததே³வ தாரகம் ப்³ரஹ்மத்வம்வி
த்³தி⁴ ததே³வோபாஸிதவ்யம்।

*தாரகத்வாத்தாரகோபவதி ததேவதாரகம் ப்ரஹ்மத்வம்விதி ததேவோபாஸிதவ்யம்।*

(இ-ள்). "*அது தாரகமாதலால் தாரகமெனப்படும். அதைத்தாரகப் பிரமமாக அறி. அதையே உபாசிக்கவேண்டும்*" எனவும் வருமாறுகாண்க.

இவ்வாறே இன்னும் பல உபநிஷத்துக்களும் தாரகம் பிரணவமென்றே சித்தாந்தப்படுத்தியிருக்கின்றன. அல்லாமலும், எல்லாமந்திர சாஸ்திரங்களும் தாரமென்ற சொல்லுக்குப்பிரணவம் பொருளாவதன்றி வேறெதுவும் பொருளாவதில்லையென்று விளக்கியிருக்கின்றன. ஸ்ரீ ருத்திரத்திற்கு வியாக்கியானஞ்செய்த

சர்வ பாஷ்யக்காரர்களும் "நமஸ்தாராய" என்ற மந்திரத்தினுள்ள தாரபதத்துக்குப் பிரணவப்பொருளாயுள்ளவர் சிவபெருமானென்றே பொருள்விரித்து அதற்கு வேண்டிய பிரமாணங்களையும் எடுத்துக் காட்டியிருக்கின்றார்கள். வசிஷ்டாதிஸ்மிருதிகளும்,

> 𑌅𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌥𑌿𑌤𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌣𑌮𑍂𑌲𑍇 𑌸𑌦𑌾𑌹𑌰𑌃।
> 𑌪𑍍𑌰𑌣𑌵𑌂 𑌤𑌾𑌰𑌕𑌂 𑌬𑍍𑌰𑍂𑌤𑍇 𑌨𑌾𑌨𑍍𑌯𑌥𑌾 𑌕𑌸𑍍𑌯𑌚𑌿𑌤𑍍 𑌕𑍍𑌵𑌚𑌿𑌤𑍍॥
>
> *அவிமுக்தஸ்திதஸ்தஸ்ய கர்ணமூலே ஸதோஹரः।*
> *ப்ரணவம் தாரகம் ப்ரூதே நாந்யதா கஸ்யசித் க்வசித்॥*

(இ-ள்). "அவிமுக்தம் என்ற க்ஷேத்திரத்தில் சந்நிதானஞ் செய்யும் விசுவேசுவரர் அங்குமரிப்பவர்களின் செவியில் தாரகமாகிய பிரணவத்தை உபதேசிக்கின்றார். வேறெங்கும் அவ்விதமில்லை" என்று பிரணவத்தையே தாரகமென்று வழங்கின. அனேக புராணங்களிலும் அப்படியே சொல்லியிருக்கின்றன. ஆகையினாலே சுருதி, ஸ்மிருதி, புராணேதிஹாசங்களின் சம்மதமாவது பிரணவமே தாரகமாம். சிற்சில இடங்களில் மற்றத் தேவ மந்திரங்களையும் தாரகமென்று வற்புறுத்திக் கூறியது அம் மந்திரங்களிடத்து உபாசகர்களுக்குப் பற்றுண்டாகும்பொருட்டுத் துதி ரூபமாகவும், கௌணமாகவுஞ் சாற்றியதேயன்றி வேறல்ல. ஆகையினாலே அவை விதிவாக்கியங்களல்ல. இதுவே மேதாவியர் துணிபு. சித்தர்கள் பாடல்களிலும் பிரணவம் தாரகமென்று பிரத்தியக்ஷமாய் அறியக்கிடக்கின்றது. (அவிமுக்தம்- அண்டத்தில் காசிப்பதியும், பிண்டத்தில் புருவ நடுவுமாம்.)

மா. அப்படியானால் ராமமந்திரத்தைத் தாரக மந்திரமென்று சுருதி முதலிய பிரமாணங்களைக்கொண்டு சிலர் சாதிக்கின்றார்களே அதன் கருத்துத்தான் யாது? பகவானே! கூறியருளும்.

ஆ. கூறுகின்றோம், கேட்பாயாக ராமமந்திரத்தை மாத்திரமல்ல. அஷ்டாக்ஷரமந்திரத்தையும் பஞ்சாக்ஷரமந்திரத்தையுங்கூட தாரகமந்திரமென்றே சாதிக்கப் பல சுருதி வாக்கியங்கள் இடந்தருகின்றன. அவற்றால் அம்மந்திரங்களை நேரே தாரகமென்று அறுதியிட்டுரைக்க யாராலும் முடியாது. அவையாவும் சாமான்ய வாக்கியங்களென்றே கொள்ளவேண்டும். அந்தந்த ஆத்மாக்களின் பரிபாகத்துக்கேற்ப அவ்வாறு சுருதிகள் துதித்

துமகிழ்ந்தன. அக்கருத்தை யறியாமல் சாமான்ய வாக்கியங்களைக்கொண்டு விசேஷவாக்கியங்களைப் பூர்வபட்சப்படுத்த முயன்றிடுவர் சமயப்பற்றுடையார். ஆனால் சமயாதீத சுத்தாத்வைத வைதிக சைவ செந்நெறியில் நின்றோர் அப்படிச்செய்யத் துணிவு கொள்ளார். சாமான்ய விசேஷ வாக்கியங்களிரண்டையும் ஒத்தப் பிரமாணங்களாகத் தழுவிக்கொண்டு சந்தர்ப்பத்துக்கேற்றவாறு பொருள்விரித்து மகிழ்வர். ஏனெனில் வேதங்களிற் கூறப்பட்ட ஒவ்வொரு வாக்கியமும் பிரமாணமாகுமேயன்றி அப்பிரமாணமென்று அவற்றை யொதுக்குதல் மிகவுந் தவறாம்.

கிருஷ்ண யஜுர்வேத தைத்ரீயோபநிஷத் - சிக்ஷாவல்லீ.

நமஸ்தே வாயோ த்வமேவ ப்ரத்யக்ஷம் ப்ரஹ்மாஸி।

நமஸ்தேவாயோ த்வமேவ ப்ரத்யக்ஷம் ப்ரஹ்மாஸி।

(இ-ள்). "வாயுவே உனக்கு நமஸ்காரம், நீ பிரத்தியக்ஷப் பிரமமாகிறாய்" என்று வாயுவைப் பிரமமென்று துதித்தது.

ஸாமவேத சாந்தோக்கியோபநிஷத் - வாமதேவ்ய வித்தை.

த்வம் ராஜந் ப்ரஹ்மாஸி—த்வம் ராஜன் ப்ரஹ்மாஸி।

(இ-ள்). "ஓ அரசனே! நீ ப்ராஹ்மணனாகிறாய்" என்று ராஜசூதீட்க்ஷிதனைப் பிராமணனென்று புகழ்ந்தது.

அன்றியும், மேலேகூறிய தைத்திரீயோபநிஷத்து அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம் ஆகிய பஞ்சகோசங்கள் ஒவ்வொன்றையும் பிரமமென்று முதலில் நிரூபித்துப் பின்னர் ஒன்றன்மேலொன்றாய்ச் சிறப்பித்து, இறுதியில் ஆனந்தமே பிரமமென்று வற்புறுத்தியது எவ்வாறோ அதுபோல ராம, அஷ்டாக்ஷர, பஞ்சாக்ஷர மந்திரங்களையும் தாரகமென்று வேதம் புகழ்ந்ததோதியதேயன்றி வேறன்று. அதனாலே அம்மந்திரங்கள் உண்மையில் தாரகமாகமாட்டா. வேதங்களிலுள்ள பல அர்த்தவாதங்களில் சில சொற்களுக்குச் சிலவிடத்தில் சிறப்புப்பொருள் கூறப்பட்டிருக்கின்றது. அப்பொருளே எல்லாவிடத்துங் கொள்ளவேண்டுமென்னும் நியமமில்லை. அப்படிக் கொண்டால் வேதம் உன்மத்தர் கூற்றாய் முடியும். வேதத்திலுள்ள ஓர்வகைச்சாமமாகிய மகேந்திரஸ்தோத்திரத்திற்கு "வ்ருஷ்ட-ப்ருஷ்டம்"என்னும் பெயருண்டு. அதே பெயர் ரத்ந்தரமென்னுஞ் சாமத்திற்கும் அவ்வேதமே கூறியுள்ளது. ஸோமலதை விஷ்ணு

வைப்பேற்றதென ஆரணங்கூறிற்று. புராணங்களும் அதையே பின்பற்றிப் புகன்றன. வேதத்தில் ருத்ரன் என்ற சொல்லுக்கு எங்கும் பிரசித்தமான பொருள் அம்பிகாபதி. ஓரிடத்தில் அக்கினி அதன் பொருளெனக் கூறியிருக்கின்றது. மற்றோரிடத்தில் ஜ்வரமும் அதன் பொருளென்று சொல்லியிருக்கின்றது. ப்ரஹ்ம என்ற சொல்லுக்கு எங்குமுள்ள பொருள் பிரமம். அச்சொல்லை பிராம்மணனிடத்தும் வேதம் விநியோகித்துள்ளது. இப்படி இன்னும் அனேக பிரயோகங்களுள. இந்தப் பிரயோகங்களைக்கொண்டே ப்ருஷ்டம் என்றசொல் ரதந்தரத்தையே கூறுமெனவும், ஸோமலதை விஷ்ணுவுக்குத் தகப்பனெனவும், அக்கினி அல்லது ஜ்வரமே ருத்திரனுக்குப் பொருளெனவும், பிராம்மணனே பிரமத்துக்கு அர்த்தமெனவும் யாராலும் நிலைநாட்ட முடியுமோ? முடியாதன்றோ. அவ்வச்சொற்களுக்கு அவ்வப் பிரகரணங்களுக்கேற்றவாறு பொருட்படுத்தவேண்டுமே யல்லது மற்றையவிடங்களிலெல்லாம் அதே பொருளென்றுகூறுதல் ஆரண வழக்குக்கும், ஆன்றோர் வழக்குக்கும் முரணாகும். ஆகையினாலே, துதிவாக்கியம் இது, விதிவாக்கியம் இது என்றறிந்துகொள்ள வேண்டியது அறிஞர் கடனாம். ராமோத்தரதாபநியோபநிஷத்திலும் தாரசாரோபநிஷத்திலும் தாரகம் யாதென வினவிய பாரத்வாஜ மஹரிஷிக்கு ஓரிடத்தில் ராமமந்திரம் தாரகமெனவும், மற்றோரிடத்தில் அஷ்டாக்ஷரம் தாரகம் எனவும் விடையிறுக்கப்பட்டன. அது எதனாலெனின் தமது தந்தையாகிய வருணபகவானை பிரமம் யாதென வினவிய பிருகுமகாரிஷிக்கு அத்தந்தையார் முதலில் "அந்நம்ப்ரஹ்ம — அந்நம் ப்ரஹ்ம, ப்ராணோப்ரஹ்ம — ப்ராணோப்ரஹ்ம, மநோப்ரஹ்ம — மநோப்ரஹ்ம, விஜ்ஞானம்ப்ரஹ்ம — விஜ்ஞானம்ப்ரஹ்ம என்றற்றொடக்கத்தனவாயுள்ள வாக்கியங்களை உபதேசித்தாற்போன்றனவாம். அங்ஙனமில்வழி இராமமந்திரம் தாரகமாயின் அஷ்டாக்ஷரம் தாரகம் என்றதூஉம், அஷ்டாக்ஷரம் தாரகமாயின் இராமமந்திரம் தாரகம் என்றதூஉம் ஒன்றோடொன்று முரண்பட்டுச் சுருதிகள் அப்பிரமாணங்களாயழிந்துபோம். இனி இராமமந்திர முதலியவை தாரகமென்றதற்குச் சுருதிப் பிரமாணங்களும் வருமாறு,

சுக்லயஜுர்வேத முக்திகோபநிஷத்.

யத்ஸ்ய கர்ணே வர்ணவிதாத்யாம் ஸ்வயம் ஸாக்ஷாத் மஹேஶ்வர: |
ஜந்தோர்தக்ஷிண கர்ணே து தாரம் ஸம்வாஹிநே யக: ||

*யத்ரகுத்ராபி வாகாச்யாம் மரணே ஸமஹேச்வரః।*
*ஜந்தோர்தக்ஷிண கர்ணே து மத்தாரம் ஸமுபாதிசேத்॥*

(இ-ள்). "காசியில் எந்த இடத்திலாவது எந்த ஜந்துவே னும் மரித்தால் அதன் வலது செவியில் என்னுடைய தாரக மந்தி ரத்தை விசுவேசுவரர் உபதேசிக்கின்றார்." என்றது. (இது ஸ்ரீராம மூர்த்தியினுடைய வாசகம்).

## அதர்வணவேத ராமோத்தர தாபநீயோபநிஷத்.

ஸ்ரீராமஸ்ய மநும் காஶ்யாம் ஜஜாப வ்ருஷபத்வஜः।
உபதேக்ஷ்யஸி மந்மந்த்ரம் ஸமுக்தோ பவிதாஶிவः॥

*ஸ்ரீராமஸ்ய மநும் காச்யாம் ஜஜாப வ்ருஷபத்வஜः। ..........*
*உபதேக்ஷ்யஸி மந்மந்த்ரம் ஸமுக்தோ பவிதாசிவः॥*

(இ-ள்). "ஸ்ரீராமமந்திரத்தைக் காசியில் சிவபிரான் ஜபித் தார்." (என்று தொடங்கி) "ஏ சிவமூர்த்தி! என் மந்திரத்தை நீர் உபதேசித்தால் அந்தச்சீவன், முக்தனாவான்" என்று முடித் துள்ளது. (இது யாஜ்ஞவல்கியருடைய வாசகம்.)

கிம் தாரகம் கிம் தாரயதீதி ஸஹோவாச யாஜ்ஞவல்க்யः।
தாரகம் தீர்காநலம் பிந்து பூர்வகம் புநர்மாயநமः॥

*கிம்தாரகம் கிம்தாரயதீதி ஸஹோவாச யாஜ்ஞவல்க்யः।*
*தாரகம் தீர்காநலம் பிந்து பூர்வகம் புநர்மாயநமः॥*

(இ-ள்). "எது தாரகம். எது தாரணஞ்செய்விக்கும். அந்த யாஜ்ஞவல்கியர் மறுபடியுங் கூறுகின்றார் தாரகமாவது ரகாரத் துடன் அகரநெடில் சேர்ந்து, பிந்துவுஞ்சேர்ந்து, பின்னர் அகர நெடிமேலேறிய அந்த ரகாரத்துடன் மாயநமः என்பதே" என்றியம் பியது. (இதுவும்யாஜ்ஞவல்கியருடைய வாசகம்)

## சுக்ல யஜுர்வேத தாரஸாரோபநிஷத்.

கிம் தாரகம் கிம் தாரயதீதி ஸஹோவாச யாஜ்ஞவல்க்யः॥
ஓம் நமோ நாராயணாயேதி தாரகம் சிதாத்மகம் இத்யுபாஸிதவ்யம்॥

*கிம்தாரகம் கிம்தாரயதீதி ஸஹோ வாசயாஜ்ஞவல்க்யः।*
*ஓம் நமோநாராயணாயேதி தாரகம் சிதாத்மகம் இத்யுபாஸிதவ்யம்॥*

(இ-ள்). "எது தாரகம். எது தாரணஞ் செய்விக்கும். அந்த யாஜ்ஞவல்கியர் சொன்னார். ஓம் நமோ நாராயணா வென்று. தாரகம் சிதாத்மகமாயுள்ளது. அதுவே யுபாசிக்கற்

பாலது'' என்றுகூறியது (இதுவும் யாஜ்ஞவல்கியருடைய வாசகம்).

### அதர்வண வேத பஸ்ம ஜாபா லோபநிஷத்.

𑌤𑌾𑌰𑌕𑌂 𑌶𑍈𑌵𑌂 𑌮𑌨𑍂𑌪𑌦𑌿𑌶𑌾𑌮𑌿। 𑌤𑌤𑍍𑌰𑍈𑌵 𑌮𑍁𑌕𑍍𑌤𑍍𑌯𑌰𑍍𑌥-
𑌮𑍁𑌪𑌦𑌿𑌶𑍍𑌯𑌤𑍇। 𑌶𑍈𑌵𑍋𑌽𑌯𑌂 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌃 𑌪𑌞𑍍𑌚𑌾𑌕𑍍𑌷𑌰𑌃। 𑌪𑌰𑌮𑍋
𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌤𑌾𑌰𑌕𑍋𑌽𑌯𑌂 𑌪𑌞𑍍𑌚𑌾𑌕𑍍𑌷𑌰𑌃। 𑌓𑌮𑌿𑌤𑍍𑌯𑌗𑍍𑌰𑍇 𑌵𑍍𑌯𑌾𑌹𑌰𑍇𑌤𑍍।
𑌨𑌮 𑌇𑌤𑌿 𑌪𑌶𑍍𑌚𑌾𑌤𑍍। 𑌤𑌤𑌶𑍍𑌶𑌿𑌵𑌾𑌯𑍇𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌰𑌤𑍍𑌰𑌯𑌂। 𑌨𑌾𑌦𑌸𑍍𑌤𑌾𑌰𑌕𑌃
𑌪𑌰𑌮𑍋 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌤𑌾𑌰𑌕𑍋𑌽𑌯𑌂 𑌪𑌞𑍍𑌚𑌾𑌕𑍍𑌷𑌰𑌃। 𑌵𑍇𑌦𑌾𑌵𑌧𑌂 𑌸𑌂𑌶𑍈-
𑌵𑌂 𑌪𑌞𑍍𑌚𑌾𑌕𑍍𑌷𑌰𑌂 𑌜𑌪𑌨𑍍𑌤𑌸𑍍𑌤𑌾𑌰𑌕𑌂 𑌸𑌪𑍍𑌰𑌣𑌵𑌂 𑌮𑍋𑌦𑌮𑌾𑌨𑌾𑌸𑍍𑌤𑌿-
𑌷𑍍𑌠𑌨𑍍𑌤𑌿।

தாரகம் சைவம் மனூபதிசாமி। தத்ரைவ முக்த்யர்த்த முபதிச்யதே। சைவோயம் மந்த்ர: பஞ்சாக்ஷர:। பரமோமந்த்ரஸ் தாரகோயம் பஞ்சாக்ஷர:। ஓமித்யக்ரே வ்யாஹரேத்। நம இதிபச்சாத்। ததச்சிவாயேத் யக்ஷரத்ரயம்। நாதஸ்தாரக: பரமோ மந்த்ரஸ் தாரகோயம் பஞ்சாக்ஷர:। வேதாவதம் ஸம்சைவம் பஞ்சாக்ஷரம் ஜபந்தஸ்தாரகம் ஸப்ரணவம் மோதமாநாஸ்திஷ்டந்தி।

(இ-ள்) ''தாரகமாகிய சைவமந்திரத்தை யுபதேசிப்பேன். அங்கு முக்திக்காக உபதேசிக்கப்படுவது சைவமந்திரமாகிய பஞ்சாக்ஷரமே. இப்பரமமாகிய சைவ பஞ்சாக்ஷரமே தாரகமாம். ஓம் என்று முதலில் சொல்லுக. பிறகு நம வென்க. அதற்கு மேல் சிவாய என்று மூன்று அக்ஷரத்தைக் சொல்லுக. இதினும் மேலான மகா மந்திரமாகிய தாரக மந்திரமில்லை. வேதங்களுக்குப் பேரணியாயுள்ள சைவ பஞ்சாக்ஷரமாகிய தாரக மகா மந்திரத்தை பிரணவத்துடன் ஜபித்துக்கொண்டு சந்தோஷத்தோடிருக்கின்றூர்கள்'' என்றது (இது ஸ்ரீ விசுவேசுவருடைய வாக்கியம்.)

இவ்வாக்கியங்களனைத்தையுஞ் சித்த சமாதானத்தோடு ஆராய்ந்துபார்க்கின் இராமமந்திரத்தையும் அஷ்டாக்ஷரமந்திரத்தையும் தாரகமென்று கூறிய இராமசந்திரன், யாஜ்ஞவல்கியர் இவர்கள் வசனங்களைக் காட்டிலும் ஸ்ரீ காசிப்பதியில் தாரகோபதேசஞ்செய்யும் மந்திராசாரியராகிய சிவபிரானது சொந்த வாக்கியங்களே சிறந்த பிரமாணங்களாகுமன்றே. ஆகையினாலே இராம மந்திரமாவது அஷ்டாக்ஷர மந்திரமாவது ஒருபோதும் தாரகமாகாதென்பது வெளிப்படை. அல்லாமலும், இராம மந்

கிரம பரமுத்தி பெறுவதற்கு நேர் சாதனமான தாரகமாயின் அது வைணவர் வழங்கும் "ரஹஸ்யத்திரயத்தில்" சேர்க்கப்படாத காரணமென்னோ! இராமனுடைய பெருமையையும் அவனது ஆதிக்கியங்களையுங் கூறவந்த வான்மீகத்தில் அது விடுபட்ட காரணம் யாதோ! விவேகிகள் இவ்விரகசியத்தை உணராமலிருக்கவில்லை. குருஞானவாசிஷ்டம் சுகப்பரீக்ஷித்து சம்வாதத்தில் "இராமதாபநியிற் சொல்லப்படுகிற இராமதாரகத்வம் முக்கியமன்று. அது கிரமமுத்திக்கே பிரயோசனப்படும். சிவனுக்குச் சிஷ்யத்வம் குணருத்ரபரமாகும்" என்று பரிஷ்கரித்திருக்கின்றதையும் மேதாவியர் உணரக்கடவர்.

இதுநிற்க, துவாபரயுகமுடிவில் சதுர்முகப் பிரமாவானவர் நாரதருக்கு உபதேசஞ்செய்த கிருஷ்ண யஜுர்வேத கலிஸந்தாரணோபநிஷத்தில் கலிதோஷத்தை நாசஞ்செய்யும் மந்திரங்கள் பதினாறு என்று கூறி அவை,

𑌹𑌰𑍇𑌰𑌾𑌮 𑌹𑌰𑍇𑌰𑌾𑌮 𑌰𑌾𑌮𑌰𑌾𑌮 𑌹𑌰𑍇𑌹𑌰𑍇।
𑌹𑌰𑍇𑌕𑍃𑌷𑍍𑌣 𑌹𑌰𑍇𑌕𑍃𑌷𑍍𑌣 𑌕𑍃𑌷𑍍𑌣 𑌕𑍃𑌷𑍍𑌣 𑌹𑌰𑍇𑌹𑌰𑍇
𑌇𑌤𑌿𑌷𑍋𑌡𑌶𑌕𑌂 𑌨𑌾𑌮𑍍𑌨𑌾𑌂 𑌕𑌲𑌿𑌕𑌲𑍍𑌮𑌷𑌨𑌾𑌶𑌨𑌂।

ஹரேராம ஹரேராம ராமராம ஹரேஹரே।
ஹரேக்ருஷ்ண ஹரேக்ருஷ்ண க்ருஷ்ணக்ருஷ்ண ஹரேஹரே
இதிஷோடசகம் நாம் நாம் கலிகல்மஷ நாசநம்।

(இ-ள்). வெளிப்படை. இவ்வாக்கியத்தினாலே இராமமந்திரத்தின் மஹிமை வேதவிற்பன்னர்களுக்கு இலேசாக விளங்கத் தடையின்று. இம்மந்திரங்களை உச்சரிக்க விதிவிலக்குகள் கிடையா. மூன்றரைக்கோடி வுருவானால் ஒருவன் பந்தத்தினின்றும் விடுபடுகின்றான் என்பது அவ்வுபநிஷத்தின் ஹ்ருதயம். நாளொன்றுக்கு லக்ஷமந்திரம் ஜபமானால் கொஞ்சங் குறைய ஒரு வருஷத்திலும், பதினாயிரமானால் கொஞ்சங் குறைய பத்து வருஷத்திலும் ஆயிரமானால் கொஞ்சங்குறைய நூறுவருஷத்திலும் கணக்காகின்றது. இத்தகைய காலநீடிப்பையுடைய மந்திரமோ தாரகமாகும். பளா! பளா!! நன்று, நன்று. தத்துவாதீதயோகிகள் தம் மனநாசத்துக்கும் நிஷ்டைக்கும் இதையோ பொருளாக மதிப்பார்கள். மரிக்கின்ற ஜந்துவின் சாந்திக்கும் இதுவோ தாரகமாகும்.

இது நிற்க, இவ்விராமதாரகத்தைப்பற்றி வேறுவிதமாகவும் பொருள்கூறுதும். ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தில் சி என்னும் எழுத்து சிவனையும், வ என்னும் எழுத்து சக்தியையும் குறித்து நிற்றல் போல "ஹரா" என்னுஞ் சிவநாமத்தின் இறுதி யெழுத்தும், உமா என்னுஞ் சக்திநாமத்தின் இறுதியெழுத்தும் ஒன்றாகச் சேர்ந்து "ராமா" எனவாயிற்று. ஆகையினாலே இது சிவநாம மென்பதே தேற்றம். சிவஸஹஸ்ர நாமத்திலும் "நாராயணாய" "ராமாய' என்னும் பிரயோகங்கள் வருமாறு காண்க.

அதர்வணவேத ராம ரஹஸ்யோபநிஷத்.

ஶிவோமா ராமசந்த்ராத்மா தேவதா பரிகீர்த்திதः।

சிவோமா ராமசந்த்ராத்ம தேவதா பரிகீர்த்திதஃ।

(இ-ள்). "சிவன் உமை என்பவர்களுடைய ரூபமாயிருக்கும் இராமசந்திரன் இங்கே தேவதையாகச் சொல்லப்படுகின்றனன்' என்று முழக்கியது. இதுபற்றியே சைவர்கள் தங்கள் புதல்வர்களுக்குச் சிவராமன், வரதுங்கராமன், அதிவீரராமன், இராமன் எனப் பெயரிட்டு மகிழ்கின்றார்கள். இவ்வாறே தசரதச்சக்கரவர்த்தியும், ஜமதக்கினி முனிவரும் தங்கள் மக்களுக்கு அப்பெயரிட்டு வழங்கினார்கள். இராமர் சிவனடியாரென்பதைப் பற்றி அதே உபநிஷத்து,

ராமம் த்ரிணேத்ரம் ஸோமார்த்தாரிணம் ஶூலிநம்பரம்।
பஸ்மோத்தூளித ஸர்வாங்கம் கபர்திந முபாஸ்மஹே॥

ராமம் த்ரிணேத்ரம் ஸோமார்த்த தாரிணம் சூலிநம்பரம்।
பஸ்மோ தூளித ஸர்வாங்கம் கபர்திந முபாஸ்மஹே॥

(இ-ள்). "இராமர் முக்கண்ணுடையவர். அர்த்த சந்திரனைத் தரித்தவர். சூலத்தைக் கையிலேந்தியவர். விபூதிதாரணத்தால் நிறைந்த ஸர்வாங்கங்களையுடையவர். செவ்விய சடைமுடியினையுடையவர்" என்று சைவமங்கலந்தழைக்கச் சாற்றியது. இவர் அகஸ்தியமஹா முனிவரிடத்தில் விரஜாதீக்ஷை பெற்றுக் கொண்டு சிவபக்தாக்ரேசராய் விளங்கிய வைபவம் பலவைதிக நூல்களிலுங் கேட்கப்படுகின்றது. இவருக்குத் திருமண்தாரணம் உண்டென்று எந்த வேதத்திலுங் கேட்கப்படவில்லை. புராணங்களிலாவது, ஆழ்வார்கள் பிரபந்தத்திலாவது கூறப்பட்டிருக்கின்றதோவெனின் அவற்றிலுமில்லை. அதனால் விஷ்ணுவினது உபா

சனைக்கு விபூதி தாரணமே வேதப் பிரதிபாதிதமாமென்பது நன்கு உணரப்படும். இதற்குரிய சுருதிப்பிரமாணம் 37-ம் பக்கத்தில் காண்க. வால்மீகி பகவானும் இவர் சிவப்பிரசாதமெய்தினவரென்று அடியில்வருஞ் சுலோகங்களால் ஸ்பஷ்டமாகத் தெரிவித்திருக்கின்றார்.

அத்ர பூர்வம் மஹாதேவ: ப்ரஸாதம் அகரோத் ப்ரபு:।

அத்ரபூர்வம் மஹாதேவ: ப்ரஸாத மகரோத் ப்ரபு:।

(இ-ள்). "எனக்கு இவ்விடத்தில் பிரபுவாகிய மகாதேவர் முன்னே பிரசாதம் புரிந்தருளினார்." எனவும்,

வரதானம் மஹேந்த்ரேண ப்ரஹ்மணா வருணேன ச।

மஹாதேவ ப்ரஸாதாச் ச பித்ரா மம ஸமாகம:॥

வரதாநம் மஹேந்த்ரேண ப்ரஹ்மணா வருணேநச।

மஹாதேவ ப்ரஸாதாச்ச பித்ராமம ஸமாகம:॥

(இ-ள்). "நான் இந்திரனிடத்தும், பிரமனிடத்தும், வருணனிடத்தும் வரம் பெற்றேன். மகாதேவருடைய பிரசாதத்தால் என் பிதாவைத் தரிசித்தேன்" எனவும் போந்தன.

முதல் சுலோகத்திலுள்ள மஹாதேவ சப்தத்திற்கு வருணனென்று தப்பர்த்தஞ்செய்வார்களென்றுபயந்தேமுனிசிரேஷ்டர் இரண்டாவது சுலோகத்தில் வருணனையும் மஹாதேவரையும் தனித்தனியாக வெடுத்துக்கூறினார். மஹாதேவரைப்பிரபுவென்றழைத்து அவரிடம் பிரசாதம் பெற்றேனென்றமையால் சிவபரத்வம் செவ்வனே நாட்டப்பட்டது. பிரபு-போஷிப்பவர். தண்டனாதிகாரி. அதாவது சிக்ஷாரக்ஷை செய்பவர். இராமரது சைவநலம் இவ்வாறு பிரகாசித்துக்கொண்டிருக்கவும், இவருக்கு மூலபுருஷராயுள்ள விஷ்ணுவும் காசியில் தென்புறத்தில் ஸ்ரீவிசுவேசுவரரை உபாசித்துக்கொண்டிருக்கிறாரென்பதற்குப் பிரமாணம்.

## அதர்வணவேத பஸ்மஜாபா லோபநிஷத்.

வேதாஸ்ஸாங்கா: ஸோபநிஷத: ஸேதிஹாஸா: ஸஹ்ருதா: ஸதேவதா: ஸ மஹாதேவஸ்ய ஸாத்விகஸ்ய ப்ரதிஷ்டிதம்। ததா காஶ்யாம் ப்ரயதேத வாஹ மஹத்ப்யோ ப்ரஹ்மஜ்ய:।.........தத்ர பூர்வஸ்யாம் திசி ப்ரஹ்மா க்ருதாஞ்ஜலிரஹ நித்யம் ஸம்ஸேவாமீசம்। தக்ஷிணஸ்யாம் திசி விஷ்ணு: க்ருதாஞ்ஜலிர் அஹமீசம் ஸம்ஸேவாமீசம் ப்ரதீச்யாம் திசி ஸ்கந்தாதய உபாஸதே॥

வேதாஸ் ஸாங்காஸ் ஸோபநிஷதஸ் ஸேதிஹாஸா நமத்தோங்ய தஹமேவ ஸர்வம் மயிஸர்வம் ப்ரதிஷ்டிதம்। தத꞉ காச்யாம் ப்ரயதைரேவா ஹமங்வஹம்பூஜ்ய꞉।...... ..தத்ரபூர்வஸ்யாந்திசி ப்ரஹ்மாக்ருதாஞ்ஜலிரஹர் நிசம் மாமுபாஸ்தே। தக்ஷிணஸ்யாந்திசி விஷ்ணு꞉ க்ருத்வைவ மூர்த்தாஞ்ஜ லிம்மாமுபாஸ்தே। ப்ரதீச்யா மிந்த்ரஸ்ஸந்நதாங்க உபாஸ்தே॥

(இ-ள்). "சாங்கங்களோடுகூடிய வேதங்களும், உபநிஷத் துக்களும் இதிகாசத்தோடு என்னையே துதிக்கின்றன. எனக்கு வேருக யாதொன்றுமில்லை. நானே யாவுமாயிருக்கிறேன். என் னிடத்திலேயே யாவும் நிலைபெற்றுள்ளன. அதனாலே காசியில் இறக்க விருப்பமுடையோருக்கு இரவும் பகலும் பூஜிக்க நானே யுரியவன். அங்கே பூர்வதிசையில் பிரமன் அஞ்சலியஸ்தனாகி இரவும் பகலும் என்னையே உபாசித்துக்கொண்டிருக்கிறான். தக்ஷிணதிக்கில் விஷ்னு தலையிற்கூப்பிய கரங்களையுடையவராகி என்னையே உபாசித்துக்கொண்டிருக்கின்றார். மேற்றிசையில் இந் திரன் வணக்கத்துடன் என்னையே உபாசிக்கின்றான்" என வருமாறு காண்க. இதனால் ஸ்ரீ காசிப்பதியில் எழுந்தருளியிருக்குந் தெய்வம் சிவபரஞ்சுடரெனவும், அவரொருவரே ஸேவ்யர் ஏனையோரெல்லாம் ஸேவகரெனவும் வெளியாயிற்றன்றோ. ஆகையினாலே அங்கு மரிக்கின்றவர்களுடைய வலக்காதில் ஸ்ரீ விசுவேசுவரர் உபதேசிக்கும் மந்திரம் தமது நாமமாகிய தாரகமேயொழிய தசரதன் சேயாகிய இராமநாமமன்று. அப்படியானால் "ராமமந்திரத்தைக் காசியில் விருஷபத்துவஜனாகிய சிவன் ஆயிரம் மநுவந்தரம் ஜபித்து ஜப ஓமாதிகளால் அர்ச்சனைபுரிய இராமன் பிரத்தியக்ஷமாகி சிவனைப்பார்த்து உனக்குவேண்டிய வரத்தைக் கேள் தருகிறேன் எனக் கூறினன்" என்னும் பொருளைத் தரும் வாக்கியங்கள் ராமதாபிந்யுபநிஷத்தில் காணப்படுகின்றனவே அவற்றிற்குப் பரிகாரம் யாதெனிற் சொல்வோம்.

உபநிஷத்துக்கள் எப்பொழுதும் ஒன்றோடொன்று விரோதிக்கமாட்டா. தாபந்யுபநிஷத்தில் கூறப்பட்ட ராமமந்திரம் சிவமந்திரமென்று துணிவதே சால்புடைத்து. இராமன் விரஜாதீக்ஷையின் பெருமையால் சிறந்த சாம்பவனாகி தன்னைச் சிவமாகப் பாவித்துச் சிவாநுபூதியிற்றிளைத்த பெரியோனாதலின் சிவத்தினிடத்துவைத்த பரத்துவ புத்தியால் சிவநாமமாகிய ராமதாரகத்தைத் தன்மாட்டு ஆரோபித்துக் கூறினனென்பதே பொருத்த

முடையதாம். சிவபெருமான் சிலமுனிவர்கள் அகத்திலிருந்தும், சில அமரர்களை அதிஷ்டித்தும் "நாஹோ பிரமம்" என்றோதியது போல தன் பக்தனாகிய இராமனிடத்துமிருந்து விளம்பினான் என்பதே தாரகமந்திரோபாசகர்களின் தீர்வை. ராமரஹஸ்யோப நிஷத்தும் "ராம ஏவ பரம் ப்ரஹ்ம" என்றுகூறி அவ்வளவில் நில்லாது உடனே "ராம ஏவ பரந்தப:" என்று உண்மை நிறுவியது. தைத்திரீயாருணசாகையும் "நாராயண பரப்ரஹ்மா" என்றோதிப் பின்னர் "நாராயண பரோத்யாதா" என்று பிரகாசப்படுத்தியது. அந்நியாயங்களால் இராமரும், அவரது மூலபுருஷராகிய நாராயணரும் பரசிவதர்மாரோபணத்தால் பரப்பிரமமானார்களே ஒழிய ஜகஜ்ஜந்மாதிகாரண பரப்பிரமமல்லர். அவர்கள் சிவபரம்பொருளுக்கு என்றும் மீளாவழியடியார்கள். தமிழ்வேதமாகிய திருவாசகம் "ஆனாலுங் கேளா யயனுந் திருமாலும், வானாட்கோவும் வழியடியார் சாழலோ" எனவும், திருவிளையாடற்புராணம் "முண்டக மலரோன் மாயோன் புரந்தரன் முதன் மற்றேனை, யண்டருந்தன் குற்றேவ லடிமையாக் கொண்டவம்மான்" எனவுஞ் சாற்றின.

சிவனடியார்களைச் சிவனென்றும், விஷ்ணுவடியார்களை விஷ்ணுவென்றும் கூறுதல் குற்றமாமோ. வேதமும் அவ்வாறே உபசரித்தது. இவ்வுண்மையையறியாமல் அவர்களையே பிரமமெனக் கூறுதல் மதாபிமானமும் விசாரக்குறைவுமேயாம். "தபஸ்வி" என்பதும் "த்யாதா" என்பதும் ஒரு பொருளையே குறிக்கும்.

மேலே காட்டலுற்ற ராமதாபநி வாக்கியத்திலுள்ள விருஷபத்துவஜனாகிய சிவன் குணருத்திரனேயன்றி அதே உபநிஷத்தில் பிரஸ்தாபிக்கப்பட்ட "சிவமத்வைதம் சாந்தம் சதுர்த்தம்" என்னுந்துரீய சிவமன்று. அத்துரீயசிவம், ஸேவகராயும் ஸேவ்யராயும் வைஷ்ணவர்களாலே முறையேகூறப்பட்ட உருத்திரனுக்கும் இராமனுக்கும் அப்பாற்பட்டவர். அவர் பரப்பிரமமாதலால் அவரை எந்தச்சுருதியும் இழிந்துக்கூற உடன்படாது. குணருத்திரரை இராமனுபாசிப்பதும், இராமனைக் குணருத்திரர் உபாசிப்பதுங் கற்பபேதங் காரணமாகும். அதைப்பற்றி வைதிக சைவர்கள் மனம்வருந்த ஹேதுவில்லை. அக்குண ருத்திரரும் இராமனுக்குத் தாழ்ந்தவராகார். இராமன் யயாதி, நகுஷன்,

புரூரவன், மாந்தாதா, சோமன், இலக்ஷ்மணன், பிரதர்த்தன் முத லினோரோடு யமதருமராஜனை உபாசித்துக்கொண்டிருந்த கதை மகாபாரதத்தில் சொல்லப்பட்டிருக்கின்றமையானும், வருணன், இந்திரன், பிரமன் ஆகிய இவர்களிடத்து வரம்பெற்ற வைபவம் மேலேகாட்டிய வால்மீகி ராமாயண சுலோகத்தால் அறியக்கிடக் கின்றமையானும், கோசலையின் கருக்குழிநாற்றங் கமழப்பெற்று யோனித்தழும்பேறிப் பிறந்தமையானும், அத்தகைய சம்பவங் கள் குணருத்திரர்பால் என்றும் நிகழாமையானும் இராமனைக் காட்டினும் விருஷபத்துவஜர் உயர்ந்தவரே. இத்தகைய நியா யங்களானே ராமதாரகம் துரீய சிவபரமென நிரூபித்தற்கு "எவ் வுருவில் யாரொருவ ருள்குவா ருள்ளத்துள், அவ்வுருவாய் நின் றேயருள்கொடுப்பான்" எனவும், "யாதொரு தெய்வங் கொண் டீரத்தெய்வ மாகி யாங்கே, மாதொரு பாக ஞர்தாம் வருவர் மற் றைத் தெய்வங்கள், வேதனைப்படு மிறக்கும் பிறக்குமேல் வினை யுஞ் செய்யும், ஆதலா லவை யிலாதா னறிந்தருள் செய்வ னன்றே" எனவும் போந்த பிரபல பிரமாணங்களால் குணருத்தி ரர்முன் வெளிப்பட்டு அருள்புரிந்த பரம்பொருள் அச்சிவ பரஞ் சுடரே எனவும், அவ்விராமதாரகத்தால் எய்தப்பெறும் முத்தி கிரமமுத்தி எனவும் நன்குக நிரூபித்துக் காட்டப்பட்டது. எல் லாவற்றையும் தெய்வ விபூதியில்வைத்துப் பரவுவது முழுமுதற் கடவுளைப் புகழ்ந்தபடியன்றே. அதனாற்றான் சூதஸம்ஹிதை யும் "சங்கமேந்துகை நாரணன் முதலியோர் தம்மைச், சங்கரா சிவ சம்புவே சாம்பமாதேவா, எங்கணாயகவெனத் துதித்தேத்தி னும் பாசம், எங்குமாகிய தம்பிரானருளினுலிரியும்" என்று முழக் கியது. இவ்வுண்மையை நுனித்தமதிகொண்டோர்க.

இனி ஸ்ரீபஞ்சாக்ஷரமந்திரம் தாரகமெனக்கூறிய சுருதியின் தாற்பர்யத்தையுஞ் சிறிது ஆராய்வாம். ஸ்ரீராமர் ஆஞ்சநேய ருக்கு உபதேசித்தருளிய முக்திகோபநிஷத்தில் நூற்றெட்டு உப நிஷத்துககளின் நாமங்கள் கேட்கப்படுகின்றன. அவற்றுள் ஜாபாலோபநிஷத்துக்கள் ஐந்து. அவற்றின் வேற்றுமை தெரி வதற்காகவே ஜாபாலம், ப்ருஹஜ்ஜாபாலம், பஸ்மஜாபாலம், ருத் திராக்ஷஜாபாலம், ஜாபால்யு எனத் தனித்தனி பெயர்கள் வழங் கப்பட்டுவருகின்றன. முதலிற்கூறிய ஜாபாலத்துக்கு அவிமுக்த ஜாபாலம் என்னும் பெயருமுண்டு. அது சுக்ல யஜுர்வேதத்தி

னும்; ருத்ராக்ஷஜாபாலம், ஜாபால்யு சாமவேதத்திலும்; பிருஹஜ்ஜாபாலம், பஸ்மஜாபாலம் அதர்வணவேதத்திலும் உள. இவ்வைந்தும் பஸ்மம், ருத்ராக்ஷம், பஞ்சாக்ஷரம், சிவார்ச்சனம், வில்வபத்திரம் ஆகிய பஞ்ச வைதிக பாசுபத முத்திரைகளைச் சிறப்பித்து நிரூபித்தனவாயினும், அவிமுக்தஜாபாலம் மோக்ஷசாதனமான வைதிக மந்திரங்களுள் தனிப் பிரணவத்தையும், பஞ்சாக்ஷரத்தையுமே தாரகவித்தை எனவும், அந்தத் தாரக மந்திரோபதேசத்திறைற்றான் ஸ்ரீகாசிப்பதியில் மரிக்கின்றவர்களுக்குச் சிவபிரான் தனது இணையற்ற சாயுஜ்ஜியத்தைத் தருகின்றார் எனவும் அத்தகைய முத்திக்குரியவர் அண்டத்திலே ஸ்ரீகாசிப்பதியிலுள்ள சர்வ ஜந்துக்களும், பிண்டத்திலே அவிமுக்தோபாசகர்களான எல்லாரும் எனவும் ஸ்பஷ்டமாய் விளக்கியிருக்கின்றது.

அல்லாமலும், பஸ்மஜாபாலோபநிஷத்தில் ஸ்ரீகாசியில் விஷ்ணுமுதலிய சகல தேவர்களும் பஸ்மருத்ராக்ஷதாரிகளாய் மூர்த்தித்திரயாதீத மோக்ஷ சொருபனை விசுவநாதனை உபாசித்துக்கொண்டிருக்கிறார்களெனக் கூறியிருத்தலானும், அதற்கு மாறாக விசுவேசுவரர் திரிமூர்த்திகளி லொருவராகிய நாராயணரைத் தியானஞ்செய்துகொண்டிருக்கின்றதாகக் குறிக்கும் ராமதாபநியோபநிஷத் வசனம் சாமான்யமும் துதிபரமுமாகக்கொள்ளக் கிடத்தலானும், வேறு தேவதைகளின் மந்திரங்களைத் தாரகமெனச் சித்தாந்தப்படுத்தாது வேதங்களுக்குப் பேரணியாயுள்ள ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தையே தாரகமென்று தாரகமந்திரோபதேசியாகிய விசுவநாதரே உறுதிபயன்றமையானும், காசிப்பதியில் உபதேசிக்கப்படும் மோக்ஷமந்திரம் பிரணவத்தைவிட்டு நீங்காது அதற்கு உள்ளொளியாய் விளங்கும் பிரணவாபின்ன ஸ்ரீ பஞ்சாக்ஷரமேயென்று கூறினுங் குற்றமேதுமில்லை. அதர்வசிரோபநிஷத்திலும் ஏகன், ஏகருத்திரன், ஈசானன், பகவான், மகேசுவரன், மகாதேவன் என்னுஞ் சிவநாமங்களோடு ஒருபொருட்கிளவிகளாய் ஓங்காரம், பிரணவம், தாரகம், சுக்லம், பிரமம் என்பனவாதி பெயர்கள் அபேதமாய்க் குறிக்கப்பட்டிருத்தலே போதுமான சான்றும். தைத்திரீய முதலிய ஸம்ஹிதைகளிலும் சிவபெருமானே தாரனென்றோதி யிருத்தலால் சிவதாதாத்மியம் மிகுதிபற்றி தாரம் (தாரகம்) என்ற சொல் சிவாபின்ன பிரணவத்திற்கு இன்றியமையாது அமைக்கப்பட்டுள்ளது. மேலும், "ஓம்

தத்ப்ரஹ்ம-ஓம் தத் என்பது பிரமம்,'' ''ஓமிதீதம் ஸர்வம்-ஓமென்பதே ஈதெல்லாம்,'' ''ஸதாசிவோம்-சதாசிவனே பிரணவம்'' என்பதாதி வேதவாக்கியங்கள் ஒருங்குசேர்ந்து பிரணவத்தைப் பிரமமென நிரூபித்த நியாயத்தானும், வாசக வாச்சிய சம்பந்தத்தானும், பிரணவ வொளியாயுள்ள ஸ்ரீபஞ்சாக்ஷரமும் அதன் பொருளாமென்பது வெள்ளிடை மலைபோல் விளங்குகின்றது. திராவிட சிசுவாகிய ஸ்ரீஜ்ஞானசம்பந்தப் பெருமானும் ''வேதநான்கினு மெய்ப்பொருளாவது, நாதனும நமச்சிவாயவே'' என்று நவின்றருளினர். இப்பஞ்சாட்சரம் ஓது முறையில் மூன்று வகைப்படும். அவையாவன : (1) ஸ்தூலபஞ்சாக்ஷரம். (2) ஸூக்ஷமபஞ்சாக்ஷரம். (3) காரணபஞ்சாக்ஷரம். அவற்றுள் ஸ்தூலபஞ்சாக்ஷரம்-நமச்சிவாய. ஸூக்ஷமபஞ்சாக்ஷரம்-சிவாயநமஃ. அதிஸூக்ஷம பஞ்சாக்ஷரம் அல்லது காரணபஞ்சாக்ஷரம்-சிவாயசிவ. ஸூக்ஷமபஞ்சாக்ஷரம் ஒருதலை மாணிக்கமெனவும், காரணபஞ்சாக்ஷரம் இருதலை மாணிக்கமெனவுங் கூறப்படும். இவை நிற்குமுறையும் ஓதுமுறையும் குருமுகத்தாலறிந்து தெளிக. இவற்றின் இரகசியப் பொருளை ஆளுடைய வடிகள் கோயில் மூத்த திருப்பதிகத்தில் ''உடையாளுன்ற னடுவிருக்கு முடையாளருவு ணீயிருத்தி, யடியேனடுவுளிருவீருமிருப்பதானாலடியேனுன், னடியார் நடுவுளிருக்கு மருளைப்புரியாய்'' என்னும் இருதயமந்திரத்திருச் செய்யுளினும், ''முன்னின்றாண்டாயெனை முன்னமியானுமதுவே முயல்வுற்றுப், பின்னின்றேவல் செய்கின்றேன் பிறபட்டொழிந்தேன் பெம்மானே'' என்னுந் திருத்தூக்கினுங் குறிப்பாயுணர்த்தினமை காண்க. மெய்கண்ட சாஸ்திரங்களிலொன்றாகிய நெஞ்சுவிடுதூதும், ''நாடரிய, அஞ்செழுத்தினுள்வீடறிவித்தானஞ்செழுத்தை நெஞ்சழுத்திநேயமயலாக்கி யஞ்செழுத்தை, உச்சரிக்குங் கேண்மையுணர்த்தி யதினுச்சரிப்பு, வைச்சிருக்கு மந்தவழிகாட்டி'' என்று சாற்றியது. இஃதிங்ஙனமிருக்க,

''ஓம் நமோ நாராயணாய'' என்னும் அஷ்டாக்ஷரமந்திரத்துக்கும் அடியில்வருமாறு வேதோக்தமான வியாக்கியானமுமுண்டு. அதாவது, ஓம் என்பது ஓரெழுத்து, நம என்பது இரண்டெழுத்து. நாராயணாய என்பது ஐந்தெழுத்து. இம்மந்திரம் இயல்பில் ஏழெழுத்துடையதாயினும் பிரணவத்தைச் சிரமேற்கொண்டு விளங்குதலால் எட்டெழுத்தாயிற்று. இதில் நம என்று

பதத்தின் பொருளாய ஜீவனை, நாராயணன் என்ற பதத்தின் பொருளாய ஈசுவரனிடத்து, ஆய-பிரணவ வாயிலாக ஒன்று சேர்த்தல் என்று தாற்பர்யம். பிரணவத்தை ஏகாக்ஷரமென்று தனிமந்திரமாக எடுத்துக்காட்டிய வேதத்தின் ஹிருதயம் மற்றைய பகுதிகளான ஏழெழுத்துக்களின் பொருள்களும் இவ்வோரெழுத்தின்கண்ணே அமைந்துள்ளனவென்பதே. ஆதலாற்றான் தாரசாரோபநிஷத்தில் பிரணவமே சூக்ஷ்மாஷ்டாட்சரம் என்று நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. அதன் விரிவை அங்கே காண்க.

மா-பிரணவத்தின் வாச்சிய நாமங்களிலொன்றாகிய "பகவான்" என்னுஞ் சொல்லின் பொருளையும் விளக்கியருள வேண்டும்.

ஆ-விளக்கியருளுவோம், கேட்பாயாக.

**அதர்வணவேத அதர்வசிரோபநிஷத்.**

அத கஸ்மாதுச்யதே பகவாந் யஸ்ஸர்வாந்பாவாந் நீக்ஷத்யாத்மஜ்ஞானம் நிரீக்ஷயதி யோகம்கமயதி ஸஏவ தஸ்மாதுச்யதே பகவாந்|

அதகஸ்மாதுச்யதே பகவாந் யஸ்ஸர்வாந்பாவா நீக்ஷத்யாத்மஜ்ஞானம் நிரீக்ஷயதி யோகம்கமயதி ஸஏவதஸ் மாதுச்யதே பகவாந்।

(இ-ள்). "இனி எதுபற்றி பகவான் எனப்படுகின்றான். எவன் எல்லாப் பிரபஞ்சங்களையும் சாக்ஷியாய்க் காண்கின்றான். பரமாத்ம ஞானத்தை ஆத்மாக்களுக்கு அளிக்கின்றான். அதற்கு அந்தரங்க சாதனமாயுள்ள ராஜயோகத்தையுண்டாக்குகின்றான். அதனால் அவன் பகவான் எனப்படுகின்றான்" என்று இயம்பியது. பகவான் என்றதற்குப் பககுணமுடையோன் என்று பொருள். அதாவது ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் ஆகிய ஆறு குணங்களும் பகம் என்று சொல்லப்படும். அக்குணங்களையுடையவன் எவனோ அவனே பகவான் எனப்படுவான். இப்பெயர் சிவபெருமானொருவருக்கே ரூடியாகப்பொருந்தும். ஏனையோருக்கு எட்டுணையுஞ் சித்திக்காது. சிங்கத்தைக் சிங்கமெனல் முக்கியவிருத்தி. சிங்கத்தின் வீரம், பெருமை முதலிய குணங்களை ஒருவரிடத்தே காணப்பெறின் அவரைச் சிங்கமெனல் கௌணவிருத்தி. அதுபோல வேத ஸம்ஹிதாபாகங்களில் பரமசிவனைத் தவிற வேறு எக்கடவுளரையும் பககுணமு

டையாரெனச் சிறப்பிலக்கணங்கொண்டு சிறப்பித்துக் கூறவில்லை. மூர்த்தித் திரயாதீத சிவபெருமானுடைய மகிமைகளைக்குறிக்கும் திவ்விய நாமங்களாகிய ஈசுவரன், உக்கிரன், சிவன், ஸ்ரீமாந், சந்திரசேகரன், அமிர்தன், ஸர்வஞ்ஞன், காமரிபு, மஹரிஷி என்பதாதி பெயர்களே அவர் பகுகுணமுடையாரென ஸ்பஷ்டமாய் நிரூபிக்கின்றன. ஈசானன், ஈசன், சம்பு, பசுபதி முதலிய நாமங்கள் எத்தேவருக்கும் எவ்விடத்தும் முக்கிய விருத்தியாய் உபயோகிக்கப் படாத பேராற்றல் பெற்றனவாம். சங்கரன், மயஸ்கரன், மயோபு, சதாசிவன் ஆதியாய பெயர்கள் மறைமுடிகளிற் சொல்லப்பட்ட அபஹதபாப்மா முதலிய திவ்விய குணங்களைக் குறிப்பிக்கின்றன. நீலகண்டன், விரூபாக்ஷன், கபாலி, வைரவன், கங்காளன் சரபன் என்பதாதி நாமதேயங்கள் அவருடைய அற்புத வீரச் செயல்களை விளக்குகின்றன.

உலகத்தில் கட்டியக்காரர் தங்கள் அரசனைப் பொருளை விரும்பிப் புகழ்கின்றார்கள். ஆனால் அநாதியாயுள்ள வேதங்களோ அப்படியன்று. தம்முடைய நாயகனைப் புகழவேண்டிப் பரமார்த்தத்தை விரும்பி ருத்ரஸம்ஹிதைகளைத் தம்முடைய சாகைகடோறும் அமைத்துக்கொண்டன. மேலும் வேதத்துரோகிகள் தம்மைக் கெடுக்காவண்ணம் சிவநாமதேய ரத்ந ரக்ஷாபந்தனத்தையுமிட்டு நிலவுகின்றன. ருத்ர ஸம்ஹிதை யஜுர் வேதத்தில் மாத்திரமல்ல, ருக்வேத ஸாமவேத அதர்வண வேதங்களிலுங்கூறப்படிக்கப்பட்டிருக்கின்றமை பிரத்தியட்சம். ருக்வேதத்தில் ஐந்து சூக்தங்கள் பஞ்ச ருத்ரங்களெனவும், ஸாமவேதத்தில் "சூவொராஜா-ஆவோராஜா" முதலிய சில சாமங்கள ருத்ர ஸம்ஹிதையெனவும், அதர்வண வேதத்தின் ஓர் காண்டத்திலுள்ள ஓர் சூக்தம் மஹா ருத்ரமெனவும் வழங்கப்பட்டு வருகின்றன. இவைகளெல்லாவற்றிலும் பரமேசுவர நமஸ்காரங்களும், பரமேசுவர தோத்திரங்களும், பரமேசுவரரை நானாரூபமாக நிரூபித்தலுமே காணப்படுகின்றன. ஆதலால் வேதங்களின் பெரு வழக்கு "யஸ்ய நாம மஹத்யஶ:-யஸ்யநாம மஹத்யசஃ" (74-ம் பக்கம் பார்க்க) என்றபடி பெரிய புகழையுடைய சிவபெருமானே ஷாட்குண்ணிய பரம புருஷரென்று பல்லோருமறியமுரசறைந்து ஸ்திரப்படுத்தியிருக்கின்றது.

சிவபெருமான் பகருணத்துக்குடைய பகவானுகவே அவரது சக்தி பகவதீ என்று அழைக்கப்படுகின்றனர். "ஹ்ரீம்காரேண ஹ்ருல்லேகாக்யா பகவதீ-ஹ்ரீங் காரேண ஹ்ருல்லேல காக்யா பகவதீ" என்று அதர்வணவேத திரிபுராதாபிந் யுபநிஷத்தும், 'பகவத்யந்நபூர்ணேதி-பகவத் யந்நபூர்ணேதி" என்று அந்நபூர்ணோபநிஷத்தும் லிங்கம் ஸர்வமீசாநம் ஸ்த்ரீலிங்கம் பகவத்யுமா-புல்லிங்கம் ஸர்வமீசாநஃ ஸ்த்ரீலிங்கம் பகவத்யுமா" என்று கிருஷ்ண யஜுர்வேதருத்ரஹ்ருதயோபநிஷத்தும் வற்புறுத்தின. வேறு தேவதைகளின் சக்திகளுக்கோ அத்தகைய நாமங் கிடையாது. ஆதலால் அத்தேவர்களைப் பகவான் என்றழைப்பது உபசாரமே. பகவான் என்றும் பெயர் சிவபெருமானுக்கே சிறப்புரிமையாயுள்ளதென்பது அடியில் காட்டும் பிரமாணங்களானுந் தெளிக.

அதர்வணவேத சரபோபநிஷத்.

ஸங்கரோ பகவாநாத்யோ ரரக்ஷ ஸகலாஃ ப்ரஜாஃ।

சங்கரோ பகவாநாத்யோ ரரக்ஷ ஸகலாஃ ப்ரஜாஃ।

(இ-ள்). "பகவானும், முதற்கடவுளு (ஆத்யன்) மான சங்கரர் எல்லாப் பிரஜைகளையும் ரக்ஷித்தருளினர்" எனவும்,

கிருஷ்ணயஜுர்வேதசுவேதாசுவதரோபநிஷத்.

யஃ்யாவஹம் பாபநுதம் பகேஸம் ஜ்ஞாத்வாத்மஸ்த மம்ருதம் விஸ்வதாம।

தர்மாவஹம் பாபநுதம்பகேசம் ஜ்ஞாத்வாத்மஸ்த மம்ருதம் விச்வதாம।

(இ-ள்). "தவமுதலிய தர்மங்களை நிலைபெறச் செய்வித்து மேலான பலனாகிய மோக்ஷபரியந்தம் ஐசுவரியத்தைக் கொடுப்பவரும், பாவத்தை விளைவிக்கும் மும்மலங்களை யொழிப்பவரும், பகமெனப்படும் ஷாட்குண்ணியத்துக்கு ஈசரும், அமிர்தரும், எல்லாப் பிரபஞ்சத்துக்கும் அதிஷ்டானமானவருமான அவரை ஆத்மாவினிடத்துள்ளவராயறிந்து (அவரையடைவன்)" எனவும்,

ஸர்வாநநசிரோகிரீவஸ்-(49-ம் பக்கம் பார்க்க) எனவும்,

அதர்வணவேத அதர்வசிரோபநிஷத்.

ஓம் யோவைருத்ரஸ்ஸ பகவாந் யஸ்ச ப்ரஹ்மா யஸ்ச விஷ்ணுஃ। யஸ்ச மஹேஸ்வரஃ।

ஓம் யோஹவைருத்ரஸ்ஸபகவாந் யச்சப்ரஹ்ம। யச்சவிஷ்ணுஃ। யச்சமஹேச்வரஃ।

(இ-ள்). "எந்தத் துரீயருத்திரராகிய அந்தப் பகவான் பிரமஸ்வரூபன், விஷ்ணுஸ்வரூபன், மகேசுவரஸ்வரூபன், (குணருத்திரன்). எனவும்,

### ஸாமவேதமைத்ராயண்யுபநிஷத்.

[illegible]

மூடத்வாதாத்மஸ்தம் ப்ரபும் பகவந்தம் காரயிதாரம் நாபச்யத்।

(இ-ள்). "(பிரகிருதியின் குணங்களால் கட்டுண்டு) மூடனைப் போனபடியால் ஆத்மாவினிடத்துள்ளவனும், பிரபுவும், பகவானுமாகிய பிரேரகனைக் காணவில்லை" எனவும்,

### அதர்வணவேதபஸ்மஜாபாலோபநிஷத்.

அத்வைதம் சதுர்த்தம்............பகவந்தம் சிவம். (70-ம் பக்கம் பார்க்க). எனவும்,

### கூர்மபுராணம்.

பகவான் ஸர்வ விஜ்ஞாநத் (18-ம் பக்கம் பார்க்க) எனவும் வருவனவாற்றறிக. அன்றியும் சுருதிகற்பசூத்திரங்களிலும்,

[illegible]

நமஸ்தே அஸ்து பகவ:। பகவ: பராசீநாமுகாக்ருதி। அயம்மே அஸ்து பகவாந்। நமஸ்தே அஸ்து பகவந் விச்வேச்வராய। ஓம் பகவதே ருத்ராய।

(இ-ள்). "ஓபகவ! உன்னை வணங்குவாம். ஓபகவ! அப்புறம் நோக்கிய திருமுகமண்டலத்தை எமது பக்கம் திருப்பியருளுக. இந்தப் பகவான் எமக்காகுக. ஓபகவ! விசுவேசுவரா!! உன்னை வணங்குவாம். ஓபகவ! உருத்திர!! உன்னை வணங்குவாம்" எனவும்,

### ஜாபாலசாகை.

[illegible]

த்வம்வா அஹமஸ்மி பகவோ தேவதே அஹம்வைத்வமஸி பகவோ தேவதே।

(இ-ள்). "நீயே நானன்றோ பகவ! ஓதேவ! நானே நீயன்றோ பகவ!-ஓதேவ!" எனவும்,

### ஸ்ரீருத்ரநமகத்திலும்.

நமஸ்தே அஸ்து பகவந் விஶ்வேஶ்வராய மஹாதேவாய|

நமஸ்தே அஸ்துபகவந் விச்வேச்வராய மாஹாதேவாய।

(இ-ள்). "பகவனாகிய விசுவேசுரர் பொருட்டும் மஹாதேவர்பொருட்டும் நமஸ்காரம் ஆகுக' எனவும் சிவபெருமானைப் பகவான் என்னும் சிறப்புப்பெயரால் புகழ்ந்துள்ளன. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளும் "பாகந்தோய் பகவா பலியேற்றுழல் பண்டரங்கா" எனவுந் திருவாய்மலர்ந்தருளினர். சதுர்த்த சப்தவாச்சியப்பொருளாயுள்ள பிரமத்தின் சகளவடிவம் ஆதிபராசத்தியோடியைந்த அருண்மூர்த்தமாகும். அதுவே அப்பரம்பொருளின் பழையகோலம். ஆதிபகவன் என்றதும் அக்கருத்து நோக்கியே. ஸ்ரீமத் தாயுமானசுவாமிகளும் "ஆனந்த பூர்த்தியாகி அருளொடு நிறைந்ததெது." என்றனர். இவ்வருட்கோலத்தையே,

### அதர்வணவேதந்ருசிம்ஹதாபநியோபநிஷத்.

ஊர்த்வரேதம் விரூபாக்ஷம் ஶங்கரம் நீலலோஹிதம்|
உமாபதிஃ பஶுபதிஃ பிநாகீஹ்ய மிதத்யுதிஃ||

ஊர்த்வரேதம் விரூபாக்ஷம் சங்கரம் நீலலோஹிதம்।
உமாபதிః பசுபதிః பிநாகீஹ்ய மிதத்யுதிః॥

(இ-ள்.) "ஊர்த்துவவீரியரும், மேனோக்கிய நேத்திரமுடையவரும், சங்கரரும், நீலலோஹிதரும், உமாபதியும், பசுபதியும், பிநாகியும், அளவில் பிரகாசமுள்ளவரும்" என்றும்,

### கிருஷ்ணயஜுர்வேதயோகதத்வோபநிஷத்.

த்ரிலோசநம் உமார்த்ததேஹம் வரதம்|

த்ரிலோசனம் உமார்த்ததேஹம் வரதம்।

(இ-ள்.) "முக்கண்ணன், உமைபாகன், வரதன்" என்றும்,

### சுக்லயஜுர்வேத மண்டல ப்ராஹ்மணோபநிஷத்.

உமாஸஹாயம் நீலகண்டம் ப்ரஶாந்தம்|

உமாசஹாயம் நீலகண்டம்ப்ரசாந்தம்।

(இ-ள்.) "உமாசகாயனை, நீலகண்டனை, பிரசாந்தனை" என்றும்,

### தைத்திரீயாருணசாகை நாராயணம்.

க்ருஷ்ணபிங்களம்| உமாபதயே பஶுபதயே நமோநமஃ|

க்ருஷ்ணபிங்களம்। உமாபதயே பசுபதயே நமோநமః।

(இ-ள்.) "கருமையுஞ்செம்மையுங் கலந்த திருமேனியுடையவருக்கு, உமையம்மையின்பதிக்கு, பசுபதிக்கு நமஸ்காரம், நமஸ்காரம்" என்றும்,

கிருஷ்ணயஜுர்வேத கைவல்யோபநிஷத்.

உமாஸஹாயம் பரமேஶ்வரம் ப்ரபும் த்ரிலோசநம் நீலகண்டம்।

உமாசகாயம் பரமேச்வரம் ப்ரபும் த்ரிலோசனம் நீலகண்டம்।

(இ-ள்.) "உமாசகாயராய், பரமேசுவரராய், பிரபுவாய், முக்கண்ணராய், நீலகண்டராய்" என்றும்,

புருஷ ஸூக்தம்.

அஹோராத்ரே பார்ஶ்வே।-அஹோராத்ரேபார்ச்வே।

(இ-ள்.) "பகலும் இரவும், அதாவது செம்மையுங் கருமையும் இருபக்கங்களாகும்" என்றுங் கூறி மகிழ்ந்தன. இன்னும் அனேக உபநிஷத் பிரமாணங்களும் போதுமான ஏதுக்களாய் நிலையுறுகின்றன. இந்தக்கோலமே தஹரவித்தையின்கண் உபாசிக்கப்படும் திவ்விய சொரூபமாகும். பரம கருணையத் திருமேனி தாங்கியுள்ள இப்பொன்வண்ணரே பற்பல வேதவாக்கியங்கள் ஓயாது துதிக்கவும், அந்தணர் உயர்காயத்திரி மந்திரத்தால் உபாசிக்கவும், சூரியமண்டல மத்தியில் எழுந்தருளியிருக்கின்றனர். பிரம விஷ்ணு ருத்திரர்களுக்குமேலாய், துரியதத்துவமாய் நித்திய விபூதிமய ஸ்ரீ சோம லோகமென்னும் மஹா சிவபுரத்தில் எழுந்தருளியிருக்கும் உயர்வொப்பற்ற சகள வடிவமும் இதுவே. இத்தகைய அநாதியாயுள்ள பழைய திருக்கோலத்தையே ஆளுடையவடிகள் "தோலுந் துகிலுங் குழையுஞ் சுருடோடும், பால்வெள்ளை நீறும் பசுஞ் சாந்தும் பைங்கிளியும், சூலமுந்தொக்க வளையுமுடைத் தொன்மைக், கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய்க் கோத்தும்பீ" என்று வாழ்த்தி உள்ளங் குளிர்ந்தனர். வேதமும்,

யத்தே கல்யாணம் ரூபம் தத்தே பஶ்யாமி।

யத்தேகல்யாணம் ரூபம் தத்தேபச்யாமி।

(இ-ள்.) "எது உனது திவ்விய மங்கள விக்கிரஹம் அதைக் காண்கின்றேன்," என்று சாற்றியது. இவ்வாறு சுருதிகளெல்லாம் துரியமூர்த்திக்கு மாதாஒரும் பாகமுதலியவற்றை ஒப்பியிருக்க நான்காவது தெய்வத்திற்கு உமாசகாயத்வாதி லிங்கங்கள்

கிடையாவென்று போலி அத்வைதிகளாகிய ஏகாத்மவாதிகள் சாதிப்பது சிவாபராதத்தை விலைகொடுத்து வாங்கிய பாவத்தின் பயனேயாம். ஐயகோ! இவர்கள் ஏனோ வேதோக்தமான விபூதி, உருத்திராட்ச ஸ்ரீபஞ்சாட்சர முதலிய சைவ மங்கலங்களைத் தாங்கி அம்மையப்பரை வழிபடுஞ் சைவர்கள்போல் திரிய வேண்டும். வினை கொடிது! கொடிது!! என்னே! தத்துவாதீதராகிய கடவுள் அங்கிங்கெனாதபடி எங்கும் பரிபூரணமாய் நீக்கமற நிறைந்துநிற்கும் இயல்புடையவராயிற்றே அவருக்குச் சரீரமுண்டென்று ஒப்புக்கொள்வது எங்ஙனமெனிற் கூறுதும்:—

ஆத்மாக்களுக்குப் பெத்தநிலை யெனவும் முத்திநிலை யெனவும் இருவித நிலைகளுண்டு. அதனால் முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளாயுள்ள பிரமத்தினது நிலையும் இருவகைப்படுவதாயிற்று. அவற்றுள் பஞ்சகிருத்தியஞ்செய்து நிற்குநிலை தடஸ்தநிலை யெனப்படும். அவ்வாறு கிருத்தியஞ் செய்யாது ஒழிந்து தான் மாத்திரமாய் ஞானனந்தமயமாய் நிற்குநிலை சொரூபநிலை யெனப்படும். அந்த ஞான சொரூபமே கடவுளுக்கு உண்மை நிலையாகும். அதைத்தான் உண்மை ஞானிகள் தம் மெய்யறிவால் வழிபடுவர். அது கண் முதலிய ஞானேந்திரியங்களாலும் மனமுதலிய அந்தக்கரணங்களாலும் எட்டப்படுவதன்று. ஞானிகள் இந்திரியங்களும் அந்தக்கரணங்களும் ஏகதேச அறிவை உண்டாக்குவனவென்று நன்குணர்ந்தவர்களாதலின் அவற்றைவிட்டகன்று திருவருளையே துணையாகக்கொண்டு அவ்வருளின் வசப்பட்டு நின்று வழிபடுகின்றவர்கள். அதனால் அவர்களுடைய வழிபாடு ஞானவழிபாடாகின்றது. அதற்கே அதீத வழிபாடென்றும் அறிவுத்தொழில் வழிபாடென்றும் பெயர். சிவபரம்பொருள் அறிவுருவாதலின் அப்பரம்பொருளுக்கு அவ்வழிபாடொன்றே முக்கியமாகும். அதில் பரிபாகம் ஏற்படவேண்டுமானல் மனத்தூய்மையே அத்தியாவசியகம். அவ்வழிபாடியற்றும் மாசற்ற அறிவாளர் மனத்தை ஒடுக்குவதில் முயற்சி செய்யாமல் எப்பொழுதும் அறிவை வெளிமுகப்படுத்தாது உள்ளொடுக்கி அருளில் நிறுத்தி, ஆனந்தத்தில் அமிழ்ந்தி யாதொரு செயலுமற்று, அசைவின்றி அறிவாய் இருந்துவிடுவார்கள். அதைத்தான் "ஐங்குணர்வினுள்ளொடுங்கி யுள்ளத்துளின்பொடுங்கத், தாங்குவர் மற்றேதுண்டு சொல்" என்று திரு

வருட்பயன் கூறியது. "தொட்டுக்காட்டாதவித்தை சுட்டுப் போட்டாலும் வாராது" என்னும் பழமொழிக்கிணங்கக் குருபக்தி யுள்ளவர்களுக்கே இவ்வுண்மை விளங்கும். சாதாரண ஆத்மாக் களோ இந்திரிய அந்தக்கரணங்களின் துணையில்லாமல் ஜீவிப்ப தில்லை. ஆகையினாலே அவர்கள் கேவலம் ஓர் சாராரியற்றியபசு நூல்களை வாசித்துவிட்டுத் தாங்கள் ஞானவழிபாடு செய்வதாக நடிப்பதும் பிதற்றித்திரிவதும் பெரும் பேதமையேயாம்.

கிருஷ்ணயஜுர்வேத தைத்திரீயோபநிஷத்.

யதோவாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ|
ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந் ந பிபேதி குதஶ்சந||

யதோவாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸாஸஹ।
ஆநந்தம் ப்ரஹ்மணோவித்வாந் நபிபேதிகதாசந॥

(இ-ள்.) "எதினின்றும் வாக்குகள் மனதுடன்கூட அதன் முடிவைச் சொல்ல இயலாமலும் அடையமுடியாமலும் திரும்பி விடுகின்றனவோ அந்தப் பிரமத்தின் சொரூபமான ஆநந்தத்தை அறிகிறவன் எக்காலத்திலும் பயப்படுகிறானில்லை" எனவும்,

ஸாமவேதகேநோபநிஷத்.

யஸ்யாமதம் தஸ்ய மதம் மதம் யஸ்ய ந வேத ஸ:|
அவிஜ்ஞாதம் விஜாநதாம் விஜ்ஞாதமவிஜாநதாம்||

யஸ்யாமதம் தஸ்யமதம் மதம்யஸ்ய நவேதஸ:।
அவிஜ்ஞாதம் விஜாநதாம் விஜ்ஞாத மவிஜாநதாம்॥

(இ-ள்.) "எவனுக்குப் பிரம்மசொரூபம் தெரியவில்லை என் னும் அபிப்பிராயமோ அவனுக்குத் தெரிந்தது. எவனுக்குப் பிரம்மசொரூபம் தெரிந்தது என்னும் அபிப்பிராயமோ அவன் தெரிந்தானில்லை. தெரிந்தவர்களுக்கு அறியப்படாது. தெரியாத வர்களுக்கு அறியப்பட்டது" எனவும் கூறிப்போந்தன. திருவா சகமும், "சொற்பதங்கடந்த தொல்லோன் காண்க." "சித்தமுஞ் செல்லாச் சேட்சியன் காண்க." "நூலுணர் வுணரா நுண்ணி யோன் காண்க" எனவும் வற்புறுத்தியது. இன்னோரன்ன பிர மாணங்களால் இந்திரியங்களையும் அந்தக்கரணங்களையும்வென்று அருள்வழி நின்றவர்களுக்கே அந்த ஞான வழிபாடு கைகூடுவ தாகும். ஏனையோருக்கு அது எட்டுணையுஞ் சாத்தியமான காரிய மன்று. ஜகஜீவபரங்கள் மூன்றும் மித்தையெனவும், அகமே

பிரமமெனவும், தானே சிவமன்றித் தனிச்சிவம் வேறில்லையெனவும் கூறித்திரியும் அபேதவாதிகளுக்கு இந்த ஞானவழிபாடு கைகூடுவதரிது. அகண்டாகார நித்திய வியாபக சச்சிதாநந்த பிரமமும் அவர்களால் அறியப்படமாட்டாது. ஏனெனில் அவர்கள் கற்பித்த பொய் நெறியை ஸ்ரீ தாயுமானசுவாமிகள் முதலிய மூதறிஞர் அடியில் வருமாறு கண்டித்துள்ளார்கள்.

1. சொல்லுக் கடங்காச் சுகப்பொருளை நாமெனவே
அல்லும் பகலு மரற்றுவதென்—நல்லசிவ
ஞானமயம் பெற்றோர்கள் நாமில்லை யென்பரந்தோ
மோனமய மான வுரை.

2 நான்ற னெனுமயக்கம் நண்ணுங்கா லென்றனை
வான்ற னெனநிறைய மாட்டாய்நீ—யூன்றாமல்
வைத்த மவுனத்தாலே மாயை மனமிறந்து
துய்த்துவிடு ஞான சுகம்.

3. பன்முகச் சமயநெறி படைத்தவரு மியாங்களே கடவுளென்றிடும் பாதகத் தவரும், வாததர்க்கமிடு படிறரும் தலைவணங்கிட.

4. நானென நிற்குஞானம் ஞானமன் றந்தஞானம்
மோனமா யிருக்க வொட்டா.

5. நாம்பிரமமென்றால் நடுவேயொன் றுண்டாமால்
தேம்பியெல்லா மொன்றாய்த் திகழுநா ளென்நாளோ.

6. நானென தன்மை நழுவியே யெவ்வுயிர்க்கும்
தானென வுண்மைதனைச் சாருநா ளென்நாளோ.

7. ஊனென்றி நாத னுணர்த்துமதை விட்டறிவேன்
நானென்ற பாவி தலைநாணுநா ளென்நாளோ.

8. தாம்பிரமங் கண்டவர்போல் தம்மைக்கண் டாங்கதுவே
நாம்பிரம மென்பவர்பால் நண்ணாதே. (நெஞ்சுவிடு தூது)

9. பரமதனே டுலகுயிர்கள் கற்பனையே யெல்லாம்
பகர்சிவமே யெனவுணர்ந்தோ மாதலினால் நாமே
பிரமமெனப் பிறர்க்குரைத்துப் பொங்கிவழிந் தாங்கே
பேசுகின்ற பெரியவர்தம் பெரியமதம் பிடியேல். (திருவருட்பா)

அல்லாமலும், பிருதிவியாதி அஷ்டமூர்த்தங்களும் பரப்பிரம சிவனாரது திருமேனியாதலின் ஆத்மாவையும் பிரமமெனக் கூறிய வேதத்தின் கருத்தை அம்மகான்களே கீழ்வருமாறுங் கூறியிருக்கின்றார்கள். (அதர்வசிரசிலும் சிவபெருமான் சேதனசேதனப் பிரபஞ்சமனைத்தையும் அந்தர்யாமியாய்ப் பிரவேசித்து நின்

றமைபற்றி எல்லாப் பெயர்களினாலும் அழைக்கப்பட்டனர் என்று மொழிந்திருக்கின்றது.)

1. விளக்குந் தகளியையும் வேறென்னார் நின்னைத்
துளக்கமறச் சீவனென்று சொல்வார் பராபரமே.

2. பாராதி நீயாப் பகர்ந்தா லகமெனவும்
ஆராயுஞ் சீவனுநீ யாங்காண் பராபரமே.

3. வானாதி நீயெனவே வைத்தமறை யென்னையுநீ
தானாகச்சொல்லாதோ சாற்றாய் பராபரமே.

இந்தப்பிரமாணங்களால் சீவனைக்காட்டிலும் சிவன் வேறாக விருந்தும் சீவனைச் சிவனென்றது உபசாரம். வாய்மை இவ்வா றிருக்கவும் அபேதவாதிகளாகிய ஏகாத்மவாதிகள், ஆத்மா சிவம் என இரண்டு பொருள்களில்லையெனவும், ஆத்மாவே சிவமென வும் அக்கருத்தையே வேதாந்தங்களாகிய உபநிஷத்துக்கள் கூறிப் போந்தனவெனவும், ஆத்மா சிவம் என இருபொருள்கள் உண் டென்று சைவர்கள் கூறுவது சுருதிக்கு முற்றும் விரோதமென வும், அவ்விஷயத்தில் யாதொரு சுருதிப்பிரமாணமுங் கிடையா தெனவும் வாய் கூசாது பேசி மகிழ்வர். அன்றியும் நாமே சிவம், நாமே பிரமம், நம்மின்மேல் ஒரு பிரமும் இல்லையென்றும் போ திப்பார்கள். இவர்களது சழக்குரையைச் சுருதிகொண்டோட்டி எமது வைதிக சைவவுண்மையை விளக்குவாம்.

பஞ்சருத்ரங்களிலொன்றாகிய சுவேதாசுவதரோபநிஷத்
கிம்காரணம் ப்ரஹ்ம குதஸ்ம ஜாதா:|
ஜீவாம கேந க்வ ச ஸம்ப்ரதிஷ்டா:|
அதிஷ்டிதா: கேந ஸுகேதரேஷு
வர்தாமஹே ப்ரஹ்மவிதோ வ்யவஸ்தாம்||

கிம்காரணம் ப்ரஹ்ம குதஸ்மஜாதா: ஜீவாமகேநக்வசஸம்ப்ரதிஷ்டா:। அதிஷ்டிதா: கேநஸுகேதரேஷுவர்தாமஹேப்ரஹ்மவிதோவ்யவஸ்தாம்।

(இ-ள்.) "எது காரணமாகிய பிரமம், யாம் எதனிடம் பிறந்தோம், எதனால் ஜீவித்திருக்கின்றோம், எதனிடத்து எமக்கு ஒடுக்கம், சொற்பனந்தவிர மற்றைய ஜாக்கிராவஸ்தையில் எவ னால் அதிஷ்டிக்கப்பட்டிருக்கின்றோம். பிரமவித்துக்காள்! இதன் விவஸ்தையைச் (சொல்லுங்கள் என்று வினவி,

காலஸ்ஸ்வபாவோ நியதிர்யத்ருச்சா
பூதாநி யோநி: புருஷ இதி சிந்த்யம்|
ஸம்யோக ஏஷாம் நத்வாத்ம பாவாத்
ஆத்மாப்யநீஸ: ஸுகது:கஹேதோ:||

காலஸ்வபாவோ நியதிர்யத்ருச்சா பூதாநியோநி: புருஷ இதிசிந்த்யம் ஸம்யோக ஏஷாம் நத்வாத்ம பாவாத் ஆத்மாப்யநீசஸ்ஸுகதுக்கஹே து:||

(இ-ள்.) "காலம், சுபாவம், கர்மம் அல்லது தலைவிதி, தற்செயலென்ற சூனியம், பூதம், பிரகிருதி, புருஷன் என்ற சரீரம், இவற்றின் கூட்டுறவு ஆகியவிவைகள் அசேதனங்களாதலால் விசாரிக்கப்படவேண்டுவன. ஆத்மா (சுதந்தரமின்றிப் பாதந்திரப்பட்டுச்) சுகதுக்கங்களை நுகர்தலால் அநீசனுவன்" என்று அதற்கு விடையிறுத்தி,

ய: காரணாநி நிகிலாநி தாநி காலாத்மயுக்தாந்யதிதிஷ்டத்யேக:||

ய:காரணாநி நிகிலாநிதாநி காலாத்மயுக்தாந்யதிதிஷ்டத்யேக:||

(இ-ள்.) "காலம். ஆத்மா முதலியவற்றுடன்கூடிய மற்றெல்லாக் காரணங்களையும் எவனொருவன் அதிஷ்டித்திருக்கிறான்" என்று முடிவுசெய்து அதிஷ்டிப்பவன் ஈசனெனவும், அதிஷ்டிக்கப்படுபவன் ஆத்மாவெனவும் வேறுபடுத்தி பிரமம் ஆத்மா என்னும் இருபொருளையும் நாட்டி ஸ்திரப்படுத்தியது. இத்தகையப் பிரமாணங்களால் ஆத்மா பிரமமாகாதொழிந்தமை பிரத்தியட்சமன்றோ. இன்னும் ஆத்மா பரமாத்மா பேதங்களைப்பற்றி பிரபல சுருதிப்பிரமாணங்களிற் சிலவற்றை ஈண்டு எடுத்துக்காட்டுவாம்.

## கிருஷ்ணயஜுர்வேதகடவல்லியுபநிஷத்.

தமாத்மஸ்தம் யேநு பஶ்யந்தி தீராஸ்
தேஷாம் ஸுகம் ஶாஶ்வதம் நேதரேஷாம்||

தமாத்மஸ்தம்யேநு பச்யந்திதீரா: தேஷாம்சுகம் சாச்வதம் நேதரேஷாம்||

(இ-ள்.) "ஆத்மாவிடத்துள்ள அவரை எந்தத் தீரர்கள் காண்பார்களோ அவர்களுக்கே சாசுவதஆனந்தம். பிறர்க்கில்லை" இம்மந்திரம் சுவேதாசுவதரோபநிஷத்திலும், பிரம்மோபநிஷத்திலுமுள்ளது.

### அதர்வணவேதமுண்டகோபநிஷத்.

𑌦𑍍𑌵𑌾 𑌸𑍁𑌪𑌰𑍍𑌣𑌾 𑌸𑌯𑍁𑌜𑌾 𑌸𑌖𑌾𑌯𑌾
𑌸𑌮𑌾𑌨𑌂 𑌵𑍃𑌕𑍍𑌷𑌂 𑌪𑌰𑌿𑌷𑌸𑍍𑌵𑌜𑌾𑌤𑍇 |
𑌤𑌯𑍋𑌰𑌨𑍍𑌯𑌃 𑌪𑌿𑌪𑍍𑌪𑌲𑌂 𑌸𑍍𑌵𑌾𑌦𑍍𑌵𑌤𑍍𑌤𑌿
𑌅𑌨𑌶𑍍𑌨𑌨𑍍𑌨𑌨𑍍𑌯𑍋 𑌅𑌭𑌿𑌚𑌾𑌕𑌶𑍀𑌤𑌿 ||

*த்வாசுபர்ணுஸயுஜாஸகாயா ஸமாநம்வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே।*
*தயோரந்யஃ பிப்பலம ஸ்வாத்வத்தி அநச்நந்நந்யோ அபிசாகசீதி||*

(இ-ள்.) "இரண்டு அழகிய பட்சிகள் ஒருங்குகூடி சிநேகம்பெற்றன. ஒரு விருட்சத்திலேயே சேர்ந்துகொண்டிருக்கின்றன. அவற்றுள் ஒன்று கைப்பை நன்றாகப்புசிக்கின்றது. மற்றொன்று ஒன்றையும் புசிக்காமலே பிரகாசித்துக்கொண்டிருக்கின்றது." (விருக்ஷம்-சரீரம்) எனவும்,

𑌸𑌮𑌾𑌨𑍇 𑌵𑍃𑌕𑍍𑌷𑍇 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋 𑌨𑌿𑌮𑌗𑍍𑌨𑍋
𑌨𑍀𑌶𑌯𑌾 𑌶𑍋𑌚𑌤𑌿 𑌮𑍁𑌹𑍍𑌯𑌮𑌾𑌨𑌃 |
𑌜𑍁𑌷𑍍𑌟𑌂 𑌯𑌦𑌾 𑌪𑌶𑍍𑌯𑌤𑍍𑌯𑌨𑍍𑌯𑌮𑍀𑌶𑌂
𑌤𑌸𑍍𑌯 𑌮𑌹𑌿𑌮𑌾𑌨𑌮𑌿𑌤𑌿 𑌵𑍀𑌤𑌶𑍋𑌕𑌃 ||

*ஸமாநே வ்ருக்ஷே புருஷோ நிமக்நோ நீசயாசோசதி முஹ்யமாநஃ।*
*ஜுஷ்டம்யதா பச்யத்யந்யமீசம் தஸ்யமஹிமாந மிதிவீதசோகஃ||*

(இ-ள்.) "ஒரே விருட்சத்திலிருந்தும் புருஷன் சுதந்தரமற்றவனாய் மோஹித்துத் துக்கிக்கின்றான். எப்பொழுது நித்ய திருப்தனையும் வேறானவனையுமுள்ள ஈசனைக் காண்பானோ அப்பொழுதே சோகங்களையெல்லா மொழித்து அவன் மஹிமையைப் பெறுவான்." (இம்மந்திரங்கள் சுவேதாசுவதரத்திலும் ருக்வேதத்திலுமுள்ளன) எனவும்,

### கிருஷ்ணயஜுர்வேத சுவேதா சுவதரோபநிஷத்.

𑌅𑌨𑍀𑌶𑌶𑍍𑌚𑌾𑌤𑍍𑌮𑌾 𑌬𑌧𑍍𑌯𑌤𑍇 𑌭𑍋𑌕𑍍𑌤𑍃𑌭𑌾𑌵𑌾𑌤𑍍
𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌦𑍇𑌵𑌂 𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌪𑌾𑌶𑍈𑌃 ||

*அநீசச்சா த்மாபத்யதே போக்த்ருபாவாத்*
*ஜ்ஞாத்வாதேவம் முச்யதே ஸர்வபாசைஃ||*

(இ-ள்.) "அநீசனான ஆத்மா போக்தாவென்ற பாவனையால் பந்தமடைகின்றான். தேவனை அறிந்தபோது எல்லாப் பாசங்களினின்றும் விடுபடுகின்றான்." எனவும்,

ஜ்ஞாஜ்ஞௌத்வாவஜாவீஶநீஶௌ।

ஜ்ஞாஜ்ஞௌத்வாவஜாவீசநீசௌ।

(இ-ள்.) "பிறவாதவர்களாகிய பேரறிவினனும், சிற்றறிவினனுமாகிய இருவரும் ஈசனும் அநீசனுமாம்." எனவும்,

க்ஷரம்ப்ரதாநமம்ருதாக்ஷரம்ஹர꞉

க்ஷராத்மாநாவீஶதே தேவ ஏக꞉॥

க்ஷரம்ப்ரதாநமம்ருதாக்ஷரம்ஹர꞉ க்ஷராத்மாநாவீசதே தேவ ஏக꞉॥

(இ-ள்.) "க்ஷரம் பிரதானம் அக்ஷரம் அமிருதம். க்ஷராத்மாக்களை ஆளுபவர் ஒரே தேவராகிய ஹரர்." எனவும்,

க்ஷரந்த்வவித்யா ஹ்யம்ருதந்து வித்யா

வித்யாவித்யே ஈஶதே யஸ்து ஸோऽந்ய꞉॥

க்ஷரந்த்ய வித்யாஹ்யம்ருதந்து வித்யா

வித்யாவித்யே ஈசதேயஸ்து ஸோந்ய꞉॥

(இ-ள்.) "அவித்தையென்றது அசேதனம். வித்தையென்றது சேதனம் (ஆத்மா). இவ்விரண்டையும் ஆளுபவர் அவற்றிற்கு வேறாயுள்ள ஈசர்." எனவும்,

ய ஈஶே அஸ்ய த்விபதஶ்சதுஷ்பத꞉

கஸ்மை தேவாய ஹவிஷா விதேம॥

யஈசேஅஸ்ய த்விபதச் சதுஷ்பத꞉ கஸ்மைதேவாய ஹவிஷா விதேம॥

(இ-ள்.) "எவன் இந்த இருகால்களுக்கும் நாற்கால்களுக்கும் நாயகன். அத்தகைய தேவனுக்கு அவிசு கொடுப்போம்."

அணோரணீயாந்மஹதோமஹீயாந்

ஆத்மா குஹாயாம் நிஹிதோஸ்ய ஜந்தோ꞉।

தமக்ரதும் பஶ்யதி வீதஶோகோ

தாது꞉ ப்ரஸாதாந்மஹிமாநமீஶம்॥

அணோரணீயாந்மஹதோமஹீயாந் ஆத்மாகுஹாயாம் நிஹிதோஸ்யஜந்தோ꞉।

தமக்ரதும் பச்யதிவீதசோகோ தாது꞉ப்ரஸாதாந்மஹிமாநமீசம்॥

(இ-ள்) "அணுவுக்கணுவாயும் மகத்துக்கு மகத்தாயுமுள்ள பரமாத்மா இந்த ஜந்துவின் இருதய குகையில் உள்ளார். கிரியையில்லாதவரும், மகிமை பொருந்தினவருமான அவ்வீசனை அவரது பிரசாதத்தால் சோகமில்லாதவனுய்க் காண்கின்றான்," (இதே மந்திரம் கடம், சரபம், நாரதபரிவ்ராஜகம் என்னும்

உபநிஷத்துக்களிலும், தைத்திரீயாருணசாகை நாராயணத்தி லும் கூறப்பட்டுள்ளது). (மஹிமாநமீசம் சர்வவேதவேதாந்தங் களிலும் புகழப்பட்ட பெருமையுடைய பரமேசுவரராகிய சிவ பெருமானை). (பரமாத்மா-மஹேசுவரர்) எனவும்,

யஜுர்வேதம் (தைத்திரீயஸம்ஹிதை.)

𑌏𑌷𑌾𑌮𑍀𑌶𑍇 𑌪𑌶𑍁𑌪𑌤𑌿𑌃 𑌪𑌶𑍂𑌨𑌾𑌂 𑌚𑌤𑍁𑌷𑍍𑌪𑌦𑌾𑌮𑍁𑌤 𑌚 𑌦𑍍𑌵𑌿𑌪𑌦𑌾𑌂।

ஏஷாமீசேபசுபதிஃ பசூநாம் சதுஷ்பதா முதச த்விபதாம்।

(இ-ள்.) "இருகாற் பசுக்கள், நாற்காற்பசுக்கள் ஆகிய இருவகைப் பசுக்களுக்கும் பசுபதியே பதி." எனவும்,

சுக்லயஜுர்வேத ப்ருஹதாரண்ய கோபநிஷத்.

(1) 𑌆𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑍇𑌵𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌪𑌶𑍍𑌯𑍇𑌤𑍍 (2) 𑌯𑍋𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌤𑌿𑌷𑍍𑌠𑌨𑍍,

(1) ஆத்மந்யே வாத்மாநம் பச்யேத் (2) யோவிஜ்ஞானேதிஷ்டந்.

(இ-ள்.) (1) "ஆத்மாவிலே ஆத்மாவைக் காண்க. (உபாசிக்க.)" (2) "எவர் விஞ்ஞானத்தில் (ஆத்மாவில்) இருக்கின்றனரோ." எனவும் வருமாறு காண்க.

இத்யாதி வேதப் பிரமாணங்கள் இன்னும் பலவுள. அவற்றையெல்லாம் ஈண்டுகூறின் விரியுமென்றஞ்சி விடுத்தனம். ஸ்மிருதிகளும், இதிஹாசங்களும், புராணங்களும், வேதாந்தசித்தாந்த சாஸ்திரங்களும் இவ்வுண்மையையே எடுத்துப் போதிப்பனவென்றுணர்வாயாக.

இனி ஜகத்விஷயமாகவும் அம்மூதறிஞர்களது அபிப்பிராயத்தைக் கூறுதும். தாயுமானசுமாமிகள் பாடல்,

1. அண்டபகி ரண்டமும் மாயாவிகாரமே அம்மாயை யில்லாமையே.

2. உண்டுபோ லின்று மூலகைத் திரமெனவுட்
கொண்டோன் பெற்றபயன் கூறாய் பராபரமே.

3. வருவான்வந் தேனெனல்போல் மன்னியழியுஞ் சகத்தைத்
தெரிவாக வில்லையென்ற தீரம் பராபரமே.

4. இல்லாத காரியத்தை யிச்சித்துச் சிந்தைவழி
செல்லாமை நல்லோர் திறங்காண் பராபரமே.

5. உண்டுபோ லின்றும் பண்பி லுலகினை யசத்துமென்பர்
(சிவஞானசித்தியார்)

இவற்ருல் உலகம் முக்காலத்தும் மித்தையென்பாரை மறுத்துக் காரிய ரூபத்தால் உள்ளதுபோலத் தோன்றினுங் காரண ரூபத்தால் இல்லதென்பதை நிறுவியதாயிற்று. ஞானிக்கு ஜகமில்லையென்ற நீரம் காரியப்பாட்டினை நோக்கியேயாம். சூனியம் என்னும் பொருள்படவன்று. எச்சமயத்தவர்களாலும் புகழ்ந்து பேசப்படும் ஸ்ரீ தாயுமானசுவாமிகள் காணப்படும் பிரபஞ்சமெல்லாம் சைவநூற்களிலே கூறப்பட்ட உபமானங்களாகிய கானற்சலம், சொப்பனவுலகு, இந்திரஜாலம், நீரிலெழுத்து ஆகாயத்தாமரை, முயற்கொம்பு ஆகிய இவற்றைப்போல் பொய்யாயொழியுமென்று அவற்றின் நிலையாமையை விளக்கிக் காட்டினரேயன்றி ஏகாத்மவாதநூல்களிலே சொல்லப்படும் கயிற்றரவு, கிளிஞ்சல்வெள்ளி, கந்தர்வநகரம், மலடிபுத்திரன், தாணுபுருஷன் ஆகிய இந்த உவமைகளைச்சொல்லிச் சூனியமென்று மறந்துங்கூறினாரல்லர். இதுவே சற்காரிய வாதங்கூறும் வைதிக சைவமரபாகும். ஆதலால் தாயுமானவர் வைதிக சைவரே.

இவையிங்ஙனமிருக்க, மேற்சொன்ன ஞானவழி பாடென்னும் அறிவுத்தொழில் வழிபாட்டைச் செய்ய இயலாதவர்க்கு அவர்கள் உய்யவேண்டி கடவுள் அருவம், அருவுருவம், உருவம் என்னும் மூன்று வடிவங்களையும கருணையால் கொண்டருளுவாராயினர். அவ்வருட்கோலங்களே தடஸ்தநிலையென்றுசொல்லப்படும் அவற்றுள் அருவவழிபாடு மனத்தை இந்திரியங்களின் வழி செல்லவொட்டாது தடுத்து அந்தச் சுத்தமனத்தால் அகத்தே தியானிக்கப்படுவதாகும். அவ்வாறு தியானமியற்றுவோர் யோகிகள் என்று சொல்லப்படுவர். அந்தத்தியான வழிபாடே பதிப்பொருளைப்பற்றியது. அப்பொருளுக்கு வடிவ முதலாயின இல்லாமையால் சர்வ வியாபகஞ் சிறக்கும். அப்படியிருந்தும் அது ஞானவழிபாட்டினுந் தாழ்ந்ததாகும். இனி அருவுருவ வழிபாடாவது மனத்தை ஒருவாறு அடக்கியும், இந்திரியங்களின் வழி பெரிதும் செலுத்தியும் வழிபடுவதாகும். அதாவது, அகத்தே மனத்தினுல் இருதயத்தில் பூஜையும், உந்தியில் ஓமமும், புருவநடுவில் தியானமும் செய்தலோடு புறத்தே இந்திரியங்களால் இலிங்கவடிவில் பூஜையும், அக்கினியில் ஓமமுஞ் செய்தலாம். இவ்வழிபாடு செய்வோர் கிரியையாளர் எனப்படுவர். உருவவழிபாடாவது ஆலயத்திலே சென்று அங்கு அருட்குறி

தோன்ற எழுந்தருளியிருக்கின்ற அருவுருவத் திருமேனியை யுடைய சிவலிங்கப் பெருமானையும், சந்திரசேகரர், உமாமகேசுவரர் முதலிய மூர்த்தங்களையும் வழிபடுவதாகும். அது புறத்தே இந்திரியங்களால் வழிபடுவது. அதைச் சுருக்கமாகக்கூறின் கண்ணாகிய இந்திரியம் உருவத்தைத் தரிசிக்கவும், காதாகிய இந்திரியம் அவருடைய குணமகிமைகளைக் கேட்டுநிற்கவும் பெற்று மெய்மறந்து நிற்றலாம். இவ்வாறு ஞானேந்திரியங்கள் மாத்திரமல்ல. கர்மேந்திரியங்களுள் கால்கள் வலம்வருவதும், கைகள் கூப்புவதும், வாக்கு வாழ்த்துவதுஞ் செய்தலாம். தெய்வவழிபாட்டில் பிரயோசனப்படும் இவ்விந்திரியங்கள் ஒருவழிப்பட்டு நிற்கும்போது மற்றைய இந்திரியங்களுங்கூட ஒடுங்கி அவற்றின் வழியே சார்ந்து நிற்கும். அப்பொழுது கரணங்களும் கசிந்துருகி இந்திரியங்களின் வழியேநின்று உண்மைபக்தி செய்து பரவசப்பட்டுநிற்கும். இவற்றின் விரிவான தத்துவார்த்தத்தைத் தடுத்தாட்கொண்டபுராணம்.

ஐந்துபேரறிவுங் கண்களேகொள்ள வளப்பெருங் கரணங்க ளான்குஞ்
சிந்தையேயாகக் குணமொருமூன்றுந் திருந்துசாத்து விதமேயாக
இந்துவாழ்சடையா னுமொனந்த வெல்லையில் தனிப்பெருங் கூத்தின்
வந்தபேரின்ப வெள்ளத்துட் டிளைத்து மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்.

என்ற திருச்செய்யுளில் கண்டுதெளிக. இவ்விதமானகாயத்தால் வழிபாடியற்றுவோர் அயராவன்புடைய சரியையாளரெனப்படுவர். அவர்கள் மாத்திரமல்ல. மேற்சொன்ன கிரியையாளரும், யோகியரும், ஞானிகளுங்கூட மனமும் அறிவும் புறத்திந்திரியங்களின்வழி செல்லும்போதெல்லாம் அவற்றை விஷயங்களிலே செல்லவொட்டாது தடுத்துக் கடவுளிடத்துச் செலுத்துதற்பொருட்டு ஆலயவழிபாடு செய்யாநின்றார்கள் அவ்வாறு ஞானிகள் செய்வதால் அவர்களை ஞானிகளல்லவென்று புறங்கூறுதல் கூடுமோ! திருத்தாண்டகவேந்தர் "ஞானத்தாற் றொழுவார் சிலஞானிகள், ஞானத்தாற் றொழுவேனுனை நானலேன், ஞானத்தாற் றொழுவார்க டொழக்கண்டு, ஞானத்தாலுனை நானுந் தொழுவனே" என்று வற்புறுத்தியுள்ளார். சிவஞான சித்தியாரும் "ஞானயோகக்கிரியா சரியைநாலு நாதன்றன் பணிஞானி நாலினுக்குமுரியன்" என்று பணித்தருளியது.

இதுகாறுங் கூறியவற்றால் கடவுளுடைய உண்மைச் சொரூபமான ஞானநிலை ஒன்றெனவும், ஆத்மாக்களின் பொருட்டு அருவமுதலாகக்கொண்ட நிலை மூன்றெனவும் நிரூபிக்கப்பட்டது. படவே, இந்நான்கு நிலையும் அறிவால்மட்டும் வழிபடுதலும், மனத்தால்மட்டும் வழிபடுதலும், மனத்தாலும் காயத்தாலும் வழிபடுதலும், காயத்தால்மட்டும் வழிபடுதலும் ஆகிய நான்குவகையுள் அடங்கியுள்ளன. அவையே மோட்சஹேதுவான சிறந்த சிவாராதனங்களாம். அவற்றின் பலனாகிய முத்திகளும் பரமுக்தி, அபரமுக்தி, பதமுக்திஎன மூன்றாய்த்திகழ்கின்றன. வைதிகசைவத்தில் பிரதிபாதிக்கப்பட்ட கடவுளுடைய நான்கு நிலைகளுக்கும் பிரமாணம் வருமாறு:—

சிவஞான சித்தியார்.

உருமேனி தரித்துக் கொண்ட தென்றலு முருவிறந்த
வருமேனி யதுவுங் கண்டோ மருவுரு வானபோது
திருமேனி யுபயம் பெற்றோஞ் செப்பிய மூன்று நந்தங்
கருமேனி கழிக்கவந்த கருணையின் விளைவுகாணே.

உருவருள் குணங்களோடு முணர்வரு ளுருவிற் றோன்றுங்
கருமமு மருளரன்றன் கரசரணாதி சாங்கம்
தருமரு ளுபாங்கமெல்லாந் தானருடனக் கொன்றின்றி
அருளுரு வுயிருக்கென்றே யாக்குவ னசிந்தனன்றே.

திருவிளையாடற் புராணம்.

அருவாகி யுருவாகி யருவுருவங் கடந்துண்மை யறிவானந்த
உருவாகி யளவிறந்த வுயிராகி யவ்வுயிர்க்கோ ருணர்வாய்ப்பூவின்
மருவாகிச் சராசரங்க ளகிலமுந்தன் னிடையுதித்து மடங்கநின்ற
கருவாகு முளைத்தசிவக் கொழுந்தை யாயிரங்கண்ணும் களிப்பக்கண்டான்.

கந்த புராணம்.

அருவமு முருவுமாகி யநாதியாய்ப் பலவா யொன்றாய்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனியாகக்
கருணைகூர் முகங்க ளாறுங் கரங்கள்பன் னிரண்டுங் கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங் குதித்தன னுலக முய்ய. .. என்பனவாம்.

இனி கடவுள்கொள்ளும் அருவுருவத்திருமேனி ஈசாநாதி மந்திரங்களால் அமைக்கப்பட்டுள்ளது. அம்மந்திரத் திருமேனியை நேரே தரிசிக்கமுடியாது. அதனால் அதைச் சிலைமுதலியவற்றாற் சமைத்த உருவிற்பாவித்துப் பிரதிஷ்டைசெய்து வழிபடவேண்டி யிருக்கின்றது. அவ்வடிவில் கடவுள் மந்திரசரீரி

யாய் ஆவிர்ப்பவித்து ஆத்மாக்கள் செய்யும் வழிபாட்டை மிக்க கருணையோடு ஏற்றுக்கொண்டு அருள்புரிகின்றனர். அல்லாமலும், அவ்வருவுருவத் திருமேனியேயன்றி உருவத்திருமேனிகளையும் ஆத்மாக்களின்பொருட்டு அவர் தாங்குகின்றனர். அந்தத்திருமேனிகளுங்கூட சில முதலிய உருவங்களிற் பாவிக்கப்பட்டு வழிபடப்படுகின்றன. அத்தகைய அருவுருவ உருவத்திருமேனிகளைத் தான் விக்கிரகாராதனம் என்று சிலர் குறைகூறி வருகின்றார்கள் அந்தோ! இது கேவலம் அஸங்கதம். வேதங்கள் ஆகமங்கள் முதலிய எந்த வித்தையும் அவ்வழிபாட்டை விக்கிரகாராதனம் என்று வழங்கினதேஇல்லை. கடவுள் எங்கும் நிறைந்த சர்வபரிபூரணராதலின் மந்திர சம்ஸ்காரம், பிரதிஷ்டை முதலியவற்றோடுங்கூடிய திருமேனிகளையும், அன்பேவடிவாய்த் திகழ்ந்து பாவிக்கப்பட்ட திருவுருவையும் அதிஷ்டித்து அவற்றின்வழி ஆத்மாக்கள் செய்யும் வழிபாட்டை ஏற்றுக்கொள்ளுதல் அவருக்கு இன்றியமையாத பரமகருணாமய விலக்கணமாம். ஆதலால் அது கடவுள் வணக்கமாகுமேயன்றி விக்கிரகவணக்கமாகமாட்டாது. விக்கிரகவழிபாடு சரீரவழிபாடாகும். நாம் வழிபடுவது சரீரத்தையன்று சரீரத்துக்குள் எழுந்தருளியிருக்குஞ் சரீரியாகிய தேவாதிதேவனை. உயிர்சித்தாயினுஞ் சடமாகிய சரீரத்தை இடமாகக்கொண்டு அதை இயக்குதலைக் கண்கூடாக அறிகிறோம். அதுபோல கடவுளுஞ் சித்துப்பொருளாய் எங்கும் நீக்கமற நிறைந்தவராயினும் விக்கிரகமாகிய உருவத்தைத் தமக்கு இடமாகக்கொண்டு நின்று ஆத்மாக்களுக்கு அநுக்கிரகஞ்செய்கின்றனர். எப்படி அக்கினியானது விறகு, திரி முதலியவற்றை இடமாகக்கொண்டு அடுதல், சுடுதல், ஒளிகால்தல் முதலியவற்றைச் செய்கின்றதோ அப்படியே கடவுளும் குரு லிங்க ஜங்கமங்களை இடமாகக்கொண்டு ஆத்மாக்கள் புறத்திற் செய்யும் வழிபாடுகளை ஏற்று அருள்புரிகின்றனர். அல்லாமலும், விக்கிரஹம் என்னுஞ் சொல் (வி - விசேஷமாக, கிரஹம் - கிரஹித்தல்) விசேஷமாகக் கிரஹித்தற்குரிய உருவம் என்று பொருள்படும். அதாவது வியாபகமாயுள்ள சூரியனுடைய கிரணங்களுக்கெதிரே பஞ்சைப்பிடித்தால் அப்பஞ்சில் அக்கினி பற்றக்காணவில்லை. ஆனல் அக்கிரணங்கள் பலவற்றையும் கண்ணாடி யொன்றில் ஒருமுகப்படுத்தி அதன் எதிரே பஞ்சைப்

பிடிக்கின் அப்பஞ்சில் அக்கினிபற்றுதல் பிரத்தியட்சமன்றோ. அதுபோல பரமசிவத்தினுடைய அருட்குணங்களனைத்தையும் விக்கிரகத்தில் ஒருமுகப்படுத்தி வழிபடல் மூர்த்திவணக்கமென்றுசொல்லப்படும். திருவெண்காட்டடிகளும் "சொல்லினுஞ் சொல்லின் முடிவினும் வேதச்சுருதியினும், மல்லினும் மாசற்ற வாகாயந்தன்னிலும் மாய்ந்துவிட்டோர், இல்லினு மன்பரிடத்தினு மீசனிருப்பதல்லாற், கல்லினுஞ் செம்பினுமோ யிருப்பானெங்கள் கண்ணுதலே" என்றனர். இதனால் கல்லினுஞ் செம்பினுங்கூட கண்ணுதற்பெருமான் இருந்து அநுக்கிரகஞ்செய்கின்றார் என்று பெறப்பட்டது. ஒலிவடிவாகிய எழுத்துக்களை வரிவடிவாகிய எழுத்துக்களாற் கண்டறிவதுபோல அருவமாகிய கடவுளை அவரால் தோற்றுவிக்கப்பட்ட வுருவங்களில்வைத்து அறிதல் வேதசம்மதமாகும்.

இத்தகைய வழிபாடெல்லாம் கேட்டுச்சிந்தித்துத் தெளிந்த மெய்யன்பர்களாகிய வைதிக சைவர்களுக்கே சிறப்பாகவுரிய சொரூப சிவவணக்கம் ஆகா. அது ஆன்மாவின் நேர்வணக்கமாதலின் கேவலம் ஞானமார்க்கத்தாலன்றி வேறெதனாலும் வழிபடத்தக்கதன்று. மற்று தடஸ்த சிவபேதத்துட்பட்ட மூர்த்திகளின் வணக்கமென்றே அறியக்கடவாய். அநுக்கிரகார்த்தமாகக்கொண்ட இம்மூர்த்தங்கள் பலவகைப்படினும் முடிவில் ஏகமாகிய சிவபரஞ் சுடரேயாம். பசுக்கள் பலநிறங்களை யுடையனவாக விருப்பினும் அவைகளினின்றும் வெளிப்பட்ட பாலானது ஒரே நிறமாயிருத்தல்போல மூர்த்திபேதங்கள் அனந்தமாக விருப்பினும் எங்கும் நிறைந்த சிவபரம்பொருள் நிர்ணயத்தில் பேதமேகிடையாது. "ஏகனனேகன் இறைவனடிவாழ்க" என்றார் திருவாதவூரடிகள். இறைவன் எடுக்குங் கோலங்கள் பிறராற் படைக்கப் படுதலின்றி அவனருளால் எடுக்கப்படுவனவாதலால் அவைபற்றி அவன் வேறுபாடுறுதல் சிறிதுமில்லை. அவ்வடிவங்கள் அவனது அறிவின்கண் தோன்றும் ஞானவடிவங்களாம். ஆகையினாலே ஸ்ரீ தாயுமான சுவாமிகளும், "ஞானமேவடிவாய்த் தேடுவார்தேடும் நாட்டமே" என்று வாழ்த்தினார். மைத்ராயண்யுபநிஷத்தெவாவ ஐ்ஹணோரூவெ உூ_தூஞா உூ_தூஞாய|

யநூூ_தூ்ஂ தஜஸ_த்ூ்ஂ யஜூஉூ_தூ்ஂ தத்ூ_தூ்ஂ தஜஐ்ஹ தஜஜ்யொதிஃ||

த்வேவாவ ப்ரஹ்மணோரூபே மூர்த்தஞ்சா மூர்த்தஞ்சாத।
யந்மூர்த்தம் தத்ஸத்யம் யதமூர்த்தம் தத்ஸத்யம் தத்ப்ரஹ்ம தத் ஜ்யோதிஃ॥

(இ-ள்). "பிரமத்துக்கு மூர்த்தம் அமூர்த்தம் என இரண்டு ரூபங்களுண்டு. எது மூர்த்தமோ அது அசத்தியமானது (அதாவது தோன்றிநின்று மறைவது). எது அமூர்த்தமோ அது சத்தியமானது. அது பிரமம் அது தேஜஸ்" என்று நவின்றது.

மா - மஹாதேவ சப்தத்தையும் விளக்கியருளல்வேண்டும்.

ஆ - விளக்குதும். அதர்வணவேத அதர்வசிரோபநிஷத்.

[Grantha-script verse]

அதகஸ்மாதுச்யதே மஹாதேவஃ யஸ்ஸர்வாந் பாவாந் பரித்யஜ்ய
ஆத்மஜ்ஞானயோகைஸ்வர்யே மஹதிமஹீயதே தஸ்மாதுச்யதேமஹாதேவஃ॥

(இ-ள்). "பின்னர் எதுபற்றி மஹாதேவர் எனப்படுகின்றார். எல்லாவியல்புகளையும் விடுத்து மகத்தாகிய பரமாத்மானந்த யோகைசுவர்யத்தின் பொருட்டுப் பூசிக்கப்படுகின்றனர் அதுபற்றி மஹாதேவர் எனப்படுகின்றனர்" என்று மொழிந்தது. இம்மந்திரத்தில் கூறப்பட்டுள்ள மஹாதேவநாமம் சிவபரம் பொருளுக்கே ரூடியாக உரியது. (123 - ம் பக்கத்தில் எடுத்துக் காட்டிய கர்ப்போபநிஷத் மந்திரத்தானும், (53-ம் பக்கத்தில் விளக்கிய காயத்திரி மந்திரங்களானுந் தெளிக). இவர் தேவர்களுக்கெல்லாந் தேவராயிருத்தலினாலே தேவாதிதேவரென்றழைக்கப்பட்டனர். "[Grantha-script text]-விக்ரஹம் தேவதேவஸ்ய விச்வமேதச்சராசரம்-இந்தச்சராசரம் யாவும் தேவாதி தேவருடைய வடிவம்" என்னும் வாயுஸம்ஹிதை உத்தரபாகப் பிரமாணப்படி சர்வ சேதனசேதனப் பிரபஞ்சங்களையும் தமக்குச் சரீரமாகக்கொண்டு விளங்குகின்றவரும் இம்மஹாதேவரே. எப்படி விருட்சமூலத்தில் ஊற்றியஜலம் அவ்விருட்ச சாகைகளைப் புஷ்பிக்கும்படிச் செய்கின்றதோ அப்படியே சிவபெருமானுடைய பூசையினாலே அவருடைய சரீரமாகிய சர்வ வுலகங்களும் செழிக்கின்றன. பிருதிவிமுதல் நாதமீறாகச்சொல்லப்பட்ட முப்பத்தாறு தத்துவங்களையும் சிவபெரு

மான் வியாபித்து நின்றமையால் விஷ்ணு எனப்பட்டனர். படவே விஷ்ணுநாமம் நாராயணருக்கே உரித்தென்னுங்கூற்று பயனற்றதாயிற்று. அதர்வசிகோபநிஷத் "ஸர்வே தேவாஸ்ஸம் விஸந்தீதி விஷ்ணு:-ஸர்வேதேவாஸ்ஸம் விசந்தீதிவிஷ்ணு:-எல்லாத் தேவர்களும் எங்கு அடங்குவார்கள் அவர் விஷ்ணு" என்று விஷ்ணுநாமத்தைச் சிவபரமாக நாட்டியது. சிவபெருமான் சர்வதேவ வியாபகராயிருத்தல் பற்றியே கூர்மபுராணமும்.

> ஶிவோ மஹேஶ்வரஶ்சைவ ருத்ரோ விஷ்ணு: பிதாமஹ:
> ஸம்ஸாரவைத்ய: ஸர்வஜ்ஞ: பரமாத்மேதி தத்வத:।
> ஏதந்நாமாஷ்டகம் புண்யம் ஶிவஸ்ய பரமாத்புதம்
> ரஹஸ்யம் ஸர்வஶாஸ்த்ரேப்ய: ஸாரபூதம் ஸமுத்ருதம்॥

> சிவோ மஹேச்வரச்சைவ ருத்ரோ விஷ்ணு பிதாமஹ:
> ஸம்ஸாரவைத்யஸ்ஸர்வஜ்ஞ: பரமாத்மேதிதத்வத:।
> எதந்நாமாஷ்டகம்புண்யம் சிவஸ்யபரமாத்புதம்
> ரஹஸ்யம்ஸர்வசாஸ்த்ரேப்யஸ் ஸாரபூதம் ஸமுத்ருதம்॥

(இ-ள்.) "சிவன், மகேசுவரன், உருத்திரன் விஷ்ணு, பிதாமஹன், ஸம்ஸார வைத்தியன், ஸர்வஞ்ஞன், பரமாத்மா என்னும் எட்டுநாமங்கள் மஹா அற்புதராயும், புண்ணியராயுமுள்ள சிவபெருமானுக்குச் சமஸ்த சாஸ்திரங்களினின்று சாரமாகவும் ரகசியமாகவும் எடுக்கப்பட்டன" என்று நிர்ணயித்தது. மேலும் அஷ்டமூர்த்தங்களுள் ஒன்றாகிய ஆகாசத்தில் மஹாதேவ சப்தத்தால் எழுந்தருளியிருப்பவரும் அவரேயாம். அவரது பெயராகிய இம்மஹாதேவநாமம் பரத்தியல்பை முக்கியமாயும் தெளிவாயும் உணர்த்துதலினாலே வேதநாயகி மற்றைத் தேவர்கள் அளவுள்ள ஆனந்தத்தையுடையவர்களென்றும்; அவர்களை முற்றும் ஒழித்துவிட்டு அந்தமிலாவானந்தமுடையவர் சிவபெருமான் ஒருவரேயென்று அவரை ஸ்பஷ்டமாய் எடுத்துக்காட்டி, மோட்சாபேட்சையுடைய முமூட்சுக்கள் வேறு தேவதைகளைப் பூசிக்கும் பேதமையைச் சிறிதுஞ் சகிக்காமல் சிவோபாசனத்தால் அடையப்பெறும் நித்திய நிர்மல நிரதிசய பரமானந்த அற்புத நிஷ்டையொன்றே முக்கியமென்று அவர்களுக்கு நல்லறிவுச்சுடர் கொளுத்த இந்நாமத்தைப் பிரகரணத்தின் இறுதியில்வைத்து நிரூபித்தனள். இதனால் அயன், அரி, அரன் என்னுந் திரிமூர்த்

திகள் பரமுக்தியின்பொருட்டுச் சேவியராயினரல்லர் என்று பெறப்பட்டது. படவே சர்வ மூலகாரண துரீய மூர்த்தியாகிய மஹாதேவரே பாசமோசனத்தின்பொருட்டுச் சர்வாத்மாக்களாலும் சேவிக்கப்படுஞ் சேவியப்பொருள் ஆயினரென்று பிரமவித்தை நாட்டியதாயிற்று. திருத்தாண்டகவேந்தரும், "மாதேவா மாதேவா வென்று வாழ்த்தி நீராண்டபுரோதாயமாடப் பெற்றோம்" எனவும், "வாதுசெய்து மயங்குமனத்தராய், ஏது சொல்லுவீராயினு மேழைகாள், யாதோர் தேவரெனப்படுவார்க்கெலாம், மாதேவனலாற் றேவர் மற்றில்லையே" எனவும் ஓதிபரத்துவ நிர்ணயஞ் செய்தருளினர். மஹா என்னும் வடமொழிப் பதம் தமிழில் மா என வழங்கிற்று. திருமூலதேவரும், "உய்ய வல்லார்கட் குயிர் சிவஞானமே, உய்ய வல்லார்கட் குயிர்சிவந் தெய்வமே, உய்யவல்லார்கட் கொடுக்கம் பிரணவம், உய்யவல்லாரறிவுள்ளறிவாமே." என்று நிறுவினர்.

உலகெலாங்கடந்த உண்மைப்பொருளாகிய சிவபெருமானை மஹாதேவர் ஆனந்த வடிவினரென்பது அவரது ஆனந்த நடராஜகோலமே செவ்வனேவிளக்குகின்றது. வேதமும், "ஆநந்தோப்ரஹ்ம-ஆனந்தோப்ரஹ்ம-ஆனந்தமுடையது பிரமம்" எனவும், "ஸர்வாநந்தமயஶ்ஶிவ:-ஸர்வாநந்தமயச்சிவ: - சர்வானந்தமயர் சிவபெருமான்" எனவும் ஓதியது. முக்தாத்மாக்களுக்கு நித்தியானந்தமளித்தலால் அவரது நடனம் ஆனந்தத்தாண்டவமெனப்படுகிறது. அது ஒருகாலத்தும் ஒழிவதில்லையாகலின் அநவரதத்தாண்டவமெனவும் படுகின்றது. அந்தத் திருத்தாண்டவம் நிகழும் தெய்வஸ்தானம் அண்டத்தில் சிதம்பராலய நடுவிலுள்ள சிற்சபை ஆனந்த நடராஜமூர்த்தியின் திருவுருவம் பிரணவத்தின் உள்ளொளியாயுள்ள ஸ்ரீபஞ்சாக்ஷரம். அவரை அடக்கியுள்ள திருவாசி (பிரபை) பிரணவம். அவர் எழுந்தருளியிருக்கும் ஆசனமாகிய பீடம் பிரணவம். அவர் எழுந்தருளியுள்ள சுவர்ணவிமானம் அப்பிரணவத்தினின்றும் எழுந்ததேயாம். இவ்வாறு பிரணவமும் பிரணவப்பொருளாயுமுள்ள பரமசிவமே எவ்வளவிலும் அடங்காத இணையற்ற ஆனந்தக்கடலாதலின் அவரது மஹாதேவ நாமத்தைப் பிரணவவித்தை இறுதியில் வைத்துத் துதித்தது. மணிவாசகப்பிரானும், "அந்தமிலாவானந்த மணிகொடில்லை கண்டேனே" எனவும், "அண்டமுதலாயி

னுனந்தமிலாவானந்தம், பண்டைப் பரிசேபழவடியார்க் கீந்தரு ளும்" எனவும், திருமூலதேவரும், "பேச்சற்றவின்பத்துப் பேரா னந்தத்திலே, மாச்சற்றவென்னைச் சிவமாக்கி மாள்வித்து" என வும் வலியுறுத்தினுர்கள். இன்னும் ஆனந்த நடராஜரது குஞ் சிதபாதமே ஆனந்தாநுக்கிரகமாகும். அதற்கே எடுத்து மடித்தா டுந் திருவடியென்று பெயர். அது ஆத்மாவின் ஜீவன் முக்தி நிலையிலே சர்வஞ்ஞத்வாதி அறுகுணங்களையும் விளங்கச்செய்தல் திருவடியாவது சிவத்தின் அறுகுணமாகும். திருவடியை உயர வெடுத்தலாவது அவ்வறுகுணங்களையும் ஆத்மாவின் வியாபக முழுதும் மேலிடச்செய்தல். திருவடியை மடித்தலாவது அவ் வாறு மேலிட்ட அறுகுணங்களையும் எஞ்ஞான்றும் நிலைபெற நிறுத்துதல். பாச க்ஷயமும் வீடுபேறுமாகிய இருதொழில் திரு வருளால் நடக்குமென்பது தோன்றவே அவ்வருட்சத்தி வடி வாகிய இரண்டு திருவடியில் ஒன்று கிரியாசக்தி-மலத்தைப் பக் குவப்படுத்தி மேலிடாது அழுத்த, மற்றத் திருவடியாகிய ஞான சக்தி-ஆத்மாவின் வியாபகமுழுதும் தான் மேற்பட்டு நின்று சிவாநந்தத்தை நித்தமாய்ப் பதித்தலாம். அதனுல் நித்தியமாயும் நிர்மலமாயும், நிரதிசயமாயுமுள்ள பிரமானந்தத்தை ஆத்மாக்க ளுக்கு அளிப்பவர் மஹாதேவரே.

மா - பிரணவத்துக்கே இயல்பாகவுள்ள இவ்வரிய பெரிய மஹிமைகளெல்லாம் சிவபெருமான் ஒருவரிடத்தே சேர்க்க வேண்டுமென்று கூறுவது எற்றுக்கு? அதர்வசிகாவிலாச முத லிய பெருநூல்களில் வைஷ்ணவர்கள் இம்மஹிமைகளனைத் தையும் விஷ்ணுபரமாகக்கொள்வதே பொருத்தமுடையதென்று செப்பியிருக்கின்ருர்களே அதற்கேதாவது பரிகாரமுண்டோ? ஐயனே! கூறியருளுக.

ஆ - வைஷ்ணவர்கள் அவ்வாறு விஷ்ணுபரமாகக்கொண்டது தம்மதத்திற்குப் பெருமையுண்டாக்கும்பொருட்டேயன்றி வேறு ன்று. அகாரணசிவத்துவேஷமும் ஒருவாறு காரணமாகலாம். எவ்வாறெனில், வேதத்தின் உச்சியிலமைந்த அதர்வசிகோபநிஷத் அதர்வசிரோபநிஷத்தை அநுவதித்தே அதிற்கண்ட வைதிக பாசுபத பிரமவித்தையைச் சிறப்பித்துக் கூறியிருக்கின்றது. அதனுலே அவ்விரண்டு உபநிஷத்துக்களுக்கும் வித்தை ஒற் றுமை கூறவேண்டியது அத்தியாவசியகம். ஏனைய உபநிஷத்துக்

களைப்போல "ஐதத்யுபநிஷத்-இத்யுபநிஷத்-இங்ஙனம் உப நிஷத் முடிந்தது" என்று பொதுவாகக்கூறி முடிக்காமல் "ஶிவ ஏகோத்யேயஶ்ஶிவங்கரஸ் ஸர்வமந்யத் பரித்யஜ்ய ஸமாப்தா அதர்வஶிகா-சிவ ஏகோத்யேயச்சிவங்கரஃ ஸர்வமந்யத் பரித்யஜ்ய ஸமாப்தா தர்வசிகா-சிவத்துவமென்னும் மோட்சத்தையளிப்பவரான சிவபெருமானொருவரே அந்நியமாயுள்ள எல்லாவற்றையும் விட்டுவிட்டுத் தியானிக்கத்தக்கவர். அதர்வசிகை முடிந்தது" என்று அதர்வசிகை தானே கூறி முடித்துக்கொண்டமையால் அதர்வசிரத்திற்போந்த வைதிக பாசுபத பிரணவாபின்ன பிரம வித்தையே மிகச் சிரேஷ்டமென்றும், அவ்வித்தையின் வழி பரமாத்ம பிரணவ சிவோபாஸ்தி செய்வதே மோட்சத்துக்கு நேர் சாதனமென்றும், ஏனைய வேதாந்தங்களிற் குறிக்கப்படும் வித்தைகளும் தேவோபாசனைகளும் அதை நோக்கத் தாழ்ந்தபடியென்றும் நிரூபித்தவாறாயிற்று. ஆத்மகோடிகள் நற்கதியடைய உபதேசிக்கவேண்டிய சத்தியப்பொருள் சிவத்தைத்தவிர வேறொன்றுமில்லையாதலின் வேதத்துரோகிகள் வேறு தேவதாபரங்களை இடையில்நுழைத்துச் சிவபரத்துவத்தைக் கெடுக்காவண்ணம் சிவமஹிமையினைக்கூறி முடித்தவுடன் அதர்வசிகைமுடிந்தது என்று தன் சமாப்தியைத்தானே இயம்பி முத்திரையிட்டுக்கொண்டது அப்படியிருந்தும் திக்விஜயம் எம்பாவையங்கார் என்பவர் அதர்வசிகாவிலாசம் என்னும் ஓர்நூல் அதர்வசிகோபநிஷத்துக்கு வைஷ்ணவபரமாக இயற்றியுள்ளார். அது சிவத்துவேஷங்காரணமாக வெழுந்ததென்பது அதை வாசிக்கின்றவர்களே எளிதிலுணரலாம். அதற்கு அதர்வசிகாவிலாசநிரசனம் என்னும் ஓரரியகண்டனநூல் அப்பொழுதே வெளிப்பட்டு அவ்விலாசத்தைச் சின்னபின்னப்படுத்தி யிருக்கின்றது. அந்நிரசனம் இயற்றியவர் மைசூர் வீரபத்ர ஆராத்ய சுவாமிகள். அவரோடு வாதஞ்செய்த இவ்வெம்பாவையங்கார் அவரை வாதத்தில் வெல்லமுடியாமல் பரிபவப்பட்டுத் தம்முடைய விருதுமுதலியவற்றை அச்சுவாமிகளுக்களித்து தாமுந் தங்கூட்டத்தினரும் அவருக்கு அடிமையாய் உய்ந்தனரென்று சங்கரபட்டரா லியற்றப்பட்ட சகலவேதசிகாமணி என்னும் நூல் சாற்றுகின்றது.

அது அவ்வாறிருக்கப் பிரணவ மஹிமைகளனைத்தையும் சிவபெருமான் ஒருவரிடத்தே சேர்க்கவேண்டுமென்பதற்கு வே

ெருரு சிறந்த நியாயத்தையுங் கூறுதும். அதர்வசிரோபநிஷத் பிரணவப்பெயர்களையும், அவற்றின் பொருளாயுள்ள சிவநாமங் களையும் கிரமமாகக்கூறி முடித்தவுடனே "தஜெ-த ஜ-ஊ ஷி தம்-ததேதத்ருத்ரசரிதம்-அந்த ஈதெல்லாம் உருத்திரமூர்த்தியி னுடைய பிரபாவம் (மஹிமை எனவும், "தஜெ-தஜ-வாஷி-த வூும்-தமேதது பாஷிதவ்யம்-அந்த இதனை உபாசிக்கவேண்டும்" எனவும் உபசங்கரித்தது. உபசங்காரத்தில் ஏனைய தெய்வங் களின் பெயர்களையும், வாசுதேவ நாராயணுதி நாமங்களையுங் கூருதகாரணம் அத்தெய்வங்களுக்குத் தியேயத்வம் வேதாந்தங் களில் யாண்டும் படிக்கப்படா திருப்பதன்ரு. பிரணவபீடத் திருப்பவரும்,பிரணவத்திருமேனியுடையவரும், பிரணவப்பொரு ளாயுள்ளவருமான சிவபெருமாளுருவருக்கே தியேயத்துவம் சொந்தமாதலால் உருத்திரமஹிமையென்று பிரமவித்தை முடிந் தது. மும்மூர்த்திகளுக்கும் மேலான சமானுதிக ரஹிதர் உருத் திரமூர்த்தியேயென்று முன்னரே விளக்கிக் காட்டப்பட்டிருக் கின்றது இவற்ருல் "இனி எதனுல் ஓங்காரனெனப்படுகின்ருன்" என்று தொடங்கியது முதல் "இதனுல் மஹாதேவன் எனப்படு கின்ருன்" என்பதீருக நிரூபிக்கப்பட்ட சர்வ லட்சணங்களும் மஹா ருத்திரராகிய ஸ்ரீபரமேசுவரரையே பற்றியுள்ளனவென வும், அவரது காளகண்டம், திரிநேத்திரம், சதுர்புஜம், மான், மழு, மங்கைபாகம்முதலிய வேதோக்தமான லிலக்கணம்பொருந் திய சிவசொரூபத்தையே அவித்தையிருளிரிய எல்லாவற்றையும் பரித்தியாகஞ் செய்துகொண்ட சந்நியாசிகளுங்கூட உபாசிக்க வேண்டுமெனவும் சுருதி சகல ஐயங்களுமற நிச்சயப்படுத்திற்று.

மா.—தியேயப்பொருளாகிய துரீயருத்திரமூர்த்தியின் உபா சனையால் கிடைக்கத்தக்கபேறு மோட்சமாயின் அம்மோட்சத் தின் சொரூபம் எத்தன்மைத்து ? ஐயனே ! அநுக்கிரகஞ்செய்த ருளவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தான்.

ஆ.—ஆம் அப்படியே செய்வோமென்று களிப்புற்றவராய்க் கூறுவாராயினர்.

அதர்வணவேத அதர்வசிரோபநிஷத்.

ரு-ஊ வஎகஸ்வோஹ-ஃ-ருத்ரஏகத்வமாஹ-ஃ॥

(இ-ள்.) "உருத்திரர் ஒருவரேயாமென்பர்" என்று பிரகா சப்படுத்தியது, ஈண்டும் உருத்திரநாமமே கேட்கப்படுகின்றது.

இதனுலே உருத்திரர் ஒருவரிடத்தே தான் ஏகத்வமுளதென்பது சுருதியின் இருதயமாயிற்று. அவர் விசுவகாரணராயும், விசுவ சொரூபராயும், விசுவாந்தர்யாமியாயும், விசுவாதீதராயும், விசுவ சேவியராயும், பரமசாந்தராயும், பரமசாந்தியைக் கொடுப்பவரா யும் இருத்தலால் அவரை முக்தி சொரூபரென்று பெரியோர் அழைத்தனர். அவரோடு ஐக்கியமடைதலே பரமுக்தியாம். ஐக்கியமாவது இரண்டு தனிமுதல்கள் வெவ்வேறுகவிருந்து பின்பு ஒன்று கூடியதல்ல. அநாதியே சிவத்தோடு அனன்னியமாய் அத்துவிதப்பட்டிருந்தும் மலத்திற்கட்டுண்டிருந்த ஆத்மா கட்டு விட்டுச் சிவத்துவமடைந்து வானூடடங்கும் வளிபோல அருள் நிறைவிலழுந்தி ஒன்றிரண்டென்னுமற் சும்மாவிருக்கும் அறிவு மயமான சுத்தாத்வைத சித்தியென்னும் இன்பாதீத பரிபூரண நிலையாம். அதைத்தான் "ஆணவத்தோடத்துவிதமானபடி மெஞ் ஞானத் தாணுவினோடத்துவிதஞ் சாருநாளெந்நாளோ" என்று தாயுமானவர் குறிப்பித்தருளினர். அந்நிலையில் ஆனந்தமன்றி வேறென்றும் அநுபவிக்கப்படுவதன்று. அவ்வானந்தமே பரமா னந்த சிவமாம்.

## ஸாமவேதசாந்தோக்யோபநிஷத்.

யத்ர நாந்யத் பஶ்யதி நாந்யச் ச்ருணோதி நாந்யத் விஜாநாதி ஸ பூமா ।

யத்ரநாந்யத்பசயதி நாந்யச்ச்ருணோதி நாந்யத்விஜாநாதிஸபூமா।

(இ-ள்.) "எங்குவேறென்றுங் காண்கிலனுய், வேறென் றுங் கேட்கிலனுய், வேறென்றும் அறிகிலனுய் ஆகின்றனே அது பூமா எனப்படும்" என்றும்,

ஸ்ரீவைவஸுகம்-பூமைவசுகம்।

(இ-ள்.) "பூமாவே இன்பம்" என்றும் வியந்தோதியது. சுந்தரமூர்த்தி சுவாமிகளும், "இறைகளோ டிசைந்தவின்பம் இன்பத்தோடிசைந்தவாழ்வு' என்று வற்புறுத்தியருளினர். இப் பெருவாழ்வாகிய பேரின்பம் சுவர்க்கலோக, பிரமலோக, வை குந்த கைலாச வாழ்க்கைகளைப்போன்றதன்று. மூலப்பிரகிருதி, அபரப்பிரகிருதி, பரப்பிரகிருதி ஆகிய இவற்றிலுட்பட்ட எவ் விதமான உலகவாழ்வுமன்று. எல்லா உலகங்களையும், எல்லாத் தத்துவங்களையும், எல்லா மாயைகளையுங் கடந்த அதீதமாயுள்ள

பரமானந்த சிவத்தோடு இரண்டறக்கலந்து நிற்றலாகிய சிவாநுபவ பரிபூரண நிலையாம். சிவம் சர்வானந்தமயமாதலால் அச்சிவத்தை யடைந்தவர்களுக்கே பரமானந்தம் பிராப்தமாகும். மாயா புவனங்களில் எந்தப்பகுதியை யடைந்தாலும் ஒருகாலத்தில் உபாதிவந்தடையத் தடையில்லையாதலின் மாயையின் ஓர் பகுதியை மோட்ச நிலையாகக்கொள்ளும் எந்தச்சமயமும் உண்மையான மோட்ச சாதன மார்க்கங்களாகா. அவற்றில் சென்றடையும் இன்பமெல்லாம் சிவத்திலெழுந்த பரமானந்தலேசமாகும். அதாவது பிரமானந்தத்தின் நுண்ணிய பரமாணுக்களென்றறிவாயாக.

இனி சிவ பரம்பொருள் ஒருவரிடத்தேதான் ஏகத்துவமுளதென்பதைப்பற்றியுஞ் சிறிது கூறுவாம்.

கிருஷ்ணயஜுர்வேத கடோபநிஷத்.

ஏகஸ்த்தாஸர்வபூதாந்தராத்மா|

ஏகஸ்ததாஸர்வபூதாந்தராத்மா।

(இ-ள்.) "சர்வ சித் ஜடப்பிரபஞ்சங்களுக்கும் அந்தர்யாமியாகிய ஏகர்." எனவும்

அதர்வணவேத முண்டகோபநிஷத்

தேவாநாம்பதிரேகஃ-தேவாநாம்பதிரேகஃ|

(இ-ள்.) "தேவர்களுக்குப் பதியாயுள்ள ஏகர்" எனவும்

அதர்வசிரஸ், சுவேதாசுவதரம், ப்ரஹ்மம், சரபம் முதலியன.

யஏகஸ்ஸஏகோருத்ரஃ-யஏகஸ்ஸஏகோருத்ரஃ|

(இ-ள்.) "எவர்ஏகர் அவர்ஏகராகிய உருத்திரர்." எனவும்,

ப்ரஹ்மைகம்த்வம்-ப்ரஹ்மைகம்த்வம்|

(இ-ள்.) "ஏகமாகிய பிரமம் நீ." எனவும்,

ஏகோவசீஸர்வபூதாந்தராத்மா|

ஏகோவசீஸர்வபூதாந்தராத்மா।

(இ-ள்.) "சர்வசேதனு சேதனப் பிரபஞ்சங்களுக்கும் அந்தராத்மாவாயுள்ள ஒருவரே ஏகர்." எனவும்,

ஏக ஏவருத்ரோ நத்விதீயாயதஸ்துঃ-(79-ம் பக்கம் பார்க்க.)

வ்ருக்ஷ இவஸ்தப்தோதிவி திஷ்டத் ஏகঃ - (49-ம் பக்கம் பார்க்க.)

ஏகோதேவஸ் ஸர்வபூதேஷுகூட:. (50-ம் பக்கம் பார்க்க.)
ஏகமேவாத்விதீயம்-(81-82-ம் பக்கம் பார்க்க.)
ததாதி மத்யாந்தவிஹீநமேகம் (125-ம் பக்கம் பார்க்க.)
விச்வஸ்யைகம் பரிவேஷ்டிதாரம். (126-பக்கம் பார்க்க.)
யோந்தகாலே ஸர்வலோகாந் ஸம்ஹாரஸ்யைக:-(80-ம் பக்கம் பார்க்க.)
நஸந்நசாஸச்சிவஏவகேவல: (10-ம் பக்கம் பார்க்க.)
ஹர:க்ஷராத்மாநா வீசதேதேவஏக: (178-ம் பக்கம் பார்க்க).

என வருமாறு காண்க. இன்னும் அநேக சுருதிப் பிரமாணங்களுள. விரிவஞ்சிவிடுத்தனம். சர்வ சொரூபராய் விளங்கும் சிவபெருமான் ஒருவரே ஒப்புயர்வற்ற பரம்பொருளாதலின் எல்லா வேதங்களும் ஒருங்குசேர்ந்து அவரையே ஏகரென்று நிரூபித்தன. பிரமாதி தேவர்களைச் சில சுருதி வசனங்கள் சர்வ சொரூபர்களென விதித்து அவர்களின் வழிபாடே வீடுபேறெய்துவதற்கு ஹேதுவென வியந்து கூறினும், அவ்வசனங்களெல்லாம் பிரபல பிரமாணங்களுடன் முரணுவண்ணம் ஒரு பரம்பொருளினிடத்துச் சேர்த்தலே வேதசம்மதமாகும். எவ்வாறெனின், பிரமன், விஷ்ணு, சிவன் முதலிய கடவுளர் பிராணதி அசேதனங்களைப்போல அப்பொருளின் விபூதிகளென அடியில் காட்டுறும் வேதவாக்கியங்கள் தெளிவாய்ப் போதித்தலே போதுமான நிதரிசனமாம் (விபூதி-திருமேனி, வைபவம்.)

கிருஷ்ணயஜுர்வேத கைவல்யோபநிஷத்.

𑌸𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾 𑌸𑌶𑌿𑌵𑌸𑍍𑌸𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌸𑍍𑌸𑍋𑌽𑌕𑍍𑌷𑌰𑌃 𑌪𑌰𑌮𑌸𑍍𑌸𑍍𑌵𑌰𑌾𑌟𑍍 ।
𑌸𑌏𑌵𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌸𑍍𑌸𑌪𑍍𑌰𑌾𑌣𑌸𑍍𑌸𑌕𑌾𑌲𑍋𑌽𑌗𑍍𑌨𑌿𑌸𑍍𑌸𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌾𑌃 ॥
𑌸𑌏𑌵𑌸𑌰𑍍𑌵𑌂 𑌯𑌦𑍍𑌭𑍂𑌤𑌂 𑌯𑌚𑍍𑌚𑌭𑌵𑍍𑌯𑌂 𑌸𑌨𑌾𑌤𑌨𑌮𑍍 ।
𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌤𑌂 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑌤𑍍𑌯𑍇𑌤𑌿 𑌨𑌾𑌨𑍍𑌯𑌃 𑌪𑌨𑍍𑌥𑌾 𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌯𑍇 ॥

ஸப்ரஹ்மா ஸசிவஸ் ஸேந்திரஸ் ஸோக்ஷர: பரமஸ்வராட்।
ஸஏவவிஷ்ணுஸ் ஸப்ராணஸ் ஸகாலோக்நிஸ்ஸசந்த்ரமா:॥
ஸஏவஸர்வம் யத்பூதம் யச்சபவ்யம் ஸநாதநம்।
ஜ்ஞாத்வாதம்ம்ருத்யுமத்யேதி நாந்ய: பந்தாவிமுக்தயே॥

(இ-ள்.) "(சிவபரம்பொருளாகிய) அவரே பிரமன், அவரே சிவன், அவரே இந்திரன், அவரே அட்சரன், அவரே பரமன்,

அவரே ஸ்வராட்டு (சொப்பிரகாசன்), அவரே விஷ்ணு, அவரே பிராணன், அவரே காலன் (யமன்), அவரே அக்னி, அவரே சந்திரன், அவரே எல்லாம், எது சென்றது, எது வருவது, எது என்றுமுள்ளது. அவரையறிந்து மிருத்துவைத் தாண்டுவான். வேறுவழி மோட்சத்துக்கில்லை'' எனவும்,

ஸாமவேத மைத்ராயண்யுபநிஷத்.

[illegible]
[illegible]

*த்வம்ப்ரஹ்மாத்வஞ்சவை விஷ்ணுः த்வம்ருத்ரஸ் த்வம்ப்ரஜாபதிः।*
*த்வமக்நிர்வருணோவாயுः த்வமிந்த்ரஸ்த்வம்நிசாகரः॥*

இ-ள்.) "நீ பிரமன், நீ விஷ்ணு, நீ ருத்திரன். நீ பிரஜாபதி, நீ அக்கினி, வருணன், வாயு, நீ இந்திரன், நீ சந்திரன்'' எனவும்,

கிருஷ்ண யஜுர்வேத தைத்திரீயாருணசாகை நாராயணம்.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

*த்வம்யஜ்ஞஸ்த்வம் வஷட்காரஸ் த்வமிந்த்ரஸ் த்வம் ருத்ரஸ் த்வம் விஷ்ணுஸ் த்வம் ப்ரஹ்ம த்வம் ப்ரஜாபதிः। த்வம்ததாப ஆபோஜ்யோதீ ரஸோம்ருதம் ப்ரஹ்ம பூர்புவஸ் ஸுவரோம்॥ ஸவைஸர்வமிதம் ஜகத்ஓம்தத்ஸர்வம்॥*

(இ-ள்.) "நீயக்ஞம், நீவஷட்காரன், நீ இந்திரன், நீ உருத்திரன், நீ விஷ்ணு, நீ பிரமன், நீ பிரஜாபதி, நீ அது, நீர், நீருட்ஜோதி, ரசம், அமிர்தம், பிரமம், பூலோகம், புவர்லோகம், சுவலோகம்.'' "அவனே இச்சகமெல்லாம்.'' "பிரணவமே அதெல்லாம்,'' எனவும்,

கிருஷ்ணயஜுர்வேத சுவேதாசுவதரோபநிஷத்

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

*ததேவாக்நிஸ் ததாதித்ய: தத்வாயுஸ் தது சந்த்ரமா:।*
*ததேவசுக்ரம் ஸப்ரஹ்ம ததாபஸ் ஸப்ரஜாபதி:॥*
*த்வம்ஸ்த்ரீ த்வம் புமானஸி த்வம் குமார உதவாகுமாரீ।*
*த்வம்ஜீர்ணோதண்டே நவஞ்சஸி த்வம் ஜாதோ பவஸி விச்வதோமுக:॥*

(இ-ள்.) "அதுவே அக்கினி, அதுவே ஆதித்தன், அதுவே வாயு, அதுவே சந்திரன், அதுவே பிரகாசம், அவனே உருத்திரன், அதுவே நீர், அவனே பிரஜாபதி, நீ பெண் (ஆதிசத்தி சொரூபன்), நீ ஆண் (மகாதேவ சொரூபம்), நீ குமாரன் (ஷண்முக சொரூபம்), நீ குமாரி (லளிதாகுமாரி யெனப்படும் பால சொரூபம்), நீ கிழவனுய்த் தடிகொண்டு நடக்கிறுய் (இமயமலையின் இளங்கொடியாய் அவதரித்த அம்மையின் அருந்தவப் பரீக்ஷைக்காகத் திருமேனிகொண்டருளினுய்) நீ எங்கும் முகமுள்ளவனுய்த் தோன்றினுய்" எனவருமாறு காண்க.

அதர்வணவேத அதர்வசிரோபநிஷத்தும்.

"ஓம்யோவைருத்ரஸ்ஸபகவாந்-ஓம் யோவை ருத்ரஸ்ஸபகவான்.எந்தத் தூரியருத்திரராகிய அந்தப்பகவான்" என்று ஆரம்பித்து, எவன் உமாதேவி, எவன் விநாயகன், எவன் ஸ்கந்தன் என்பதாதி முப்பத்துமூன்று தியான மந்திரங்களையுங் கூறி இறுதியில் முப்பத்து நான்காவது மந்திரமாகிய "யத்வைதத்-யச்சஸத்யம் - எது சத்தியம்" என்று முடித்து, "ஸோஹம் பூர்புவஸ்ஸுவஸ்தஸ்மை வைநமோநம: சீர்ஷம்ஜநபமேதோம் விச்வரூபோஸி - பூர்புவஸ்ஸுவஸ்தஸ்மைவைநமோநம: சீர்ஷம்ஜநபமேதோம் விச்வரூபோஸி-வியாஹிருதிகளின் பொருளாயுள்ளவர். அவருக்கேநமஸ்காரம். தலைமையாயுள்ளவர். பிறவியை யொழிப்பவர். பிரணவரூபர். விசுவரூபர். ஆகிறுய்." என்று முதலினும், முடிவினும் பிரணவத்தை அமைத்து பிரணவப்பொருளும் பிரணவ சொரூபரும் அவரேயென அங்கை நெல்லிக்கனிபோல் காட்டி அவர் சர்வசொரூபரென அர்த்த நிர்ணயஞ்செய்து உபசாந்தமடைந்தது. அப்படியே தமிழ் வேதமும், "ஓசையொலியெலாமானுய் நீயே" என்றற்றொடக்கத்தனவான திருவையாற்றுத் திருத்தாண்டகத்தில் சிவபெருமான் எல்லாமாயிருப்பவரென்று விளக்கியுள்ளது. நக்கீரதேவநாயனுர் அருளிச்செய்த பெருந்தேவபாணியிலும், "வேதமுநீயே, வேள்வியுநீயே, நீதியுநீயே, நிமலனீயே, புண்ணியனீயே, புனிதனீயே, பண்ணியனீயே, பழம்பொருணீயே, யூழியு

நீயே, யுகைமுநீயே, வாழியுநீயே, வரதனுநீயே, தேவருநீயே, தீர்த்தமுநீயே, மூவருநீயே முன்னெறிநீயே, மால்வரைநீயே, மறிகடல்நீயே, பின்பமுநீயே, துன்பமுநீயே, தாயுநீயே, தந்தையுநீயே, விண்முதற்பூதமைந்தவை நீயே, பக்தியுநீயே, முத்தியுநீயே, சொலற்கருந்தன்மைத் தொல்லோய் நீயே'' என்று இவ்வாறே கூறப்பட்டிருக்கின்றது. இத்தகைய பிரபலபிரமாணங்கள் இன்னும் அனேகமிருக்கின்றன. இவையாவும் பிராணன், ஆகாசம், சூரியன், சந்திரன் உருத்திரன் முதலான மூர்த்திகளும் சிவபிரான் வைபவங்களென்று விரித்தமையால் எவரெவருக்கு எத்தேவரிடத்து அயராவன்புமலிகின்றதோ அத்தேவர் திருமேனிகளே பரமேசுவரன் திருமேனியென்று துணிந்து வழிபடுவோர்க்கே மோட்சம் பிராப்தமாகுமேயன்றி அவர்களைத் தனிமுதல்களாகக் கருதி வழிபடுவோர் என்ஞான்றும் இடர்ப்படுவர். அன்றியும், வைதிகசைவ செந்நெறி கடந்து வேதபாஹ்யமாயுள்ள பாசுபத பாஞ்சராத்திர சாக்தாதி தந்திர வழிகளிற் சென்று மயங்கி பிரம்ம விஷ்ணு ருத்திராதிகளை அச்சிவ பரம்பொருளுக்குமேலாந்தனிமுதலெனவும், அவருக்குங் காரணமாம் பரம்பொருளெனவும் வழிபட்டுய்ய எண்ணுகின்றவர்களுக்கு என்ஞான்றும் அந்தகாரமேபிராப்தமாவதன்றிதொல்லையாம்பிறவிவேலைத் தொலைந்திடாது, இருளும் நீங்காதென்றுணர்வாயாக. அது எதுபோலுமெனின், அரசன் பரிவாரங்களான மந்திரி முதலியோரை அவன் ஆணையேற்ற பரிவாரங்களென்றறிந்து அவர்களுககுரியபடி நடப்பவர்களுக்கே இகலோக சுகமன்றி அவர்களை அரசரென நடப்போர்க்கு யாண்டும் சுகமில்லையன்றோ! அல்லாமலும், அவ்வளவில்நில்லாது அரசனை அவமதித்து அவனிலும்மேலானவன்மந்திரியேயெனக்கொண்டவர்கள் படுங்கடுந்துயரமும் இதற்கு நிதரிசனமாம். "அரையரெனக் காண்பரமைச்சரை யமைச்சா, யரையனைக் கண்டாற் றுயரமாம்" எனவும், "இட்டனெனக் காண்பனவ னேவலரை யேவலனென், றிட்டனையார் காண்பாரியம்பு'' எனவும், "சிவனெனவே தேவரையுஞ் சிந்தி சிவனை, அவரெனக் கண்டார் நிரயத்தார்'' எனவும், "மாசில் வேந்தனை தாசனுமதிக்கில் வாழ்வுண்டோ'' எனவும் கூறிப்போந்தபாக்கள் இக்கருத்தையே பின்பற்றினவா மென்றுணர்க.

ஹரன் பரிபூரண பரப்பிரமசொரூபமாயிருத்தலினாலே அவரது ஏகத்துவத்தை உபாசித்து சித்திபெற்றோர் சுத்தாத்வைத சித்தாந்த வைதிக சைவ நன்னிலையில் நின்று திருவருளிற்றிளைப்பவராதலின் அவர்களை மனிதவர்க்கத்தில் சேர்ந்தவரென்று மனத்தினாலும் நினைத்தல் பெரும்பாதகமாகும். அவர்களை அருள்வர்க்கத்தவரென்றே கொள்ளவேண்டும். அவர்களது அருளிச்செயல்களே அருட்பாக்களாகும். ஸ்ரீ தாயுமானசுவாமிகளும், "நிற்கு நன்னிலை நிற்கப்பெற்றாரருள், வர்க்கமன்றி மனிதரன்றேயையா, துர்க்குணக்கடல் சோங்கன்ன பாவியேற், கெற்குணங்கண் டென்பெயர் சொல்வதே' எனவும், "கண்டேனிங் கென்னையு மென்றனையு நீங்காக்கருணையு நின்றன்னையுநான் கண்டேன் கண்டேன், விண்டேனென் றெனைப்புறம்பாத்தள்ள வேண்டாம் விண்டதுநின்னருட் களிப்பின்வியப்பாலன்றோ" எனவும் அருளிச்செய்தனர். இன்னும்,

அதர்வணவேதமுண்டகோபநிஷத்.

கஸ்மிந்நுஹகவொ விஜ்ஞாதெ ஸவ்வமிஜம் விஜ்ஞாதம்ஹவதி।

சஸ்மிர்நுபகவோ விஜ்ஞாதே ஸர்வமிதம் விஜ்ஞாதம் பவதி।

(இ-ள்.) "பகவானே! எவனொருவனை யறிந்தால் எல்லாமறிந்தவனாகை ஆவாய்" எனவும்,

அதர்வணவேத அதர்வசிரோபநிஷத்.

மாமேவமாம்யோவெத ஸஸவாந் தெவாநுவெத।

மாமேவமாம்யோவேத ஸஸர்வாந் தேவாந்வேத।

(இ-ள்.) "என்னையே யானென எவனறிவான் அவன் எல்லாத் தேவர்களையுமறிவான்" எனவும் எழுந்த காரண வாக்கியங்களிற் குறித்த பிரமலட்சணம் சிவபிரானிடத்தே அமையுமென்றும், அதற்குப் பிரணவ வுபாசனையே சர்வ வேதசாரமான சித்தாந்த சாதனமென்றும், அப்பிரணவத்தின் நான்காவதான அர்த்தமாத்திரை எனப்படும் சர்வ பிரபஞ்ச காரண நாதத்தின் தேவதை சித்தாந்த சைவத்தெய்வமாகிய அம்மூர்த்தியே எனவும் தெளிவாய் நிரூபிக்கப்பட்டது.

இனி ஏகராயும பிரணவப் பொருளாயும் விளங்கும் பரப்பிரம சிவபிரானார் வேறு நான்வேறு என்று பேதபுத்தி பண்ணாது பஞ்சருத்ராங்களிலொன்றாகிய கைவல்யோபநிஷத் "தக்ஷெவகக்ஷெவதக்ஷ-தத்வமேவ த்வமேவதத்- அதுநீயே நீயேஅது" என்

றும் ஜாபாலசாகை "நீயே நானன்றோ பகவ! ஓதேவ! நானே நீயன்றோ பகவ! ஓதேவ! (169-ம் பக்கம் பார்க்க) என்றும், புகன்றபடி அவரே நான் என்று ஏகாக்கிர சித்தத்துடன் தைலதாரையைப்போல் இடையறாது சிந்தனைசெய்து நிஷ்டை கூடுகின்றவர்களுக்கே அத்வைத ஞானமுண்டாகி மோட்சபலன் சித்திக்குமேயன்றி ஏனையோருக்குச் சித்திக்காது. ஓங்காரச் சிந்தனை பகிர்முக புருஷருக்கு ஒருபோதும் வாய்க்காது. அந்தர்முகியாயிருப்பவருக்கே கைகூடும். அவருக்குத்தான் முனி என்னும் பெயரும் வைதிகநூல்களில் கேட்கப்படுகின்றது. முனி என்றால் மனனம் செய்கின்றவர் என்று பொருள். அச்சிந்தனை ஹம்ஸனுடைய ரஹஸியத்தனமாயிருக்கிறது. ஹம்ஸமந்திரம் (ஹம்+ஸ:) என்றும் இரண்டு சொற்களால் ஆக்கப்பட்ட ஒரு தொடர்மொழி. அவற்றுள் ஹம்-என்பது உசுவாசமும், ஸ:-என்பது நிசுவாசமுமாகும். முற்பகுதியாகிய ஹம் என்னுஞ்சொல் பந்தத்தையும், சப்தத்துக்கு ஆதாரமான பூதாகாசத்தையும் பொருளாகக்கொண்டு அஹம் என்ற மாற்றத்தால் ஆத்மாவைக்குறிக்கும். பிற்பகுதியாகிய ஸ: என்னுஞ்சொல் மோக்ஷரூபமாயும் சரஸ்வதி பீஜமாயும் நின்று நாதத்தைக் குறிப்பதாய் சிவத்தை விளக்கும். இம்மந்திரத்தை ஒவ்வொரு ஆத்மாவும் ஜனனமுதல் மரணபரியந்தம் ஓயாது ஜபித்துக்கொண்டிருப்பினும் அதை அவன் அறிந்தானில்லை. அது தியானத்துடன் கூடாமையால் பயனற்றதாய் விடுகின்றது. அது தியானத்தோடு கூடினதாயின் மேலான பரசிவ நிஷ்டையாய்விடும். அம்மந்திரத்திற்கே அவ்வியக்த காயத்திரி எனவும்,அஜபாமந்திரம் எனவும் பெயருமுண்டு. அவ்வியக்தம்-சூக்ஷ்மம். அதாவதுகாயத்திரியின் சந்தமாகிய ஆறெழுத்துக்கள் ஸ்தூலத்திலமையாது ஸூக்ஷ்மத்தில் அமைந்திருப்பது என்றுபொருள். அவ்வாறெழுத்துக்களாவன:-ஹ்+அ+ம்+ஸ்+அ+:என்பனவாம். அதில் இரண்டு உயிரும், மூன்றுமெய்யும், உயிரும்மெய்யும் ஆகாத ஓர்அயோகவாஹமும் அடங்கியிருத்தலின் அதன் சந்தம் காயத்திரி எனக் குறிக்கப்பட்டது. மெய்யெழுத்துக்கள் மூன்றும் மூவித மாயைகளையும், உயிரெழுத்துக்கள் இரண்டும், ஜீவாத்மா பரமாத்மாக்களையும், ஒரு அயோகவாஹ எழுத்து ஆணவமலத்தினையும் குறிப்பிக்கின்றனவென்பது மூதறிஞரது இரகசியாநுபவம்.

இனி அஜபையாவது-ஜபிக்கக்கூடாதது என்று பொருள். அதாவது ஓரெழுத்தை உச்சரித்தற்குரிய இதழ்குவிவு, நாவசைவு முதலிய எவ்விதத்துணைக்காரணங்களையும் விரும்பாமல் ஆத்மாவினிடத்து யாதொரு முயற்சியுமின்றி உயிர்த்தலுடன் பொருந்தியதாய் ஸ்வரூபமாத்திரத்தில் அறிவு நிலைபெற வேண்டி அவாவப்படுவதாய் சரீரத்தில் இயல்பாய் அமைந்திருப்பது. முன்னோர்கள் சேமித்துவைத்த பெருநிதி அடுக்களையின் அடிப்புறத்தேயிருப்பினும் அஞ்சன சித்தியில்லாதார்க்கு அது எப்படி அகப்படாதோ அப்படியே ஆத்ம சொரூப ஹம்ஸ அஜபாகாயத்திரி தேகத்தில் இயற்கையாய்ப் பொருந்தியிருப்பினும் சத்குரு கடாட்சமும் சிவராஜயோக சித்தியும் இல்லாதார்க்கு அது எட்டுணையும் புலப்படாதென்பது திண்ணம். அம்மந்திரத்தில் அஹம் (நான்) என்னும் முனைப்பு முற்பட்டு நிற்றலால் அதை முன்பின்மாற்றி உச்சரிக்கும்படி வைதிகசைவம் பகர்கின்றது. அப்படி உச்சரிக்கிறபொழுது "ஸோஹம்" என ஆகிறது. அதிலும் ஆறு மாத்திரைகளிருக்கின்றன. அம்மந்திரத்திலுள்ள இரண்டு மெய்களை நீக்கிவிட்டால் எஞ்சுவது ஒப்பற்ற பிரணவ மந்திரமே. அப்பிரணவம் முமுக்ஷுக்களுடைய பூஜ்யவாசகமும் விசேஷ மந்திரமுமாயிருக்கின்றது. ஆகையினாலே அம்மந்திரத்தின் இரகசியோபாசனத்தை எவனொருவன் சத்குரு கடாட்சத்தால் அறிந்து அப்பியசித்துச் சித்திபெறுவானோ அவனே பரம யோகியாவன். அவனே பிரமநிஷ்டர்களுள் முக்கியமானவன். அவனுக்கே ஈசுவர சம்பந்தமான ஐஸ்வரியத்தன்மையுண்டு. அவன் "ஸவ௱ூ ஸமாவெ்ாஷி தெதாவஸி ஸவ௱ஃ-ஸர்வம் ஸமாப்நோஷிததோஸிஸர்வஃ - எல்லாவற்றையுமடைவாய் எல்லாமுமாவாய்" என்று ஸ்ரீ கண்ணபிரான் கீதையில் உபதேசித்தருளியபடி பிரபஞ்ச பேதமெல்லாம் இன்பாகாரமாகத் தோன்றச் சர்வ சொரூபனாய்த் தானேதானாய் அறிவாய் விளங்குவன். ஸ்ரீமத். தாயுமான சுவாமிகளும், சிதம்பர ரகசியத்தில் "ஆகாரபுவன மின்பாகாரமாக அங்ஙனே யொருமொழியா லகண்டாகார, யோகாநுபூதி பெற்றவன்பர்" என்றருளிச்செய்தனர். இன்பாகாரமாவது சிவாகாரம். இப்பாசுரத்தில் பிரபஞ்சம் உருவமாக வுள்ளதேயன்றி தோற்றமாத்திரமன்றென வற்புறுத்தப்பட்டமை ஏகாத்மவாதக் கொள்கைக்கு முற்றும் விரோதமாயிருத்தலையுமோர்க.

அல்லாமலும், ஸ்ரீபஞ்சாக்ஷரத்திலுள்ள சிவய என்னும் மூன்றெழுத்துக்களுள் சிவ என்னும் இரண்டக்ஷரம் அருளோடுகூடிய சிவபிரானையும், ய என்னும் ஓரட்சரம் ஆத்மாவையும் உணர்த்தாநின்றன. யஜுர்வேத தாரஸாரோபநிஷத் "யகாரோபவ ரூஷோஹவதி-யகாரோபுருஷோபவதி" என்று கூறுமாற்றால் புருஷன் ஜீவனென அறியக்கிடக்கின்றனன். அச்சீவன் அஹம் என்ற சொல்லாற் குறிக்கப்பட்டிருத்தலாற் சிவம் நான் என்னும் பொருளைத்தரும் சிவோஹம் பாவனையுமேற்படுகிறதன்றோ. ஸ + அஹம் என்னும் இரண்டு சொற்களும் வடநூல் இலக்கணவிதிப்படி புணரும்போது ஸோஹம் என்று ஆனாற்போல, சிவ: + அஹம் என்னும் இரண்டு சொற்களும் சந்தியாம்போது சிவோஹம் என ஆயிற்று இவ்விருதிற மந்திரங்களும் ஓங்காரத்தில் ஒன்றுபட்டுக் கிடத்தலானும், பொருட்பேதஞ் சிறிதுமின்மையானும் ஒரே மந்திரமாகக் கருதப்பட்டுள்ளன. அப்படியானால் வைதிக சைவர்கள் ஸோஹம், சிவோஹம் என்று கூறுவதுபோல் ஏகாத்மவாதிகளும் ஸோஹம், சிவோஹம் என்று உச்சரிக்கின்றார்களே அவ்விருதிறத்தாருக்கும் இவ்வாக்கியங்களின் கருத்தும் பயனும் ஒன்றேயெனின், அல்ல. ஏகாத்மவாதிகள் கடாகாசத்தையும், மகாகாசத்தையும் ஒன்றென்று கூறுவதுபோல் கூடஸ்த பிரம ஐக்கியங்கொள்வர். எம்மவர்களோ ஆத்மாவைக் கருடனாகப் பாவித்தல். (அதாவது ஆத்மாவைக் கருடனுக்கு அதிதெய்வமாம் மந்திரரூபமாகப் பாவித்தல்) போலச் சிவத்தைத் தான் எனப் பாவித்து அச்சிவகுணங்கள் தம்மாட்டு விளங்கப்பெற்றுச் சிவமேயாய் நின்றுவிடுவர். அப்படிநிற்கும் அற்புத நிலையினையே தாயுமானவர், "இரப்பானங் கொருவனவன் வேண்டுவகேட் டருள்செயென வேசற்றேதான், புரப்பான்ற னருளுடி யிருப்பதுபோ லெங்குநிறை பொருளே கேளாய், மரப்பான்மை நெஞ்சினன்யான் வேண்டுவகேட் டிரங்கெனவே மௌனத்தோடங், தரப்பான்மை யருணிறைவி லிருப்பதுவோ பராபரமே சகசநிட்டை" என்று உபமானவாயிலாக விளக்கியருளினார். இதனால் ஏகாத்ம வாதிகளுக்கும் வைதிக சைவர்களுக்கும் இம்மஹா வாக்கியங்களில்கருத்தும் பயனும் வேறுமென்றறிக. இன்னும் இதனை விரிக்கின்,

ஏகாத்மவாதிகள் ஸோஹம், சிவோஹம் என்று கூறினும் அஹம் பிரமம் என்பதே அவர்களது மதக்கொள்கையாகும். அஹம் பிரமம் என்பதற்கும் சிவோஹம் என்பதற்கும் உள்ள வித்தியாசம் மலையிலக்காகும். அஹம் பிரமம் என்னும் வாக்கியத்தில் (அஹம்) நான் என்னும் ஆத்மா முற்பட்டு நிற்கின்றது. பிரமம் பிற்பட்டு நிற்கின்றது. அவ்வாறிருத்தலினாலே நான் என்பது முனைத்துத்தோன்றி எல்லாவாற்றலும், எல்லாவறிவும், எல்லாவநுக்கிரகமும் உடைய முதல்வன் முன்னே தன்னையொரு பொருளாகப்பெரிதும் எண்ணியகுற்றம் நேர்ந்து, அதனால் அறியாமையே மேலிட்டுப் பேரின்பப் பெருவாழ்வையடையவொட்டாது தடைசெய்து நிற்கின்றது. ஆகையினாலே அவ்வாக்கியம் பசுஞானிகள் கூற்றேயாய் முடிந்தது. சிவஞான சித்தியாரும், "காதலினால் நான் பிரமமென்னுஞானங் கருது பசுஞானம்" என வற்புறுத்தியது. சிவோஹம் என்னும் வாக்கியத்தில் சிவம் என்னும் பிரமம் முற்பட்டு நிற்கின்றது. (அஹம்) நான் என்னும் ஆத்மா பிற்பட்டு நிற்கின்றது. அவ்வாறிருத்தலால் ஆத்மா ஆணவமுனைப்பு முற்றுங் கைவிட்டுச் சிவ பரிபூரணம் தன்மாட்டு மேலிடப்பெற்றபடியினாலே அவ்வருணிறைவில் நிறைந்து சிவமேயாய் நிற்கின்றது. அதனால் அவ்வாக்கியம் ஜீவன் முக்த சிவ வாக்கியமாய் முடிந்தது. "பொருளே நின்பூரண மேலிட்டகாலம் போக்குவரவுண்டோதற் போதமுண்டோ, இருடானுண்டோ வல்லால் வெளிதானுண்டோ வின்பமுண்டோ துன்பமுண்டோ யாமங்குண்டோ" என்னுந் தாயுமானவர் திருவாக்கையுங் கண்டு கருதுக. இந்நியாயங்களால் அஹம் பிரமம் பெத்த நிலையும், சிவோஹம் முத்தி நிலையுமாய் விளக்கமுற்றதென்றுணர்க. இவ்விரகசியத்தை யுணராதார் நான் பிரமம் என்றாலும் பிரமம் நான் என்றாலும் இரண்டும் ஒன்றுதானே என்று சாதிப்பர். அவர்கள் கூற்று வெறுங் கூற்றாம். மெய்கண்டசிவம் "நானவனென்றெண்ணினர்க்கு நாடுமுளமுண்டாதல் தானெனவொன்றின்றியே தானதுவாய்" எனவும், திருவெண்காட்டடிகள் "மாயப்படலங் கீறித்தூய ஞானநாட்டம் பெற்றனன் பெற்றபின், நின்பெருந் தன்மையுங் கண்டேன் காண்டலும் என்னையுங் கண்டேன் பிறரரையுங் கண்டேன், நின்னிலை யனைத்தினுங் கண்டேன் என்னை, நின்னைக் காணுமாந்தர் தன்னையுங் காணாத் தன்மையோ

ரே" எனவும், ஸ்ரீ தாயுமானசுவாமிகள் "அருளாலெவையும் பா ரென்றான்—அத்தை, அறியாதேசுட்டி யென்னறிவாலே பார்த் தேன், இருளான பொருள்கண்டதல்லால்-கண்ட, வென்னையுங் கண்டிலே னென்னேடிதோழி" எனவுங்கூறி உண்மையை நிறுவி னார்கள். பிங்கலநிகண்டும், "ஒன்றெனப்படுவது வீடுபெறலே" என்று சாற்றியது. இத்தன்மைத்தாகிய துரீயமஹா உருத்திர ருடைய ஏகத்துவமென்னும் பரம சாம்ராஜ்ஜியமான மோட்ச நிலையையே அருள்நெறி நின்றறிந்தபடி நற்குணமிகுந்த மாணாக்க னாகிய உனக்குச் சொன்னோம். கடைப்பிடிக்க.

மா - பரம சாசுவத சாந்திரூபமான பரமுத்தியையளிப்பது சர்வவேத சாரமான பிரணவ வித்தையாயிருக்க அவ்வித்தையை வைதிக பாசுபத பிரணவாபின்ன பிரமவித்தையென்று கூறுவது என்னை ? பகவானே ! திருவுளம்பற்றி யருளவேண்டும்.

ஆ - அத்வைத ஞானத்தை யடைவதற்குப் பல சாதனங் கள் வேதங்களிலே கூறப்பட்டிருப்பினும் அவனேதான் என இடையறாத நிஷ்டைக்கு ஏதுவாய், பரமாந்தரங்க சாதனமாய், பசுவின் பாசத்தை முற்றுமொழிப்பதாயுள்ளது வைதிக பாசுபத விரதமேயன்றி வேறில்லை அதர்வணவேத அதர்வசிரோபநிஷத் "ருத்ர ஏகத்வமாஹு:" என்று மோட்சசொரூபத்தைச் சொல்லி முடித்தவுடனே,

ருத்ரம் சாச்வதம் வை புராண மிஷமூர்ஜம் தபஸாநியச்சதி வ்ரதமேதத் பாசுபதம்।

ருத்ரம் சாச்வதம் வை புராண மிஷமூர்ஜம் தபசாநியச்சதி வ்ரதமே தத் பாசுபதம்।

(இ-ள்.) "நித்தியராய், பழையோராய், அன்னரசரூபராய் பலரூபராய் உள்ள உருத்திரமூர்த்தியைத் தபசினாலே (ஞானத் தினாலே) ஒருக்கிப்பற்றுதல் இந்தப் பாசுபத விரதமாம்" என்றோ தியது. இதனாலே இப்பிரணவ வித்தை வைதிக பாசுபத பிர ணவாபின்ன பிரமவித்தை என்று அழைக்கப்பட்டது இந்தப் பாசுபத விரதத்துக்கே சிரோவிரதம் எனவும், விரஜாதீக்ஷை என வும், மந்திரஸம்ஸ்காரதீக்ஷை எனவும் பெயர்கள் வழங்கப்பட்டு வருகின்றன. தண்டகாரண்ணியத்தில் இராமருக்கு அகஸ்திய மகாமுனிவர் செய்தது இந்தத் தீக்ஷையே. உபமன்னிய மகா

முனிவர் கிருஷ்ணருக்குச் செய்ததும் இதுவேயாம். பிரமா, விஷ்ணு, மார்க்கண்டேயர், ததீசி, தூர்வாசர், கவுதமர், ஜாபாலர், ஆதர்வணர், காத்தியாயனர், அகஸ்தியர், பிருங்கி, உபமன்னியர் முதலாயினோர் இந்தப் பாசுபத விரதத்தை அனுஷ்டித்தே பாசுபதராயினர். ஈசகேநாதி உபநிஷத்துக்களில் சொல்லப்பட்ட பரவித்தையை அநுஷ்டித்தற்கு இதுவே முக்கியாங்கமாகும். இதன் பரம பாவனகரமான பகிர்முகவிரதமே பஸ்மதாரணமென்று சொல்லப்படும். அதர்வண வேதத்தில் "அக்னி" என்பதாதி ஏழு மந்திரங்கள் பஸ்மதாரணத்தில் உபயோகிக்கப்பட்டிருக்கின்றன.

அதர்வசிரசும்.

𑌅𑌗𑍍𑌨𑌿𑌰𑌿𑌤𑌿 𑌭𑌸𑍍𑌮 𑌵𑌾𑌯𑍁𑌰𑌿𑌤𑌿 𑌭𑌸𑍍𑌮 𑌜𑌲𑌮𑌿𑌤𑌿 𑌭𑌸𑍍𑌮 𑌸𑍍𑌥𑌲𑌮𑌿𑌤𑌿 𑌭𑌸𑍍𑌮
𑌵𑍍𑌯𑍋𑌮𑍇𑌤𑌿 𑌭𑌸𑍍𑌮 𑌸𑌰𑍍𑌵𑌂𑌹𑌵𑌾 𑌇𑌦𑌂𑌭𑌸𑍍𑌮 𑌮𑌨 𑌏𑌤𑌾𑌨𑌿 𑌚𑌕𑍍𑌷𑍂𑌂
𑌷𑌿 𑌭𑌸𑍍𑌮 𑌅𑌗𑍍𑌨𑌿𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌾 𑌭𑌸𑍍𑌮 𑌗𑍃𑌹𑍀𑌤𑍍𑌵𑌾𑌵𑌿𑌮𑍃𑌜𑍍𑌯𑌾𑌙𑍍𑌗𑌾𑌨𑌿 𑌸𑌂𑌸𑍍𑌪𑍃
𑌶𑍇𑌤𑍍 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌵𑍍𑌰𑌤𑌮𑍇𑌤𑌤𑍍𑌪𑌾𑌶𑍁𑌪𑌤𑌂।

அக்நிரிதிபஸ்ம வாயுரிதிபஸ்ம ஜலமிதிபஸ்ம ஸ்தலமிதிபஸ்ம வ்யோமேதிபஸ்ம ஸர்வம்ஹவாஇதம்பஸ்ம மநஇத்யேதாநி சக்ஷூம்ஷிபஸ்ம அக்நிரித்யாதிநாபஸ்ம க்ருஹீத்வாவிம்ருஜ்யாங்காநி ஸம்ஸ்ப்ருசேத் தஸ்மாத்வ்ரதமேதத்பாசுபதம்।

(இ-ள்.) "அக்கினி என்பது பஸ்மம். வாயு என்பது பஸ்மம். ஜலம் என்பது பஸ்மம். ஸ்தலம் (பிருதிவி) என்பது பஸ்மம். ஆகாசம் என்பது பஸ்மம். எல்லாமன்றோ இந்தப்பஸ்மம். மனம் என்பதாதி நேத்திரமும் பஸ்மம். அக்கினி என்பதாதியால் பஸ்மத்தைக் கிரஹித்து அங்கங்களில் உத்தூளனமாகப் பூசித்தரிக்க. ஆகையினாலே இந்த விரதம் பாசுபதம்." என்றோதியது. இதனாலே பாசுபதம் என்னும் பரவித்தைக்கு பஸ்மோத்தூளனமே பரமாங்கமாகும். அதுவே சர்வ சொரூபமாகவும் இருக்கின்றது. அக்கினி, வாயு, ஜலம், பிருதிவி, ஆகாசம் என்னும் பஞ்சபூதங்களும், அவற்றின் காரியமான பௌதிகங்களும், பூதங்களுக்குக் காரணமான தன்மாத்திரைகளும், கண் முதலிய இந்திரியங்களும், மனமுதலிய அந்தக்கரணங்களும், மற்றுமுள்ள தத்துவங்களும் பஸ்மமாயிருத்தலானும், பஸ்மம் சிவாக்கினி சொரூபமாதலானும் அது சர்வசொரூபமாகத்துதிக்கப்பட்டது. நூற்றெட்டு உபநிஷத்துக்களின் சாரமென ஸ்ரீராம

ரால் புகழ்ந்து பேசப்பட்ட தசோபநிஷத்துக்களில் ஆதியந்தங்களிலுள்ள ஈசாவாஸ்ய ப்ருஹதாரண்யகங்கள் "[illegible] -பஸ்மாந்தம் சரீரம்-பஸ்மத்தை அந்தமாகவுடையது சரீரம்-(அதாவது) எல்லாப் பிரபஞ்சங்களும் சர்வகாரணமான பஸ்மாவினிடம் ஒடுக்கம்" என நிரூபித்தன. ஆளுடையபிள்ளையாரும், "அந்தமதாவதுநீறு" என்றருளிச் செய்தனர். அவ்வாறே முக்கியமான தைத்திரீயமும் "[illegible] - பூத்யை நப்ரமதிதவ்யம்-விபூதியை விடக்கூடாது" என்று பஸ்மதாரணத்தை விதித்துள்ளது. வேதங்களில் பதினைந்து உபநிஷத்துக்கள் திருநீற்றின் பெருமையைப் புகழ்கின்றனவென்றால் பஸ்மத்தின் மகிமை அளவிடக்கூடியதோ. பஸ்மதாரணம் சகல கர்மங்களுக்கும் முக்கியாங்கமாகவும், ஞானங்கமாகவும் கூறப்பட்டிருக்கின்றது.

## மஹாபாரதம் சாந்திபர்வம்.

[illegible]
[illegible]

ஆயுஷ்காமோதவாராஜந் பூதிகாமோதவாநரஃ।
நித்யம் வைதாரயேத் பஸ்ம மோக்ஷகாமீசவைத்விஜஃ॥

(இ-ள்.) "தருமராஜனே! ஆயுள்விருத்தியை விரும்புவோரும், செல்வத்தை யிச்சிப்போரும், மோட்சத்தை யவாவுவோருமான துவிஜர் தினந்தோறும் பஸ்மதாரணஞ் செய்யவேண்டும்." எனவும். (இதனால் பிராமணன் பஸ்மதாரணமின்றி யிருத்தல் கூடாதென்பது பெறப்பட்டது.)

## கூர்மபுராணம்.

[illegible]
[illegible]
[illegible]

ஸ்ரஷ்டாஸ்ருஷ்டிச்சலேனாஹ த்ரிபுண்ட்ரஸ்யப்ரசஸ்ததாம்।
ஸஸர்ஜ ஸலலாடம்ஹி திர்யக்சோர்த்வம் நவர்த்துலம்।
ததாபிமாநவா மூர்க்கா நகுர்வந்தி த்ரிபுண்ட்ரகம்।

(இ-ள்.) "பிரமதேவர் சிருஷ்டிசெய்ய ஆரம்பித்தபோது பஸ்மாவின் திரிபுண்டர மஹாத்மியத்தைக் கூறி அதனையணிந்து கொள்ளும்பொருட்டே நெற்றியைக் குறுக்காகப்படைத்தார்.

மேனோக்காகவும், வட்டமாகவும் படைத்தாரல்லர். அப்படிச் செய்திருந்தும் மூர்க்கர் சிலர் நெற்றியிலே திரிபுண்டரம் தரிக்கிறதில்லை'' எனவும்,

மநுஸ்மிருதி.

𑌤𑍍𑌰𑌿𑌪𑍁𑌣𑍍𑌡𑍍𑌰𑌧𑌾𑌰𑌣𑌂 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌸𑌨𑍍𑌧𑍍𑌯𑌾𑌵𑌨𑍍𑌦𑌨𑌮𑌾𑌚𑌰𑍇𑌤𑍍।
𑌤𑍍𑌰𑌿𑌪𑍁𑌣𑍍𑌡𑍍𑌰𑌂 𑌪𑌰𑌮𑌂 𑌪𑍁𑌣𑍍𑌯𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌶𑌿𑌵𑌾𑌤𑍍𑌮𑌕𑌮𑍍॥

*த்ரிபுண்ட்ரதாரணம் க்ருத்வா ஸந்த்யாவந்தந மாசரேத்।*
*த்ரிபுண்ட்ரம் பரமம்புண்யம் ப்ரஹ்ம விஷ்ணுசிவாத்மகம்॥*

(இ-ள்.) "திரிபுண்டரதாரணஞ் செய்துகொண்டே சந்தியாவந்தனஞ்செய்யவேண்டும். திரிபுண்டரம் மிக்கபுண்ணியமாகும். பிரமவிஷ்ணு சிவசொரூபமாயுமுள்ளது'' எனவுஞ் சாற்றிமகிழ்ந்தன. ஔவையாரும் "நீறில்லாநெற்றி பாழ்'' என்று ஆணைதந்தருளினர். ப்ருஹஜ்ஜாபலமும், "𑌧𑌿𑌗𑍍𑌭𑌸𑍍𑌮𑌰𑌹𑌿𑌤𑌂 𑌫𑌾𑌲𑌂-திக்பஸ்மரஹிதம்பாலம்-பஸ்மமணியாதநெற்றியைச்சுடு'' என்றுசாற்றியது. அன்றியும், அக்கினிஹோத்திரம், விரஜாக்கினி ஆகிய இவைகளிலுண்டான பஸ்மத்தையாவது மற்ற வேதாந்தங்களிற் சொன்ன வேறுவிதமான பஸ்மத்தையாவது அக்கினி என்பதாதி ஏழு மந்திரங்களால்கிரகித்து ஜபித்து, காலாக்னி ருத்ரோபநிஷத் முதலியவற்றிற் சொன்ன தாரணவிதிப்படி தேகத்தில் உத்தூளனமாகவும் திரிபுண்டரமாகவுந் தரிக்கவேண்டும். இவ்வாறு வைதிக சம்பிரதாய சித்தமான பிரணவாபின்ன சிவோபாஸ்தியும், வைதிக பஸ்மதாரணமுமாகியவிரண்டுமே ஒன்றுக்கொன்று உபகாரமாயும், பாபக்ஷய ஹேதுவாயும், மோட்சசாதகமாயும் விளங்குகின்றன. நெய் ஆயுளை விர்த்திசெய்வதுபோல் பஸ்மதாரணமும் மோட்சசாதகமான பிரமஞானத்தை விர்த்திசெய்ய யாதொரு தடையுமில்லை. பாசுபதவிரதமென்றால் பசுபதியைத் தேவதையாகவுடைய விரதம் என்று பொருள்.

மா-பாசுபதம் அவைதிகமென்று சிலசாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கின்றதே அந்தச் சந்தேகத்தையும் போக்கியருள வேண்டும். அண்ணலே!

ஆ-பாசுபதம் சிரௌதபாசுபதம் எனவும், அசிரௌதபாசுபதம் எனவும் இருவகைப்படும். அவற்றுள் அசிரௌதபாசுபதம் மோஹனார்த்தமாகக் கூறப்பட்டதாதலின் அது மோஹசாஸ்திர

மும்வேதபாஹ்யமுமாகும். அது முமூட்சுக்களாற் சேவிக்கற்பாலதன்று. அதுவே பிரமசூத்திரத்தில் "பத்யுரஸாமஞ்ஜஸ்யாத்" என்னுஞ்சூத்திரத்தில் கண்டிக்கப்பட்டது. ஸ்ரீநீலகண்ட சிவாசாரியரும், ஸ்ரீசங்கராசாரியரும், ஸ்ரீஉமாபதி சிவாசாரியரும், ஸ்ரீஅப்பையதீக்ஷிதரும் இக்கருத்தையே கொண்டார்கள். இராமாநுஜரும் அவைதிகமாகிய காளாமுகம், காபாலம் என்னும் இரண்டு மதங்களின் லட்சணங்களை எடுத்துக்கூறிக் கண்டித்தனரேயன்றி வைதிக பாசுபதமத லட்சணத்தை மறுத்துத்தம் பாஷியத்தில் கண்டித்தாரல்லர். ஆகையினாலே வைதிக பாசுபதம் என்ஞான்றும் வேதோக்தமாகவே நிலவுறும்.

## கூர்மபுராணம்.

[illegible]
[illegible]

நிர்ம்மிதம் ஹிமயாபூர்வம் ச்ரௌதம் பாசுபதம் சுபம்।
குஹ்யாத் குஹ்யதமம் ஸூக்ஷமம் வேதஸாரம் விமுக்தயே॥

(இ-ள்.) "மறைவினும் அதிமறைவாய், சூக்ஷமமாய், வேதசாரமாய் சுபமாயுள்ளது சிரௌதபாசுபதம்" என்று மொழிந்தது. இதனால் வேதசஹிதமாயுள்ள வைதிக பாசுபதம் முமூட்சுக்களாலே என்றும் சேவிக்கப்பாலதென்றுணர்க. 108 உபநிஷத்துக்களிலும் பாசுபதப்ரஹ்மோபநிஷத் என ஒரு வைதிக சைவோபநிஷத்து பிரகாசித்துக்கொண் டிருக்கின்றது

மா-ஆயின் வைதிக பாசுபத விரதத்தின் பலனை உபதேசித்தருளல் வேண்டும்.

ஆ-அப்படியே உபதேசஞ்செய்கிறோம். அதர்வசிரசு, "பசுபாசவிமோக்ஷாய-பசுபாசவிமோக்ஷாய-பசுவின்பாசம் தொலைவதற்காக" என்று பாசுபத விரதத்தின்பலனைக் கூறிமுடித்தது. ஆத்மா அநாதியே பாசத்தால் பந்திக்கப்பட் டிருத்தலால் பசு என்னும் நாமம்பெற்றது. இப்பாசபந்தம் எப்பொழுது ஒழியுமோ அப்பொழுதே மோட்சம்வந்து பொருந்தும். மோட்சமென்றாலும், முக்தியென்றாலும், வீடென்றாலும் பொருள் ஒன்றே. முக்தி என்னும் பதப்பொருளை விசாரிக்கின் இவ்வுண்மை எளிதில் விளங்கும். முக்தி என்பது வடமொழிச்சொல். அச்சொல்

முச் + இ என்னும் இரண்டு சொற்கள் சேர்ந்து உண்டாயிற்று. முச்—பகுதி; இ - தொழிற்பெயர்விகுதி; அவற்றுள் முச் - என்பது விடுதல் என்று பொருள்படும். படவே முக்தி என்பது விடப்படுதல் என்று அர்த்தமாகும். விடப்படுதலாவது பந்தத்தினின்றும் விடப்படுதலாம். இதனால் விடப்படவேண்டியது ஒன்று, விடுவது ஒன்று என இரண்டு பொருள்கள் சித்தித்தன. இவ்விரண்டு பொருள்களும் செம்பிற் களிம்புபோல அநாதியே ஒன்றாகக்கூடியிருந்து விடாதிருந்தபடியால் அவற்றை உரியகாலத்தில் விடுவிக்க மற்றொரு பொருளும் உண்டென்பது சொல்லாமே அமையும். அதனாலே விடப்படுவதும், விடுவதும், விடுவிப்பதுமாகிய பாசம், பசு, பதி என்னும் திரிபதார்த்தங்களும் அநாதி நித்தியமென்பது முக்தி என்னுஞ் சொல்லானே நிரூபிக்கப்பட்டது.

## ஸாமவேத மஹோபநிஷத்.

𑌤𑌣𑍍𑌡𑍁𑌲𑌸𑍍𑌯 𑌯𑌥𑌾𑌚𑌰𑍍𑌮 𑌯𑌥𑌾 𑌤𑌾𑌮𑍍𑌰𑌸𑍍𑌯 𑌕𑌾𑌲𑌿𑌮𑌾।
𑌜𑍀𑌵𑌸𑍍𑌯 𑌤𑌣𑍍𑌡𑍁𑌲𑌸𑍍𑌯𑍇𑌵 𑌮𑌲𑌂𑌸𑌹𑌜𑌮𑌪𑍍𑌯𑌲𑌂॥

தண்டுலஸ்ய யதாசர்ம யதாதாம்ரஸ்ய காளிமா।
ஜீவஸ்யதண்டுலஸ்யேவ மலம்ஸஹஜ மப்யலம்॥

(இ - ள்.) "நெல்லினிடத்து உமியைப்போலவும், செம்பினிடத்து களிம்பைப்போலவும், ஜீவாத்மாவுக்கு மலம் (பாசம்) ஸஹஜமா யுள்ளது" என்றும்,

## கிருஷ்ணயஜுர்வேத ஸ்கந்தோபநிஷத்.

𑌜𑍀𑌵𑌶𑍍𑌶𑌿𑌵𑌶𑍍𑌶𑌿𑌵𑍋𑌜𑍀𑌵𑌸𑍍𑌸𑌜𑍀𑌵𑌃 𑌕𑍇𑌵𑌲𑌶𑍍𑌶𑌿𑌵𑌃।
𑌤𑍁𑌷𑍇𑌣𑌬𑌦𑍍𑌧𑍋𑌵𑍍𑌰𑍀𑌹𑌿𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌤𑍁𑌷𑌾𑌭𑌾𑌵𑍇𑌤𑍁 𑌤𑌣𑍍𑌡𑍁𑌲𑌃॥
𑌏𑌵𑌂𑌬𑌦𑍍𑌧𑌸𑍍𑌤𑌥𑌾𑌜𑍀𑌵𑌃 𑌕𑌰𑍍𑌮𑌨𑌾𑌶𑍇 𑌸𑌦𑌾𑌶𑌿𑌵𑌃।
𑌪𑌾𑌶𑌬𑌦𑍍𑌧𑌸𑍍𑌤𑌥𑌾𑌜𑍀𑌵𑌃 𑌪𑌾𑌶𑌮𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌸𑌦𑌾𑌶𑌿𑌵𑌃॥

ஜீவச்சிவச்சிவோஜீவஸ் ஸஜீவஃ கேவலச்சிவஃ।
துஷேணபத்தோ வ்ரீஹிஸ்யாத்துஷாபாவேது தண்டுலஃ।
எவம்பத்தஸ்ததா ஜீவஃ கர்மநாசே ஸதாசிவஃ।
பாசபத்தஸ்ததாஜீவஃ பாசமுக்தஸ்ததாசிவஃ॥

(இ-ள்.) "ஜீவனே சிவன். அந்த ஜீவன் சிவனேதான். உமியினால் கட்டுண்டிருக்கிறபோது நெல்லாயிருக்கிறது. உமி நீங்கினால் அது அரிசியாகிறது. அப்படியே ஜீவனும் பந்திக்கப்பட்

டிருக்கிறான். கருமநாசமானால் எப்பொழுதும் சிவனாயிருக்கிறான். பாசத்தினால் பந்தப்பட்டிருக்கிறவரையில் ஜீவனாயிருக்கிறான். பாசத்திலிருந்து விடுபட்டால்அப்பொழுது சிவனாகிறான்'' என்றும் மொழிந்தன. அன்றியும், ஸாமவேதஜாபால் யுபநிஷத் ‘‘𑌕𑌿𑌂 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 - கிம்தத்வம்-தத்துவம்யாது’’, ‘‘𑌕𑍋 𑌜𑍀𑌵𑌃-கோஜீவ꞉-ஜீவன்யார்’’, ‘‘𑌕𑌃 𑌪𑌶𑍁𑌃-க꞉பசு꞉-பசுயாது’’, ‘‘𑌕 𑌈𑌶𑌾𑌨𑌃-கஈசாந꞉-ஈசானர்யார்’’, ‘‘𑌕𑍋 𑌮𑍋𑌕𑍍𑌷𑍋𑌪𑌾𑌯𑌃-கோமோக்ஷோபாய꞉ - மோக்ஷோபாயம் யாது’’ என்று வினவி அவற்றிற்குமுறையே‘‘𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌪𑌶𑍁𑌪𑌤𑌿𑌃 - 𑌅𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑌾𑌵𑌿𑌷𑍍𑌟𑌃 𑌸𑌂𑌸𑌾𑌰𑍀 𑌜𑍀𑌵𑌃 - 𑌸 𑌏𑌵 𑌪𑌶𑍁𑌃 - 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌃 𑌪𑌞𑍍𑌚𑌕𑍃𑌤𑍍𑌯𑌸𑌮𑍍𑌪𑌨𑍍𑌨𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇𑌶𑍍𑌵𑌰 𑌈𑌶𑌃 𑌪𑌶𑍁𑌪𑌤𑌿𑌃 - 𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌧𑌾𑌰𑌣𑌮𑍇𑌵 — தத்வம்பசுபதி꞉ - அஹங்காராவிஷ்டஸ் ஸம்ஸாரிஜீவ꞉-ஸஏவபசு꞉ - ஸர்வஜ்ஞபஞ்சக்ருத்ய ஸம்பந்நஸ்ஸர்வேச்வர ஈச꞉பசுபதி꞉ விபூதிதாரணமேவ=தத்துவம் (உண்மைப் பொருள்) பசுபதி-அகங்காரத்தோடுகூடிய சம்சாரி ஜீவன்-அந்த ஜீவனே பசு-ஸர்வஞ்ஞரும், பஞ்சகிருத்திய ஸம்பந்நரும், சர்வேசுவரரும், ஈசரும், பசுபதியுமாவாரே ஈசானர் - விபூதிதாரணமே மோக்ஷோபாயம்'' என்று விடைகளைப் பகர்ந்தது. சிவஞான போதமும், ‘‘நெல்லிற் குமியும் நிகழ்செம்பினிற்களிம்பும், சொல்லிற் புதிதன்று தொன்மையே'' என்று சாற்றியது. ஸ்ரீதாயுமானசுவாமிகளும், ‘‘அருளுடைய பரமன்றோ வன்று தானே யானுளனென் றும்மெனக்கே யாணவாதிப், பெருகு வினைக் கட்டென்று மென்னாற் கட்டிப்பேசி யதன்றே யருணூல் பேசிற்றன்றே'' என்றும், ‘‘என்று நீயன்று நானுன்னடிமை யல்லவோ'' என்றும், ‘‘களிம்புதோய் செம்பனையயான்'' என்றும் நவின்று முப்பொருளை அநாதி நித்தியமென்று நிர்ணயஞ் செய்தனர். இந்தப்பிரமாணங்களால் என்று சிவமுண்டோ அன்றே அதன் குணமாகிய அருளுண்டு. என்று அருளுண்டோ அன்றே அவ்வருள் பதியும்படியான ஆத்மா உண்டு. என்று ஆத்மா உண்டோ அன்றே அவ்வருள் பதிந்தால் ஒழியத்தக்க மலமுண்டு எனப் பெறப்பட்டன வன்றோ. அப்படியானால் இம் முப்பொருள்களும் முக்தியிலும் உண்டோவெனின், உண்டு. ஆனால் அவை அங்கு முனைத்துத்தோன்றா வென்பதே வைதிக சைவக் கொள்கையாம்.

அஃதெவ்வாறெனின், அசைவோடு கூடியகாற்று ஆகாசத்தில் அசைவற்று நிற்கிறபோது ஆகாசம் ஒன்றுமேயுள்ளதென்றுவது, ஆகாசமுங் காற்றும் வெவ்வேறாய் இரண்டாய் இருக்கிறதென்றுவது, அவ்வாகாசமுங் காற்றும் கண்ணுக்குப் புலப்படாமையால் அவை யில்லையென்றுவது கூறுதல் எப்படி அசாத்தியமோ அதுபோல சிதாகாசமென்னும் அருணிறைவில் ஆத்மா அறிவாய் நிற்கும் ஐக்கிய வீட்டுநிலையும் அத்தன்மைத்தாம். அந்த அதிசய அத்வைதக்கலப்பாகிய நிலையினையே தாயுமானவர், "காண்பானுங் காட்டுவதுங் காட்சியுமாய் நின்றவந்த-வீண்பாவம் போயதுவாய் மேவுநாளெந்நாளோ" என்றும், "நானென தன்மயமே யல்லாலொன்றைத் தலையெடுக்க வொட்டாது தலைப்பட்டாங்கே, போனவுங் கற்பூரதீபம்போலப் போயொளிப்பதல்லாது புலம்வேறின்றும், ஞானகாரத்தினெடு ஞேயமற்ற ஞாதுருவு நழுவாம னழுவிநிற்கும்,ஆனவு மிதன்பெருமையெவர்க்கார் சொல்வார், அதுவான லதுவாவ ரதுவேசொல்லும்" என்றும், "அதுவென்று லெதுவெனவென் றடுக்குஞ்சங்கை யாதலினு லதுவெனவு மறவேவிட்டு, மதுவுண்ட வண்டெனவுஞ் சநகனதி மன்னவர்கள் சுகர்முதலோர் வாழ்ந்தாரென்றும், பதியிந்த நிலையெனவு மென்னையாண்ட படிக்குநிரு விகற்பத்தாற் பரமானந்தக், கதிகண்டு கொள்ளவு நின்னருள் கூரிந்தக் கதியன்றியுறங்கேன் மேற்கருமம் பாரேன்" என்றும் வைதிகசைவர்கள் மதுகையுறுமாறு திருவாய் மலர்ந்தருளினர். தென்முகத் தெய்வம் சின்முத்திரையாற் குறித்த அற்புத நிலையுமிதுவே. சின்முத்திரையாவது-ஞானக்குறி-அது சிவம், ஆத்மா, மலம் (ஆணவம், கர்மம், மாயை) என்னும் ஐந்து பொருள்களின் இயல்பை ஐந்து விரல்களாற் குறிப்பதாம். அவற்றுள் நடுவிரல், அணிவிரல், சிறுவிரல், ஆகிய மூன்றையும் சுட்டுவிரலை விட்டு வேறுபிரித்துக் காட்டுவது மும்மலங்களும் வேறுபட் டொழிதலைக் குறிப்பது. அம்மூன்று விரல்களினின்றும் வேறுபட்டுப் பிரிந்த சுட்டுவிரல் அம்மலபந்தத்தினின்றும் நீங்கிய ஆத்மாவைக்குறிப்பது. அச்சுட்டுவிரல் பெருவிரலடியில் அமர்ந்திருத்தல், மலத்தினின்றும் நீங்கிய ஆத்மா சிவத்தினது திருவருளில் நிறைந்து நிற்றலைக் குறிப்பது. இந்தக்குறிக்கே மௌனமுத்திரை என்றும் பெயர். இது ஞானசிரியர் தமது திருவுள்ளத்திற் கொண்ட உபதேசப்

பொருளை குறிப்பாலுணர்த்திவைக்கும் அற்புத நிலையாகும். இவ்வற்புத நிலையொன்றே பரிபூரண இன்பமான பேரானந்தமோட்சமாதலின் இது பிரணவ மஹாமந்திரானுபூதி வாயிலாக அடையப்பெறுவதன்றி வேறெதனாலும் அணையப்பெறுவதன்று.

**கிருஷ்ணயஜுர்வேத கைவல்யோபநிஷத்தும்.**

ஆத்மாநமரணிம் க்ருத்வா ப்ரணவம் சோத்தராரணிம்।
த்யாநநிர்மதநாப்யாஸாத் பாசம் தஹதி பண்டித:॥

ஆத்மாநமரணிம் க்ருத்வா ப்ரணவம் சோத்தராரணிம்।
த்யானநிர்மதனுப்யாஸாத் பாசம் தஹதிபண்டித:॥

(இ-ன்.) "ஆத்மாவை அரணியாகவும் பிரணவத்தை உத்தராரணியாகவும் வைத்து, (இடையறுத்) தியானம் என்றகடைதலைப் பன்முறை அப்பியசித்தலால் பண்டிதன் பாசத்தை ஒழித்துக்கொள்வான் (முக்திபெறுவான்)" என்றது. இதே மந்திரம் பிரம்மோபநிஷத்திலும் சுவேதா சுவதரோபநிஷத்திலும் சிறிது பேதந் தோன்றப் படிக்கப்பட்டுள்ளது. ஆனால் பொருளில் பேதமில்லை. அரணி-அக்கினியை உற்பத்திசெய்வதற்காக உபயோகிக்கப்படும் அரசு முதலியமரங்களின் ஒரு துண்டுகட்டை. உத்தராரணி - அவ்வரணியின்கண் ஊன்றிக்கடையும் மரத்துண்டு. கடைதலை ஒரேமுறைசெய்தால் அக்கினி உண்டாகாது. பலமுறையுஞ் செய்யவேண்டும். அதுபோல தியானத்தையும் இடையறாது செய்தால் தான் பலன்கிட்டும். திருநாவுக்கரசு மூர்த்திகளும், "உறவுகோ னட்டுணர்வு கயிற்றினால், முறுகவாங்கிக் கடைய முன்னிற்குமே" என்றருளிச் செய்தனர். கடைய, வாங்கிக்கடைய, முறுகவாங்கிக்கடைய என்னும் அப்பெருந்தகையாரது அற்புதப் பிரயோகங்களை யூகித்துணர்க.

அவ்வாறிருத்தலின், "அப்பிரணவ மந்திரத்தின் சொரூபத்தையும் இரகசியப் பொருளையும் அருண்மயமான மைந்தனே! நீ உடல், பொருள், ஆவிமூன்றையும் எமது திருவடிகளுக்குத் தத்தஞ்செய்து, கேட்கு முறைப்படிகேட்டுக் கண்ணீருங் கம்பலையுமாய்ப்பரவசப்பட்டு நின்றபடியால் உன்னுடைய அதிதீவிரபக்குவத்தைக் குளிர்ந்துநோக்கி அஞ்ஞான சந்தேக விபரீதமற அருளிச்செய்தோம். "தனத்தில் பெரியவன், வயதில்பெரியவன், வித்தையில் பெரியவன் ஆகிய இவர்கள் ஞானத்தில் பெரியவனுக்

கும் அவன் மாணுக்கர்களுக்கும் வேலைக்காரர்களா யிருக்கின்ருர்கள்'' என்று மைத்ரேயோபநிஷத் ஓதுகின்றமையால் ஞானத்தில் பெரியோனுகிய உனக்கு இவ்வரிய பிரணவ வித்தையைத் தந்தோம்.'' என்று நன்னடையும், நற்குணமும், திருவருள் ஞானமும் பிரகாசியாநின்ற ஆசிரியர் அருட்களிப்பின் மிகுதியால் மொழிந்து சர்வமும் தற்சொரூபமாய் விளங்கும் துரீயப் பொருளான மஹா உருத்திரராகிய சிவபரம்பொருளை அடியில் காட்டலுற்ற வேதவாக்கியங்களால் ஆராமையோடு துதிசெய்து பேரின்பமயமாய்ப் பிரகாசித்தனர். ஓம்

யொ ரு¬ெ ரு ா ஃ ஹ்ள யொ ஃவ்ஸு¬ய ஒஷயீவீ ரு¬ய ஆவிவெஸ।
யஜ ஊாவிஶ்வாஹு¬வ நா நிவக்லூவெ தஸ்மை ரு¬ ரு ாய நமொ ஃஸ்து¬ஃ॥
யோருத்ரோ அக்நௌயோ அப்ஸு¬ யஓஷதீர்வீருத ஆவிவேச।
யஇமாவிச்வா புவநாநிச க்லிபே தஸ்மைருத்ராய நமோ அஸ்து॥

(இ-ள்.) ''எந்த ருத்ரமூர்த்தி அக்கினியில்உட்பிரவேசித்தார். அப்புவில் உட்பிரவேசித்தார். ஓஷதிகளிலும், மரங்களிலும் உட்பிரவேசித்தார். எவர் இந்தப்புவனங்களை யெல்லாம் சிருஷ்டித்தார். அந்தருத்ரமூர்த்திக்கு நமஸ்காரம் ஆகுக' ஓம்

யொ தெ³வொ ஃ ந்ஹ்ள யொ ஃவ்ஸு¬ யொ விஶ்வம் ஹு¬வ நாவிவெஶ।
ய ஒஷயீஷு¬ யொ வநஸ்பதிஷு¬ தஸ்மை தெ³வாய நமொ நமஃ॥
யோதேவோ அக்நௌயோ அப்ஸு¬ யோவிச்வம் புவநமாவிவேச।
யஓஷதீஷு¬யோவநஸ்பதிஷு¬ தஸ்மைதேவாய நமோநமః॥

(இ-ள்.) ''எந்தத்தேவன் அக்கினியிலுள்ளவன். எவன் நீரிலுள்ளவன். எவன் எல்லாப்புவனங்களிலுள்ளவன். எவன் ஓஷதிகளிலுள்ளவன், எவன் மரங்களிலுள்ளவன். அந்தத்தேவனுக்கு நமஸ்காரம், நமஸ்காரம்''.

மாணுக்கன்-அவ்வாறு பேரின்பமயமாய்ப் பிரகாசித்துக் கொண்டிருக்கும் அருள்வடிவாகிய ஆசிரியருடைய சுத்தமான திருவடிக்கமலங்களை உளமொழிமெய்களால் நன்ருக இறைஞ்சி ''ஒருமொழி என்னும் ஒப்பற்ற உபதேசமொழியையும், அநுபூதி வாயிலாக அணையப்பெறும் பரமுக்தியையும் நல்கியருளிய ஆனந்த ரூபியே! மனத்தூய்மைகொண்ட மாசற்ற குருநாதா!! தேவரீர் அநுக்கிரஹித்த உபதேசமொழிகளனைத்தையும் செவியேவாயாகவும், நெஞ்சேகளனுகவுங் கிரஹித்து, உளத்தமைத்து

அடியேனுக்கு உண்டாயிருந்த ஐயங்களையெல்லாம் அஞ்ஞான மயக்கமறப் போக்கிக்கொண்டேன். "பிறப்பென்னும் பேதமை நீங்கச் சிறப்பென்னுஞ், செம்பொருள் காண்பதறிவு' என்று தெய்வப்புலமைத் திருவள்ளுவதேவர் குறித்த செம்பொருளைக் கண்டேன்! கண்டேன்!! திருவருட் செல்வத்தையும் பெற்று உய்ந்தேன்! உய்ந்தேன்!! மிக்கசமுசாரமாகிய பவக்கடலைக் கடந்து எல்லையில்லா இன்பசாகரத்தில் அமிழ்ந்தினேன். ஞான வைராக்கிய பரிபூரணமூர்த்தியாகிய தேவரீருடைய பரமகாருண் யத்திற்குச் சுதந்தரவீனனாகிய அடியேன் செய்யத்தக்க கைம் மாறு முளதோ! அறியேன்" என்று தன்னுடைய ஞானாசிரிய ரது இரண்டு திருவடிப்போதுகளையும் மீளவும் வணங்கி நின்று ஆனந்தமயமாய் விளங்கினன்.

ஆசிரியர்-அப்பொழுது இன்பமயமாய் விளங்குந்தம்மாணாக் கரை உளங்குளிர்ந்து உவப்புடன் நோக்கி, சிறந்த ஆசிமொழி களைக்கூறி, வன்றொண்டப் பெருமானாகிய சுந்தரமூர்த்தி சுவாமி கள், "இறந்து போக்கில்லை வரவில்லையாகி யின்ப வெள்ளத்து ளிருப்பர்களினிதே" என்றருளிச்செய்தபடி சிவஸ்தவஞ்செய்து பரிபூரண சிவாநந்தாநுபூதியாகிய இன்பவெள்ளத்துள் அழுந்தி இருக்கக் கடாட்சித்தருளினர். சுபம்! சுபம்!! சுபம்!!! ஓம்தத்ஸத்.

வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்கதண் புனல் வேந்தனு மோங்குக
ஆழ்கதீய தெல்லா மர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

என் றுமின்பம் பெருகு மியல்பினால்
ஒன் றுகாதலி னுள்ளமு மோங்கிட
மன் றுளாரடி யாரவர் வான்புகழ்
நின்ற தெங்கு நிலவியுல கெலாம்.

திருச்சிற்றம்பலம்.

ப்ரணவ வித்யாபரிமளம் என்னும்
ஓங்காரவிளக்கம்
முற்றுப்பெற்றது.



மெய்கண்ட தேசிகன் திருவடிவாழ்க.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

# புருஷ ஸூக்தம்.

எல்லாத்தெய்வங்களும் தாமாகவிருக்கப்பெற்ற ஸ்ரீபசுபதியின் பெருமையினை விளக்கும் புருஷ ஸூக்தம் ருக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம் என்னும் மூன்று வேதங்களினும் படிக்கப்பட்டிருப்பினும், யஜுர்வேதத்தில் இருபத்துநான்கு மந்திரங்களாய் இரண்டு அநுவாகங்களுடன் விளங்குகின்றது. ஏனைய இரண்டு வேதங்களிலோ பதினாறு மந்திரங்களாகக்கூறப்பட்டுள்ளது. முன்னோர் யஜுர் ஆரண்யகத்திற்கூறிய புருஷ ஸூக்தத்துக்கே பாஷ்யம் இயற்றினராதலானும், யஜுவில் புருஷ ஸூக்தத்தைத் தொடர்ந்துவரும் பகுதிகள் சிவபாரம்யங்களைக்கூறிவருதலானும், அவை சிவபரமெனச் சாதித்தற்குப் போதுமான ஆதாரமாய் நிற்றலானும், அவற்றைத் தொடர்ந்தே தைத்திரீயம், மஹோபநிஷத் முதலிய உபநிஷத்துக்கள் அமைந்திருத்தலானும் அப்புருஷ ஸூக்தத்தையே ஈண்டு வரைகின்றாம். ஸூக்தத்துக்கு ரிஷி-நாராயணரென்று பெயர்கொண்ட ஓர் ரிஷி. தேவதை-புருஷன் (சிவபெருமான்). சந்தஸ்-அநுஷ்டுப் இறுதியிலுள்ள மந்திரம் த்ருஷ்டுப்.

## முதலாம் அநுவாகம்.

𑌸𑌹𑌸𑍍𑌰𑌶𑍀𑌰𑍍𑌷𑌾 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 | 𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌕𑍍𑌷𑌃 𑌸𑌹𑌸𑍍𑌰𑌪𑌾𑌤𑍍 |
𑌸 𑌭𑍂𑌮𑌿𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌤𑍋 𑌵𑍃𑌤𑍍𑌵𑌾 | 𑌅𑌤𑍍𑌯𑌤𑌿𑌷𑍍𑌠𑌦𑍍𑌦𑌶𑌾𑌙𑍍𑌗𑍁𑌲𑌮𑍍 |

**ஸஹஸ்ரசீர்ஷாபுருஷ꞉। ஸஹஸ்ராக்ஷஸ்ஸஹஸ்ரபாத்।**
**ஸபூமிம்விச்வதோ வ்ருத்வா। அத்யதிஷ்டத்தசாங்குலம்।** 1

𑌪𑍁𑌰𑍁𑌷 𑌏𑌵𑍇𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌮𑍍 | 𑌯𑌦𑍍𑌭𑍂𑌤𑌂 𑌯𑌚𑍍𑌚 𑌭𑌵𑍍𑌯𑌮𑍍 |
𑌉𑌤𑌾𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌸𑍍𑌯𑍇𑌶𑌾𑌨𑌃 | 𑌯𑌦𑌨𑍍𑌨𑍇𑌨𑌾𑌤𑌿𑌰𑍋𑌹𑌤𑌿 |

**புருஷஏவேதம்ஸர்வம்। யத்பூதம்யச்சபவ்யம்।**
**உதாம்ருதத்வஸ்யேசாந꞉। யதந்நேநாதிரோஹதி।** 2

𑌏𑌤𑌾𑌵𑌾𑌨𑌸𑍍𑌯 𑌮𑌹𑌿𑌮𑌾 | 𑌅𑌤𑍋 𑌜𑍍𑌯𑌾𑌯𑌾𑌂𑌶𑍍𑌚 𑌪𑍂𑌰𑍁𑌷𑌃 |
𑌪𑌾𑌦𑍋𑌽𑌸𑍍𑌯 𑌵𑌿𑌶𑍍𑌵𑌾 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 | 𑌤𑍍𑌰𑌿𑌪𑌾𑌦𑌸𑍍𑌯𑌾𑌮𑍃𑌤𑌂 𑌦𑌿𑌵𑌿 |

ஏதாவாநஸ்யமஹிமா। அதோஜ்யாயாம்ச்சபூருஷ:।
பாதோऽஸ்யவிச்வாபூதாநி। த்ரிபாதஸ்யாம்ருதந்திவி। 3

𑌤𑍍𑌰𑌿𑌪𑌾𑌦𑍂𑌰𑍍𑌧𑍍𑌵 𑌉𑌦𑌐𑌤𑍍𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 | 𑌪𑌾𑌦𑍋𑌽𑌸𑍍𑌯𑍇𑌹𑌾𑌭𑌵𑌾𑌤𑍍𑌪𑍁𑌨𑌃 |
𑌤𑌤𑍋 𑌵𑌿𑌷𑍍𑌵𑌙𑍍𑌵𑍍𑌯𑌕𑍍𑌰𑌾𑌮𑌤𑍍 | 𑌸𑌾𑌶𑌨𑌾𑌨𑌶𑌨𑍇 𑌅𑌭𑌿 |

த்ரிபாதூர்த்வஉதைத்புருஷ:। பாதோऽஸ்யேஹாபவாத்புந:।
ததோவிஷ்வங்வ்யக்ராமத்। ஸாசநாநசநே அபி। 4

𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌵𑌿𑌰𑌾𑌡𑌜𑌾𑌯𑌤 | 𑌵𑌿𑌰𑌾𑌜𑍋 𑌅𑌧𑌿 𑌪𑍂𑌰𑍁𑌷𑌃 |
𑌸 𑌜𑌾𑌤𑍋 𑌅𑌤𑍍𑌯𑌰𑌿𑌚𑍍𑌯𑌤 | 𑌪𑌶𑍍𑌚𑌾𑌦𑍍𑌭𑍂𑌮𑌿𑌮𑌥𑍋 𑌪𑍁𑌰𑌃 |

தஸ்மாத்விராடஜாயத। விராஜோ அதிபூருஷ:।
ஸஜாதோ அத்யரிச்யத। பச்சாத்பூமி மதோபுர:। 5

𑌯𑌤𑍍𑌪𑍁𑌰𑍁𑌷𑍇𑌣 𑌹𑌵𑌿𑌷𑌾 | 𑌦𑍇𑌵𑌾 𑌯𑌜𑍍𑌞𑌮𑌤𑌨𑍍𑌵𑌤 |
𑌵𑌸𑌨𑍍𑌤𑍋 𑌅𑌸𑍍𑌯𑌾𑌸𑍀𑌦𑌾𑌜𑍍𑌯𑌮𑍍 | 𑌗𑍍𑌰𑍀𑌷𑍍𑌮 𑌇𑌧𑍍𑌮𑌶𑍍𑌶𑌰𑌦𑍍𑌧𑌵𑌿𑌃 |

யத்புருஷேண ஹவிஷா। தேவாயஜ்ஞமதந்வத।
வஸந்தோ அஸ்யாஸீதாஜ்யம்। க்ரீஷ்மஇத்மச்சரதவி:। 6

𑌸𑌪𑍍𑌤𑌾𑌸𑍍𑌯𑌾𑌸𑌨𑍍𑌪𑌰𑌿𑌧𑌯𑌃 | 𑌤𑍍𑌰𑌿𑌃 𑌸𑌪𑍍𑌤 𑌸𑌮𑌿𑌧𑌃 𑌕𑍃𑌤𑌾𑌃 |
𑌦𑍇𑌵𑌾 𑌯𑌦𑍍𑌯𑌜𑍍𑌞𑌂 𑌤𑌨𑍍𑌵𑌾𑌨𑌾𑌃 | 𑌅𑌬𑌧𑍍𑌨𑌨𑍍𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌪𑌶𑍁𑌮𑍍 |

ஸப்தாஸ்யாஸந்பரிதய:। த்ரிஸ்ஸப்தஸமித:க்ருதா:।
தேவாயத்யஜ்ஞம்தந்வாநா:। அபத்நந்புருஷம்பசும்। 7

𑌤𑌂 𑌯𑌜𑍍𑌞𑌂 𑌬𑌰𑍍𑌹𑌿𑌷𑌿 𑌪𑍍𑌰𑍌𑌕𑍍𑌷𑌨𑍍 | 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌜𑌾𑌤𑌮𑌗𑍍𑌰𑌤𑌃 |
𑌤𑍇𑌨 𑌦𑍇𑌵𑌾 𑌅𑌯𑌜𑌨𑍍𑌤 | 𑌸𑌾𑌧𑍍𑌯𑌾 𑌋𑌷𑌯𑌶𑍍𑌚 𑌯𑍇 |

தம்யஜ்ஞம்பர்ஹிஷிப்ரௌக்ஷந்। புருஷஞ்ஜாதமக்ரத:।
தேநதேவா அயஜந்த। ஸாத்யாருஷயச்சயே। 8

𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌹𑍁𑌤𑌃 | 𑌸𑌮𑍍𑌭𑍃𑌤𑌂 𑌪𑍃𑌷𑌦𑌾𑌜𑍍𑌯𑌮𑍍 |
𑌪𑌶𑍂𑌸𑍍𑌤𑌾𑌂𑌶𑍍𑌚𑌕𑍍𑌰𑍇 𑌵𑌾𑌯𑌵𑍍𑌯𑌾𑌨𑍍 | 𑌆𑌰𑌣𑍍𑌯𑌾𑌨𑍍𑌗𑍍𑌰𑌾𑌮𑍍𑌯𑌾𑌶𑍍𑌚 𑌯𑍇 |

தஸ்மாத்யஜ்ஞாத்ஸர்வஹுத:। ஸம்ப்ருதம் ப்ருஷதாஜ்யம்।
பசூம்ஸ்தாம்ச்சக்ரே வாயவ்யாந்। ஆரண்யாந்க்ராம்யாச்சயே। 9

𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌹𑍁𑌤𑌃 | 𑌋𑌚𑌃 𑌸𑌾𑌮𑌾𑌨𑌿 𑌜𑌜𑍍𑌞𑌿𑌰𑍇 |
𑌛𑌨𑍍𑌦𑌾𑌂𑌸𑌿 𑌜𑌜𑍍𑌞𑌿𑌰𑍇 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 | 𑌯𑌜𑍁𑌸𑍍𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌜𑌾𑌯𑌤 |

தஸ்மாத்யஜ்ஞாத்ஸர்வஹுத:। ருசஸ்ஸாமாநிஜஜ்ஞிரே।
சந்தாம்ஸிஜஜ்ஞிரே தஸ்மாத்। யஜுஸ்தஸ்மாதஜாயத। 10

𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌶𑍍𑌵𑌾 𑌅𑌜𑌾𑌯𑌨𑍍𑌤 | 𑌯𑍇 𑌕𑍇 𑌚𑍋𑌭𑌯𑌾𑌦𑌤𑌃 |
𑌗𑌾𑌵𑍋 𑌹 𑌜𑌜𑍍𑌞𑌿𑌰𑍇 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 | 𑌤𑌸𑍍𑌮𑌾𑌜𑍍𑌜𑌾𑌤𑌾 𑌅𑌜𑌾𑌵𑌯𑌃 |

தஸ்மாதச்வா அஜாயந்த। யேகேசோபயாதத:।
காவோஹஜஜ்ஞிரேதஸ்மாத்। தஸ்மாஜ்ஜாதா அஜாவய:। 11

യത്പുരുഷം വ്യദധുഃ। കതിധാ വ്യകല്പയൻ।
മുഖം കിമസ്യ കൌ ബാഹൂ। കാവൂരൂ പാദാവുച്യേതേ।

யத்புருஷம் வ்யதது:। கதிதா வ்யகல்பயந்।
முகங்கிமஸ்யகௌபாஹூ। காவூரூபாதாவுச்யேதே। 12

ബ്രാഹ്മണോഽസ്യ മുഖമാസീത്। ബാഹൂ രാജന്യഃ കൃതഃ।
ഊരൂ തദസ്യ യദ്വൈശ്യഃ। പദ്ഭ്യാം ശൂദ്രോ അജായത।

ப்ராஹ்மணோ஽ஸ்யமுகமாஸீத்। பாஹூராஜந்ய: க்ருத:
ஊரூ ததஸ்ய யத்வைச்ய:। பத்ப்யாம் சூத்ரோ அஜாயத। 13

ചന്ദ്രമാ മനസോ ജാതഃ। ചക്ഷോഃ സൂര്യോ അജായത।
മുഖാദിന്ദ്രശ്ചാഗ്നിശ്ച। പ്രാണാദ്വായുരജായത।

சந்த்ரமா மனஸோஜாத:। சக்ஷோஸ்ஸூர்யோ அஜாயத।
முகாதிந்த்ரச்சாக்நிச்ச। ப்ராணாத்வாயுரஜாயத। 14

നാഭ്യാ ആസീദന്തരിക്ഷം। ശീർഷ്ണോ ദ്യൌഃ സമവർതത।
പദ്ഭ്യാം ഭൂമിർദിശഃ ശ്രോത്രാത്। തഥാ ലോകാം അകല്പയൻ।

நாப்யா ஆஸீதந்தரிக்ஷம்। சீர்ஷ்ணோத்யௌஸ்ஸமவர்த்தத।
பத்ப்யாம்பூமிர்திசச்ச்ரோத்ராத்। ததாலோகாம் அகல்பயந்। 15

വേദാഹമേതം പുരുഷം മഹാന്തം। ആദിത്യവർണം തമസസ്തു പാരേ
സർവാണി രൂപാണി വിചിത്യ ധീരഃ। നാമാനി കൃത്വാഽഭിവദൻ യദാസ്തേ।

வேதாஹமேதம்புருஷம்மஹாந்தம் ஆதித்யவர்ணம்தமஸ் துபாரே
ஸர்வாணிரூபாணிவிசித்யதீர:। நாமாநிக்ருத்வாபி வதந்யதாஸ்தே। 16

ധാതാ പുരസ്താദ്യമുദാജഹാര। ശക്രഃ പ്രവിദ്വാൻ പ്രദിശശ്ചതസ്രഃ।
തമേവം വിദ്വാനമൃത ഇഹ ഭവതി। നാന്യഃ പന്ഥാ അയനായ വിദ്യതേ।

தாதாபுரஸ்தாத்யமுதாஜஹார। சக்ர: ப்ரவித்வாந் ப்ரதிசச்சதஸ்ர:
தமேவம்வித்வாநம்ருத இஹபவதி। நாந்ய:பந்தா அயநாயவித்யதே। 17

യജ്ഞേന യജ്ഞമയജന്ത ദേവാഃ। താനി ധർമാണി പ്രഥമാന്യാസൻ।
തേ ഹ നാകം മഹിമാനഃ സചന്തേ। യത്ര പൂർവേ സാധ്യാഃ സന്തി ദേവാഃ।

யஜ்ஞேநயஜ்ஞமயஜந்ததேவா:। தாநிதர்மாணிப்ரதமாந்யாஸந்।
தேஹநாகம்மஹிமாநஸ்ஸசந்தே। யத்ரபூர்வே ஸாத்யாஸ்ஸந்திதேவா: 18

முதலநுவாகம் முற்றுப்பெற்றது.

## இரண்டாம் அநுவாகம்.

𑌅𑌦𑍍𑌭𑍍𑌯𑌸𑍍𑌸𑌂𑌭𑍂𑌤𑌃 𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑍈 𑌰𑌸𑌾𑌚𑍍𑌚 | 𑌵𑌿𑌶𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌣𑌸𑍍𑌸𑌮𑌵𑌰𑍍𑌤𑌤𑌾𑌧𑌿 | 𑌤𑌸𑍍𑌯 𑌤𑍍𑌵𑌷𑍍𑌟𑌾 𑌵𑌿𑌦𑌧𑌦𑍍𑌰𑍂𑌪𑌮𑍇𑌤𑌿 | 𑌤𑌤𑍍𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌯 𑌵𑌿𑌶𑍍𑌵𑌮𑌾𑌜𑌾𑌨𑌮𑌗𑍍𑌰𑍇 |

*அத்ப்யஸ்ஸம்பூத:ப்ருதிவ்யைரஸாச்ச। விச்வகர்மணஸ்ஸமவர்த்ததாதி।*
*தஸ்யத்வஷ்டா விததத்ரூபமேதி। தத்புருஷஸ்யவிச்வமாஜாநமக்ரே।* 19

𑌵𑍇𑌦𑌾𑌹𑌮𑍇𑌤𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌮𑌹𑌾𑌨𑍍𑌤𑌮𑍍 | 𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌵𑌰𑍍𑌣𑌂 𑌤𑌮𑌸𑌸𑍍𑌪𑌰𑌸𑍍𑌤𑌾𑌤𑍍 | 𑌤𑌮𑍇𑌵𑌂 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑌮𑍃𑌤 𑌇𑌹 𑌭𑌵𑌤𑌿 | 𑌨𑌾𑌨𑍍𑌯𑌃 𑌪𑌨𑍍𑌥𑌾 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇𑌽𑌯𑌨𑌾𑌯 |

*வேதாஹமேதம்புருஷம் மஹாந்தம்। ஆதித்யவர்ணந்தமஸ:பரஸ்தாத்।*
*தமேவம்வித்வாநம்ருதஇஹபவதி। நாந்ய:பந்தாவித்யதேயநாய।* 20

𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑌿𑌶𑍍𑌚𑌰𑌤𑌿 𑌗𑌰𑍍𑌭𑍇 𑌅𑌨𑍍𑌤𑌃 | 𑌅𑌜𑌾𑌯𑌮𑌾𑌨𑍋 𑌬𑌹𑍁𑌧𑌾 𑌵𑌿𑌜𑌾𑌯𑌤𑍇 | 𑌤𑌸𑍍𑌯 𑌧𑍀𑌰𑌾𑌃 𑌪𑌰𑌿𑌜𑌾𑌨𑌨𑍍𑌤𑌿 𑌯𑍋𑌨𑌿𑌮𑍍 | 𑌮𑌰𑍀𑌚𑍀𑌨𑌾𑌂 𑌪𑌦𑌮𑌿𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌵𑍇𑌧𑌸𑌃 |

*ப்ரஜாபதிச்சரதிகர்பேஅந்த:। அஜாயமாநோ பஹுதாவிஜாயதே।*
*தஸ்யதீரா:பரிஜாநந்தியோநிம்। மரீசீநாம்பதமிச்சந்திவேதஸ:।* 21

𑌯𑍋 𑌦𑍇𑌵𑍇𑌭𑍍𑌯 𑌆𑌤𑌪𑌤𑌿 | 𑌯𑍋 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂 𑌪𑍁𑌰𑍋𑌹𑌿𑌤𑌃 | 𑌪𑍂𑌰𑍍𑌵𑍋 𑌯𑍋 𑌦𑍇𑌵𑍇𑌭𑍍𑌯𑍋 𑌜𑌾𑌤𑌃 | 𑌨𑌮𑍋 𑌰𑍁𑌚𑌾𑌯 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌯𑍇 |

*யோதேவேப்யஆதபதி। யோதேவாநாம்புரோஹித:।*
*பூர்வோயோதேவேப்யோஜாத:। நமோருசாய ப்ராஹ்மயே।* 22

𑌰𑍁𑌚𑌂 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌂 𑌜𑌨𑌯𑌨𑍍𑌤𑌃 | 𑌦𑍇𑌵𑌾 𑌅𑌗𑍍𑌰𑍇 𑌤𑌦𑌬𑍍𑌰𑍁𑌵𑌨𑍍 | 𑌯𑌸𑍍𑌤𑍍𑌵𑍈𑌵𑌂 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍋 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑍍 | 𑌤𑌸𑍍𑌯 𑌦𑍇𑌵𑌾 𑌅𑌸𑌨𑍍𑌵𑌶𑍇 |

*ருசம்ப்ராஹ்மஞ்ஜநயந்த:। தேவாஅக்ரே ததப்ருவந்।*
*யஸ்த்வைவம் ப்ராஹ்மணோவித்யாத்। தஸ்யதேவா அஸந்வசே।* 23

𑌹𑍍𑌰𑍀𑌶𑍍𑌚 𑌤𑍇 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌶𑍍𑌚 𑌪𑌤𑍍𑌨𑍍𑌯𑍌 | 𑌅𑌹𑍋𑌰𑌾𑌤𑍍𑌰𑍇 𑌪𑌾𑌰𑍍𑌶𑍍𑌵𑍇 | 𑌨𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌰𑍂𑌪𑌮𑍍 | 𑌅𑌶𑍍𑌵𑌿𑌨𑍌 𑌵𑍍𑌯𑌾𑌤𑍍𑌤𑌮𑍍 | 𑌇𑌷𑍍𑌟𑌂 𑌮𑌨𑌿𑌷𑌾𑌣 | 𑌅𑌮𑍁𑌂 𑌮𑌨𑌿𑌷𑌾𑌣 | 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌮𑌨𑌿𑌷𑌾𑌣 |

*ஹ்ரீச்சதேலக்ஷ்மீச்சபத்ந்யௌ। அஹோராத்ரே பார்ச்வே।*
*நக்ஷத்ராணி ரூபம் அச்விநௌவ்யாத்தம்। இஷ்டம்மநிஷாண।* 24
*அமும்மநிஷாண। ஸர்வம் மநிஷாண।*

இரண்டாம் அநுவாகம் முற்றுப்பெற்றது.

புருஷஸூக்தம் முற்றுப்பெற்றது.



உ

சிவமயம்

ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய

# திருத்தொண்டத்தொகை.

ஏழாந்திருமுறை-பண்-கொல்லிக்கௌவாணம்.

அடிமை

திருச்சிற்றம்பலம்.

தில்லைவா ழந்தணர்த மடியார்க்கு மடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க்கடியேன்
இல்லையே யென்னாத வியற்பகைக்கு மடியேன்
இளையான்றன் குடிமாற னடியார்க்கு மடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டர்க் கடி-
அல்லிமென் முல்லையந்தா ரமர்நீதிக் கடியேன் [யேன்
ஆரூர னாரூரி லம்மானுக் காளே (1)
இலைமலிந்த வேனம்பி யெறிபத்தர்க் கடியேன்
ஏனாதி நாதன்ற னடியார்க்கு மடியேன்
கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர்க் கடியேன்
கடவூரிற் கலையன்ற னடியார்க்கு மடியேன்
மலைமலிந்த தோள்வள்ளன் மானக்கஞ் சாறன்
எஞ்சாத வாட்டாய னடியார்க்கு மடியேன்
அலைமலிந்த புனன்மங்கை யானாயர்க்கடியேன்
ஆரூர னாரூரி லம்மானுக் காளே (2)
மும்மையா லுலகாண்ட மூர்த்திக்கு மடியேன்
முருகனுக்கு முருத்திர பசுபதிக்கு மடியேன்
செம்மையே திருநாளைப் போவார்க்கு மடியேன்
திருக்குறிப்புத் தொண்டர்தம் மடியார்க்கு மடியேன்
மெய்ம்மையே திருமேனி வழிபடா நிற்க
வெகுண்டெழுந்த தாதைதாள் மழுவினா லெறிந்த
அம்மையா னடிச்சண்டிப் பெருமானுக் கடியேன்
ஆரூர னாரூரி லம்மானுக்காளே (3)

திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
திருநாவுக் கரையன்ற னடியார்க்கு மடியேன்
பெருநம்பி குலச்சிறைத னடியார்க்கு மடியேன்
பெருமிழலைக் குறும்பர்க்கும் பேயார்க்கு மடியேன்
ஒருநம்பி யப்பூதி யடியார்க்கு மடியேன்
ஒலிபுனல்சூழ் சாத்தமங்கை நீலநக்கர்க் கடியேன்
அருநம்பி நமிநந்தி யடியார்க்கு மடியேன்
ஆரூர னாரூரி லம்மானுக் காளே.

வம்பறா வரிவண்டு மணநாற மலரும்
மதுமலர்நற் கொன்றையா னடியலாற் பேணா
எம்பிரான் சம்பந்த னடியார்க்கு மடியேன்
ஏயர்கோன் கலிக்காம னடியார்க்கு மடியேன்
நம்பிரான் றிருமூல னடியார்க்கு மடியேன்
நாட்டமிகு தண்டிக்கு மூர்க்கர்க்கு மடியேன்
அம்பரான் சோமாசி மாறனுக்கு மடியேன்
ஆரூர னாரூரி லம்மானுக் காளே.

வார்கொண்ட வனமுலையா ளுமைபங்கன் கழலே
மறவாது கல்லெறிந்த சாக்கியர்க்கு மடியேன்
சீர்கொண்ட புகழ்வள்ளல் சிறப்புலிக்கு மடியேன்
செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டர்க் கடியே[ன்]
கார்கொண்ட கொடைக்கழறிற் றறிவார்க்கு மடியேன்
கடற்காழிக் கணநாத னடியார்க்கு மடியேன்
ஆர்கொண்ட வேற்கூற்றன் களந்தைக் கோனடியேன்
ஆரூர னாரூரி லம்மானுக் காளே. (6)

பொய்யடிமை யில்லாத புலவர்க்கு மடியேன்
பொழிற்கருவூர்த் துஞ்சிய புகழ்ச்சோழற் கடியேன்
மெய்யடியா னரசிங்க முனையரையற் கடியேன்
விரிதிரைசூழ் கடனாகை யதிபத்தர்க் கடியேன்
கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பன் கலியன்
கழற்சத்தி வரிஞ்சையர்கோ னடியார்க்கு மடியேன்
ஐயடிகள் காடவர்கோ னடியார்க்கு மடியேன்
ஆரூர னாரூரி லம்மானுக் காளே. (7)

கறைக்கண்டன் கழலடியே காப்புக்கொண் டிருந்த
கணம்புல்ல நம்பிக்குங் காரிக்கு மடியேன்

நிறைகொண்ட சிந்தையா னெல்வேலி வென்ற
நின்றசீர் நெடுமாற னடியார்க்கு மடியேன்
துறைக்கொண்ட செம்பவள மிருளகற்றுஞ் சோதித்
தொன்மயிலை வாயிலா னடியார்க்கு மடியேன்
அறைக்கொண்ட வேனம்பி முனையடுவார்க் கடியேன்
ஆரூர னாரூரி லம்மானுக் காளே. (8)

கடல்சூழ்ந்த வுலகெலாங் காக்கின்ற பெருமான்
காடவர்கோன் கழற்சிங்க னடியார்க்கு மடியேன்
மடல்சூழ்ந்த தார்நம்பி யிடங்கழிக்குந் தஞ்சை
மன்னவனாஞ் செருத்துணை தன் னடியார்க்கு மடியேன்
புடைசூழ்ந்த புலியதண்மே லரவாடவாடி
பொன்னடிக்கே மனம்வைத்த புகழ்த்துணைக்கு மடி
அடல்சூழ்ந்த வேனம்பி கோட்புலிக்கு மடியேன் [யேன்
ஆரூர னாரூரி லம்மானுக் காளே. (9)

பத்தராய்ப் பணிவார்க ளெல்லார்க்கு மடியேன்
பரமனையே பாடுவா ரடியார்க்கு மடியேன்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கு மடியேன்
திருவாரூர்ப் பிறந்தார்க ளெல்லார்க்கு மடியேன்
முப்போதுந் திருமேனி தீண்டுவார்க் கடியேன்
முழுநீறு பூசிய முனிவர்க்கு மடியேன்
அப்பாலு மடிச்சார்ந்த வடியார்க்கு மடியேன்
ஆரூர னாரூரி லம்மானுக் காளே. (10)

மன்னியசீர் மறைநாவ னின்றவூர்ப் பூசல்
வரிவளையான் மானிக்கு நேசனுக்கு மடியேன்
தென்னவனா யுலகாண்ட செங்கணார்க் கடியேன்
திருநீல கண்டத்துப் பாணனார்க் கடியேன்
என்னவனா மரனடியே யடைந்திட்ட சடையன்
இசைஞானி காதலன் றிருநாவ லூர்க்கோன்
அன்னவனா மாரூர னடிமைகேட் டுவப்பார்
ஆரூரி லம்மானுக் கன்பரா வாரே. (11)

திருச்சிற்றம்பலம்.

திருத்தொண்டத்தொகை முற்றுப்பெற்றது.

# ஓங்காரவிளக்கத்தில் எடுத்துக்காட்டியுள்ள மந்திரசுலோகங்களின் முதற்குறிப்பு அட்டவணை.


| மந்திரம். | பக்கம். |
|---|---|
| அ | |
| அகாரம் ப்ரஹ்மாணம்நா | 101 |
| அக்நிமீளே | 19 |
| அக்நிரிதிபஸ்ம | 203 |
| அங்குஷ்ட மாத்ரஃ | 59, 62 |
| அஜம் த்ருவம் ஸர்வ | 117 |
| அஜாத இத்யேவகச்சித் | 117 |
| அஜாத மிமமேவைகம் | 119 |
| அணோரணியாந்மஹ | 178 |
| அதகஸ்மாதுச்யத ஈசா | 97 |
| ,, தே ஏகோ | 79 |
| ,, ,, ஓங்கார | 108 |
| ,, ,, தாரம் | 115 |
| ,, ,, பகவா | 166 |
| ,, ,, ப்ரணவ | 112 |
| ,, ,, மஹாதே | 185 |
| அத த்யோயோநஃ | 141 |
| அதபராயயாததக்ஷர | 9 |
| அதபர்க இதி | 141, 142 |
| அதபர்கோதேவஸ்ய | 141 |
| அதாதோ ப்ரஹ்மஜிஞ் | 42 |
| அதிஷ்டிதாகேந | 175 |
| அத்ரஹ்ஜிஜந்தோ | 150 |
| அத்ராப்யசக்தோ | 145 |
| அத்ருஷ்டமவ்யய | 67 |
| அத்வைதம் சதுர்த்தம் | 70 |
| அநாவ்ருத்திசப்தா | 43 |
| அநாதிமத்யாந்த | 88 |
| அநீசச்சாத்மாபத்ய | 177 |
| அநுபூதிம்விநாமூ | 13 |
| அந்தந்தமஃப்ரவிச | 147 |
| அந்தர்பஹிச்ச | 85 |
| அந்தஸ்ததர்மோபதே | 140 |
| அந்நம்ப்ரஹ்ம | 155 |
| அமாத்ரஸ் சதுர்த்தோ | 67 |
| அவஸ்தாத்ரிதயாதீ | 12 |
| அவிமுக்தஸ்திதஸ்தஸ் | 153 |
| அஸௌயோ அவஸர் | 65 |
| அஸ்யபாதாச்சத் | 26 |
| அஸ்வரேணநுபாவே | 44 |
| அஹம்காராவிஷ்டஸ் | 208 |
| அஹம்யதாவதாராத் | 36 |
| அஹோராத்ரேபாச் | 99, 171 |
| அக்ஷரம்ப்ரஹ்மபரம் | 12 |
| ஆகாசாத்வாயுஃ | 84 |
| ஆசார்யசாஸ்த்ர | 4 |
| ஆசார்யதேவோ | 4 |
| ஆசிநோநயிசாஸ் | 3 |
| ஆதமந்ஏவாத்மாநம் | 179 |
| ஆத்மாநமரணிம்க்ருத் | 210 |
| ஆநந்தோப்ரஹ்ம | 187 |
| ஆயுஷ்காமோதவா | 204 |
| ஆவோராஜா | 167 |
| இதம்பித்ரேமருதா | 113 |
| இத்யுபநிஷத் | 189 |
| இமம்ஸ்தோமமர்ஹ | 113 |
| இமாருத்ராயஸ்திர | 113 |
| இஷ்டிந்தேஹம் | 107 |
| ஈசாவாஸ்யஜகதஃ | 62 |
| ஈசாவாஸ்யமிதம் | 50 |
| ஈசாநஸ்ஸர்வவித் | 41 |
| ஈச்வரஏவப்ரஹ்ம | 92 |
| உமாஸஹாயம் பர | 88, 125 |
| ,, ,, நீல | 170 |
| ஊர்த்வபூரணம் | 40 |
| ஊர்த்வரேதம் | 61, 170 |
| ஏகமேவாத்விதீயம் | 82 |
| ஏகஸங்க்யாவிஹீ | 102 |
| ஏகஸ்ததாஸர்வபூ | 192 |
| ஏகோதேவஸ்ஸர்வ | 50 |
| ஏகோவசிஸர்வபூ | 192 |
| ஏகோஹவைநாரா | 77 |
| ஏததக்ஷரம்பரம் | 7 |
| ஏதந்நாமாஷ்டகம்புண் | 186 |
| ஏதஸ்மாத் ஜீவகநாத் | 59 |
| ஏநாக்ஷரம்புருஷ | 59 |
| ஏவமுக்த்வாததா | 36 |
| ஏவம்பத்தஸ்ததாஜீ | 207 |
| ஏஷ ஆத்மா அபஹத | 73 |
| ஏஷபுருஷஏ[illegible]பூதா | 62 |

| மந்திரம் | பக்கம். |
|---|---|
| ஏஷஹிகல்வாத் | 97 |
| ஏஷாமீசேபசுபதிஃ | 179 |
| ஓங்கார ரதமாருஹ்ய | 35 |
| ஓமிதிப்ரஹ்ம | 18 |
| ஓமிதீதம்ஸர்வம் | 165 |
| ஓமித்யேகாக்ஷரம் | 17 |
| ஓமித்யேதத்க்ஷரம்பரம் | 17 |
| ,, ,, மாநௌள | 5 |
| ,, ,, மிதம் | 16 |
| ஓமித்யேததாத்மா | 17 |
| ஓமித்யக்ரே | 157 |
| ஓம்தத்ப்ரஹ்ம | 165 |
| ஓம்தத்ஸர்வம் | 164 |
| ஓம்நமோநாரா | 156 |
| ஓய்யோவைருத்ர | 168, 195 |
| **க** | |
| கர்ப்பஜந்மஜரா | 151 |
| கர்மாதிபதயெ | 75 |
| கர்மாத்யக்ஷஸ்ஸர் | 50 |
| கவிம்புராணம்புரு | 87 |
| கஸ்மிந்நுபகவோ | 197 |
| காத்யாயநாயவித் | 54 |
| காலஸ்வபாவோ | 176 |
| கிம்காரணம்ப்ரஹ்ம | 175 |
| கிம்தத்ப்ரஹ்ம | 12 |
| கிம்தத்வம் கோஜீவஃ | 208 |
| கிம்தாரகம்கிம்தார | 156 |
| குருரேவ பரம்ப்ரஹ்ம | 4 |
| க்ருஷ்ணபிங்களம் | 170 |
| **ச** | |
| சதுர்த்தம் ந்ருத்தருடம் | 68 |
| **ஜ** | |
| ஜந்மம்ருரோதம்ப்ர | 117 |
| ஜபம்தஸ்தாரகம் | 152 |
| ஜீவச்சிவச்சிவோ | 207 |
| ஜீவன்முக்தபதந்த்ய | 31 |
| ஜாஷ்டம்யதாபச் | 177 |
| ஜ்ஞாஜ்ஞௌத்வா | 178 |
| **த** | |
| தண்டுலஸ்யயதாசர்ம | 207 |
| ததக்ஷரம் தத்ஸவிது | 10 |
| ததஃகாச்யாம்ப்ரய | 160 |
| ததாதிமத்யாந்தவி | 125 |
| ததாபிமாநவாமூர்கா | 204 |
| ததாவித்வாந்நாமரூப | 58 |
| தனூர்த்வமுந்மநா | 34 |
| ததேதத்துபாவிதவ்யம் | 190 |
| ததேதத்ருச்ரசரிதம் | 190 |
| ததேவாக்நிஸ் ததாதி | 194 |
| தத்த்ருஷ்டிகோசராத் | 4 |
| தத்புருஷாயவித்மஹே | 53, 54 |
| தத்ரசதுஷ்பாதம் | 10 |
| தந்ரபூர்வஸ்யாந் | 160 |
| தத்ராபராருக்வே | 9 |
| தத்வம்பசுபதிஃ | 208 |
| தத்வித்வாநக்ஷரம் | 44 |
| தத்வித்வாந்புண்ய | 58 |
| தத்வேதகுஹ்யோப | 119 |
| தத்ஸவிதுர்வரேண்யம் | 139, 140 |
| தந்மநோவிலயம் | 127 |
| தபச்சதேஜபச்சதே | 75 |
| தமக்ரதும்பச்யதி | 178 |
| தமாத்மஸ்தம்யேநு | 176 |
| தமீசாநம்வரதம் | 126 |
| தமீச்வராணும் | 120 |
| தமுஷ்டிஹி | 114 |
| தமேவம்விதித்வாதி | 57 |
| தமேவம்வித்வாநம்ரு | 99 |
| தமோங்காரேணைவா | 35 |
| தயாநஸ்தநுவாசந் | 74 |
| தயோரேகஃபிப்பலம் | 179 |
| தரதிசோகமாத்மவித் | 132 |
| தர்மாவஹம்பாப | 108 |
| தவச்ரியேயருதோ | 104 |
| தக்ஷிணஸ்யாம்திசி | 160 |
| தஸ்மாத்விராட | 60 |
| தஸ்மாத்ஸர்வாந் | 124 |
| தஸயப்ரோக்தோ | 92 |
| தஸ்யோத்தரதஸ் | 25 |
| தாரகத்வாத்தாரகோ | 151, 152 |
| தாரகம் சைவம் | 157 |
| திக்பல்மரஹிதம் | 122 |
| துர்லபம்ப்ராப்ய | 2 |
| தேசதஃகாலதோ | 48 |
| தேசகாலவஸ்து | 48 |
| தேவாநாம்பதிரே | 192 |
| தேஸோமம்ப்ராப் | 35 |
| த்யாதவாமுநிர் | 87 |
| த்யேயஸ்ஸதாஸவி | 64 |
| த்ரயக்ஷரம்புநஃ | 68 |

| மந்திரம். | பக்கம். |
|---|---|
| த்ரிபுண்ட்ரதாரணம் | 205 |
| த்ரிலோசநம் உமார் | 170 |
| த்வம்ப்ரஹ்மாத்வம் | 164 |
| த்வம்வாரஹமஸ்மி | 169 |
| த்வம்ததாபஆபோ | 194 |
| த்வம் தேவேஷு | 134 |
| த்வம்யஜ்ஞஸ்த்வம் | 194 |
| த்வம்ராஜந்ப்ர | 154 |
| த்வம் ஸ்திரீத்வம் | 194 |
| த்வாஸுபர்ணா | 173 |
| த்வேவாவப்ரஹ்ம | 184 |
| ந | |
| நதஸ்யகச்சித்பதி | 117 |
| நதஸ்யகார்யம் | 120 |
| நதஸ்யப்ரதிமா | 74 |
| நதஸ்யரோகோ | 109 |
| நமச்லோகாயச | 113 |
| நமஸ்தே அஸ்துபக | 169, 170 |
| நமஸ்தேதுநமஸ்தேது | 37 |
| நமஸ்தேவாயோ | 154 |
| நமோஹிரண்யபா | 64, 170 |
| நாடிமூலாவ்ருதா | 24 |
| நாந்தப்ரஜ்ஞம் | 67 |
| நாப்ரசாந்தாயதா | 3 |
| நாயமாத்மாப்ரவச | 15 |
| நாராயணாத்ப்ரஹ்மா | 77 |
| நாராயணாயவித்ம | 54 |
| நிரஞ்ஜனஃபரமம் | 132 |
| நிர்மிதம்ஹிமயாபூர் | 206 |
| நைநமூர்த்வம் | 74 |
| ப | |
| பகவத்யந்நபூர்ணேதி | 168 |
| பஞ்சக்ருத்யநியந்தா | 80 |
| பஞ்சப்ரஹ்மஸம்ஹா | 80 |
| பதிம்பதீநாம்பரமம் | 120 |
| பந்தமோக்ஷவிஹீநோ | 82 |
| பராத்பரதரோப்ரஹ்ம | 148 |
| பராஸ்யசக்திர் | 120 |
| பர்கஸ்த்ரயம்பகஃ | 134 |
| பஸ்மதாரணஸம் | 37 |
| பஹுசாஸ்த்ரகதாக | 13 |
| பாஸ்கராயவித்மஹே | 54 |
| புத்திகுஹாயாம்ஸர் | 60 |
| புராதநோஹம்புரு | 57 |
| புருஷஏவேதம்ஸர் | 60 |

| மந்திரம். | பக்கம். |
|---|---|
| புருஷம் நிர்குணம் | 106 |
| புருஷஸ்யவித்ம | 52 |
| புருஷேஸர்வசாஸ் | 125 |
| புருஷோவை ருத்ரஸ் | 51, 56 |
| புருஷோஹவைநாரா | 55 |
| புல்லிங்கம்ஸர்வமீசா | 168 |
| பூத்யைநப்ரமிதி | 204 |
| பூரணத்வாத்புருஷ | 48 |
| ப்ரசந்நவதநம்த்யா | 25 |
| ப்ரசந்நாநநம் | 25 |
| ப்ரசந்நோமத்தவார | 25 |
| ப்ரணவோதநு | 24, 35 |
| ப்ரணவஸ்தாரகஸ் | 152 |
| ப்ரதமம்தாரகாகாரம் | 24 |
| ப்ரதமாரக்தாபீதா | 47 |
| ப்ரதாநக்ஷேத்ரஜ்ஞ | 89 |
| ப்ரதீச்யாமிந்த்ரஸ் | 160 |
| ப்ரஹ்மணபுத்ராய | 118 |
| ப்ரஹ்மலோகபதாந் | 35 |
| ப்ரஹ்மலோகமபிஸம் | 43 |
| ப்ரஹ்மவிதாப்நோதி | 133 |
| ப்ரஹ்மவேதப்ரஹ்மை | 132 |
| ப்ரஹ்மாவிஷ்ணுச்ச | 11 |
| ப்ரஹ்மைகம்த்வம் | 192 |
| ப்ராணம்மனஸிஸஹ | 69 |
| ப்ராணாந்ஸர்வாந் | 111 |
| ப்ருதிவ்யாப்யதேஜோ | 109 |
| ம | |
| மமாபிவிஷ்ணோர்ஜநகம் | 83 |
| மஹாந்ப்ரபுர்வைபுருஷ | 56 |
| மாண்டூக்யமேகமே | 67 |
| மாமேவமாம்யோ | 197 |
| முக்தச்சிவஸமோ | 137 |
| மூடத்வாதாத்மஸ்தம் | 169 |
| மைத்ரோப்ராஹ்மண | 136 |
| ய | |
| யஇமாந்லோகாநீ | 59 |
| யஇமாவிச்வாபுவநா | 211 |
| யஈசே அஸ்யத்விப | 178 |
| யஏகஸ்ஸஏகோரு | 192 |
| யஏஷஸுப்தேஷு | 59 |
| யஏஷோந்தராதித் | 63 |
| யஏஷோந்தர்ஹ்ருத | 62 |
| யஓஷதீஷுயோவ | 211 |
| யதக்ஷரம் பரம்ப்ரஹ்ம | 137 |

| மந்திரம். | பக்கம். |
|---|---|
| யதாசர்மவதாகாசம் | 126 |
| யதாதமஸ்தந்நதிவா | 10 |
| யதாநதயஸ்யந்த | 58 |
| யதாந்தரம் நபச்யாமி | 145 |
| யதாபச்யபச்யதே | 58 |
| யதியோந்யாம்ப்ர | 123 |
| யதோவாசோநிவர்த் | 173 |
| யத்தேகலியாணம் | 171 |
| யத்ரகுத்ராப்வாகாச் | 155 |
| யத்ரநாந்யத்பச்யதி | 191 |
| யயாகிராத்ஸர்வபாப | 57 |
| யஸ்மாத்பரம்நாபர | 49 |
| யஸ்யதேவேபராபக்தி | 3 |
| யஸ்யநாமமஹத் | 167 |
| யஸ்யாங்கஜோஹம் | 83 |
| யஸ்யாதித்யசரீரம் | 65 |
| யஸ்யாமதம்தஸ்யமதம் | 173 |
| யஸ்ஸர்வோபரமகா | 80 |
| யஃகாரணாநி நிகிலாநி | 176 |
| யஃபுநரேதம் த்ரிமாத் | 60 |
| யாஜ்ஞவல்க்யயோஹ | 66 |
| யாதேருத்ரசிவாதநு | 74 |
| யுஞ்ஜதேமநயுதயுஞ்ஜ | 134 |
| யோதேவாநாம்ப்ர | 28 |
| யோதேவோஅக்நௌ | 211 |
| யோநிஸ்ஸமுத்ரோ | 19 |
| யோந்தகாலேஸர்வ | 80 |
| யோந்யாயதேவதா | 127 |
| யோப்ரஹ்மாணம்வித | 27 |
| யோயம்விஞ்ஞானமய | 59 |
| யோருத்ரோ அக்நௌ | 211 |
| யோவிஜ்ஞானதிஷ்டந் | 179 |
| ர | |
| ராமஏவபரம்ப்ரஹ்ம | 144 |
| ராமம்த்ரிணேத்ரம் | 159 |
| ருதம்ஸத்யம்பரம் | 61 |
| ருத்திஸம்ஸாரஜம்தக் | 42 |
| ருத்ரஏகத்வமாஹுஃ | 190 |
| ருத்ரம்சாச்வதம்வை | 202 |
| ருத்ராத்ப்ரவர்த்ததே | 147 |
| ருத்ரோவாஏஷயதக்நி | 74 |
| ரௌத்ரப்லிங்கரூபி | 104 |
| ல | |
| லிங்கரூபிணம் | 104 |

| மந்திரம். | பக்கம். |
|---|---|
| வ | |
| வஜ்ரநகாயவித்மஹே | 54 |
| வஜ்ரநாம்மஹேந்த் | 160 |
| விக்ரஹம்தேவதேவஸ் | 185 |
| விச்வதச்சக்ஷுருத | 96 |
| விச்வம்நாராயணம் | 41 |
| விச்வம்பூதம்புவனம் | 50 |
| விச்வம்விஷ்ணு | 41 |
| விச்வஸ்யைகம் | 126 |
| விபூதிதாரணாதேவ | 208 |
| விப்ராணாம் தேவதம் | 135 |
| விஷ்ணுவாதிகாந்ஸ | 93 |
| வேதாத்மநாயவித்ம | 54 |
| வேதாந்தேபரமம் | 3 |
| வேதாவதம்ஸம்சைவம் | 157 |
| வேதாஹமேதம்புருஷம் | 57 |
| வேதாஸ்ஸாங்காஸ் | 160 |
| வேதைரநேகைரஹ | 27 |
| வைச்வாநராயவித் | 54 |
| வைஷ்ணவேஷுபுரா | 119 |
| வ்ருக்ஷஇவஸ்தபதோ | 49 |
| ஸ | |
| ஸஏவஸர்வம்யச்பூ | 193 |
| ஸஓங்காரோயஓங் | 105 |
| ஸகாரணம்காரணாதி | 117 |
| ஸதாசிவோக்ஷரவிம | 9 |
| ஸதாசிவோம் | 165 |
| ஸக்ருதுச்சரிதமாத் | 107 |
| ஸத்யம்ஜ்ஞாநமந | 82 |
| ஸபூமைவஸுகம் | |
| ஸப்ரஹ்மாஸசிவஸ் | 193, 87 |
| ஸமாநம்வரம் | 19 |
| ஸமாநேவ்ருக்ஷே | 173 |
| ஸமேதயநியந்நித்யம் | 123 |
| ஸம்யோகஏஷாம் | 176 |
| ஸர்வகாரணநிமநவி | 69 |
| ஸர்வசக்திமயோஹேஷ | 146 |
| ஸர்வஜ்ஞ பஞ்சக்ருத்ய | 208 |
| ஸர்வதர்மாந்பரித்யஜ் | 38, 124 |
| ஸர்வதஃபாணிபாதந் | 95 |
| ஸர்வதேவவேதயோநி | 16 |
| ஸர்வமிதம்ப்ரஹ்ம | 11, 87 |
| ஸர்வம்ஹ்யேகசம்வா | 16 |
| ஸர்வவ்யாபீசபகவாந் | 49 |
| ஸர்வாநநசிரோக்ரீ | 49, 96 |
| ஸர்வாநந்தமயச்சிவஃ | 187 |

| மந்திரம். | பக்கம். | மந்திரம். | பக்கம். |
|---|---|---|---|
| ஸர்வேதேவாபசுநாம | 93 | ஶிரச்சோத்ர | 26 |
| ஸர்வேந்த்ரியகுணாபா | 95 | ஶிவஏகோத்யே | 124, 189 |
| ஸர்வேப்யோதுகக | 151 | ஶிவஏவஸதாத்யே | 124 |
| ஸர்வேவேதாயத்பத | 115 | ஶிவமக்ஷரமவ்யயம் | 10 |
| ஸர்வோவைருத்ரஸ் | | ஶிவமாயவிஷ்ணுரூ | 145 |
| ஸவேத்திவேத்யம் | 50 | ஶிவோமஹேவரச் | 186 |
| ஸஹஸ்ரசீர்ஷா | 94 | ஶிவோமா ராமசந் | 159 |
| ஸவைஸர்வமிதம் | 194 | ஶீர்ஷாந்தர்கதமண் | 60 |
| ஸுநிர்மலாமிமா | 56 | ஶ்ரீராமஸ்யமநும் | 156 |
| ஸூர்யத்வாரே | 58 | ஹ | |
| ஸைவஜகதண்ட | 139 | ஹராஸ்மரஹரோ | 138 |
| ஸோமஸ்ஸஹோம | 34 | ஹரேராமஹரேராம | 158 |
| ஸோஸ்ருஜத்தக்ஷிணா | 89 | ஹிரண்யகர்ப்பம் | 24 |
| ஸ்ரஷ்டாஸ்ருஷ்டிச்சலே | 204 | ஹ்ரீச்சதேலக்ஷ்மீ | 99 |
| ஸ்திரேபிரங்கைபுரு | 73 | ஹ்ருதயக்ரந்திவிஹீ | 103 |
| ஸ்தோமம்வோகத் | 113 | ஹ்ருதித்வமஸியோ | 102 |
| ஸ்வரேணஸந்தயேத் | 44 | ஹ்ருதிஸ்தாதேவதா | 102 |
| ஶ | | ஹ்ரீங்காரேண | 168 |
| ஶங்கரோபகவாநுத்யோ | 168 | க்ஷ | |
| ஶப்தப்ரஹ்மணி | 14 | க்ஷரந்த்யவித்யா | 178 |
| ஶப்தாக்ஷரம்பரம் | 44 | க்ஷரம்ப்ரதாநம் | 178 |


ஓங்காரவிளக்கத்தில் எடுத்துக்காட்டியுள்ள மந்திரசுலோகங்களின் முதற்குறிப்பு அட்டவணை முற்றுப்பெற்றது.

